# சங்க காலச் சிறப்புப் பெயர்கள்



டாக்டர் மொ. அ. துரை அரங்கசாமி

# சங்க காலச் சிறப்புப் பெயர்கள்

(இலக்கியச் சிறப்புப் பெயர்களும்,
குடிபற்றிய சிறப்புப் பெயர்களும்)



ஆசிரியர் :

**டாக்டர் மொ. அ. துரை அரங்கசாமி,**

எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஹெச்.டி.,

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர், மதுரை நிலையம்.

**பாரி நிலையம்**

59. பிராட்வே · சென்னை 1.

முதற் பதிப்பு: ஜூலை, 1960



1948-ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகம்
எம்.ஓ.எல். டிக்ரி வழங்கிய
ஆங்கிலக் கட்டுரை நூலின் தமிழாக்கம்

சாது அச்சுக்கூடம்,
மயிலாப்பூர், சென்னை–4

விலை ரூபா 7–00

எம் வழித்துணைவர்
பல்கலைச் செல்வர்
அண்ணாமலைப் பல்கலைக் கழகத்
தமிழ்ப் பேராசிரியர்
உயர்திரு. தெ. பொ. மீநாட்சிசுந்தரனார்
அவர்கட்கு
இது படையலாக்கப்பட்டது.

25-2



# உள்ளுறை

பக்கம்

முன்னுரை i

## முதற் பகுதி

### சங்க கால இலக்கியச் சிறப்புப் பெயர்கள்

1. தோற்றுவாய் ... 1
2. உருவகங்கள் இயற்பெயர்களாக வருதல் ... 7

கங்குல் வெள்ளத்தார் - பதடி வைகலார் - கூகைக் கோழியார்.

3. உவமைகள் இயற்பெயர்களாக வருதல் ... 11

அ

ஐயமின்றிக் கொள்ளத் தக்கவை

அணிலாடு முன்றிலார் - ஊட்டியார் - கயமனார் - கல்பொரு சிறு நுரையார் - கவைமகன் - காலெறி கடிகையார் - குப்பைக் கோழியார் - குறி இறையார் - செம்புலப் பெயல் நீரார் - தனி மகனார் - தேய்புரிப் பழங் கயிற்றினார் - மீன் எறி தூண்டிலார் - விட்ட குதிரையார் - வில்லக விரலினார்.

ஆ

புதியனவாகக் கண்டுபிடித்தவை

ஓர் ஏர் உழவர் - கழைதின் யானையார்.

4. மனங்கவரும் கலையழகு வாய்ந்த புனைந்துரைச் சொற்றொடர்கள் இயற்பெயர்களாக வருதல் ... 50

அ

ஐயமின்றிக் கொள்ளத் தக்கவை

இரும்பிடர்த் தலையார் - எயிற்றியனார் - ஓரிற் பிச்சையார் - கபிலர் - கள்ளில் ஆத்திரைய னார் - தொடித் தலை விழுத் தண்டினார் - நெடு வெண்ணிலவினார் - மலையனார் - முரஞ்சியூர் முடி நாகராயர் - வண்ணப்புறக் கந்தரத்த னார்.

ஆ

புதியனவாகக் கண்டுபிடித்தவை

கழாத் தலையார் - பராயனார் - பொன்மணி யார்.

இ

ஐயமானவை

அடை நெடுங் கல்வியார் - ஊன் பொதி பசுங் குடையார் - ஓரம் போகியார் - ஒரூஉத் தனார் - கடுந்தொடைக் காவினார் - கடுந்தோள் கரவீரன்-காமஞ்சேர் குளத்தார்-கோண்மா நெடுங்கோட்டனார் - நரிவெரூஉத் தலையார் - தோதரன் - நரைமுடி நெட்டையார் - நெட் டிமையார் - நெடும் பல்லியத்தனார் - நெடும் பல்லியத்தை - பார்காப்பான் - பாவைக் கொட்டிலார் - பூங்கண் உத்திரையார் - பொத்தியார் - பொன்முடியார் - மாற்பித்தி யார் - முடத் தாமக் கண்ணியார் - வெள் ளெருக் கிலையார்.

5. மனங்கவரும் சொற்றொடர்கள் சிறப்புப் பெயர்க ளாக வருதல் ... 104

அந்தி இளங்கீரனார் - இம்மென் கீரனார் - தும்பிசேர் கீரனார் - பொருந்தில் இளங் கீர னார் - அஞ்சில் அஞ்சியார் - அம்மூவனார் - கூவல் மைந்தன் - கொட்டம்பலவனார் - கோ வேங்கைப் பெருங் கதவனார் - தொல் கபிலர் - மாலை மாறன் - வன்பரணர் - விழிக்கட் பேதைப் பெருங் கண்ணனார்.

6. விரிவான பொது வகையில் அமைந்த இலக்கியச் சிறப்புப் பெயர்கள் ... 161

அ

ஐந்திணை வாழ்க்கை மரபின் விளக்கம்

ஆ

ஐந்திணை அடைபெற்ற சிறப்புப் பெயர்கள்

பாலை பாடிய பெருங் கடுங்கோ - மருதம் பாடிய இளங் கடுங்கோ - நெய்தல் கார்க்கி யார் - நெய்தல் தத்தனார் - பாலைக் கௌதம னார்.

இ

ஐந்திணை அடைபெறுதற்குரிய சிறப்புப் பெயர்கள்

நல்லுருத்திரனார் - பேயனார் - நல்லந்துவனார் - கபிலர் - ஓரம் போகியார் - ஓத லாந்தையார் - அம்மூவனார்.

ஈ

### ஐந்திணைத் துறை அடை முதலிய பிற வகையால் பெற்ற இலக்கியச் சிறப்புப் பெயர்கள்

மடல் பாடிய மாதங்கீரனர் - வெறி பாடிய காமக் கண்ணியார் - நோய் பாடியார் - காக்கை பாடினியார் நச்செள்ளையார் - காவன் முல்லைப் பூதனர் - கோடை பாடிய பெரும் பூதனர் - பாரதம் பாடிய பெருந் தேவனர் (பாயிரம் பாடிய பெருந் தேவனர்).

7. முடிவுரை ... 193

## இரண்டாம் பகுதி

### குடிபற்றிய சிறப்புப் பெயர்கள்

1. முன்னுரை ... 203

2. தமிழரும் தமிழகமும் ... 203

3. பாண்டியர், சேரர், சோழர் ... 209

4. பாண்டியர் ... 211

(i) பஞ்சவர், கவுரியர் :

(அ) பஞ்சவர். (ஆ) கவுரியர்.

(ii) பாண்டியரின் பட்டப் பெயர்கள்.

5. சோழர் ... 223

சோழர் கொண்டிருந்த பட்டப் பெயர்கள்.

6. சேரர் ... 232

சேரர் பூண்டிருந்த பட்டப் பெயர்கள்.

7. சேர நாட்டில் இருந்த பிற குடிகள் ... 238

1. (அ) குடவர், (ஆ) குட்டுவர்.
2. (அ) அதியர், (ஆ) உதியர்.
3. மலையர்.
4. (அ) மழவர், (ஆ) மறவர், (இ) இளையர்.
5. பூழியர்.
6. வில்லோர்.
7. கொங்கர்.
8. குறவர்.

8. சோழ பாண்டிய நாடுகளில் இருந்த சோழ பாண்டிய ரல்லாத பிற குடிகள் ... 268

1. பரதவர்.
2. கோசர்.

9. மூவேந்தர் ஆட்சியில் அடங்காத குடிகள் ... 281

1. ஆவியர்.
2. ஓவியர்.
3. வேளிர்.
4. அருவர்.
5. அண்டர்.
6. இடையர்.

10. தமிழக எல்லைப்புறத்தில் வாழ்ந்த குடிகள் ... 342

1. தொண்டையரும் திரையரும்.
2. களவர்.
3. வடுகர்.

11. அயல்நாட்டுக் குடிகள் ... 363

1. ஆரியர்: (அ) ஆரியர் (ரிஷிகள்), (ஆ) ஆரியர் (வடநாட்டு அரசர்கள்), (இ) ஆரியர் (வடமொழி பேசும் வடநாட்டு மக்கள்), (ஈ) ஆரியர் (யானை பழக்குவோர்), (உ) ஆரியர் (மிலேச்சர்).
2. மௌரியர்.
3. யவனர்.

12. முடிவுரை ... 408

பிற்சேர்க்கை ... 410

சிறப்புச் சொற்கள் அகராதி ... 417

# முன்னுரை

இயற்பெயர்கள் தனிச்சிறப்புடையவை. சமயநூல் வல்லார்க்கு, அவை உணர்ச்சி அலைகளை எழுப்ப வல்லன. வரலாறும் இலக்கியமும் பயில்வார்க்கும் அவை இன்றியமையாச் சிறப்பினவாயும், சுவையூட்டுவனவாயும் இலங்குவன. வற்றாத பல்பொருட் சுவைக் களஞ்சியமாக அவை அமைந்திருத்தலை, ஸர். எர்னஸ்ட் வீக்லி (Sir Earnest Weekley) முதலிய அறிஞர்கள் உலகிற்கு உணர்த்தியுள்ளார்கள். அவர்கள் எழுதி உதவியுள்ள நூல்களைக் கண்ணுங் கருத்துமாய்ப் பயின்ற பயிற்சியே, தமிழுலகில் வழங்கும் இயற்பெயர்களை ஆராயுமாறு எம்மைத் தூண்டியது.

சங்க காலத்தைத் தொடக்கமாகக் கொண்டு இயற்பெயர்களையெல்லாம் தொகுக்க முற்பட்டபோது அவை எல்லைகோல முடியாது பல்கியது கண்டு, இடைக்காலச் சோழர் காலம் வரையில் வழங்கி வந்துள்ள இயற்பெயர்கள் வரையில் முதலில் ஆராய முற்பட்டோம். பல்வேறு கோணங்களில் நின்று விரிவாகவும் விளக்கமாகவும் இவ்வியற்பெயர்களைக் குறித்து எழுதமுற்பட்டபோது,அந்தக் கால எல்லையையும் மிகமிகச் சுருக்கவேண்டி வந்தது. தொகுக்கப் பெற்றவை எண்ணற்றவையாயும், பல்வேறு வகைப்பட்டவையாயும், ஒப்புயர்வற்றவையாயும் இருந்தமையால், எம் விருப்பத்திற்குப் பெரிதும் மாறாகச் சங்ககாலச் சிறப்புப் பெயர்கள் மட்டில், அவற்றுள்ளும் இலக்கியச் சிறப்புப் பெயர்கள் - குடிச்சிறப்புப் பெயர்கள் மட்டில் நிறுத்திக்கொண்டு ஆராய்வான் துணிந்தோம். இவைபோக, எஞ்சி நிற்பவற்றை, வாய்ப்பிருப்பின், பின்னர் ஆராய்வான் கருதியுள்ளோம்.

சங்கமிருந்த காலம்பற்றிய ஆராய்ச்சியில் யாம் புகவில்லை. சங்க இலக்கியங்கள் என வழங்கிவரும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்ற தொகை நூல்களையே எமது ஆராய்ச்சிக்கு அடிப்படையாகக்

கொண்டுள்ளோம். தமிழ் இலக்கியப் பரப்பில், அத் தொகை நூல் கள் மிகப் பழமையானவை என்பதில் எவருக்கும் கருத்துவேறுபாடு இராது. எனவே, எவ் வகைத் தமிழாராய்ச்சிக்கும், அவையே தொடக்கமாகக் கொள்ளற்கு உரியன. சங்க காலம், அதன் வரலாற்றுண்மை முதலியவை இவ் வாராய்ச்சிக்குத் தேவையா இல்லையா என்ற கேள்விக்கே இடமில்லை.

சங்கத் தொகைநூல்களிற் காணப்படும் புலவர்களின் இயற் பெயர்களுள் பல, அவர்கள் பாடிய பாடல்களுள் வரும் சொற்றொடர் களை அடிப்படையாகக் கொண்டுள்ளன. இச் சொற்றொடர்களின் கருத்தாழங்கள் ஆராய்ந்துணர்ந்து உணர்த்துதற்கு உரியனவாயின. இதனால் சங்கப் பாடல்களின் தனிச்சிறப்பு விளக்கமாயிற்று.

எமது ஆராயச்சியிற் கண்ட முடிபுகள் நிலையானவை அல்லன வாயும் தவறானவையாயும்கூட இருக்கலாம். எனினும், இலக்கியச் சார்புடைய பெயர்களைப் பற்றிக் கற்பார்க்கு, இவ் வாராய்ச்சி, கேடொன்றும் பயவாது என்பதுமட்டும் திண்ணம்.

சிலவிடங்களில், இவ் வியற்பெயர்களில், அளவுகடந்து யாம் பொருள் நயம் கண்டிருப்பதாகக்கூடக் கருதலாம். யாம் வேண்டு மென்றே இவ்வாறு செய்துள்ளோம் என்று கருதலாகாது. கடந்த பன்னூறு ஆண்டுகளாகச் செறிவும் சுருக்கமும் உள்ளனவாக வழங்கி வந்துள்ள சொற்றொடர்களின் இலக்கிய அழகை, இக் காலத் தவர்க்கு எடுத்துக்கூறவே யாம் நேர்மையாக முயன்றுள்ளோம். இதனால், இவ் வாராய்ச்சியின் முதற்பகுதி, இயற்பெயர் பற்றிய இலக் கண அமைதியுடைய ஆராய்ச்சியாகத் தோற்றமளிக்காது, இலக்கிய ஆய்வுபோன்ற தோற்றம் அளிப்பதாகக் கருத இடமளிக்கலாம்.

குடிபற்றிய சிறப்புப் பெயர்கள், சங்ககால இயற்பெயர்களின் ஒரு பகுதியாகும். அவற்றை இலக்கியச் சிறப்புப் பெயர்களுக்கு அடுத்தாற்போல ஆராய்ந்துள்ளோம். உண்மைகளினின்றும் போலி களைப் பிரித்தெறிய யாம் பட்டபாடு பெரிது. ஏதேனும் ஒரு முடிபிற்கு வாராமலிருப்பது மக்கட்பண்புடைமை ஆகாது. எனவே, குடி பற்றிய சிறப்புப் பெயர்களை ஆராய்ந்து சில முடிபுகள் கண்டுள்ளோம். ஆனால், இம் முடிபுகளும் கற்பார் உள்ளத்தில் கறையொன்றும் ஏற்

படுத்திவிடமாட்டா. பொருத்தமான கருத்துக்களெல்லாம் இதில் ஒன்று திரட்டப்பட்டுள்ளன. எண்ணி எட்டியறிய முடியாத பழங் காலத்திய சங்க இலக்கியத்தில் போற்றிப் பொதிந்து வைத்துள்ள மரபுகளைக் குறித்தது நம் ஆராய்ச்சி என்பதை எண்ணிப் பார்க்கின்ற போது, சங்க காலத்தைப் பற்றித் திட்டவட்டமாக அறிய முடியா திருக்கின்ற இக் காலத்தில், ஒருவர் இதற்குமேல் முடிபு காணல் கூடும் என்று பெருமிதம் கொள்ள முடியாது.

காலம் சென்ற மஹாவித்துவான் ரா. இராகவ ஐயங்கார் அவர்கள் செந்தமிழ்ப் பத்திரிகையில், "செந்தமிழ்ச் சான்றோர் திருப் பெயர்" என்ற தலைப்பில், முதல்முதலில், சங்ககால இலக்கியச் சார் பான பெயர்கள் பற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளார்கள்.* சங்க நூலைப் பதிப்பித்த ஆசிரியர்கள் பலர், இப் பெயர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள். அவற்றுள் சைவசித்தாந்த மகா சமாஜத்தார் வெளியிட்ட சங்க இலக்கியப் பதிப்பே காலத்தால் பிந்தியது. அதன் பதிப்பாசிரியர் நாற்பத்துமூன்று இலக்கிய இயற் பெயர்களையே கொடுத்திருப்பவும், யாம் எண்பது இலக்கிய இயற்பெயர்களைக் காட்டி யுள்ளோம். ஆனால், யாம் அறிந்த அளவில், பாடல்களில் உயிர்நாடி யாக வந்துள்ள தொடர்கள், அவற்றை இயற்றிய ஆசிரியர்களின் பெயர்களாக அமையும் அளவிற்குச் சிறந்திருத்தலை இதுவரையில் யாரும் விளக்கவில்லை. முன்னைய ஆசிரியர்கள், கவிஞரின் பெயராக வுள்ள சொற்றொடர் கவிதையில் அமைந்திருத்தலைக் காட்டுவதோடு அமைந்தனர். எனவே, இந்த ஆராய்ச்சி புதுத் துறை ஒன்றை இலக்கிய உலகிற்குக் காட்டுகிறது எனலாம்.

தமிழ் மக்களின் குடி அல்லது குழுவைப் பற்றிய செய்திகள் இதுவரையில் முற்றிலும் ஆராயப் பெறவில்லை. சோழர், பாண்டி யர், சேரர், வேளிர் என்பாரைப் பற்றிய செய்திகள் சில முன்பே வெளிவந்துள்ளன எனினும், யாமறிந்த அளவில் ஒழுங்காக அவர் களைப் பற்றி முதல்முதல் ஆராய்வது இதுவேயாகும். இதனால், அவர்களைப் பற்றி மிகுதியாகக் கண்டுணர்ந்து கூறியிருக்கிறோம்.

*செந்தமிழ் : தொகுதி 1 : பகுதி : 9 ; பக்கம், 387.

என்று சொல்லவில்லை. ஆனால், அவர்களைப் பற்றிக் கிடைக்கக்கூடிய செய்திகளைத் தொகுத்து, ஒரு முறைப்படுத்தி வைப்பின், அவை, எதிர்காலத்தில் ஆராய்வார்க்குப் பயன்படலாம் என்பது எம் துணிவு. சேரசோழபாண்டியர் அல்லாது, வெளி நாட்டினின்றும் இங்கு வந்த வேறு குழுவினர் பற்றிய பழஞ் செய்திகளையும் ஆராய்ந்து, பயன் தரத்தக்க சிறந்த கருத்துக்கள் இதில் தரப்பட்டுள்ளன.

மக்களின் இயற்பெயர்கள் இங்குத் தனியாக ஆராயப்படவில்லை. ஆனால், சிறப்புப் பெயர்களை ஆராயும்போது சில இயற்பெயர்களுக்குமட்டும் விளக்கம் கூறவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது. இம் முறையில், ஏறத்தாழ நாற்பது இயற்பெயர்கள் விளக்கப்பெற்றுள்ளன. உண்மையில், அவற்றைப் பற்றிய விளக்கம், வேறொரு தனி ஆராய்ச்சி நூலாகவே அமையும் தகுதியுடையது.

இதன்கண் எடுத்துக்காட்டிய மேற்கோள்கள் அமைந்த நூல்களின் பெயர்கள், பிற்சேர்க்கை I-இல் தரப்பட்டுள்ளன. மேற்கோள்களை ஆண்ட முறை, பிற்சேர்க்கை II-இல் விளக்கப்பட்டுள்ளது. பிற குறிப்புக்களும் பிற மேற்கோள்களும் பிற்சேர்க்கை III-இல் தரப்பட்டுள்ளன.

இந் நூலின்கண்ணேயே, தேவையான இடங்களில் மேற்கோள் முதலியவற்றின் குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. எனினும், மேற்கோள்கள் அனைத்தின் மூலப் பகுதிகளையும் அப்படியே தந்து படிப்பவர்களின் துன்பத்தைக் குறைக்க இயலாமைக்காக யாம் பெரிதும் வருந்துகிறோம். சில இடங்களில் எடுத்துக் காட்டப்பெற்றுள்ள கருத்துக்கள்,எல்லோரும் நன்கு அறிந்தவையாயின், அவை வந்துள்ள இடங்கள் சுட்டிக் காட்டப்பெறவில்லை.

எம்.ஓ.எல். டிக்ரி பெறுவதற்கு ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற இவ் வாராய்ச்சிக் கட்டுரை நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுவதற்கு இசைவு தந்த எம் சென்னைப் பல்கலைக் கழகத்தார்க்கும், மொழிபெயர்த்து வெளியிட வேண்டும் என்று வற்புறுத்தி அழகாக வெளியிட்ட ' பாரி நிலைய ' உரிமையாளர் திரு. செல்லப்பா அவர்கட்கும், அச்சிட்ட சாது அச்சுக்கூடத்தார்க்கும், இதை மொழி

பெயர்ப்பதற்கு உறுதுணையாயிருந்த திரு. சுப. அண்ணாமலை, பி. ஓ. எல். ஆனர்ஸ், (மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்) அவர்கட்கும், இதை அச்சிடுங்கால் ஒப்புநோக்கு வீதற்கு உடனிருந்து உதவிய திரு. எம். வாசுகி அம்மையார், பி.ஏ. ஆனர்ஸ், (மதுரைப் பாத்திமாக் கல்லூரித் தமிழாசிரியர்), அவர்கட்கும், மற்றவர்கட்கும் எம் உளமார்ந்த நன்றியைச் செலுத்து கின்றோம்.

ஆராய்ச்சித் துறையில் எமக்கு என்றுங் குன்றா வழித் துணைவ ராய் இருந்துவரும் பல்கலைச் செல்வர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கட்கு அவர்தம் மணிவிழாவை எதிர்நோக்கி, இதனைப் படைய லாக்குகின்றோம்.

எத்துணை விழிப்போடிருந்தாலும் சில பிழைகள் நேர்தல் இயற் கையே யாதலால், அவற்றைப் பொறுத்தருளுமாறு வேண்டுகிறோம்.

மொ. அ. துரை அரங்கசாமி

# சங்க கால
# இலக்கியச் சிறப்புப் பெயர்கள்
## [முதற் பகுதி]

## 1. தோற்றுவாய்

சங்க இலக்கியம் என்பது, உண்மையில், மிக்க பழமையான தமிழ்ப் பாடல்களின் தொகுதியேயாகும். தொன்மை சான்ற சங்க இலக்கியம் என இப்போதுள்ள நூலில், 2381 பாடல்கள் உள்ளன. இவற்றுள் 102 பாடல்களை இயற்றிய புலவர்களின் பெயர்கள் கிடைக்கவில்லை. மற்றப் பாடல்கள் 473 புலவர் பெருமக்களுடைய எழுத்தோவியங்கள் ஆகும். அப் புலவர்தம் பெயர்கள் நம் கருத்தை முதற்கண் ஈர்ப்பன. ஏறத்தாழ எண்பது புலவர்கள், அஃதாவது பெயரறியப்படும் புலவர்களுள் நூற்றுவர்க்குப் பதினெழுவர், இலக்கியச் சிறப்பால் பெயர்பெற்றவர்களாகத் திகழ்கின்றனர். இவர்கள் பெயர்களில் இலக்கிய மணம் கமழ்கின்றது. எனவே, இலக்கியத் துறையில் ஈடுபாடுடைய நம் கருத்தை முதற்கண் இவை ஈர்த்ததில் வியப்பொன்றும் இல்லை.

மேலும், இப் பெயர்கள் எல்லாம் இயல்பான பெயர்களுக்கு வேறுபட்டவை. இவற்றில் ஆறுக்கு ஐந்து பெயர்கள் இடுகுறிச் சிறப்புப் பெயர்களென வழங்குதற்கியலாதவை. இப் பெயர்கள் எல்லாம், முறையே புலவர்கள் இயற்றிய பாடல்களில் வரும் உணர்ச்சியை எழுப்பும் உருவகங்களாலும், விளக்கமான உவமைகளாலும், உள்ளத்தை

அள்ளும் சொற்றொடர்களாலும் ஆனவை. புலவர்கள் தம் கற்பனையைக் கடைந்தெடுத்த வெண்ணெய் உருண்டைகளாக இவை இலங்குவனவாகும். இவர்களுடைய பாடல்களின் உயிரை இவை குறிப்பன. தாம் இயற்றிய கவிதையாம் வேள்வித் தீயில் மூழ்கித் தூய்மை பெற்று எழுந்து இத் தூய பெயர்களை இவர்கள் எய்தினார்கள் எனலாம். இங்ஙனம், உள்ளத்தை அள்ளும் ஓவியலைகள், சுவையூட்டுவனவாகச் சொற்களும் கருத்துக்களும் பிணைந்திருக்கும் பிணைப்புக்கள், பற்பல உயர்கருத்துக்களைத் தோற்றுவிக்கும் கற்பனை ஓவியங்கள் என்ற இவற்றாலேயே உலகமுழுதும் புலவர்கள் அழியா வாழ்க்கையை அடைந்திலங்குகின்றார்கள். ஷேக்ஸ்பியரின் 'அளவற்ற பொருள்களின் செங்குருதி படிந்த கடல்'* என்ற தொடரும், ஷெல்லியின் 'பல்வண்ணக் குமிழ்கள்'† என்ற தொடரும் அவர்தம் ஒப்பற்ற புலமை ஆற்றலைக் குறிக்கும் தொடர்களாக என்றும் போற்றப் படுபவை. ஆனால் இத் தொடர்களால் சிறப்புப் பெயர்களை அவர்கள் பெறவில்லை.

நம் நாட்டிலே எழுந்த வடமொழி இலக்கியங்களை நோக்குவோம். **மாககவி** என்ற வடமொழிப் புலவர், '**கண்டா மாகர்**' என்றும், காளிதாசர் என்ற வடமொழிப் புலவர், '**தீபசிகா காளிதாசர்**' என்றும் சில இடங்களில் குறிக்கப்பெறுகின்றனர்.

ஒரு மலையின் இரண்டு பக்கங்களிலும் ஒரே காலத்தில் நிகழ்ந்த ஞாயிற்றின் தோற்றத்தையும், திங்களின் மறைவையும் புனைந்துரைக்கப் புகுந்த மாககவி, யானையின் இருபக்கங்களிலும் தொங்கி ஒளிவீசும் இரண்டு மணிகளை எடுத்துக்காட்டாகக் கொண்ட சிறப்புப்பற்றிக் '**கண்டா மாகர்**' (கண்டா-மணி) என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார்.

---

*The Multitudinous Sea Incarnadine of Shakespeare.
†The Many Coloured Domes of Shelly.

காளிதாச மகாகவியின் காவியப் படைப்பில், சுயம்வர மண்டபம் ஒன்றில் எல்லா நாடுகளின் மன்னர்களும் குழுமி யிருக்கின்றனர் ; மணமகளான இந்துமதி, தத்தமக்கே மாலையிடுவாள் என்று ஒவ்வொருவரும் பேரவாக்கொண்டு வீற்றிருக்கின்றனர். ஒவ்வொருவரையும் அவள் நெருங்கும் போது இரவு நேரத்தில் தீப ஒளியின்முன் சுடர்விட்டிலங் கும் மணிமாளிகையைப்போல், ஒவ்வொருவர் உள்ளமும் தம்தம் விருப்பம் நிறைவேறப்போகிற தென்ற எண்ணத் தால் ஒளிபெற்றிலங்குகின்றது. ஆனால், தீப ஒளி அகன்ற தும் மணிமாளிகையை இருள் சூழ்வது போன்று, அவள் அகன்றதும் அவர் உள்ளம் இருண்டுவிடுகின்றது. உள் ளத்தை அள்ளும் உவமைநயம் மிக்க இப் பாட்டோவியத் தில் ஈடுபடுவோர் எவரும், இக் காட்சியை மறத்தல் இய லாது. காளிதாச மகாகவியின் காவியப் படைப்பில் கற்பனை யின் உச்சநிலை பெற்றிலங்குவது இவ் வுவமையான தீப ஒளி (தீபசிகா). எனவே, காளிதாச மகாகவிஞர் தீபசிகா காளி தாசர் என்று போற்றப்படுதலில் வியப்பொன்றும் இல்லை.

உவமை முதலியவற்றால் அமைந்த சிறப்புப் பெய ருடன் தங்கள் இயற்பெயரும் சேர்ந்து இரட்டைப் பெயர் களோடு இலங்கும் தமிழ்ப் புலவர்களும் உள்ளனர்.

ஆனால், இவ்வகைப் பெயர்கள் தமிழ்நாட்டிற்குப் புதுமையானவை அல்ல இவற்றுள், முதலிடம் பெற் றிலங்குவன இயற்பெயரோடு சாராமல் இலக்கியத் தொடர்களாகவும், உவமைகளாகவும், உருவகங்களாகவும் மட்டும் வரும் பெயர்களே யாகும். இலக்கியத்தால் அமைந்த சிறப்புப் பெயரையுடைய புலவர்க்கு இயற்பெயர் இருந்திருக்கும் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. ஆனால், அவ் வியற்பெயர்களை, மக்கள், நாளடைவில் மறந்துவிட்ட னர். அவற்றின் இடத்தைப் புலவரின் பாடலில் உள்ள அழகான சொற்றொடர்களும் உவமை உருவகங்களும் பெற்றன. இவற்றால், புலவர்கள் வாழ்வு பெற்றார்கள்.

இப் பெயர்மாற்றம், புலவர்கள் வாழ்ந்திருந்த காலத்தி லேயே நிகழ்ந்ததா, அன்றி, அவர்களின் பாடல்களைத் தொகுக்கும் காலத்தில் அவர்கள் பெயர்கள் ஏற்கெனவே மறக்கப்பட்டிருந்த காரணத்தால் தொகுத்தோரால், நன்றி யுணர்ச்சியோடு நிகழ்த்தப்பட்டதா என்பது ஆராய்ந்து முடிவு செய்தற்குரிய இன்றியமையாத செய்தியாகும். புலவரின் இலக்கியக் கலைத்திறமையைக் காட்டும் சொற் ருெடராலும் உவமையாலும் அவருக்குப் பெயரிடும் மரபு, சங்ககாலத்தில் வாழ்ந்திருந்த மக்களின் இலக்கியச் சுவை யைக் காட்டுவதாக இந்நூலுள் பின்னல் விளக்கப்படும். இப் பெயர்கள் பிற்காலத்தவரால் இடப்பட்டனவாக இருந் தால் ஆசிரியர் பெயர் மறக்கப்பட்ட ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் ஒழுங்காக ஒரு சிறப்புப் பெயர் இருத்தல் வேண்டும். ஆசிரியரின் பெயர் எந்த வகையிலும் குறிக்கப் பெருத 102 பாடல்கள் சங்கத் தொகை நூல்களில் உள்ளன என்பது முன்னேயே கூறப்பட்டது. அண்மைக் காலம் வரையில் ஏடுகளிலேயே இடம் பெற்றிருந்த சங்கச் செய் யுள்களில், இந்த நூற்றிருபாக்களின் ஆசிரியர்களுடைய பெயரிருந்த பகுதிகளைச் சிதல்கள் அரித்திருக்கக்கூடும் என எண்ணலாம். இவ் விளக்கம், குறைந்துபட்டுச் சிதைந்த நிலையில் நமக்குக் கிடைத்துள்ள பாடல்களுக்குப் பொருந் துமே யன்றித் துறைவிளக்கம் முதலியனவற்றைச் சிறிதும் சிதைவின்றிக் கொண்டுள்ள பாடல்களுக்குப் பொருந்ாது. துறைவிளக்கம் முதலியன பெற்று ஆசிரியர் பெயர்மட்டும் இல்லாத 74 பாடல்கள் சங்க இலக்கியத்தில் உள்ளன. சிதல்கள் ஆசிரியரின் பெயரைமட்டும் மதித்துத் தங்களுக்கு இரையாக்கிக் கொண்டன என்றெண்ணுவது பொருத்த முடைய தன்று.

சங்கநூல்கள் தொகுக்கப்பட்ட காலத்திலேனும் இச் சிறப்புப் பெயர்கள் இருந்தனவாக ஒப்புக்கொள்ளப் பட்டால் நாம் இவற்றைப்பற்றி மிகுதியாகக் கவலையுற

வேண்டுவதில்லை. இதுபோலச் சிறப்புப் பெயரிடுவது சங்க கால வழக்கமே என்பதற்கு இதுவே போதுமான சான்றாகும். உண்மையில், பாடல்கள் இயற்றப்பட்டதும் சங்க காலத்திலேதான்; அவை தொகுக்கப்பட்டதும் சங்க காலத்திலேதான்; தொகைநூல்களின் இறுதியில், அவற்றைத் தொகுத்த ஆசிரியர், தொகுப்பித்த வள்ளல் என்பவர்களின் பெயர்கள் தாங்கி, முடிவுரையாக விளங்கும் பகுதியின் துணைகொண்டு இதை உண்மையாக்கலாம். பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு, பத்துப்பாட்டு என்ற தொகை நூல்களைத் தொகுத்தோர், தொகுப்பித்தோரைப் பற்றிய விவரம் இன்னும் அறியப்படவில்லை.

நற்றிணையைத் தொகுப்பித்த வள்ளலின் பெயர்மட்டும் அறியப்பட்டுள்ளது. அவ்வள்ளல் **பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி** யென்பான். அவனும் சங்கப் புலவருள் ஒருவனே. அவன் பாடிய பாடல்கள் குறுந்தொகை (270), நற்றிணை (97, 301) என்ற தொகை நூல்களில் உள்ளன. எனவே, சங்க காலத்திலேயே நற்றிணை தொகுக்கப்பட்டது என்று ஐயமின்றித் துணிந்து கூறலாம்.

கலித்தொகையைத் தொகுத்தவர் பேராசிரியர் நல்லந்துவனார் என்பது தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இவர் திருப்பரங்குன்றத்தைச் சிறப்பித்துப் பாடியிருத்தலை மருதனிளநாகனார் அகநானூற்றின் 59-ஆம் பாடல் 11-12-ஆம் வரிகளில் குறித்துள்ளார். திருப்பரங்குன்றத்தைப்பற்றிய இவருடைய பாடல்கள் இன்றும் பரிபாடலில் காணக் கிடக்கின்றன.* இவை போக, இவர் கலித்தொகையில் நெய்தற் கலியும், அகநானூற்றில் 43-ஆம் பாடலும், நற்றிணையில் 88-ஆம் பாடலும் பாடியுள்ளார். எனவே, இவர் சங்க காலத்தி லிருந்தவர் என்பதிலும், கலித்தொகை அக் காலத்திலேயே தொகுக்கப்பட்டது என்பதிலும் ஐயம்

*பரிபா. 8 : 36 - 46 முதலியன.

இருக்க முடியாது. கலித்தொகையைத் தொகுப்பித்த வள்ளல் இன்னுரெனத் தெரியவில்லை.

குறுந்தொகையைத் தொகுத்தவர் பூரிக்கோ என்பார். அகநானூற்றைத் தொகுத்த உருத்திர சன்மனாரின் தந்தையார் உப்பூர் குடிகிழாரே இவர் என்று ஆன்றோர் கருதுகின்றனர். சங்கப் புலவரிடையே உருத்திர சன்மனார் என்ற பெயர் காணப்படவில்லையெனினும் அவரை ஆதரித்த வள்ளல் உக்கிரப் பெருவழுதி என்பான் அகநானூற்றில் 26-ஆம் பாடலையும், நற்றிணையில் 98-ஆம் பாடலையும் பாடியுள்ளான். இது சரியானல், அகநானூறும், குறுந்தொகையும் சங்க காலத்திலேயே தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டும். குறுந்தொகை 274-ஆம் பாடலை இயற்றிய உருத்திரனார், உருத்திர சன்மனாரே யாயின் நமது முடிவுக்கு வேறு சான்று தேவையில்லை.

இனி எஞ்சி நிற்பது ஐங்குறுநூறு. அதைத் தொகுத்த கூடலூர் கிழார் குறுந்தொகை 166, 167, 274-ஆம் பாடல்களையும், புறநானூறு 229-ஆம் பாடலையும் பாடியுள்ளார். தொகுப்பித்தவன் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை. இவன் குறுங்கோழியூர்கிழாரால் புறம் - 17, 20, 22-ஆம் பாடல்களிலும், கூடலூர்கிழாராலேயே புறம், 229-ஆம் பாடலிலும் புகழப்பெற்றிருக்கிறான். பதிற்றுப் பத்தில் இப்போது கிடைக்கப்பெறாத இறுதிப்பத்து இவனைப்பற்றிய புகழ்மாலையே எனலாம். அஃது எவ்வாறாயினும் இதுகாறும் கிடைத்துள்ள சான்றுகள், ஐங்குறு நூற்றுப் பாடல்களோடு ஏனைய சங்கப் பாடல்களும் இயற்றப்பட்டதும், தொகுக்கப் பட்டதும் சங்க காலமே என்பதை முற்றிலும் உண்மையாக்குகின்றன.

தொகைநூல்கள் சங்க காலத்திலேயே தொகுக்கப் பட்டனவெனின், இலக்கிய உணர்ச்சியென்னும் வேள்வித்

தீயில் புலவர்களைப் புனிதர்களாக்கிச் சிறப்புப் பெயரளிக்கும் மரபு சங்க காலத்திலேயே மிகுதியாக இருந்தது என ஒப்புக்கொள்ளல் வேண்டும். இந்த மரபின் ஆழமான உட்கோளைப் பகுத்து அறியுமுன், இம் மரபால் அமைந்த பெயர்களை விரிவாகப் பயிலுதல் ஏற்றதாகும்.

---

## 2. உருவகங்கள் இயற்பெயர்களாக வருதல்

கருத்தையும் உணர்ச்சியையும் மிகச் சுருங்கிய வடிவில் வெளியிட்டுப் புலவர்களுக்கு இயற்பெயர்களாக அமைந்த உருவகங்களை முதலில் நோக்குவோம்.

**கங்குல் வெள்ளத்தார் :**

இவர் குறுந்தொகை 387-ஆம் பாடலின் ஆசிரியர். இந்தப் பாடலில் வரும் ஒரு சொற்றொடரே 'கங்குல் வெள்ளம்' என்பது. எனவே, 'கங்குல் வெள்ளத்தார்' என்பதற்குக் "கங்குல் வெள்ளத்தை உடையவர்; அஃதாவது, கங்குல் வெள்ளம் என்ற இச் சொற்றொடரின் பொருட் சிறப்பால் இதன் ஆசிரியர் அப் பெயர் பெற்றவர்" என்பது பொருள். கங்குல் வெள்ளம் என்னும் சொற்றொடரோடு அத்துச் சாரியையும், உயர்வு குறிக்கும் உயர்திணைப் பன்மை 'ஆர்' விகுதியும் சேர்ந்து, "கங்குல் வெள்ளத்தார்" என்ற பெயர் அமைந்தது.

பிரிவின் கொடுந்துன்பத்தையும், நீங்காது தொடர்ந்து நிற்கும் தனிமையையும் தலைவி உணர்ந்து வருந்துகிறாள். நாட்கள் வெறிச்சென்று இருக்கின்றன. பகலவனின் ஒளி, உள்ளத்தைத் தொளைத்து அதைப் பொறுக்கமுடியாதபடி செய்கிறது. அது நெடுங்காலமாகத் திட்டம் இட்டுத் தந்த தண்டனை இஃது. இத்தகைய கொடிய பகற்காலமும்,

முடிந்து மாலைநேரம் வரும்போது, முல்லை மலர்கள் கட்டவிழ்ந்து விரிகின்றன. ஆம், செங்கதிரோன் தன் சினம் தணிந்து நிற்கிறான். வாழ்க்கையின் கரையை அடையும் பொருட்டு நாம் பரந்து விரிந்த பகற்காலமாங் கடலை வெற்றியோடு நீந்திவிட்டோம். நம் உயிர் கரையில் கிடக்கிறது. ஆனல் யாது பயன்? மாலைப்பொழுது நம் துன்பத்தை மிகுதியாக்குகிறது. வரப்போகுங் கங்குலாகிய வெள்ளமோ (இரவு வெள்ளமோ), அந்தோ! கடலைவிடப் பரந்ததாயிற்றே!—இதுதான் அக் குறுந்தொகைப் பாடலின் பொருள். பாடலில் தோன்றும் உணர்ச்சி கங்குல் வெள்ளம் - இரவாகிய வெள்ளம் என்ற உருவகத்தில் உச்ச நிலை யடைகிறது. இவ் வுருவகத்தை நினைந்து பாராட்டினல் பிரிவுத் துன்பத்தால் வருந்தும் தலைவியினுடைய உள்ளத்தின் நுட்ப உணர்வுகளை நாம் நன்கு அறிந்துகொள்ளலாம். இதனல்தான் நம் ஆசிரியர் 'கங்குல் வெள்ளத்தார்' என்னும் பெயரால் என்றும் அழியாமல் வாழ்பவரானார்.

**பதடி வைகலார் :**

உருவகத்தாற் பெயர் பெற்ற அடுத்த புலவர் '**பதடி வைகலார்**' என்பவர். 'பதடிவைகல்' என்ற உருவகச் சொற்றொடரோடு '**ஆர்**' என்ற உயர்வுப் பன்மை விகுதி சேர்க்கப்பட்டுள்ளது. இவ் வுருவகத்தை ஆசிரியர் தமது குறுந்தொகை 323-ஆம் பாடலில் கையாளுகிறார். '**பதடி வைகலையுடையார்**' என்பது இப் பெயரின் பொருள்: பதடிவைகல், அஃதாவது, 'உள்ளீடில்லாத கருக்காயான நாட்கள்' என்னும் உருவகத்தைப் பாவில் அமைத்துப் பாடியவர் என்பதாகும். காதலியைப் பிரிந்த தலைவனின் தனிமைத் துன்பத்தை இப் பாடல் படம் பிடித்துக் காட்டுகிறது. அவளைப் பிரிந்து வாழும் வாழ்க்கையில் ஒவ்வோர் அனுபவமும் அவனுக்கு உள்ளீடு சிறிதும் இல்லாத கருக்காயாகவே தோற்றமளிக்கிறது. அங்கே உயிர்

தோன்றவில்லை. அவனும் நிழல்போலத்தான் நடமாடுகிறான். அவனுடைய செயல்களின் தூண்டுகோல் அங்கில்லை. அவள் அவன் அண்மையி லிருக்கையில், அவன் செய்யும் செயல்கள் பொருளும் மதிப்பும் அடைகின்றன. அவனுக்கு உயிரளிப்பவள் அவளே. அவளால் அவனுடைய ஒவ்வொரு செயலும் அவனது ஆளுமையின் முழு வடிவத்தின் காட்சியாய் இலங்குகின்றது. அவனுடைய ஒவ்வோர் அனுபவமும் உயிரின் ஒத்திசையாகவும் இயற்கையின் இசையாகவும் இலங்குகின்றது. உமி நீங்கிய பதடி என்பது வெறும் பதரே. உண்மை உயிராகிய உள்ளீடு அங்கே இல்லை. ஆனால், தானியம் போலவே அது தோற்றமளிக்கிறது. அவள் இல்லாத வைகலும் - நாட்களும் - அத்தகையனவே. அவைகளெல்லாம் பதடிகளே; உள்ளீடாகிய மணிகள் இல்லாத நாட்களே. இத்தகைய பொருளாழம் பொருந்திய உருவகம், இப் புலவர் காலத்தில் வாழ்ந்த மற்றவர் கருத்தை ஈர்த்தபடியால், அவர்களால் நம் புலவர் 'பதடி வைகலார்' என்ற சிறப்புப் பெயர் சூட்டப் பெற்றார்.

**கூகைக் கோழியார் :**

புறநானூற்றின் 364-ஆம் பாடலை இயற்றிய புலவரின் பெயர் கூகைக் கோழியார் என்பது. 'கூகைக் கோழி' என்னும் சொற்றொடர் இடுகாட்டைப் புனைந்து பாடும் இப் பாடலில் வருகின்றது. உலகத்தின் நிலையாமையைப் பற்றி இப் பாடல் உணர்த்துகின்றது. வீரப்போர் பல புரிந்த வீரனொருவனை முன்னிலையாக்கிப் பாடப்பட்டதாகிய இதன் பொருள் வருமாறு :

வீரப்போர் புரியும் ஆற்றல் படைத்தவனே, வருக! வாடா மலர் மாலையாம் பொன்னரி மாலையைப் பாடினி யணிந்துகொள்ளவும், பொற்றாமரை மலரைப் பாணன் சூடிக்கொள்ளவும் அருள் செய்து, ஆட்டிறைச்சியைத்

தீயிற் சுட்டு உண்டு, நறவு மாந்தி மகிழ்ந்து, இரப்போர்க்கு வாரி வழங்கிக் களித்து வாழ்வோம். விரைவில் வருக! ஏனெனில், நிலம் பிளக்குமாறு வேரோடிய முதுமரத்தின் பொந்தில் வாழும் கூகைக் கோழி, காலம் சிறிது சிறிதாக ஊர்ந்து செல்வதைக் கணக்கிட்டுச் செத்தோர்க்கு அறிவிப்பதுபோல் எப்பொழுதும் கூவிக்கொண்டிருப்பதற்கு இடனாகிப் பிணங்களைக் கவிக்கும் தாழிகள் நிறைந்த இடுகாட்டை நாம் அடையுங்கால், இவ் வின்பமெல்லாம் நாம் அடைய முடியாதபடி அரியனவாய்விடும்.

ஈகையும் செல்வ வளமும் உள்ள வாழ்க்கைக்கும், படைப்புக்காலந் தொடங்கி இருந்துவரும் பழமையான இடுகாட்டுக்கும் உள்ள வேறுபாட்டை, இப் பாடலில் புலவர் காட்டுகிறார். இடுகாடு, காலத்தால் முதிர்ந்து துன்பமான தோற்றத்தோடிருக்கிறது. அக் காட்டில், அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பயனற்ற சில மரங்கள் வளர்ந்திருத்தலைப் பொறுமை மிகுந்த நிலத்தால்கூடப் பொறுக்க முடியவில்லை. யாரும் இல்லாத இந்தப் பரந்த வெளியில் ஒரே ஓர் ஒலி கேட்கிறதெனின், அது, காலத்தின் ஓட்டத்தை யறிவிப்பதுபோல் விட்டு விட்டுக் கூவும் கூகையின் ஒலிதான். இவ் வொலிதான் இவ் விடுகாட்டின் துன்பகரமான தனிமையை ஓரளவு நீக்குகிறது. கூகை தன்னந்தனியே மிகவும் அலுத்துப்போய்க் கூவும் இந்தப் பயங்கரமான ஒலி, இரவில் யாமந்தோறும் கூவும் கோழியின் குரலை நமக்கு நினைப்பூட்டுகிறது. கூகையின் குரலால் அறிவிக்கப்படும் காலத்தின் ஓட்டம், முடிவில்லாது பரந்த தனது தனிமையையும், அதன்மூலம் இடுகாட்டின் பயங்கரமான தனிமையில் உறையும் துன்பக் காட்சியையும் வலியுறுத்துகிறது. கூகையைக் கோழியாக உருவகித்த இவ் வுருவகம் இவ்வாறு ஆழமான கருத்துடையதாக இருத்தலின், இதனைத் தம் கவிதையில் அமைத்த புலவர் 'கூகைக் கோழியார்' என்று பெயர் பெற்றார்.

## 3. உவமைகள் இயற்பெயர்களாக வருதல்

உவமையின் குறுகிய வடிவமே உருவகம். விளக்கமாகவும், தெளிவாகவும் செய்திகளைச் சித்திரித்துக்காட்டுவதற்குக் குறுகிய வடிவமுடைய உருவகம் புலவருக்கு இடம் தருவதில்லை. அதனால், கவிதையில் இன்றியமையாத முதல் இடத்தை உவமை பெற்றிலங்குகிறது.

சங்ககால மக்களின் மனத்தைக் கருத்தாழம் அமைந்த உவமைகள் கவர்ந்தன என்றால், அஃது இயற்கையேயாகும். உவமையானது ஒரு நீண்ட தொடராக அமையலாம். எனினும், புலவர்கள், உயிர்நாடியான ஒரு சொல், அல்லது சொற்றொடரில் அந்த நீண்ட தொடரின் பொருளையெல்லாம் அடக்கிக்காட்ட முயன்றுள்ளனர். அங்ஙனம் அவர்கள் செறிவாக அமைத்த உவமை, கவிதைக்கு உயிராக நின்றது; உணர்வையும் எண்ணத்தையும் கிளறிவிடும் சொற்கோவையாக அமைந்து கற்பாரின் மனத்திற்கு இன்பமூட்டியது. இத் தகைய உவமையைக் கவிதையில் பயின்று இன்புற்றவர்கள், உவமையால் வந்த சொற்றொடரையே புலவருக்குப் பெயராக இட்டுச் சிறப்போடு அழைக்கலானார்கள்.

### அ

**அணிலாடு முன்றிலார் :**

குறுந்தொகை 41-ஆம் பாடலில் வரும் 'அணிலாடு முன்றில்' என்ற சொற்றொடர் 'ஆர்' என்னும் உயர்வுப் பன்மை விகுதிபெற்று அது பாடிய புலவர்க்குப் பெயராக வந்துள்ளது. இப் பாடல் ஒரு தலைவியின் பேச்சாக அமைந்துள்ளது. தலைவன் தன் பக்கத்தில் இருக்கும்போது, ஊர்மக்கள் விழாக் கொண்டாடி மகிழ்வதுபோல், அவள் மகிழ்கிறாள்; ஆனால் தலைவனுடைய பிரிவுக் காலத்தில், வாழ்வோர் இன்றிப் பாழாகி, முற்றம், அணில்கள் குதித்து ஓடி-

விளையாடுவதற்கு இடமாய் அமைந்த வீட்டைப்போலத் தனிமைத் துன்பத்தால் பொலிவிழந்து வாடுகிறுள்.

தலைவனைக் கூடியிருக்கும்போது, விழாக் கொண்டாடும் ஊரார் போல் மகிழும் தலைவியது மகிழ்ச்சிநிலைக்கு எதிர்க் காட்சியாகப் பிரிவால் வாடும் அவளது துன்பநிலையைச் சொல்லோவியத்தால் இப் பாடலில் புலவர் நமக்குக் காட்ட முயன்றுள்ளதைக் காண்கிறும். நாளுக்கு நாள் வளர்ந்து, மனத்தை இருளச் செய்து, துன்பத்தை மிகுவித்து, அச்சத்தைப் பெருக்கும் தனிமை, 'அணில் ஆடு முன்றில்' என்னும் மூன்று சொற்களில் வெளியிடப் பட்டுள்ளது. இம் மூன்று சொற்களுள் ஒவ்வொன்றும் இன்றியமையாதது.

வீட்டு முற்றத்தில் விளையாடுவது விருந்தாளியோ, மனையாளோ, குழந்தையோ, நாயோ, கோழியோ, வீட்டில் வளர்க்கப்படும் வேறு உயிரினமோ அன்று. ஆனல் மக்களோடு சேர்ந்து பழகாத அணில், அங்கே, தன் வாலைத் தூக்கிக்கொண்டு ஓடி ஆடுகிறது. சாதாரணமாக வீட்டு முற்றத்தில், தானியங்களைக் காயவைத்து, அவற்றைப் பெண்கள் காத்துக்கொண்டிருப்பர். குழந்தைகள் அங்கு விளையாடும். பசு, நாய் முதலிய வீட்டு விலங்குகள் அங்கு மூலைகளில் கட்டப்பட்டிருக்கும். மனிதர் எப்பொழுதும் நடமாடிக்கொண்டிருக்கும் முற்றத்தில் அணில் நுழைவதற்கும் திகில் கொள்ளுமேயன்றி அங்கு உரிமையோடு ஓடியாடத் துணிவுகொள்ளாது. தற்செயலாக அஃது அங்கு வரநேர்ந்தாலும் உடனே அஞ்சியோடிவிடும். இதற்கு நேர்மாறுன காட்சியே இப் பாடலில் சித்திரிக்கப் பட்டுள்ளது. முற்றத்தைத் தனது பொழுதுபோக்குமிடமாகக் கருதி, அணில் குதித்தோடி விளையாடுகிறது. யாருங் காணுமல், தனிமையாக அணில் குதித்தாடுவதற்கு அது வீட்டின் புறக்கடையுமன்று. புறக்கடையில் விளையாடிக் கொண்டிருந்த அணில்தான், முன்னேறிச் சிறிது சிறிதாக

நகர்ந்தூர்ந்து, வீட்டின் முன்புறமுள்ள முற்றத்திற்கும் வந்துவிட்டது. முற்றத்தில் இப்போது தானியமோ, பெண்களோ, குழந்தையோ, நாயோ, கோழியோ இல்லை. எங்கும் வெறிச்சென்று கிடக்கிறது. தனிமையின் உச்சநிலை அங்குக் குடிகொண்டிருக்கிறது. அணிலின் விளையாட்டைத் தவிர வேறு விளையாட்டொன்றும் அங்கு நிகழவில்லை. சாவு நேர்ந்ததுபோல் இருக்கிறது வீடு. அணிலைத் தவிர வேறு யாரும் அங்கு நடமாடவில்லை. எல்லாம் துன்பக் காட்சியாக இருக்கிறது. புழுதி படிந்த அழகற்ற செடி கொடிகள் அங்கு நிறைந்திருக்கின்றன. சாம்பல் நிறமான அணிலைத் தவிர வேறு அழகும் நிறமும் அங்கு இல்லை. இவ்வாறு அணிலாடு முன்றில் என்ற சொற்றொடரில் உள்ள ஒவ்வொரு சொல்லும் ஒரு சிறந்த பொருளை உணர்த்துவதாய், இன்றியமையாததாய் நிற்கிறது. தன் அழகு, எழில், நிறம், செயல், மகிழ்ச்சி என்பனவற்றைச் சிறிது சிறிதாக அரிக்கும் தனிமைத் துன்பத்தால் வாடும் தலைவியின் உருவத்தை நம் மனக்கண்ணுக்குக் காட்டுகின்ற இச் சொற்கோவை, இச் சிறப்பால் சங்க காலந்தொட்டு இன்றுவரை மறவாமல் போற்றப்படுவதாயிற்று.

**ஊட்டியார் :**

ஊட்டியார் என்னும் புலவர் அகநானூறு 68, 388-ஆம் பாடல்களின் ஆசிரியர். இவ் விரண்டு பாடல்களிலும் ‘ஊட்டி’ யென்ற சொல் வருகிறது. அந்தச் சொல்லில் உள்ள கவிதை நயத்தைத் துய்த்தவர்கள் அதனோடு உயர்வுப் பன்மை குறிக்கும் ‘ஆர்’ விகுதி சேர்த்துப் புலவருக்கு ஊட்டியார் என்ற இலக்கியப் பெயரிட்டு அழைத்தார்கள். 68-ஆம் பாடலில், புலவர் அசோக மரத்தின் இளந்தளிர்களை ‘ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை’ எனப் புனைந்திருக்கிறார். ‘ஓவியனால் வண்ணம் தீற்ற (ஊட்ட)ப்பெற்றாற் போன்ற நிறமுடைய ஒள்ளிய

தளிர்கள் பெற்ற அசோகு' என்பது அதன் பொருள். அசோக மரத்தின் தளிர்களின் நிறமானது எவ்வளவு நிறைவாகவும் பொருத்தமாகவும் தகுதியாகவும் அமைய வேண்டுமோ, அவ்வளவில் ஓவியன் ஒருவன் அழகுற வண்ணம் தீற்றியுள்ளான் என்று கூறும்படி அமைந் துள்ளனவாம் அந்த இளந்தளிர்கள். அவற்றின் கண்கவர் நிறத்தில் ஈடுபட்ட புலவர், உயர்ந்த ஓவியக் கலைஞன் ஒருவன் அழகு துளும்ப நிறம் ஊட்டிய தளிர்போன்றவை அவை என உவமிக்க முற்படுகிறார்.

383-ஆம் பாடலில் இப் புலவர் யானையின் உடலிற் பாய்ந்து ஊடுருவிச் செல்லும் அம்பிற்கு ஓவியனால் செந்நிறம் தீற்றப்பெற்ற அம்பினை உவமையாகக் கூறுகிறார். இங்குப் புலவர், தம் கலைத்திறமையால் இயற்கைக் காட்சியைக் கண்ணாடியின் எதிரில் நிறுத்தி வெளிப்படுத்த வில்லை; ஆனால், அதற்கு மாறாகத் தம் இயற்கை வருணனை யால் தம் கலைத்திறமையைத்தான் கண்ணாடியில் நிறுத்திக் காட்டுகின்றார். இயற்கை யுலகில் மட்டமாக உள்ள உலோகங்களைக் கலையுலகில் பொன்னாக மாற்றும் இரசவாதி என்று இவரைக் கூறலாம். கற்பனைக் கண்ணாற் கண்டு கலையாக வெளியிடப்படுகின்ற கருத்துக்களின் எதிரான சாயல்தான் இயற்கை. அஃதாவது, புலவன், தன் மனத்தில் கற்பனை மூலம் கருதும் கருத்து, உணரும் கலையுணர்வு-இவற்றினுடைய எதிர்ச்சாயலைத்தான் இயற் கையில் காண்கிறான். இந்த எதிர்ச்சாயல், இடம், காலம் முதலியவற்றுக்குத் தக்கவாறு வேறு வேறு அளவினதாயிருக்கும். புலவரால் கண்டு துய்த்து வெளியிடப்பட்ட இவ் வசோகந் தளிர்களில், இவ் வெதிர்ச்சாயல் முழுமை நிலை (சால்புநிலை) அடைந்திருக்கிறது. இஃது ஓர் உயர்ந்த கற்பனைப் படைப்பாகும். இக் கருத்தை வலியுறுத்துவதற் காகத்தான் சங்க கால மக்கள் 'ஊட்டியார்' என்னும் சிறப் புப் பெயரால் புலவர்க்கு அமர வாழ்வு அளித்துள்ளார்கள்.

இந்த வகையான 'உயர்ந்த கற்பனைப் படைப்புக்கொள்கை' சங்க காலப் புலவரின் உள்ளத்தையும், அதைத் தொடர்ந்த காலப் பகுதிகளில் வாழ்ந்த புலவரின் உள்ளத்தையும் இயக்கிநின்றது.

மணிமேகலையின் ஆசிரியர் சாத்தனர், பலவகை மலர்கள் நிறைந்து ஒளியும் நிறமும் பெற்ற ஒரு சோலையைப் புனைந்துரைக்கும் போது, அச் சோலைக் காட்சியானது ஓவியக் கலையின் நுட்பம் உணர்ந்த ஓவியன் ஒருவனல் திறமையாகத் தீட்டப்பெற்ற மலர்ச்சோலையின் வடிவமைந்த திரைச்சீலையால் போர்க்கப்பட்டது போலிருந்தது என்று கூறுகிறுர்.*

**கயமனர் (கயமளார், கயமகளார், கயமூழ்கு மகளிரார்)**

[அகநானூறு : 7, 17, 145, 189, 195, 219, 221, 259, 275, 321, 383, 397; குறுந்தொகை : 9, 356, 378, 396; நற்றிணை : 12, 198, 279, 293, 305, 324; புறநானூறு : 254.]

சங்க இலக்கியத்தில் இப் புலவர் 23 பாடல்கள் பாடியுள்ளார் என அறிகிறோம். அவற்றுள் குறுந்தொகையில் உள்ள 9-ஆம் பாடல் தவிரப் பிறவெல்லாம் பிரிவுப் பொருள் குறிக்கும் பாலைத்திணை பற்றியவை. இவற்றுள்ளும் பெரும்பான்மையானவை, உடன் போக்கு மேற்கொண்டு தலைவனுந் தலைவியும் போய்விட்டபிறகு, தலைவியின் தாயும் தோழியரும், அவர்தம் பிரிவுத்துன்பத்தால் வருந்துவதைப் பாடுகின்றன. புறநானூற்றின் 254-ஆம் பாடல்கூடத் தன் மைந்தனுடைய ஈகையையும் தலைமையையும் எப்பொழுதும் புகழ்ந்துகொண்டிருக்கும் தாய், அவன் போர்க்களத்தில் இறந்த செய்தியைக் கேட்டால் என்னகுவளோ என்ற முதுபாலைச் செய்தியைப் பாடுகிறது.

எனவே, குறுந்தொகை 9-ஆம் பாடல் மட்டுமே ஏனையவற்றினும் வேறுபட்ட கருத்தையுடையதெனலாம்.

---

*மணி : காதை, 3 : 160 - 169 (பின் இணைப்பு - 4 : 2).

அப் பாடலின் தலைப்பிலுள்ள குறிப்பு, அது நெய்தல் திணை பற்றியது எனத் தெரிவிக்கிறது. நெய்தல் என்பது தலைவன் பிரிந்து நீண்ட நாட்களாயினமையின், அவனைப் பற்றிய செய்தியொன்றும் அறிய முடியாமையால் தாங்கமுடியாத துன்பம் உள்ளத்தை வாட்ட வருந்தும் தலைவியின் நிலையாகும். இது பிரிவின்போது உண்டாகும் துன்ப உணர்ச்சியன்று; தலைவனைப் பற்றி ஒன்றும் அறியவியலாமல் 'என்று மீள்வான்; மீள்வானோ மாட்டானோ?' என்ற கவலை மிகுந்து, அவனை இழந்துவிட்டாற்போல உணர்ந்து, ஆற்றமுடியாத வருத்தத்தில் ஆழும் தலைவியின் பற்றுக்கோடற்ற துன்ப உணர்ச்சியே ஆகும். தமிழ் இலக்கியத்தின் புலனெறி வழக்கின்படி, இந் நிலை கடலும் கடலைச் சார்ந்ததுமான நெய்தல் திணைக்கு மிகவும் பொருத்தமானது. களவிற்கூடிய கூட்டத்திற்குப் பின்பு - கற்பில் - அனைவரும் அறியுமாறு முறையாக மணப்பதற்கு முன்பு, இத் துன்பநிலை தலைவிக்கு ஏற்படுகிறது. யாதேனும் ஒரு தடை ஏற்பட்ட காரணத்தாலோ, அன்றித் திருமணம் நடத்துவதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்தற்பொருட்டோ, தலைவன், வழக்கம்போல, நாள்தோறும், குறித்த இடத்தில், குறிப்பிட்ட காலத்தில் தலைவியைக் காணத் தவறுகிறான். அவன் வரவை எதிர்பார்த்து ஏமாற்றமடையும் தலைவி, தன் ஆற்றாமை காரணமாகத் தன்னைத் தலைவன் துறந்துவிட்டான் என்றோ, தலைவனது உயிருக்கு ஏதேனும் ஊறுபாடு ஏற்பட்டிருக்கலாம் என்றோ ஐயுறுகிறாள். இவ்விரண்டு ஐயங்களும் அவளது துன்பத்தை மிகுதியாக்குகின்றன. பரந்து விரிந்து கிடக்கும் நீலக்கடலும், கடற்கரையின் வெண்மணற் பரப்பும், கடலலைகளின் ஓயாத பேரொலியும், 'விர்' என்று வீசும் கடற்காற்றும் தலைவியின் தனிமைத் துன்பத்தை, நம் கண்முன் மிகுதிப்படுத்திக் காட்டுகின்றன; அவளது மனம் படும் பாட்டை நமக்கு எடுத்துரைக்கின்றன. இவ்வாறு கற்பனை செய்து பாடும்

பாடல் தமிழிலக்கியத்தின் புலனெறி வழக்குப்படி நெய்தல் திணையின்பாற்படும்.

ஆனல், புலவரின் சொந்தக் கற்பனையால் இப் பாடல் ஒளிர்கிறது. இங்குத் தலைவனின் பிரிவு, உலகினர் அறியத் தலைவியை மணம் புரிந்த சின்னாட்களுக்குப்பின் அவன் பரத்தையிற் பிரிதலால் உண்டாவது. இவ் வகையான பிரிவு தமிழ் இலக்கிய மரபின்படி மருதம் என்றழைக்கப்படும். வயல் சார்ந்த ஊர்களிலும் பெரிய நகரங்களிலும் இது நிகழ்வதாகும். நகரங்கள், நாகரிகத்திற்கு உறைவிடமா யிருப்பதோடு அதன் தீமைகட்கும் இடமாயிருக்கின்றன. இத் தீமைகளுள் விலைமகளிர் நிறைந்திருத்தலும் ஒன்ருகும். தலைவனது பரத்தைமையைக் காணும்போது தலைவிக்கு ஏமாற்றமும், பொருமையும், திடீர்க்கோபமும் உண்டா கின்றன. புலவர் கயமனர் இதை நெய்தல் திணையாக மாற்றிப் பாடுகிருர். பரத்தையின் காரணமாகத் தலைவன் பிரிந்துவிட்டபின் சினமும் பொருமையும் பயனற்றுப் போனநிலையில், தலைவி தனது நம்பிக்கை முழுதையும் இழந்து, விதிப்படி நடக்கட்டும் என்று வருந்தியிருக்கும் தனிமையின் உச்சநிலையைப் புலவர் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிருர். திருமணத்திற்கு முன் நிகழும் நெய்தல் ஒழுக்கத்தில், தலைவி தன் மனத்துன்பத்தை யாருக் கும் எடுத்துக் கூறுவதில்லை. திருமணம் செய்து கொண்ட தலைவன் பரத்தைபாற் பிரிவதால் உண்டாகும் இத்தகைய துன்ப உணர்ச்சியைத் தலைவி பிறருக்குக் கூறுகிருள் என்று புலவர் கூறுவது சரியாகுமோ ? ஆகாது; ஆதலின், கயமனர், தலைவி தன் மனத்துன்பத்தை வெளிக்காட்டாது மறைப்பதாகவே பாடுகிருர். இந்திய நாட்டுப் பெண் களின் சிறந்த பண்பான 'கற்பு' என்னும் உயர்ந்த கொள்கை இங்கு முதலிடம் பெறுகிறது. தலைவனது பரத்தைமை பிறருக்குத் தெரியாவண்ணம் தலைவி எல்லா வகையாலும் மறைக்கிருள்.

தலைவனின் நடத்தையால் தலைவிக்கே நாணம் உண்டா கிறது. மற்றவர் எவரும் தலைவனைக் குறித்துப் பழிதூற்று வதை அவளாற் பொறுக்கமுடியாது. குடும்பத்தின் பெருமை, தலைவனின் இழிவான நடத்தையால் பறிபோகும் நிலைமை ஏற்படுகின்றது. மாமை நிறம் உடையவள் தலைவி; சுறு சுறுப்பு மிக்கவள். அத்தகையவள் இப்போது தாயும் ஆகிறாள்; குடும்பச் சுமையை ஏற்று நடத்துகிறாள்; பார்ப்ப வர் எல்லாம் அவளுடைய தாய்மை யுள்ளத்தின் பண்பைக் கண்டு வியக்கும் வண்ணம் குடும்பத்திலுள்ளவரோடு பழகிப் பொறுப்புக்களை ஏற்றுத் தன் கடமைகளைச் செய் கிறாள். ஆனால், தலைவனது அன்பைப் பெறாத அவள், யாராலும் சூடப்பெறாத ஒரு செப்பினுள் மூடிவைக்கப் பட்ட மலர்போல, வாடி யிருக்கிறாள். தலைவன் செய்யும் கொடுமை அவளது மனத்தை நாணத்தால் குன்றச் செய்த தாயினும், ஊரார் அதையறிந்து பழிசொல்லக் கூடாது என்று அதை மறைத்துவிடுகிறாள். பசிய இலைகளுக்கு மேலே உயர்ந்து தோன்றும் நெய்தல் மலர், கடற்கழியில் மலர்ந்திருக்கிறது. கடலலைகளால், கழியில் நீர் மிகும்போது அந் நெய்தல் மலர் தண்ணீரில் மூழ்குகிறது. அப்போது அது கயத்தில் முழுகும் மகளிரின் கண்களையொப்ப விளங்கு கிறது. இத்தகைய குளிர்ந்த அழகிய துறை பொருந்திய நாட்டை யுடையவன் தலைவன்.

கயம் என்பது நீராடும் குளம். பேச்சு வழக்கில் 'கசம்' என வழங்கும் இச் சொல் 'கசிதல்' என்ற சொல் லோடு தொடர்புடையது. நெய்தல் மலர் மலர்ந்துள்ள குளத்தில் மகளிர் நீராடும்போது தம் தலையை அடிக்கடி நீரில் அமிழ்த்துவதைப் புலவர் தம் கலைக்காட்சி காணும் கண்ணால் பார்த்திருக்கவேண்டும்; அவ்வாறு காணும் வேளையில், மகளிர் கண்ணை நெய்தற் பூவாகக்கொண்டு, அஃது இமைப்பதாகவும் தெய்வீக அன்புடன் ஒளிவீசுவ தாகவும் கண்டு மருண்டிருக்கவேண்டும். அதனால், அவர்

மனத்தில் ஒரு தெய்வீக உணர்ச்சியும் மதிப்பும் அச்சமும் தோன்றியிருக்கவேண்டும்.

சிந்தாமணியின் ஆசிரியர் வேறு ஒரு காட்சியைக் காட்டுகிறார்: மரத்தின் கொம்பிற்குப் பின்னால் மறைந்து நின்று, ஒரு கண்ணால் பார்க்கிறாள் ஒரு பெண். அவளது கண், அக் கொம்பில் நெய்தல் மலர் பூத்தது போல் இருக்கிறது என்கிறார் புலவர்.*

ஒன்றுமே இல்லாத இடத்தில், ஒரு மலைச்சிகரம் தன் தலையைத் திடீரெனத் தூக்குவதுபோன்ற, வியப்பூட்டும் காட்சி வொர்ட்ஸ் வொர்த் என்ற ஆங்கிலப் புலவருக்கு அடிக்கடி தோன்றியதுபோல், புலவர் கயமனாருக்குக் கய மூழ்கு மகளிரின் கண்ணையொப்ப நெய்தல் விளங்கிய காட்சி எப்போதும் புதுப்புது அழகுடன் தோன்றிக் கொண்டே இருந்ததாகலின், அவர் இந்தப் பாடலில் அதைச் சொல்லோவியமாகப் பதித்துள்ளார். பிற உவமைகளைப் போல அல்லாமல் இவ் வுவமை ஒப்புயர்வற்ற சிறப்புடையதாகவும் தம்மைப்பற்றியே அவர் குறிப்பாக ஏதோ கூறுவதாகவும் இருக்கிறது. இதனால் பலர், நெய்தல் - கண் இவற்றிடையே உள்ள ஒப்புமையை ஆசிரியர் கூறுவதை அறியாமலும் போகலாம். இவ் வுவமையனுபவம் ஆசிரியர் அனுபவித்த சொந்த அனுபவமாகும்; பிறரிடமிருந்து கடன் வாங்கியதன்று. இது புலவரின் சொந்த அனுபவம் என்பது தவிர, தலைவியின் தனிப்பட்ட மன நிலைக்குப் பொருத்தமான ஏதோ ஒன்றும் இதில் உள்ளது. தலைவன் உண்மையிலேயே நற்பேறு உடையவன்தான். தலைவியைப் பிரிந்து அவளைத் தவிக்கவிட்டுப் பரத்தையோடு வாழ்ந்தாலும், குற்றமற்ற வகையிலே ஊராரால் மதிக்கப்பட்டான். அவன் சான்றோனாக மதிக்கப்பெற்ற இரகசியத்தை, அவனுடைய பிறப்பகமே நமக்கு வெளிப்படுத்துகிறது. அங்கு

*சீவக. நாமகள் இலம்பகம், 289 : 3 - 4.

நாம் காண்பது என்ன ? கழியில் மிகும் நீர் அங்கு மலர்ந் திருக்கும் நெய்தல் மலரைத் தன்னுள் மூழ்கச்செய்கிறது. தன்னிடத்தே தண்ணீர் நிறைவதால் நெய்தல் அழகிழந்து வாடுகிறது. ஆனால் தண்ணீரின் கொடுமையும் நெய்தற் பூவின் வாட்டமும் யார் கண்ணிற்கும் வெளிப்படத் தோற் றம் அளிக்கவில்லை. அழகிய நெய்தலின் வாட்டமும் மகிழ்ச்சியூட்டும் நிலையாய் மாறுகிறது. தங்கள் கண்களின் உருவம் நீரில் தோன்ற மூழ்கி நீராடும் மகளிரின் கண் போல, நெய்தல் தோன்றுகிறது. வெள்ளத்தால், தான் வாட நேர்ந்தபோதும், அவ் வாட்டத்தை மறைத்து, மேலும் அழகாய்த் தோன்றும் நெய்தல், தலைவனது கொடுமையால் வருந்தியும் அதை வெளிக்குத் தெரியாமல் மறைத்துத் தியாகம் செய்யும் தலைவியைப்போல விளங்குகிறது. நெய் தல் பூவின் தன்னலமற்ற தன்மையும், தலைவியின் தியாகமும் புலவரின் மனத்தே ஒப்புமையுணர்வைத் தூண்டின. இவ் வுவமையால் வெளியிடப்படுவது, தலைவியின் ஒப்பற்ற தன்னலமற்ற உணர்ச்சியே. கயம்பற்றிய இந்த அழகான உவமையைப் படைத்த காரணத்தால், இப் புலவர் கயமனார் என இன்றும் நினைக்கப்பெறுவதில் வியப்பொன்றும் இல்லை எனலாம்.

ஆனால், கயமனார் என்ற பெயர் பிற இலக்கியச் சிறப்புப் பெயர்களைப் போலன்றித் தனிவகையாக அமைந் துள்ளது. சிறப்புப் பெயர் ‘கயமூழ்கு மகளிரார்’ என்று அமைவதுதான் இயல்பு ; அல்லது, மூழ்கு என்பதை விடு வித்துக் ‘கயமகளிரார்’ என்றோ ‘கயமகளார்’ என்றோ வழங் கலாம். குளத்தின் சிறப்பைமட்டும் வலியுறுத்த வேண்டு மெனின் ‘கயத்தார்’ என்றே வழங்கலாம். ‘கயமகளார்’ என்ற சொல்லில் உள்ள ‘ளா’ என்ற எழுத்து ‘னு’ எனத் தவறாக ஒலிக்கப்பட்டுக் கயமகளார் என்பது கயமனார் என மாறியிருக்கலாம். பழங்காலத்தில் இந்த இரண் டெழுத்துக்களும் நெடில் என அறிவித்தற்கு இவற்றுக்குப்

பக்கத்தில் ஒரு சிறிய செங்குத்தான கோடே [ள| ன|] இடப்பட்டது. எனவே, அவ்வகையில் 'ளா' என்பது 'ஞ' வாகத் தவறான முறையில் கருதப்படுதற்கு இடமுண்டு. இவ்வாறாயின், கயமகனார் என்பதன் இடையில் உள்ள ககரம் படிஎடுப்போரால் விடப்பட்டதெனக் கொள்ளல் வேண்டும். கயமனார் என்பதைவிடக் கயமகளார் என்பதே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. தொல்காப்பியர் காலம் முதல் வழங்கிவரும் விதிப்படி **கயம்** என்ற மகர வீற்றுச்சொல் விகுதிகளோடு சேரும்போது, ஈற்று மகரங்கெட்டு அத்துச் சாரியைபெறும். கயமனார் என்ற சொல்வடிவம் தொல்காப்பியர் காலத்திற்கு முந்தியதாகவும் இருக்கலாம்; தெலுங்கில் வழங்குவதுபோலும் ஒரு மரபை உடைய தமிழ்ப்பேச்சு மொழியொன்றனைச் சேர்ந்ததாகவும் இருக்கலாம். தெலுங்கு மொழியில் மகரவீற்றுச் சொற்கள் 'ஆர்' விகுதியோடு சேரும்போது, மகரம் கெடாது நின்று 'அன்' என்ற சாரியை பெற்ற பின் ஆர் விகுதியோடு சேரும். இன்று நமக்குக் கிடைத்துள்ள தமிழ் இலக்கண விதிகளைப் பயின்றவர்க்குக் கயமனார் என்ற சொல்லுக்கு முடிவு கூறுவது கடினமேயாகும் என்று ஒப்புக்கொள்ளவே வேண்டியிருக்கிறது.

**கல்பொரு சிறுநுரையார் :**

இவர், குறுந்தொகை 290-ஆம் பாடலின் ஆசிரியர். இப்பாடலில் உவமையாக வரும் 'கல்பொரு சிறுநுரை' என்ற சொற்றொடரால் இவர் இப் பெயர் பெற்றவர். வழக்கம் போல், இச் சொற்றொடரோடு 'ஆர்' என்னும் உயர்வுப் பன்மை விகுதி சேர்ந்து கல்பொரு சிறுநுரையார் என இவரது பெயர் அமைந்தது. 'பாறையின்மேல் மோதுகின்ற சிறுநுரை' என்பது இச் சொற்றொடரின் பொருள். தலைவனுடைய பிரிவை எண்ணுந்தோறும் தேய்ந்து தேய்ந்து குறுகுகின்ற தன் உயிருக்குக் கல்பொரு சிறுநுரையைத்

தலைவி உவமையாகக் கூறுகிறாள். பொறுமையாக ஆற்றி யிருக்கவேண்டு மெனத் தோழி அறிவுரை கூறுகிறாள். தன் காதலின் மிகுதியை இந்தத் துன்பத்தின் வாயிலாகப் பிறருக்குத் தெரியுமாறு காட்டிக்கொள்ளக்கூடாது என்று அவள் கூறுகிறாள். தலைவியின் களவை, அவளது துன்பக் கண்ணீர் வீட்டிலுள்ளார்க்கும் வெளியார்க்கும் பறை யடித்துவிடு மன்றோ? பிரிவினால் உண்டாகும் ஆற்றொணாத் துன்பத்தையும் தலைவி ஆற்றிக்கொண்டு அடங்கியிருக்கத் தான் வேண்டும். இதைத்தான் தோழி வற்புறுத்திக் கூறு கிறாள். இதைக்கேட்ட தலைவி எண்ணுகிறாள் :

"துன்பத்தைப் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று பேசுவோர், காமநோயின் தன்மையைச் சிறிதேனும் அறி வாரோ? அறியமாட்டார்போலும்! காமநோயைத் தாங் கிக்கொள் என்போர் தாம் அதைத் தாங்கிக்கொள்ளும் மதுகை (வலி) உடையவரா? அப்படித்தான் போலும்! ஐயோ!"

"ஆனால் நாமோ அவ்வாறிருக்க முடியவில்லையே! எம்முடைய தலைவரைக் காணேமாகில் துயர்மிகுந்த நெஞ் சத்தோடு வருந்துகிறோம். பெருநீர் கல்லில் மோதும்போது உண்டாகும் சிறுநுரை, அலைகளால் இங்குமங்கும் உந்தப் பட்டுப் பாறையில் மோதிச் சிறிது சிறிதாகக் கரைதலைப் போலத் தலைவர் இல்லை என்று எண்ணும்போது ஒவ்வொரு நொடிப்போதும் ஊசலாடுகின்ற எம்முயிர், மாறும் எம் மனநிலையால் அலைக்கப்பட்டுச் சிறிது சிறிதாகத் தேய்ந் தொழிந்து இந் நிலவுலகினின்றும் நீங்குந்தன்மை எய்து கின்றது."—தலைவியின் பேச்சுக்குப் பாட்டு வடிவம் அளித்த பாடலின் கருத்து இதுவே.

தலைவியின் உணர்ச்சியாழம் இவ் வுவமையால் நன்கு வெளிப்படுகின்றது. இதனால்தான் இப் பாடலைப் பாடிய புலவர், 'கல்பொரு சிறுநுரை என்னும் உவமையுடையார்'

என்னும் பொருளில் கல்பொரு சிறுநுரையார் எனப் பெய ரிடப்பெற்றார்.

**கவை மகன் :**

இவர் பாடிய குறுந்தொகை - 324-ஆம் பாடலில் "கவைமக" என்னும் தொடர் உவமையாக இடம்பெற் றுள்ளது. உயர்வுப் பன்மை விகுதி 'ஆர்' சேர்த்து, 'கவை மகவார்' என்றே பெயர் அமைந்திருத்தல் வேண்டும். ஆனால் 'கவைமக' என்ற தொடரோடு ஆண்பால் விகுதி 'அன்' என்பது சேர்ந்து '**கவைமகன்**' என்றமைந்துள் ளது. இது வழக்கத்திற்கு மாறானதுதான். பல புலவர்களின் பெயர்கள், பாடலில் காணும் சொற்றொடரோடு உயர்வுப் பன்மை விகுதி 'ஆர்' சேர்ந்தே அமைந்திருக்கின்றன. எனினும் விதிவிலக்காகவும் சில அமைந்துள்ளன. அவற் றுள் 'கவைமகன்' என்ற பெயரும் ஒன்று.

இன்றும் உயர்வுப் பன்மை விகுதி சேர்க்கப்படாது ஒருமையாகவே இறைவன் விளிக்கப்படுகிறான். சங்கப் பாடல்களில் முடிமன்னர்களுடைய பெயர்கள் 'ஆர்' விகுதி யின்றியே காணப்படுகின்றன.* இவ்வாறே குறுநில மன்னர்கள், வள்ளல்கள் இவர்கள் பெயர்களும் உயர்வுப் பன்மை விகுதியின்றிக் காணப்படுகின்றன. எனவே, '**கவைமகன்**' என்னும் இப் புலவரும் யாதேனும் ஒரு நாட் டுப் பகுதியின் தலைவராக இருந்திருப்பாரோ! அவ்வா றாயின், குறுந்தொகை தொகுக்கப்பெற்ற காலத்தில் இப் புலவரின் இயற்பெயரும் வரலாறும், தொகுத்தோரின் நினை வில் இருந்திருக்கவேண்டும். ஆனால், இத்தகைய வரலாற் றின் எத்தகைய அடிச்சுவடும் நமக்கு இப்போது கிடைக் காதது வருந்தத் தக்கதே.

இன்னொரு வகையாகவும் நாம் முடிவு செய்யலாம். '**அன்**' ஈற்றையுடைய இது போன்ற பெயர்கள், தமிழ்

---

*பிற்சேர்க்கை : 4 : 3.

மொழியில் வழிவழியாக வந்த குடி ஆட்சி உணர்ச்சி மறைந்து, மனிதனுக்கு மனிதன் வேறு என்ற வேறுபாடு காட்டும் காலந்தோன்றிய காலத்தில், கல்வியாலும் வேறு வகைகளாலும் சிறந்திருந்த மனிதர்களின் பெயர்கட்குப் பின் உயர்வுப் பன்மை விகுதி சேர்க்கும் வழக்கம் தோன்றிய காலத்திற்கு முந்தினவையாக இருக்கலாம். எப்படியும், 'ஆசிரியன் பெருங்கண்ணன்'* 'செய்தி வள்ளுவன் பெருஞ் சாத்தன்'† 'மதுரை வேளாசான்'‡ என்பன போன்ற பெயர்கள் ஒருமை விகுதிகொண்டு அமைந்துள்ளன என்றால், எவ்வகையான தாழ்மையும் இவற்றில் உள்ளதாக எண்ணக்கூடாது. உயர்வுப் பன்மை விகுதி, மன்னர்கள் தலைவர்கள் என்பாரின் பெயர்களுக்குப்பின் சேர்க்கப்பட வில்லை. தெய்வீகத்தாலும் அறிவுத் திறத்தாலும் முறையே சிறந்திருந்த அடியார்களும், புலவர்களுமே உயர்வுப் பன்மை விகுதி சேர்ந்த பெயர்களால் அழைக்கப்பட்டனர். எனவே, நல்ல எண்ணத்தோடுதான் இவ்வொருமை பன்மை வேறுபாட்டின் தொடக்கம் காட்டப்பட்டது. ஆனால், எந்த வகையான வேறுபாடு காட்டினாலும் அஃது, அடிப்படையாக உள்ள மக்கள் இனத்தின் பொதுமைத் தன்மைக்கு, மாறானதுதான். வேறுபாடு என்று தொடக்கம் ஆகிறதோ, அன்று முதல் அது முடிவின்றி வளர்ந்து கொண்டே போகிறது. உயர்வு தாழ்வு என்ற பகுதிகளும் அவற்றில் கிளைகளும் தோன்றுகின்றன. உயர் குடியாட்சி, செல்வராட்சியால் கவிழ்க்கப்படுகிறது. இத்தகைய வேறு பாடு, வளர்ந்தமையாலன்றோ, தமிழ்நாடு சீரழிந்தது! இக் காலத்தில் செல்வர்களை 'அவர்' என்பதைவிட 'அவர்கள்' என்று கூறுவதே மிகவும் மதிப்புடையதாகக் கொள்ளப்

*குறுந்தொகை, 239.

†குறுந்தொகை, 228.

‡புறநானூறு, 305.

படுகிறது. 'எல்லோரும் ஓர் இனம்' என்ற ஒத்த மதிப்பு என்று தமிழ் நாட்டில் அழிந்ததோ அன்று முதலே ஒரே வகையான பொருளில் வழங்கிவந்த மொழியாட்சியிலும் பிறழ்ச்சி உண்டாவதாயிற்று. அதன் பயனாக இன்று உயர்வுப் பன்மையாக 'அவர்' என்று மட்டும் கூறாது 'அவர்கள்' என்று விழிப்புடன் கூறியே செல்வர்களை அழைக்க வேண்டியவர்கள் ஆகின்றோம்.

'கவை' என்றால் இரட்டை யென்று பொருள். 'கவைமக' என்ற தொடர் இரட்டைப் பிள்ளைகளைக் குறிக்கும். இரட்டைக் குழந்தைகளுள் ஒன்றுக்கு ஏதேனும் தீங்கு வந்தால் மற்றக் குழந்தையும் அத் தீங்கின் பயனை அடையும் என்ற மூட நம்பிக்கை இன்றும் பெரும்பான்மையோரிடம் இருக்கிறது. கவிதையில், உணர்ச்சியைப் பெருக்குவதற்காக இரட்டைப் பிள்ளைகளின் செய்தி உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இப் பாடல் தலைவனை நோக்கித் தோழி பேசுவதாக அமைந்தது. "கொல்லுந் தன்மையும், பிறர் செல்லும் வழியைத் தடுப்பதும் ஆன வளைந்த கால்களையுடைய முதலைகள் மிக்க துறைகளையுடைய, மீன்கள் நிறைந்த பெரிய கழியை நீந்திக் கடந்து, நீ நின் அன்புடைமையால் இங்கு வருகிறாய். வழியின் துன்பமறியாமையால் தலைவியும் நின் வரவுக்கு மகிழ்கிறாள். நானோ, என் இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டால் எப்படி அஞ்சுவேனோ அவ்வாறு உங்கள் இருவர் செயல்களுக்காகவும் உள்ளத்தில் அச்சம் கொள்கிறேன்."

ஈருடல் ஓருயிராகப் பிரியமுடியாத அன்போடு ஒன்றாக இணைந்துவிட்ட தலைவன் தலைவியரின் வாழ்க்கையை, இரட்டைப் பிள்ளைகளைப் பற்றிய இவ் வுவமை நன்கு எடுத்துக்காட்டுகிறது. இருவருக்காகவும் வருந்தும் தோழியின் வருத்தம் நன்கு வெளியிடப்படுகிறது. இவ் வருத்தமான நிலை மாறவேண்டுமாயின், திருமணத்தைத் தவிர வேறுவழி

இல்லை. இதைத்தான் தோழி தலைவனிடம் வலியுறுத்த விரும்புகிறாள்.

**காலெறி கடிகையார் :**

குறுந்தொகை 267-ஆம் பாடலைப் பாடிய புலவராக இன்று போற்றப்படுபவரின் பெயர் இது. இப் பாடலில் '**கால் எறி கடிகை**' எனவரும் உவமையின் அழகை யுணர்ந்தவர்கள், நன்றியுணர்வோடு இவருக்கு இப் பெயரைச் சூட்டியுள்ளார்கள். கால்+எறி+கடிகை+ஆர் (உயர்வுப் பன்மை ஈறு) - கால் எறி கடிகை என்னும் உவமைப் பெயரார். இப் பாடலில் கால் எறி கடிகை என்பது **கரும்பின் அடிப்பகுதியில் வெட்டிய துண்டம்** எனப் பொருள் படும். கரும்பை நுனிப்பகுதியிலிருந்து சுவைத்துக் கொண்டுபோனால், அடியிற் செல்லச் செல்லச் சுவை மிகுதியாகிக்கொண்டு வருவதை நாம் உணரலாம். கரும்பிலே மிக்க சுவையுடைய பகுதி அடிக்கோடிதான். கால் எறி கடிகை—கரும்பின் அடிவெட்டுத்துண்டம்—அதன் சுவையைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா ?

வாழ்க்கையின் எத் துறையிலும் நம் தலைவனுக்கு இணையாவார் ஒருவரும் இலர். உலகின்கண் நிறைந்த எல்லா வகையான பயன்களையும் அவன் பெற்றுத் துய்த்திருக்கிறான். அவனுடைய செல்வமும், ஆற்றலும், ஒழுக்கமும், கல்வியும் அவனுக்கு மகிழ்ச்சி நிறைந்த இன்ப வாழ்வை அளித்திருக்கின்றன. அவனுடைய வாழ்வின் இனிமை நாளுக்குநாள் வளர்ந்துவந்திருக்கிறது ; அம் மகிழ்ச்சியின் உச்சநிலை—இன்பம் இடையறாதீண்டும் முழுமைநிலை—இப் புலவரின் பாடலில் தோற்றமளிக்கிறது. எல்லாவித இன்பங்களுக்கும் மூலமாக அமைந்த வாழ்க்கைக் கரும்பின் மிகச்சுவையான அடிப்பகுதியை அவன் அடைந்திருக்கிறான். கோல வளை யணிந்த அழகிய இளந் தலைவியின் இனிய முத்தம், அப்போது அவ் வெழிலரசியின் தூய

வெண்பற்களினிடையே ஊறிய நீர்—இவற்றைவிட இனிமையானது யாது? ஒன்றுமில்லை! யாதுமில்லை!

"இவ் வின்பம் பெற்றபின் தேடவேண்டுவது ஒன்று உண்டோ? என்றுவது ஒருநாள் மரண ஓலையைக் கையில் ஏந்தி, அற உணர்வு இல்லாமல் உயிர்கொள்ள எமன் வரத்தான் போகிறான்; எனவே, காலத்தின் எல்லையை எவரும் கூறல் இயலாது. அவ்வாறாயின், அதற்குள் ஒப்புயர்வற்ற இன்சுவையுடைய தூய வெண்பற்களினிடையே ஊறிய நீரை நமக்கு ஊட்டும் இளந் தலைவியால் பெறும் இன்பத்தை விட்டு வேறு பயனற்ற முயற்சிகளில் காலத்தை வீணாக்குவானேன்? உலகம் நிறைந்த பெருவளம் முழுதும் நமக்குக் கிடைப்பதாயினும் இந்த இன்பத்திற்கு அது நிகராகுமோ? அதற்கென முயலுதல் முயற்சியாகுமோ? இனிமை மிகுந்த கரும்பின் அடிப்பகுதியை மென்று சுவைக்கும்போது ஊறும் சாறு இனிப்பதுபோல் இனிக்கும் வாயெயிறு ஊறும் நீரை ஊட்டும் தலைவியொடு சேர்ந்து வாழும் இவ் வாழ்வைவிட இனிமையானது வேறொன்றும் இருக்கமுடியாது"—இங்ஙனம் தலைவன் கூறுகிறான். யாரிடம்? தன்னுடைய நெஞ்சிடமே அவன் கூறுகிறான். எப்போது? 'முற்காலத்திலும் ஆடவர் பொருள் தேடுதற்குப் பிரிதல் முறைமை. எனவே நாமும் தலைவியைப் பிரிதல் முறைமையாகும்' என்று நெஞ்சு கூறியபோது அதனிடம் இவ்வாறு கூறுகிறான்.

கரும்பின் அடிப்பாகம் பற்றிய உவமை இக் கவிதையின் உயிர்ப்பகுதியாக அமைந்திருப்பது இப்போது நன்கு விளங்கும். எனவே, இவ் வழகான உவமைச் சிறப்பால் புலவர் 'காலெறி கடிகையார்' என்ற பெயர் பெற்றாரென்றால் அது வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்ததென்பதில் யாது தடை?

**குப்பைக் கோழியார் :**

குறுந்தொகை 305-ஆம் பாடலின் ஆசிரியரின் பெயர் குப்பைக் கோழியார் என்பது. இப் பாடலின், 'குப்பைக் கோழி' என்ற தொடர், ஒருவமையின் பகுதியாக வருகிறது. இவ் வுவமப்பகுதி ஆசிரியருடைய பெயர்க் காரணத்தை விளக்குகிறது.

'குப்பை' என்றால் குவியல் என்பது பொருள். இங்கு ஒரு குன்று போன்ற நெற்குவியல் எனலாம்; எருக் குவியல் எனினும் ஆம். கோழி என்பது வெளிப்படை : பறவை இனத்தைச் சார்ந்த கோழியே ஆகும்.

பழங்காலத் தமிழ்நாட்டில், கோழிகளுக்கிடையே சண்டைமூட்டி, அவை கோபத்தோடு போர் செய்தலைப் பார்த்துக் களிப்பது மக்களின் பொழுதுபோக்குக்களில் ஒன்று.*

கோழியின் வெற்றியைச் சிறப்பித்துப் பாடுதல், புறப் பொருள் துறைகளுள் சுவையுடைய ஒரு துறையாகக் கருதப்பட்டது. அத் துறைக்குக் 'கோழிவென்றி' என்பது பெயர்.† எனவே, கோழிகள் அன்போடு தீனியூட்டி விழிப் புடன் வளர்க்கப்பட்டன. அவை சண்டைபோடப் பயிற்று விக்கப்பட்டன. உடையவர்களோ அல்லது பழக்குபவர் களோ, போட்டி நடக்குமிடத்திற்கு அவற்றைக் கொண்டு சென்று சண்டைமூட்டிவிடுவார்கள். சண்டை மும்முர மாக நடைபெறும்போது ஒரு கோழி எதிர்க் கோழியால் போர்விதிகளுக்கு மாறாக மிகுதியாகத் தாக்கப்பட்டு மிகக் கேடான நிலைமையை அடையும்போலிருந்தால், அதற்குரிய வன், தன் மனைவி இடுக்கண் உற்ற காலத்தில் விரைந்து சென்றுதவும் கணவன் போன்று விரைந்து சென்று கோழிகளைச் சண்டை செய்வதிலிருந்து பிரித்துத் தனியே

---

*தொல்., பொருள்., 60 : பக்கம் 197.

†புறப்பொருள் வெண்பாமாலை : 12, வென்றிப்படலம் : 6.

நிறுத்துவான். மிகச் சிறப்பாக நடந்துவந்த கோழிப் போர்களில் இவ் வழக்கம் இருந்தது. திருமணத்தைப் போலக் கோழிப்போரையும் மக்கள் ஒரு திருவிழாவாக் கருதிவந்தார்கள். பெருந்திரளான மக்கள் கூடி இக் கோழிப் போரைக் கண்டு களித்துவந்தார்கள். இது சேரிக் கோழிகளின் போர். ஆனல் கோழிகள் குப்பை மேட்டின் மீதோ, குவியலாகக் கிடக்கும் தானியங்களின் மீதோ அமர்ந்து கொத்திக்கொண் டிருக்கும்போது, அவற்றி னிடையே போர் மூண்டால், அவற்றுக்குரியவர் அங்கு இல்லாத நிலைமையில், அவற்றைப் போர் செய்யுமாறு உய்த்து விடுவதற்கும், மாறுட்டமான போரினல் அவற் றிற்கு ஊறு விளையும்போது பிரித்துவிடுவதற்கும் ஆட்கள் இருக்கமாட்டார்கள். யாருங் காணுமலேயே அக் குப்பைக் கோழிகள் போர் புரியும். செல்வக் குடும்பத்தில் பிறந்து, உயர்ந்த பண்புகள் வாய்க்கப்பெற்று வளர்ந்த ஒரு நங்கை, காதல் நோய் கொண்டபோது தனிமையாக இருந்து வருந்துவதுபோன்று, செல்வமாக வளர்க்கப்பட்ட கோழி கள், தமக்காக வருந்துவாரும், கவலைகொள்ளுவாரும் இல் லாமல், தம் உயிருக்கு மன்ருடும் போரைத் தனிமையில் நிகழ்த்தி வருந்துகின்றன.

குப்பைக் கோழியின் தனிப் போரையும் அதன் உயிருக்கு உலையாவதான குப்பையையும் புலவர் நேரில் கண்டிருக்கிருர். அவர் நேரில் கண்டு, மறவாமல் நினைத் துப் போற்றிய அக் காட்சி இக் கவிதையில் இடம் பெற் றிருக்கிறது. ஊட்டியாரின் கவிதையில் சங்க காலத்திய, முதிர்ந்த, திருந்திய காட்சியைக் கண்டோம். உண்மையை உண்மையாகக் கூறும் கூற்றை ஈண்டுக் கேட்கிருேம். கவிஞர் அல்லாதவரான மக்கள் அனைவருமே திறந்த கண்க ளுடன் நடமாடிக்கொண்டுதான் இருக்கின்றனர். ஆனல், அவர்கள், கண் இருந்தும் காண்பதில்லை; காதிருந்தும் கேட்பதில்லை. அவர்களுக்கு எல்லாம் சூனியமே. கனவு

போல் குழப்பமான தோற்றம்கூட அவர்களுக்கு ஏற்படுவ தில்லை. ஆனல், நம் புலவரோ மற்றவரெல்லாரையும் போல் செவிடாகவோ, குருடாகவோ இல்லாமல் அவர்கள் காணுதவற்றையும் கேளாதவற்றையும் கண்டும் கேட்டும் உணர்கிருர். ஒவ்வொரு நிகழ்ச்சியும் அவருக்கு ஒப்புயர் வற்ற அனுபவமாக அமைகின்றது. அவை அனைத்தும் அவரது மனத்தில் அழிக்கமுடியாதபடி பதிந்துவிடுகின் றன. அவர் கண்டவை அவர் மனக்கண்ணை விட்டகல்வ தில்லை. அவர் கேட்டவை அவருடைய உள்ளத்தில் ஒலித் துக்கொண்டே யிருக்கின்றன. அவரது அகமனம் புதுப் புதுக் காட்சியைக் கற்பனை செய்து காண்கிறது; புதுப் புதுச் செய்தியைக் கற்பனை செய்து கேட்கிறது. இந்த அனுபவம் தனக்கே உரிய குறிப்புப் பொருளை வெளிப் படுத்த முந்துகிறது. இயற்கையன்னை அளித்துள்ள பொறி யுணர்வுகளை எல்லோருமே பெற்றுள்ளோம்; நிரம்பவே பெற்றுள்ளோம். ஆனல், அவற்றின் பயனை நாம் அடைவ தில்லை. புலவர் மட்டுமே முழுப் பயனையும் அடைந்து நிற்பவர்.

கோழிப் போரையும், குப்பையையும் மற்றவர்கட் கில்லாத கண்கொண்டு, குப்பைக்கோழியார் கண்டிருக் கிருர். களவுக் கூட்டத்திற்குப் பின் காதல் நோயால் துன் புறும் தலைவியின் வருத்தம் மிகுந்த சொற்கள் இப் புலவரது நாவில் கவிதையாக உருவெடுத்துள்ளன. பலரறிய நடை பெறும் சிறப்பு மிகுந்த திருமணவிழா இன்னும் நிகழவில்லை. வீட்டிலும் வெளியிலும் உள்ளார், ஐயத்தோடு தலைவியைக் கூர்ந்து நோக்குகின்றனர்.

"அவரைக் கண்ட கண் தந்த காமமாகிய ஒளிமிக்க நெருப்பு என்னைப்பற்றி எரிக்கின்றது; என்பையும் சுட் டெரிக்கின்றது. எனினும், அவருள்ள இடத்திற்கு நாமா கச் சென்று அவரை ஆசை தீரத் தழுவிக் குழையலாம் என்ருல், அவர் எங்குள்ளாரோ அறியோம். அவர், காண

வும் அரியராய்விட்டார். இங்குக் காவல் மிகுதியாகிவிட்ட தால் அவர் தாமாக வந்து நம் துயரை நீக்க இயலாதவரா யுள்ளார். ஊராரறியத் திருமணம் முடிந்திருந்தால் இப்படி நடக்குமா? அப்போது, கோழிப் போரில் ஒரு கோழிக் குத் துன்பம் வருங்கால், அதற்குரியவன் தன் கோழியின் துன்பத்தைப் போக்க விரைவது போல், நமக்குரிய தலைவர் நம் துயர் நீக்க விரைந்து வந்திருப்பார். குப்பைக் கோழிகள் தாமாகப் போர் செய்யும் இடத்தில், கோழிப் போட்டி விழாவில் உள்ள ஆரவாரமும் சிறப்பும் இரா. அந்தக் குப்பை உச்சியில் ஒரு சவக்குழிக்குத்தான் இடம் ஏற் படும். வளர்ப்பவர்களின் கண்ணிற் படாமல், துன்பம் தீர்ப்பார் யாருமில்லாமல் அவை போரிடுகின்றன. துன் பம் தீர்ப்பார் அருகில் இல்லை. அதுபோல, என் துன்பத்தை நீக்குவாருமில்லை. எனவே, நாம் ஒன்றும் செய்வதற்கில்லை. நாமாக உயிர்தேய்ந்து இவ்வாறு அழிந்தொழிவதைவிட வேறொன்றுமில்லை"—இவ்வாறு தலைவி தன் உணர்ச்சியைக் கொட்டுகிறாள் தோழியிடம், அறத்தொடு நிற்கும் நிலையில்.

கவிதையிற் பொதிந்து மறைந்து கிடக்கும் தலைவியது உணர்ச்சியை வெளிப்படுத்தும் கருவூலமாக நிற்பது '**குப்பைக் கோழி**' என்னும் சொற்றொடரே. இத் தொடரை நினைத்தவுடன் கவிதையில் ஆழமான உணர்ச்சியாம் ஊற்றுப் பெருக்குக் கரைபுரண்டு வெள்ளமிடத் தொடங்கி விடுகிறது. இதனால்தான் கவிதையைப் பாடிய புலவர், பிற் காலத்தவரும் என்றும் மறவாதபடி 'குப்பைக் கோழியார்' என உயர்வுப் பன்மை இறுதி நிலையோடு சேர்த்து மதிப் புடன் காரணப் பெயரால் அவர்காலத்திலேயே அழைக்கப் பெற்றுள்ளனர்.

**குறி இறையார் :**

குறுந்தொகை 394-ஆம் பாடலின் ஆசிரியர் **குறி யிறையார்** என்பவர். **குறியிறை** என்ற சொற்றொடர் அப்

பாடலின் மூன்றுமடி முதற்சீராகும். உயர்வுப் பன்மை விகுதி 'ஆர்' இச்சொற்றொடருடன் சேர இப் புலவரின் பெயர் குறியிறையார் என அமைந்துள்ளது. இப் பாடலின் கருத்துத் தெளிவாக இருப்பினும், 'குறியிறை' யென்ற சொற்றொடரின் கருத்துத் தெளிவாக விளங்குகிறதென்று கூறமுடியாது.

தலைவனுந் தலைவியும் களவிற் கூடி மகிழ்ந்திருந்தனர். தலைவியின் எண்ணத்திற்குச் சிறிதளவும் மாறாமல் தலைவன் நடந்துவந்தான். ஆனால், குயில் கூவி இன்பமூட்டும் வாழ்க்கையின் இளவேனிற்காலம் மாறியது; பின்பனிக் காலம் வந்தது. தலைவன், தலைவியை மணம் செய்துகொள் ளாமல் காலம் கழித்துவந்தான். அவனுடன் நகைத்து விளையாடியதெல்லாம் தலைவிக்குப் பகையாயது. இம் மாறு தலைத்தான் தலைவி இப் பாடலில் விளக்கத் தலைப்பட்டாள்: மணம் மிக்க கள் வளம் நிறைந்த ஒரு பாக்கத்தில் மகிழ்ச்சி யோடு வாழ்ந்த ஒரு குறவனது வீடு உண்டு. அங்கே பழகிய ஒரு பிடி (பெண் யானை) இருந்தது. குறத்தி மக் கட் செல்வம் எய்தினள். அவன் பெண் யானையும் ஓர் இளங் குழவியைப் பெற்றெடுத்தது. யானைக்குழவி குறத் தியின் குழவிகளோடு இங்குமங்கும் ஓடி ஆடி அவர்களுக் குக் களிப்பூட்டியது. ஆனால், அது பெரிதாக வளர்ந்த பிறகு, விளையாட்டு, இனிமை என்பனவெல்லாம் பழங்கதை யாகிவிட்டன. குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகித் தங்கள் உணவுக்கெனப் பயிரிட்ட தினைப்புனத்தில் அந்த யானை புகுந்து மேய்ந்து, அத் தினைப்புனத்தைப் பாழ்படுத்தி யது. உணவிற்கு அப் புனம் தவிர அவர்கட்கு வேறொன்றும் இல்லை. இளமையில் அவர்களுக்கு மகிழ்ச்சியளித்த யானை யின் தோழமை, இப்போது அவர்களைப் பட்டினி கிடத்திச் சாவுக்கு அருகே நிறுத்திவிட்டது. அதுபோலவே, இனியனாக இருந்த தலைவனோடு விளையாடி மகிழ்ந்த மகிழ்ச்சியும், விளையாட்டும் இப்போது தலைவிக்கு அச்சம் தரும் பகை

யாக மாறிவிட்டன. தலைவன் நெடுநாளாக வருவதில்லை. அவன் எங்குச் சென்றான் என்பதும் சரியாகத் தெரிய வில்லை. தலைவியைச் சிறப்போடு மணம் செய்துகொள்வ தற்காகப் பொருள்தேடப் போயிருக்கிறான் என்று அவள் கேள்விப்பட்டாள். ஆனால், யார் கண்டார்கள்? அவன் அதற்குத்தான் சென்றானோ, அல்லது, வாராமைக்கு வேறுயாது காரணமோ தெரியவில்லை. வருந்தி வருந்தித் தலைவி சாகத்தான் வேண்டும் போலும்!

கவிதையில் உள்ள உவமை நயத்தை இதற்குமேல் விரிக்க இடமில்லை. உவமையின் உயிர்நிலை '**குறியிறை**' என்னும் சொற்றொடரில் உள்ளதாகப் பழந்தமிழர்கள் உணர்ந்தார்கள். '**குறியிறை**' என்பது புதல்வர் என்ற சொல்லுக்கு அடையாக நிற்கின்றது. இத் தொடரின் உண்மைப் பொருள் யாது? வீட்டின் இறப்பு (கழிகள் சுவர்மேல்தங்கும் பகுதி) என்பது ஒருபொருள். அப்போது, வீட்டை விட்டு வெளியிற் செல்ல முடியாத குழந்தைகள் யானைக்கன்றோடு வீட்டு இறப்பண்டை விளையாடுகின்றன என்று பொருள் செய்வதா? குறியிறை என்பது குழந்தை களின் சிறிய முன்கையையும் குறிக்கும். எனவே, குழந்தைகளின் மென்மையான கைகளை இத் தொடர் குறிக்கின்றதெனலாம்.

யானைக் குழவி அக் குழந்தைகளிடம் நட்புக் கொண் டிருந்ததனால், அதனை அவைகள் தம் மெல்லிய சின்னஞ் சிறு கைகளால் அணைத்து விளையாடின எனலாம். மற்றும் '**குறியிறை**' என்பது குறுநில மன்னனையும் குறிக்கும். குறுநில மன்னன்போல் புதல்வர்கள் யானைக் குழவியை மிடுக்குடன் அடக்கியாண்டனர் என்று கூறுவதா? பொருள் யாதாயிருப்பினும் உவமையில் அமைந்துள்ள உறழ்ச்சி, குறவரது மென்மையான குழந்தைகட்கும் வலிமை மிகுந்த பெரிய மலைபோன்ற யானைக்கும் இடையிலேயே உள்ளது. இளம்பருவத்தில் குழந்தைகளைத்

தன் தலைவர்களாக மதித்து அவைகள் விரும்பியவா றெல்லாம் தன்னொடு பழக இடங்கொடுத்து வீட்டிறப் பிலும் தினைப்புனத்திலும் அவர்களோடு சுற்றிச் சுற்றி விளையாடிய யானைக் குழவி, வளர்ந் தோங்கிய பிறகு அவற்றின் வாழ்க்கைக்கு இன்றியமையாத தினைப்புனத்தை அழிக்கிறது. வளர்ந்து வயதேறிய மூத்த நிலையில் இந்த அழிவைத் தடுக்கமுடியாமல் அவர்கள் தவிக்கிறார்கள். 'குறியிறை' என்ற சொற்றொடர் கவிதையின் உயிர் நிலையாக—உயிர்ஒளி பரப்பும் மையமாக இருக்கிறது. தலைவி விரும்பியவா றெல்லாம் அவளோடு அளவளாவிய தலைவ னுடைய அன்பையும், அவன் அன்பையே தலைவி ஐயுறுமாறு திருமணத்திற்கான பொருள் தேடச் சென்ற அவனது பிரிவையும் இச் சொற்றொடர் நம் மனக்கண்முன் நிறுத்துகிறது. உவமையின் சிறப்பு அதன் உயிர் நாடியாம் தன்மையை விளக்குகிறது.

**செம்புலப்பெயல்நீரார் :**

குறுந்தொகை 40-ஆம் பாடலை இயற்றிய புலவர், 'செம்புலப்பெயல்நீர்' என்னும் சொற்றொடரை அப் பாடலில் உவமையாக அமைத்துள்ளார். இவ் வுவமையின் சிறப்பால் இச்சொற்றொடரே, உயர்வுப் பன்மை குறிக்கும் 'ஆர்' விகுதியோடு இணைந்து அவருக்குப் பெயராக வழங்கியது.

ஓர் ஆண்மகனும் ஒரு பெண்மகளும் பிறர் எவரும் அறியாமல் தனியிடத்தில் எதிர்ப்பட்டுக் கூடிக் காதலனும் காதலியும் ஆகின்றனர். பிறர், தம்மீது ஐயம் அடையாமல் இருப்பதற்காக, ஒன்றுகூடிய அவர்கள் உடனே பிரிய வேண்டுபவர்கள் ஆகின்றனர். பிரியவேண்டும் என்ற கருத் தைத் தலைவியால் பொறுக்கமுடியவில்லை. பிரிந்தால் மீண்டும் அவர்கள் கூடுவது எப்படி? "முன்பின் னறியாத நம்மை ஓரிடத்திற் கொணர்ந்து நம்மிருவர் உள்ளங்களையும்

அன்பாற் பிணைத்து ஒன்றுபடுத்தி மகிழச்செய்த தெய்வம் என்னும் ஊழ் நம்மைப் பிரியதுவிடாது" என்று தலைவன் உள்ளத்தில் ஓர் உறுதியான எண்ணம் எழுகிறது. எனவே, அவன், "என் தாய் யாரோ! உன் தாய் யாரோ! என் தந்தைக்கும் உன் தந்தைக்கும் உறவுமுறை யாதோ! அறியோம். உன்னை நான் முன்பு பார்த்ததில்லை. என்னை நீ முன்பு பார்த்ததில்லை. ஆனால், செம்மண் நிலத்திலே மழை பெய்ததும் செம்மண்ணும் நீரும் கலந்து ஒன்றானாற்போல அன்புடைய நம் நெஞ்சங்கள் இரண்டும் கலந்து ஒன்று பட்டுவிட்டன. ஊழ்வினையின் நியதியால் பிரிக்க முடியாமல் ஒன்றுபட்ட நம் ஒற்றுமையில் பிரிவு எங்ஙனம் ஏற்பட வியலும்?" என்கிறான் தலைவன். தலைவனுடைய பேச்சே இந்தப் பாவாகும்.

செம்புலப் பெயல் நீர் என்றால், செம்மண் நிலத்திலே பெய்த மழை நீர். இவ் வுவமை நம் சிந்தனைக்கு விருந்தாக உள்ளது. செம்மண் நிலத்தை, மழை நீர் முன்னர் அறிந்ததில்லை. செம்மண் நிலமும் மழை நீரை முன்பு அறிந்ததில்லை. இயற்கையின் ஆற்றல் செம்மண்ணிற்கும் மழை நீருக்கும் உறவை உண்டாக்கியது. இவ் வுறவு அவ் விரண்டும் தன்னல விருப்பத்தோடு எண்ணமுயன்ற முயற்சியின் பயனன்று. அஃது, இயற்கைத் தெய்வத்தின் தொழிற்பாட்டால் நிகழ்ந்ததாகும். இந் நிகழ்ச்சியால் நிகழ்ந்த விளைவு யாது? மழை நீரும் செம்மண் நிலமும் ஒன்றுபடுகின்ற உறவால் உயிர்களுக்கு உணவளிக்கும் வளநிலம் உருவாகிறது. எனவே, உலகியல் முறைப்படி அமைக்கப்பட்டுள்ள பொருள்களின் ஒழுங்கு முறையில் அமைந்த இவ் வுறவிற்கு உட்பொருள் ஒன்று உண்டு. இவ் வுறவில் பிரிவைப் பற்றி ஏதாவது அச்சம் உண்டா? மீண்டும் பிரிந்தே நிற்கவேண்டும் பொருள்களை இயற்கைத் தெய்வம் ஒன்று சேர்த்தல் இல்லை. இந்த உறவை நோக்குக. இவ் வுறவு பிரிக்க முடியாதபடி கலந்த ஒன்றன்றோ! திட்பம்

மிக்குத் தனித்திருந்த தனிமை, செம்மண் நிலத்தில் மறைந்தொழிந்தது. மழை நீர் பட்டதும் செம்மண் இளகி மென்மைத் தன்மையை அடைந்தது. வன்னிலம் நீர்க் குழம்பாயிற்று. நீருக்கும் தனிமை நீங்கி விட்டது. ஒன்றோடும் கலவாமல் தூயதாய் இருந்த தன் சிறப்புக் குறித்து அது தற்பெருமை கொள்ள முடியாது. நிலத்தின் நிறத்தையும் சுவையையும் தான் ஏற்று அஃது அதனோடு ஒன்றிக் கலந்துவிட்டது. இவ்வாறு பரிமாறிக்கொண்டு உலகம் உய்யக் காரணமான இவற்றின் உறவில் பிரிவு எப்படி ஏற்படமுடியும் ? இக் கவிதையில் செம்மண் நிலம் தலைவியையும், மழை நீர் அவளை யடைந்த தலைவனையும் குறிப்பன ஆகும். செம்மண் நிலமும் மழை நீரும் கலந்த கலப்பிற் பெற்ற பொருட் சிறப்பனைத்தும் இன்பத்துடன் அன்பு பட்ட தலைவன் தலைவியர் உறவிற்கும் பொருந்தும். இதனால்தான் பண்டைத் தமிழர்கள் இப் புணர்ச்சியைத் ‘தெய்வப் புணர்ச்சி’ அல்லது இயற்கைப் புணர்ச்சி யென்று அழைத்தார்கள். ‘தெய்வப் புணர்ச்சி’யாவது தெய்வத்தாலான கூட்டுறவு. ‘இயற்கைப் புணர்ச்சி’யாவது இயற்கை நியதியால் ஆன கூட்டுறவு. நற்றிணை முதற் பாட்டில் கபிலர் என்னும் புலவர், ‘ செம்புலப் பெயல் நீர் ’ என்னும் உவமையைவிட அழகிய இனிய உவமை யொன்றைக் கையாண்டுள்ளார். அவர், தலைவன் தலைவியரின் கூட்டுறவிற்குத் தாமரைப் பூவின் தீந்தேன், சந்தன மரத்தில் உள்ள தேன்கூட்டில் பொதிந்து வைக்கப்பெற்று, அம் மரத்தின் மணத்தைப் பெறுதலை உவமையாகக் கூறுகிறார். மனித ஆற்றல், உலகியல் உணர்வு இவற்றின் தொடர்பின்றித் தெய்வத்தின் திருவிளையாடலாலேயே நிகழும் கூட்டுறவின் சிறப்புச் செம்புலப்பெயல்நீர் என்னும் உவமையில் அமைந்திருப்பதுபோல் கபிலரின் உவமையில் இல்லை. எனவே, குறுந்தொகையில் உள்ள இப் பாடலின் ஆசிரியர் ‘ செம்புலப்பெயல்நீர் ’ என்ற நான்கு சிறு

சொற்களில் சிறந்த காதல் தத்துவத்தை வெளியிட்டுள்ளார் எனலாம். எனவே, இச் சொற்ருெடரால் அக் கவிஞருக்குப் பெயரமைந்தது சாலவும் பொருந்துவதாகும்.

**தனிமகனர் :**

நற்றிணை 153-ஆம் பாடலின் ஆசிரியர் அப் பாடலில் '**தனிமகன்**' (தன்னந் தனியனுக நிற்கும் வீரன்) என்ற உவமையை ஆளுவதால் **தனிமகனுர்** என்ற பெயரால் சிறப்பித்து அழைக்கப்பெற்றுள்ளார். இப் பாடலில், தலைவி, தன் தனிமைத் துன்பத்தை வெளியிடுகிருள். தலைவன் கார்காலத் தொடக்கத்தில் வந்துவிடுவதாக உறுதிகூறிப் பிரிந்து சென்ருன். கார் காலம் வந்துவிட்டது. வானத்தில் மேகம் திரண்டெழுந்தது. தலைவியின் மனமும் தலைவன் வருவான் என்ற நம்பிக்கையால் பூரிப்பு அடைந்தது. மேகங்கள் கீழ்க் கடலிலிருந்து நீரை முகந்துகொண்டு மேற்கு மலைகளின் உச்சியில் கருநிறத்தோடு சூழ்ந்து, கோடையால் வறண்டு கிடந்த நிலப்பரப்பின்மீது இருண்டு பரவின. தலைவன் வரவில்லை; தலைவியின் உள்ளம் இருண்டது. ஆனுல், உடனே ஒரு சிறிது நம்பிக்கையும் எழுந்தது. மின்னல்கள் மின்னி உலக முழுதும் ஒளி செய்தன. கம்மியர் செம்பினை உருக்கிப் பானையாக வார்க்கும்போது உருக்குச் சிதறல்கள் மின்னுவதைப்போல அம் மின்னல்கள் மின்னின. தலைவனது வரவை முன்கூட்டியே அறிவிப்பது போன்று எழுந்த மேகத்தின் இடியோசை தலைவியின் காதுகளுக்கு இனிமையாக இருந்தது. ஆனுல், அவ்வளவும் அவளுக்கு ஏமாற்றமே ஆயிற்று. மழை பெய்து ஓய்ந்தது. அவளுடைய உள்ளமும் சோர்ந்தது. தலைவன் மீண்டு வருவான், அவனைப் பார்க்கலாம் என்ற நம்பிக்கையால் அவளை வாழச் செய்வதற்கு, அவளுள்ளம் படாதபாடுபட்டது. தலைவன் வருவதாக உறுதிகூறிய கார் காலத்தில் மழைபெய்து ஓய்ந்தது. மேகங்கள் மழை

பெய்து தம் கடமையை முடித்துத் தம் இருப்பிடமாகிய தெற்கு நோக்கிச் சென்றன. தலைவியது நெஞ்சமும் இனி மீளமாட்டாது தலைவனிடம் சென்றது.

கார்காலத்தில் இயற்கை யளிக்கும் அழகிய காட்சியும், மரஞ் செடிகொடிகளின் பசுமைப் பொலிவும், அவைகள் வளமாக வளர்ந்திருக்கும் தோற்றமும், கார்காலத்தின் பெருமையும் தலைவியது உள்ளத்தின் உறுதியான நம்பிக்கையின் அறிகுறிகளாம். இவற்றிற்கு எதிராக அவளுடைய தனிமைத் தோற்றம் புனைந்துரைக்கப்படுகிறது. அவளுடைய நெஞ்சத்தின் துணையும் இப்போது இல்லை. தலைவனோடு கூடியிராதபோது வாழ்க்கையின்பம் ஏது? "என் உடல் மட்டுந்தான் உள்ளது" என்று கதறுகிறாள் தலைவி. உண்மையிலேயே அவளது துன்பநிலை இரங்கத் தக்கதுதான்!

"ஒரு பெரிய நகரம் அழகோடும் பெருமையோடும் விளங்கியது. சினம் அடங்காத கொடுங்கோல் மன்னன் ஒருவன் அதன்மேற் படையெடுத்து அதை யழித்துத் தரை மட்டமாக்கி, அங்கு வாழ்ந்த மக்களைத் துன்புறுத்தினான். பிறகு படை வீரர்களோடு அவன் தன் நாட்டை அடைந்து விட்டான். அழிவுண்ட நகரம் பெரும்பாழ் ஆயிற்று. அங்கே எஞ்சி நின்றவன் ஒரே ஒரு வீரன்தான். 'நல்ல காலம் வரும், பாழ் நகரம் மீண்டும் நகரமாகும்' என்று நம்பிக்கொண்டு, அவன், அழிந்து பாழ்பட்ட நகரத்தைக் காத்து வருகிறான். "பாழடைந்த நகரத்தில் தனியனாக அந்த வீரன் எஞ்சி நிற்றல் போன்று என் உடல் மட்டும் ஈண்டு எஞ்சி நிற்கின்றது" என்று கூறுகிறாள் தலைவி. இக் கூற்றிலே, அவளது தனிமைத் துன்பத்தின் உச்சநிலை, இவ்வாறு கேட்டோர் மனம் வருந்தும் நிலையில் வெளியிடப் படுகிறது. ஈண்டுப் பாழடைந்த நகரத்தில் தனிமையில் வாழும் வீரனைப் பற்றிய கருத்துத் தலைவியின் தனிமைத் துன்பத்தையும், நம்பிக்கையிழந்த நிலையையும் அப்படியே

கண்ணாடியில் எதிர்நிழல் காண்பதுபோல் காட்டுகிறது. எனவேதான் 'தனிமகன்' என்ற சொற்றொடர், புலவர் பாடிய இச் சிறு கவிதையின் உயிர்ப்பகுதியாகக் கருதப் பட்டு உயர்வுப் பன்மை குறிக்கும் ஆர் விகுதியுடன் புலவருக்குப் பெயராக அமையலாயிற்று.

**தேய்புரிப்பழங்கயிற்றினர் :**

இது, நற்றிணை 284-ஆம் பாடலை இயற்றிய கவிஞருக் குப் பெயராக வழங்குகிறது. கவிஞர், அப் பாடலில் "தேய்புரிப்பழங்கயிறு" என்ற உவமையை அழகுற அமைத்தமையே, அஃது அவரது பெயரானதற்குக் காரணம் ஆகும். வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் தேடுவதற்காகத் தன் காதலியை விட்டுப்பிரிந்து நெடுந் தொலைவிலுள்ள நாட்டிற்குச் சென்ற தலைவன், இருவேறு உணர்ச்சிகளால் அலைக்கப்பட்டு மனம் நோவதை இக் கவிதை காட்டுகிறது. தலைவனுடைய அறிவும் மனமும் இடைவிடாது போர் நிகழ்த்துகின்றன. வேறொன்றையும் பற்றிக் கவலைப்படாத காதலுக்கும், கடமையை ஆற்றவேண்டும் என்று எண்ணும் அறிவுக்கும் இடைவிடாத போராட்டம் நிகழ்கிறது. தலைவி தன் முதுகில் நீண்டு அடர்ந்து கருநிறம் வாய்ந்து தொங்கும் கூந்தல், நீலமலரின் நிறம் பெற்றுத் தட்பம் வாய்ந்து பொலிவு பெற்ற மையுண்ட கண்—இவற்றால் அவன் உள்ளத்தைத் தன்பால் சிறைப்படுத்திவிட்டாள். 'தலைவியின் பிரிவாற்றாமைத் துன்பம் தீர்த்தற்கு விரைந்து செல்' என்று அவன் உள்ளம் அவனை ஏவுகிறது. "செய்வினையை முடிக்காது பிழைபடுதல் அறியாமையாகும்; இழிவை உண்டாக்கும்" என்று உறுதிகூறி, "அவ்வாறு அவள் பால் செல்ல விரைவுகொள்ள வேண்டா; சிறிது பொறு" என்று அவன் அறிவு அவனைத் தடுக்கிறது. உழைத்து உழைத்து ஓடாய்ப்போன தலைவனது உடல், இந்த இரண் டாட்டத்தின் இடையில் தத்தளிக்கிறது. இந்த நிலையைத்

தான் புலவர் ஓர் உவமை வாயிலாக விளக்குகிறார். "ஒளியுள்ள வெண்மையான தந்தங்களையுடைய இரண்டு யானைகள், இருபக்கத்திலும் பெருமிதத்தோடு நின்று, போட்டி போட்டு இழுக்கும், தேய்ந்த புரிகளையுடைய பழைய கயிறு இற்று அறுந்தொழிவதுபோல இந்த இரண்டாட்டத்தின் இடையே என் உடலும் இற்று வீழ்ந்தொழியுங்கொல்!" என்று அரற்றுகிறான் தலைவன். 'தேய்புரிப்பழங்கயிறு' என்ற உவமைதான் இக் கவிதையின் உயிர்நிலையாக உள்ளது. எனவே, இக் கவிதையைப் பாடிய புலவர் இச் சிறந்த உவமையாற் பெயர்பெறலானார். உவமையாக உள்ள சொற்றொடரோடு இயல்பாக வரும் உயர்வுப் பன்மை விகுதியான 'ஆர்' என்பதும், அவையிரண்டிற்கும் இடையே 'இன்' சாரியையும் இணைந்து **தேய்புரிப்பழங்கயிற்றினார்** என்றான தொடர் புலவர்க்குப் பெயராயிற்று.

**மீன் எறி தூண்டிலார் :**

குறுந்தொகை 54-ஆம் பாடலின் ஆசிரியர், '**மீன் எறி தூண்டில்**' என்னும் உவமையை மிகப் பொருத்தமாக அப் பாடலில் கையாண்ட காரணத்தால் '**மீன் எறி தூண்டிலார்**' என்ற உவம அடிப்பெயராலேயே பின் வந்த தலைமுறையாளர்களால் அறியப்படுவாராயினர். ஈண்டு, 'மீனெறி தூண்டில்' என்பது மீன் பிடிக்கும் தூண்டிலோடு கூடிய ஒரு மெல்லிய கழியாகும். திருமணம் செய்து கொள்ள ஏற்பாடுகள் செய்வதற்காகத் தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து சென்றுள்ளான். தலைவனை விட்டுப் பிரிந்திருத்தல் ஆற்றாத தலைவி, வருத்த மிகுதியால் அரற்றுகிறாள்; "நானோ இங்கே உள்ளேன். என் மேனி நலன், என்னிடம் உறையும் பண்பு நலனோடு கானக நாடனாகிய தலைவனுடன் சென்றுவிட்டது. சென்றுவிட்ட அது மீண்டும் வாராது; அவனிடத்திலேயே தங்கிவிடும். கானக நாடனுடைய

காட்டிலே, தன் உணவுக்காகப் பசுமையான மூங்கிலைத் துதிக்கையால் வளைத்த யானை, தினைப்புனங் காப்பவர் விடும் கவண்கல்லின் ஒலியைக்கேட்டு அஞ்சித் தன் பிடியை விடுகிறது. அவ்வாறு விடுபட்ட மூங்கில், மீன் அகப் படுத்தின தூண்டில் கழி விரைவாக உயரத்தில் எழுவது போல விசையுடன் எழுகிறது. உவமையின் பொருத்தம் தெளிவாக விளங்குகிறது. ஆனால், வெளிப்படையாகப் பொருளை விளங்க உணர்த்துவது போன்ற இப் பாடலில், ஆழமான உட்பொருள் புதைந்துகிடக்கின்றது. அவனது கானக நாட்டைப் பற்றிய புனைந்துரை அவனுடைய பண்பு நலன்களைப் பற்றிய கருத்துக்களை உணர்த்தும் குறிப்புடையது. கானக நாட்டிற்குத் தகுதி வாய்ந்த அத் தலைவனது வடிவத்தை அப் புனைந்துரை நம் மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது. தலைவியின் மனக்கண் முன் தோன்றும் வடிவம் அதுவாகும். அவளுடைய ஆற்றுமை உணர்ச்சியின் நுண்ணியவடிவமே அப்புனைந்துரை. தலைவன் தான் யானை ; யானையால் பிடிக்கக்கூடிய அளவுக்கு எதிர் பாராது வீசிய காற்றால் சாய்த்துக் கொடுக்கப்பட்ட பெருமை வாய்ந்த இளம் பசுமூங்கிலே தலைவி. "கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை" என்ற பழமொழி உண்மையாகிறது. தலைவிக்குக் காவல் மிகுகிறது. தலைவியைக் காக்கும் தாயரும், தோழியர் ஆயமும், தினைப்புனங் காப்போர் போன்றவர். அவர்கள் தலைவியைப் பற்றி அலர் (பழிப்புரை) கூறுகின்றனர். கவண்கல் யானையை நோக்கி எறியப்படவில்லை. எனினும், மூங்கிலின் பசுந்தழையை வாயிலிட்டு உண்ணத் தொடங்கிய யானை, கவணொலி கேட்டு அஞ்சி, மூங்கிலை விட்டுவிட்டு ஓடிவிடுகிறது. பழிச் சொல் தலைவனைப் பற்றிக் கூறப் படவில்லை. எனினும், தலைவனின் குற்றமுள்ள நெஞ்சு அச் சொல்லுக்கு அஞ்சியது. அதனால், அவன் தலைவியை விட்டுப் பிரிந்தான். யானையின் பிடியிலிருந்து விடுபட்ட

மூங்கில் வானைமுட்டி ஓங்கிநிற்கிறது. யானை இப்போது மூங்கிலை எட்டமுடியாத அளவுக்கு மிகக் கீழே இருக்கிறது; மூங்கிலோ மிக உயரத்தில் இருக்கிறது. மூங்கிலின் இளந்தளிர்களாம் அதன் கன்னித் தன்மை யானையால் நுகரப்பட்டது. யானையும் நிற்கிறது. மூங்கிலும் நிற்கிறது. மூங்கில் தன் கன்னித் தன்மை இழந்து நிற்கிறது. இரண்டும் மீண்டும் ஒன்றுபடுவது எவ்வாறு? இங்ஙனம், கவிதையைப் படிக்கும்போது, ஊழால் பிணைக்கப்பட்ட பெருமை வாய்ந்த தலைவனும் கற்பு நிறைந்த தலைவியும் சேர்ந்து மகிழ்ச்சியோடு இருக்கும் காட்சியும் அதற்கு முற்றிலும் மாறான வகையில், தனிமையாக இருந்து துன்புற்று வருந்தும் தலைவியின் துன்பக் காட்சியும் நம் மனக்கண் முன் எழுந்து தோன்றுகின்றன. தூண்டிலிற் பட்ட மீனின் கொடுந்துன்பம், இந்தத் துன்பக் காட்சியின் அளவை மிகுத்துக் காட்டுகின்றது. தலைவியின் துன்ப வாழ்க்கையை, இவ் வுவமையை உயிர்நாடியாகக் கொண்டு உணர்த்தும் ஆசிரியர், 'மீன் எறி தூண்டிலார்' என அழைக்கப்பட்டார் எனின் அது சாலவும் பொருந்துவதே யாகும்.

**விட்டகுதிரையார் :**

குறுந்தொகை 74-ஆம் பாடலை இயற்றிய ஆசிரியரின் பெயர் 'விட்டகுதிரையார்' என்பது. தலைவனும் தலைவியும் தோழி யறியாவண்ணம் தனியிடத்தில் எதிர்ப்பட்டு அன்புடன் கலந்தனர். ஒருநாள், தலைவி வியக்கும் வண்ணம் தோழி, அவளுடைய களவு தனக்கு வெளிப்பட்டதைக் குறிப்பாகப் புலப்படுத்துகிறாள்; அதனுடன் நில்லாமல் தலைவனின் வேண்டுகோள்களை அவளிடம் கூறித் தானும் அவனுக்காக வேண்டுகிறாள்.

"கட்டிலிருந்து அவிழ்த்துவிடப்பட்ட குதிரை துள்ளி யெழுந்து ஓடுவதைப்போலக் காற்றால் வளைந்த பசுமையான

மூங்கில் விரைந்தெழுந்து வானத்தைத் தொடுகின்ற காட்சியையுடைய மலைக்குரியவனாகிய தலைவனை நாம் நினைத்துக்கொண்டிருக்கிறோம். இதையறியாத அவன், நம் நலத்தை விரும்பி, வேனிற் காலத்தில் வெம்மை பொறுக்கமுடியாமல் வருந்தும் எருதைப்போல மெலிகின்றான் என்று சொல்லுகிறார்கள்."

தோழியின் இந்தப் பேச்சை மேலாக நோக்கும்போது, அடியிற் கண்டவாறு பொருள்படுகிறது: மலைநாட்டில் தலைவி தோழியரோடு விளையாடுவதைக் கண்ட தலைவன், பின்னாலிருந்து அவளைப் பார்த்துக்கொண்டிருந்தான். நெடுநேரம் நின்றமையால், வெயிலில் நிற்கும் எருது களைத்துவிடுவதைப்போல, அவனுக்குக் களைப்பு உண்டாகியது. விளையாடிக்கொண்டிருந்த போதெல்லாம் தலைவி அவனையே நினைத்துக்கொண்டிருந்தாள். ஆனால், அதையறியாத தலைவன், அவள் தன்னைத் திரும்பியும் பாராமல் இரக்கமின்றி இருந்தாள் என்று குறை கூறினான்.

ஆழ்ந்து நோக்கும்போது, தலைவன்தலைவியரின் காதலைக் கவிதையின் வரிகள் குறிப்பாகவும் உறுதியாகவும் புலப்படுத்துவதை யுணரலாம். பசுமையான மூங்கில், பசுமையும் இளமையும் பொருந்திய தலைவியைக் குறிக்கலாம்; அல்லது, கவிதையில் உள்ள புனைந்துரை தலைவனுக்குரிய மலையைப் பற்றியதாதலின் அவனைக் குறிப்பதாகலாம்; இருவரையுமே முறையாகக் குறிக்கிறது என்றும் கொள்ளலாம். காதலிக்கப்பட்டாரைக் காணும்போது மனத்தில் பரிவு கிளர்ந் தெழுகின்றது. தலைவன் தலைவியர், மிக்க காதலோடு ஒருவரை யொருவர் காணுகின்றார்கள். அறந் தவறலாகாது என்ற அவர்களது உறுதியும், சுற்றுப்புறமும் அவர்களை மனம்போல் நடக்கவிடாமல் கட்டுப்படுத்துகின்றன. உணர்ச்சியும் காதலும் பொங்குகின்ற பார்வையும், தனிமையும், காலத்தின் பொன்னான வாய்ப்பும் இக் கட்டுப்பாட்டை நீக்குகின்றன. அவர்கள்

தழுவிக்கொள்ளுதலில்தான் எத்தனை விரைவு! காற்றின் வீச்சானது கண் மூடித்திறக்கும் நேரத்திற்குள் வான் முகடும் வரைமூங்கிலும் தழுவிக்கொள்ளுமாறு செய்தது. இந்த நொடிநேர முயக்கத்தைத் தோழி குறிப்பிடவில்லை; காற்று விசையாக அடிக்கும்போது மூங்கில் மேலெழுந்து வான்முகட்டைத் தழுவுதல் போன்று, காலம் வாய்க்கும் போது தலைவன் தலைவியர் இருவரும் தம் கட்டுப்பாட்டை மீறி ஆர்வம் ததும்பும் கண்களால் ஒருவரை யொருவர் விழுங்குவதுபோல் நோக்குவதைக் குறிப்பிடுகிறாள் எனக் கொள்ளலாம். உயர் தகுதி வாய்ந்த அவர்கள் இருவரும், ஒருவர்க் கொருவர் பொருத்தமானவர்கள் என்பதையும் தோழியின் கூற்றிலிருந்து அறியலாம்.

மீன் எறி தூண்டிலார் கண்டதுபோல், வளைந்த நிலையி லிருந்து வானளாவ எழும் மூங்கிலின் காட்சியைத்தான் இப் புலவரும் கண்டார். "விட்ட குதிரை விசைப்பின் அன்ன விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்" என்ற அடிகளை நோக்குக. ஆனால் ஒரே காட்சி, இருவருக்கும் நல்கிய கருத்தில்தான் எத்துணை வேறுபாடு! முன்னவரின் மனத்தில் துன்பியற் கவிதை உருவாகியது. இப் புலவரின் மனத்தில் காதல் ததும்பும் களிப்புச் சுவை பொருந்திய இன்பக் கவிதை வடிவெடுக்கிறது. இந்த வியப்பான வேறு பாட்டின் உண்மைதான் என்ன? மூங்கிலின் வேகமான எழுச்சிக்குக் காட்டப்பெற்றுள்ள இரண்டு வேறுபட்ட உவமைகளில் அந்த உண்மை மறைந்து கிடக்கிறது. இவ் வுவமைகளைக் கற்று, அவை யுணர்த்தும் பொருளையறிந்த வர், புலவரின் கற்பனை செய்யும் வேலையை உணருவர். இயற்கை, உணர்வற்றதாகவும், பண்பற்றதாகவும், மாறு பாடற்றதாகவும் இருக்கலாம். புலவனின் கற்பனை தன் கலைத்திறமையால் அதற்குப் பண்பு கற்பிக்கிறது. அதற்கு உயிரூட்டி, மற்றவர் வணங்கும் பொருளாகவும் ஆக்கு கிறது. இவ் விரண்டு கவிதைகளில் உள்ளதுபோல, மனித

வுணர்ச்சிகளை உள்ளவாறு காட்டும் பொருத்தமான கண்ணாடியாக, இயற்கை, புலவனுக்குப் பயன்படுகிறது. புலவர்கள் கற்பனைத் திறத்தோடு புனைந்த இந்த இயற்கைக் காட்சிகள், விஞ்ஞானி உயிரற்ற சொற்களால் வகுக்கும் இயற்கைபற்றிய சட்டங்களை(Formulae)விட எவ்வளவோ உண்மையானவை. தமிழினம் தனக்கு இயற்கையிலேயே உள்ள கவிதையுணர்வால், இப் புலவர்களை அவர்களுடைய உவமைகளாலேயே அழைத்துப் போற்றுகிறது.

**வில்லக விரலினார் :**

'வில்லக விரல்' என்ற உவமை குறுந்தொகை 370-ஆம் பாடலில் வருகிறது. இப் பாடலில் உள்ள 'வில்லகவிரல்' என்ற சொற்றொடரோடு 'இன்' சாரியையும் உயர்வுப் பன்மை குறிக்கும் 'ஆர்' விகுதியும் சேர்ந்து புலவரின் பெயர் அமைந்ததெனக் கொள்ளல் வேண்டும். தலைவனின் பரத்தை, தன்னைத் தலைவி பழித்துரைத்தாள் எனக் கேள்விப்பட்டாள். பெரும்பான்மையாய்ப் பரத்தைக்கும் தலைவனுக்கும் அயலார் அறியும்படி சொற்போர் நிகழ்ந்ததைக் குறித்துத் தலைவி பழித்து உரைத்திருக்கலாம். பரத்தை, தலைவனை வெளியிற் செல்லாதவாறு தன்னிடம் வைத்துக் கொண்டமையால் தனக்குத் தனிமைத் துன்பம் ஏற்பட்டதைப் பற்றியும் தலைவி கூறியிருக்கலாம். இதற்குக் காரசாரமாக மறுமொழி கொடுக்கிறாள் பரத்தை. "தலைவியின் உள்மனத்தில் தலைவன்மேல் ஆழமான அன்பு இல்லை. வெளியுலகத்தாருக்குத் தெரிவதற்காகத்தான் அவள் தலைவனோடு ஒன்றக் கலந்துவிட்டதுபோல் பாவனை செய்கிறாள். வாதநோய் கொண்டவரின் கைவிரல்கள் மிகநெருக்கமாகச் சேர்ந்து மூட்டுக்கள் அசையாமல் ஒரே நிலையில் நிற்றலைப் போன்றது தலைவன் தலைவியரின் நட்பு. அவ் விரல்கள் ஒரு வேலையும் செய்யவியலாமல் பயனற்றவையாதல் போல அவர்களுடைய நட்பும் பயனற்றது. கைவிரல்கள் நோய்

கொண்டமைபோல அந்தநட்பு நோய்பிடித்த நிலையில் இருக்கிறது. இந் நட்பைப்போன்றதன்று, பரத்தை தலைவன்மேற் கொண்ட காதல். பொது இடங்களில் அவர்கள் இருந்து பேசும்போது அவர்களுக்குள் சேர்க்கை இராது. அவர்கள் ஏதும் உறவற்றவர்கள்போல, முன்பின் னறியாத ஏதிலார் போலப் பழகுவார்கள். ஆனால், வீட்டில் இருக்கும் போது, போர்முனையில் பகைவரை நோக்கி அம்பு எய்தற்காக வளைத்த வில்லைப் பிடித்த கைவிரல்கள் ஒன்றாகச் சேர்ந்து வலிமையோடு செயலாற்றுவதைப் போல், அவர்கள் இருவரும் ஒருவராக இணைந்து, அந்த இணைப்பின் வலிமையால் உலகத்தையே எதிர்க்கவும் சித்தமாயிருப்பர்:" இதுவே பரத்தை மொழியின் சாரமான கருத்து.

'வில்லைப் பிடித்த விரல்கள் போன்ற நட்பு' என்ற உவமையைப் பரத்தை பயன்படுத்தித் தலைவியின் போலியான அன்புக்கும் ஓர் உவமை காணுமாறு நம்மை விட்டு விடுகிறாள். நம் சிந்தனையைத் தூண்டும் ஆற்றல், பரத்தையின் உவமைக்கு இருப்பதால்தான், இதைக் கவிதையில் அமைத்த புலவர் '**வில்லக விரலினார்**' எனப் போற்றப் பெறுகிறார்.

## ஆ

### ஓர் ஏர் உழவர் (ஓர் ஏர் உழவனார்) :

புறநானூற்று 193-ஆம் பாடலின் ஆசிரியர்பெயர் '**ஓர் ஏர் உழவர்**' என்பது. அப் புலவர் பாடிய பாட்டில் உள்ள ஒரு சொற்றொடராலேயே அவருக்கு இப் பெயர் அமைந்திருத்தல்வேண்டு மென்பதில் ஐயமில்லை. ஆனால் இப் புறநானூற்றுப் பாடலில் அச் சொற்றொடர் இல்லாதது நமக்குச் சிறிது வியப்பையே அளிக்கிறது. (சைவசித்தாந்த மகா) சமாஜத்தாரின் பதிப்பில், நக்கீரர் பாடியதாக உள்ள குறுந்தொகை 131-ஆம் பாடலில் '**ஓர் ஏர் உழவன்போல**'*

*5-ஆம் வரி.

என்ற வரி காணப்படுகிறது. டாக்டர் சாமிநாதையர் அவர்களின் குறுந்தொகைப் பதிப்பில் இப் பாடலின் ஆசிரியராக 'ஓர் ஏர் உழவனார்' என்பவர் குறிக்கப்பட்டிருப்பதும், பிரதிபேதமாக நக்கீரர் என்னும் பெயர் காணப்படுவதும் நமக்கு மகிழ்ச்சியளிக்கின்றன. நக்கீரர் ஒரு சிறந்த புலவர். 'ஓர் ஏர் உழவனார்' என்னும் இலக்கியப் பெயரை அவர் பெற்றிருந்தால், பிற்காலத்தார் அதை மறவாது போற்றியிருப்பர். எனவே, குறுந்தொகை 131-ஆம் பாடலின் தலைப்பில் நக்கீரர் பாடியதாக எழுதப் பட்டிருப்பது படிசெய்வோரின் தவறு என்று முடிவுகட்ட வேண்டியுள்ளது.

கார்காலம் வரப்போவதை அறிந்த தலைவன், அக் காலத்தில் தலைவியை அடைவதாக அவளிடம் தான் கூறிய உறுதிமொழியை நினைந்து, வருந்திக் கூறுவதாக உள்ளது குறுந்தொகை 131-ஆம் பாடல். "பார்ப்பவர்களுடைய நெஞ்சத்தோடு போர்புரியும் பெரிய கண்களும், அன்பான நோக்கும், அசைகின்ற மூங்கில் போன்ற அழகான தோள்களும் உடைய தலைவி இருக்கும் ஊர் நெடுந் தொலைவில் உள்ளது. மழை பெய்ததனால் ஈரமாகி உழுவதற்குத் தக்க நிலையடைந்த பெரிய வயலையுடைய உழவன், தன்னிடம் ஒரே ஏர் மட்டும் இருந்தால், ஈரம் காயும்முன் உழுது முடித்தல் வேண்டுமென்ற விருப்பத்தால் எவ்வாறு விரைந்து உழுவானோ, அவ்வாறு தலைவியிடம் செல்ல விரைகிறது என் நெஞ்சு. அந்தோ! அதனால் எனக்கு வருத்தம் பெரிதாகிறது." 'ஓர் ஏரையுடைய உழவன்' என்ற உவமம் இக் கவிதையின் இதயமாக உள்ளது. உயர்வுப் பன்மை விகுதிகள் 'அர்' என்பதும், 'ஆர்' என்பதும் முறையே இவ் வுவமைத் தொடருடன் இணைந்து 'ஓர் ஏர் உழவர்' 'ஓர் ஏர் உழவனார்' என்னும் பெயர்களை அமைத்துள்ளன.

**கழைதின் யானையார்:**

இவர் புறநானூற்று 204-ஆம் பாடலின் ஆசிரியர். '**கழைதின் யானை**' என்ற சொற்றொடரைக் கவிதையில் பயன்படுத்தியமையாலேயே இவர் இப்பெயர் பெற்றார் என்பது கண்கூடு. 'மூங்கிலை உண்கின்ற யானை' என்பது இத்தொடருக்குப் பொருள். இவ்வாசிரியர் பாடியதாக உள்ள இப்புறநானூற்றுப் பாடலில் **கழைதின் யானை** என்னும் தொடர் காணப்படவில்லை. ஆனால், சோழன் நலங்கிள்ளி, தன் பகைவர்மேற் சினந்து, வஞ்சின மொழியாகக் கூறிய புறநானூற்று 73-ஆம் பாடலில் இத்தொடர் வருவது வியப்பிற்கிடமாக உள்ளது. (**கழைதின் யானை கால்** அகப்பட்ட —புறம்., 73 : 9). அப் பாடலில், சோழன், தன் வீரம் செறிந்த கொள்கையை வெளியிடுகிறான் :

"என் பகைவர் மெல்ல வந்து என் காலில் விழுந்து வேண்டுவராயின் அவர்க்கு, வெற்றிபொருந்திய முரசுகள் முழங்கும் அற்பமான என் நாட்டைமட்டுமன்று, என் இனியஉயிரையும் நல்குவேன்.என் அமைச்சர், படைத்தலைவர் முதலியோரின் வலிமையை எண்ணாது, ஊக்கம் மிகுந்த என் வலிமையை இகழ்ந்துரைத்த அறிவிலி, தூங்கிக்கொண்டிருக்கும் புலியின்மீது இடறிவிழுந்த குருடன் உயிர்தப்ப இயலாதவாறுபோல, என்னிடமிருந்து தப்பிப்போக முடியாது. மூங்கிலைத் தின்னும் வலிய யானையின் காலின் கீழ் அகப்பட்டு மூங்கிலின் இளமுளை அழிவதுபோல அவன் அழியும்படி அவன்மேல் படையெடுத்துச் சென்று போர் புரிவேன். அவ்வாறு செய்யேனாயின், என்னிடத்து அன்பில்லாத பெண்களை நான் வலிந்து தழுவிய பாவமும் பழியும் என்னைச் சேரட்டும்."

யானை காட்டிற்குச் சென்று மூங்கிலை மேய்தல், கொடுங்கோலாட்சியால் தம் நாட்டைப் பாழாக்கிய கொடிய மன்னர்களை இவ்வரசன் வென்று, மறைந்து

கிடக்கும் எல்லாப் பகைகளையும் வேரொடு களைந்த வெற்றிச் செயலைக் குறிக்கிறது.

'கழைதின் யானை' என்ற சொற்றொடரின் சிறப்பால், பாட்டலின் ஆசிரியர் 'கழைதின் யானையார்' என்று பெயர் பெற்றிருத்தலே முறையாக இருப்பவும், ஆசிரியர் பெயர் 'சோழன் நலங்கிள்ளி' என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இப் பாடலைப் பாடியவன் ஒரு மன்னனாகத்தான் இருத்தல் வேண்டும் என்பதில் யாருக்கும் ஐயம் இருக்கமுடியாது. சோழ மன்னன் கூறிய வஞ்சின மொழிகளைப் பாடலாகப் பாடியவர் கழைதின் யானையார் என்று கருத இடமுண்டா? பாடலின்கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள குறிப்பில் இங்ஙனம் கருதுவதற்கு அடிப்படை இல்லை. சோழன் நலங்கிள்ளியின் இலக்கிய இயற்பெயர் 'கழைதின் யானையார்' எனச் சொல்லக்கூடும். இதை மனத்துட்கொண்டு 'கழைதின் யானையார்' பாடியதாக உள்ள புறநானூற்று 204-ஆம் பாடலை ஆராயலாம். சிறு நாட்டுப் பகுதியொன்றற்குத் தலைவனாகிய வல்வில் ஓரி என்பானைப் புகழ்ந்து கூறும் பாடல் அது. சோழ மன்னன் கிள்ளிவளவன், தன்னுடைய சிற்றரசர்களுள் ஒருவனாகிய பண்ணனைப் புகழ்ந்து புறம். 173-இல் பாடியுள்ளான். எனவே, நலங்கிள்ளி, வல்வில் ஓரியின் வண்மையைப் புகழ்ந்து பாடினான் என்பது பொருந்தாமற் போகாது. சங்கப் பாடல்களிற் பெரும்பாலானவை, அவற்றைப் பாடிய புலவர்களின் கூற்றாக இராமல், அவர்கள், தம் கற்பனையால், ஒரு சூழ்நிலையைப் படைத்து அங்கு நிறுத்தும் கற்பனைப் பாத்திரங்களின் கூற்றாக உள்ளன. எனவே, நலங்கிள்ளி, ஓரியைப் புகழ்ந்ததில் இழுக்கு ஒன்றுமில்லை. கோவூர்கிழார் என்னும் புலவர், ஓரியின் பகைவனான மலையமான்காரியின்* குழந்தைகளைச் சோழன் கிள்ளிவளவன், யானையின் காலடியில் இடக்

*சிறுபாண், 110-111.

கட்டளையிட்டபோது, அவனிடம் வேண்டி அவர்களை விடுவிக்கிறார்.* அப் புலவர் சோழன் நலங்கிள்ளியையும் புறம். 68-ஆம் பாடலில் புகழ்ந்துள்ளார். எனவே, சோழன் நலங்கிள்ளியும் வல்வில் ஓரியும் ஒரே காலத்தவர் என்பதற்கும், காரியின் மக்கள் சோழனுக்குப் பகைவர்களாக இருந்தனர் என்பதால், ஓரி சோழனது துணையைப் பெற்றிருந்தான் என்பதற்கும் போதிய வரலாற்றுச் சான்றுகள் உள்ளன.

இன்னொரு வகையாகவும் முடிவுசெய்ய இடமுண்டு. புறம். 204-ஆம் பாடலைப் பாடிய 'கழைதின் யானையார்' 'கழைதின் யானை' யென்னும் தொடரை யமைத்து மற்றொரு பாடல் பாடியிருத்தல் வேண்டும். அப் பாடல் காலவெள்ளத்தில் மறைந்திருக்கக் கூடும். சோழன் நலங்கிள்ளி அழகான இத் தொடரைத் தனது பாடலில் பயன்படுத்தி,அதற்குச் சாகா வாழ்வளித்தான் எனக் கொள்ளுதல் பொருத்தமே.

---

## 4. மனங்கவரும் கலையழகு வாய்ந்த புனைந்துரைச் சொற்றொடர்கள் இயற்பெயர்களாக வருதல்

புலவனின் கற்பனை முழுதையும் உருவகங்களும் உவமைகளும் மட்டுமே உணர்த்திவிட முடியும் என்பதற்கில்லை. வெறும் அணிகள் மட்டும் கவிதையாக ஆதல் முடியாது. உள்ளதை உள்ளபடி நேரடியாகச் சொல்லும் அறிவியல் நூலின் வறண்ட நடைக்கு முற்றிலும் மாறாக, மனங்கவரும் கலையழகு வாய்ந்த வருணனைச் சொற்றொடர்கள், கற்பனையை வெளியிடுவதில் தனிச் சிறப்புடையவை யாகும்.

*புறம், 46.

புலவன், தான் சொல்லக் கருதிய பொருளை நேர்முகமாகக் கூறாது, வருணனை நயத்தோடு ஒருவாறு குறிப்பாகப் புலப்படுத்தி அமைக்கும் சொற்றொடர்களான இவை ஆங்கிலத்தில் 'Tropes' என அழைக்கப்படும். புலவன், தான் கற்பனை செய்த கருத்தை வளப்படுத்தும் குறிப்புக்களை அமைக்கும் ஆற்றல் 'நோக்கு' எனப்படும். அந்நோக்கை உயிர்நிலையாகக் கொண்டு புலவனின் கருத்து வெளிப்படும் முறைக்கு 'இறைச்சி' எனத் தமிழில் பெயர் வழங்குகிறது.

தொல்காப்பியம், இயற்சொல் - திரிசொல் என்ற இருவகைப்பட்ட சொற்களிடையே உள்ள வேறுபாட்டைக் கூறுகிறது. பேச்சு வழக்கு, செய்யுள் வழக்கு இரண்டிலும் பொதுவாகப் பயின்று இயல்பால் பொருள் உணர்த்தும் சொற்கள் இயற்சொற்கள் எனப்படும். இயற்சொற்களின் இயல்பினின்றும் மாறுபட்டதாய்ச் செம்மையாகப் பண்பட்டதாய் இயற்சொற்போல இயல்பில் பொருள் உணரப்படாது அரிதாய்ப் பொருள் உணர்த்துவதாய்ச் செய்யுள் வழக்கில் மட்டும் பயிலும் சொல் திரிசொல் எனப்படும். இயற்சொல் தன் இயல்பிலிருந்து திரிந்து வழங்கும் சொல்லே திரிசொல் எனினும் அமையும். வடமொழியாளர் திரிசொற்களை 'வக்ரோக்தி' என அழைப்பர். தமிழ் இலக்கிய வரலாற்றின் தொடக்கத்திலிருந்து இவ் வேறுபாடு தொடர்ந்து ஆட்சி பெற்று வந்துள்ளது.

கவிதையின் புறவடிவத்தில் கருத்திருத்திப் பொருள்களைச் சுற்றிவளைத்துக் கூறும் வக்ரோக்தியே சிலருக்குச் சிறப்பானதாகத் தோன்றும். ஆனால், சொற்றொடர்களில் ஆழமாகப் புதைந்திருக்கும் உட்பொருளை—சொற்களின் உட்கருத்தை—க் கருதும்போது, சொற்களும் கருத்துக்களும் நிறைந்த இவ்வுலகில், புலவனின் கற்பனையில் தோன்றிய உயர்ந்த கருத்தை உண்மைபோல உலவச் செய்வதற்குக் கவிதையில் அமையும் 'சிந்தனையைக் கிளர்த்தும் ஆற்றல்'

தான் சிறந்ததாகும். இவ் வாற்றலே தமிழில் 'நோக்கு' என்றும், வடமொழியில் 'த்வனி' என்றும் அழைக்கப் படுகிறது. சொற்களும் சொற்றொடர்களும், புலவன் தன் கற்பனைவடிவமான கருத்தை முழுமையாக வெளியிட விரும் பும் குறிப்பிட்ட சில இடங்களில், கவிதைஉணர் வென்னும் மின்னாற்றல் ஊட்டப்பெற்று நிற்கும். அப்போது வெறுஞ் சொற்களாகவும் சொற்கோவைகளாகவும் இருந்த அவை உயிர் ஆற்றல் நிறைந்தனவாக மாறுகின்றன; கலைப் படைப் பின் உண்மையான அணுக்குண்டுகளாக மாறுகின்றன. இவற்றின் அளவிறந்த ஆற்றல், ஆன்மிகப் பாதையில் முன்னேறிச் செல்லும் இவ்வுலக மக்களின் நன்மைக்காகப் புலவனின் கற்பனையால் கட்டுப்படுத்தப்படுகிறது. இது வரையில் பகுத்தாராய்ந்த உவமைகளும் உருவகங்களும், கருத்தைக் கவரும் இச் சொற்றொடர்களின் பெரிய பகுப்பினுள் அடங்குவனவே. கவிதையாற்றல் உடையன வாகப் பழந் தமிழர்களால் நன்கு அறியப்பட்டிருந்த சொற்கள் தொடர்கள் ஆகியவற்றை, நாம் இனி ஆராய்தல் வேண்டும். புலவனின் கருத்தை வெளியிடும் முறையில் இவை அமைந்துள்ள தனிச் சிறப்பை உணர்ந்து தம் மனத்தை அவற்றில் பறிகொடுத்த பழந்தமிழ் மக்கள், இவற்றையே, கவிதை பாடிய புலவரின் அழியாத பெயராக என்றும் போற்றி வந்தனர்.

## அ

### இரும்பிடர்த் தலையார் :

இது, புறநானூற்று 3-ஆம் பாடலை இயற்றிய புலவரின் பெயர். இப் பாடலில் 11-ஆம் வரியில் 'இரும்பிடர்த்தலை' என்ற இச் சொற்றொடர் வருகிறது.

"முடிவில்லாது வாரி வழங்கும் வண்மைக்குப் பெயர் போனவர் கவுரியர். அவரது நெஞ்சில் அன்பு நிறைந்திருந்தது. அவரது ஆணை செலுத்தும் ஆழி, உலக

மெங்கும் சுழன்றது. உலக மக்கள் அனைவரும் அவரது செங்கோலின்கீழ் வாழ்ந்தனர். அவர் நாட்டில், காவல் முரசம், இனிமையான ஒலியோடு இழுமென முழங்கியது. முழு நிலவைப்போல உயர்ந்திருந்த அவருடைய வெண் கொற்றக் குடை, கடல் சூழ்ந்த நிலவுலகில் வாழும் உயிரினங்கள் எல்லாவற்றிற்கும் நிழல் தந்தது. இத்தகைய கவுரியர் மரபில் வந்த பெருமைவாய்ந்த தோன்றலே! செவ்விய அணிகளை யணிந்த குற்றமற்ற கற்புடைய மங்கையின் கணவனே!''

"சிறந்த குலத்திற் பிறந்ததற்கேற்ற சிவந்த நெற்றிப் புள்ளிகளுடன், பொன்னாற் செய்யப்பெற்ற முகபடாமும் அணியப்பெற்று அழகான தோற்றத்தோடு நிற்கிறது யானை. அந்த யானை, யாரும் பக்கத்தில் அணுக முடியாத வலிமையுடையது. இனிய மணமுடைய மதநீர் அதன் கவுள்களிலிருந்து வழிகிறது. (தற்காப்புக்கு வேறுபடை எதுவும் தேடாமல்) தன் பெரிய கொம்புகளையே படைக்கலமாகப் பயன்படுத்துகிறது அந்த யானை; கொம்பாகிய படைக்கலத்தைக் கொண்டு பகைவரின் மதிலில் உள்ள மூடப்பட்ட கதவைக் குத்தியுடைக்கிறது. (அதனால், தானும் தன் மன்னனுடைய படைகளும் மதிலினுள் எளிதில் போக வழிசெய்கிறது.) அதன் இரு பக்கத்திலும் இரண்டு மணிகள் கயிற்றால் பிணிக்கப்பட்டுத் தொங்குகின்றன. கூற்றுவன் தன் கடமையைச் சரிவரச் செய்வதற்காக வீசும் பாசக் கயிற்றுக்கு மருந்தே இல்லை; யாரும் அதன் பிடியிலிருந்து தப்பமுடியாது. ஆனால், பெரும்பெயர் வழுதி! இடைவிடாது படைக்கலங்களைக் பிடித்ததனால் வலிவடைந்த உன் கைகளில் ஒளிபொருந்திய வாளையேந்திப் பெருங்கையினையுடைய யானையின் (இரும்பிடர்த்தலை) பெரிய கழுத்தின்மீது நீ அமர்ந்து பொரும்போது, அந்தக் கூற்றுவனின் வெற்றிகள்கூட அற்பமாகப் போய்விடுகின்றன!''

"பொற்கழல் அணிந்த கால்களும் குறுக்கே அகன்று மலையையும் தோற்கச் செய்யும் பரந்த மார்பும் உடைய வீரனே! உன் மார்பில் பூசிய சந்தனம் (வெற்றிபெற விரும்பும் உனது பெருஞ் சினத்தின் வெம்மையால்) புலர்ந்து விட்டது."

"உனது அன்பைப் பெற விரும்பி இரப்போர் வருவர். மனிதர் செல்லுதற்கு அஞ்சுகின்ற, பல பிரிவாகப் பிரிந்து கிடக்கும், வழிகளில் அவர்கள் வருவர். அவ் வழிகளில் உன்ன மரங்கள் நிற்கின்றன. (உன்னமரம் பொன்போன்ற பூக்களும் சிறிய இலைகளும் உடையது. வீரர் போருக்குச் செல்லுமுன்பு, நிமித்தம் காண்பதற்காக இம் மரம் பயன் பட்டது. இம் மரத்தின் கிளைகளில் இலைகள் வாடித் தோன்றினல் தமக்குத் தோல்வி உண்டாகுமென்றும், தழைத்து ஒளிபெற்றுத் தோன்றினல் வெற்றி கிட்டு மென்றும் வீரர் துணிவர்.) இம் மரங்களின்மேல் வளைந்த வாயுடைய பருந்துகள், கீழே பாலைநில மறவரால் கொன்று குவிக்கப்பட்டிருக்கும் மனித உடல்களைத் தின்னும் விருப் பத்தோடு அமர்ந்திருக்கின்றன. அவ் வுடல்கள் கிடக்கின்ற கல்லறைகள் புதியனவாக உண்டானவையே. வழியில் செல்லுகின்ற புது மனிதர்களை ஆறலைகள்வரான மறவர் தம் கொடிய அம்பினற் கொன்று அவருடைமைகளைப் பறித்துக் கொண்டு, பிணங்களை உன்ன மரங்களின் அடியில் இட்டுக் கற்களால் மூடினர். அவ்வாறு உண்டானவையே அக் கல்லறைகள். அம் மறவர்கள் அம்பெய்வதற்காகப் பார்க்கும் குறி எப்பொழுதும் தப்புவதில்லை. அவர்கள் மிகக் கொடியவர்கள். இரவலர்கள் வருகின்ற அப் பாதை யில் ஆங்காங்கே கற்கள் குவியல் குவியல்களாகக் கிடக்கும். கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே பாழ்வெளியாகக் கிடக்கும். தண்ணீர்க் குறியே அங்குக் காண முடியாது. அண்மையில் சிற்றூர்களும் இருக்கமாட்டா. அவ் வழியில் செல்வோர் பொறுத்தற்கரிய துன்பமுறுவர். கதிரவனின் வெங்கதிர்கள்

கண்ணைப் பறிப்பனபோல் ஒளிவிடும். தொலைவில் வருகின்ற புது மனிதர்களை நன்கு பார்த்துக் குறிவைப்பதற்காக இம் மறவர்கள், கண்களைக் கையால் கவித்துக்கொண்டு கூர்ந்து நோக்குவர். இவர்கள், தாம் கொன்று குவிக்கும் மனித உடல்களைச் சவக்குழி தோண்டிப் புதைப்பதில்லை. அவ் வுடல்களை வெறு நிலத்தில் குவித்து, அவற்றின்மேல் கற்களைப் போட்டு மறைப்பர். அவர்கள் நன்ருக மூடிவிடுவதால், மரத்தின்மேல் விருந்துண்ணக் காத்திருக்கும் பருந்துகளின் விருப்பம் நிறைவேருமற் போகிறது. பிணங்கள் அண்மையில்தான் கிடக்கின்றன. ஆனாலும் பருந்துகள் அவற்றை நெருங்கி உண்ண முடியவில்லை.''

"பல பிரிவுள்ள இந்தப் பயங்கரமான வழியாக இரப்போர் உன்னைக் காண வருகின்றனர். அவர்களின் மனத்தில் உள்ள விருப்பத்தை முகக்குறிகொண்டே நீ அறிய வல்லாய்; அறிந்து, அவர்களின் வறுமையைத் தீர்க்கவும் வல்லாய். இந்த வல்லமை உன்னிடத்தி லிருத்தலால் நீ வாய்மை பிறழாதிருக்கவேண்டும். இவ் வுலகமே தலைகீழாகப் பிறழ்ந்தாலும் உன்சொற்கள் பிறழ்தல் கூடாது.'' இதுதான் இரும்பிடர்த்தலையாரின் புறநானூற்றுப் பாடலில் உள்ள கருத்து. பாண்டிய மன்னனைப் புகழ்ந்து பாடும் இந்தப் பாடலில் 'இரும்பிடர்த்தலை' என்ற சொற்றொடரின் இடத்தையும் சிறப்பையும் ஆராய்ந்துணர்தல் வேண்டும்.

இரவலர்க்கு ஈயும் வண்மையுள்ளவனுகும்படி மன்னவனைத் தூண்டுவதே புலவரின் விருப்பமாகும். அவ் விருப்பத்தைக் கவிதையாக வடித்துக் கூறும்போது, முன்னுரையாக மன்னவனின் முன்னோர்களைப் புலவர் புகழ்ந்து பாடுகிருர்; பின், இரண்டு வேறுபட்ட சொல்லோவியங்களைப் படிப்படியாக அமைத்துச் செல்லுகிருர். பாலைநில மக்களைப் பிறநில மக்கள் பொருட்படுத்துவதில்லை; அவர்களின் வாழ்க்கையைப் பற்றிக் கவலைப்படாமல் அவர்களைத் தள்ளி வைத்தனர். இதனல், உணவின்றித் துன்புற்ற

பாலை நிலத்தார், வறுமையால் உந்தப்பட்டுக் கொடிய கொலை செய்வோராகி, மனிதர்களைக் கொல்லும் காட்சி ஓர் ஓவியமாக அமைகிறது. யானையின் கழுத்தில் அமர்ந்து, பண்பாடுள்ள நகர மக்களைக் கொன்று, நகரங்களை அழித்து, நாகரிகத்திற்கே சாவோலை விடுத்துக் கூற்றுவனுக்குந் தலைவனாக விளங்கும் பேரரசனின் உருவம் மற்றோர் ஓவிய மாக அமைகிறது. இவ்வாறு சித்திரித்துக் காட்டுவதே, மன்னனின் செய்கைகள் நியாயமானவையா, அறத்தோடு பொருந்தியவையா என்று கேட்பதுபோ லிருக்கிறது. "போரை ஒழிப்பதற்காகப் போர்"—"நாடு பிடிக்கும் விருப்பத்தினின்றும் விடுதலையடைதல் முதலிய நான்கு விடுதலையுரிமைகளை நிலைபெறுத்துவதற்காகப் போர்"— என்ற கருத்துக்கள் சென்ற இரண்டாம் உலகப் போரில் ரூஸ்வெல்ட் முதலிய தலைவர்கள் நமக்கு அடிக்கடி நினை வுறுத்தியவை யாகும். வண்மையும் அன்பும் நிறைந்தவர் களாகிய பாண்டியனின் முன்னோர்களையும், அவனுடைய கற்பு நிறைந்த மனைவியையும் நினைத்துப் பார்க்கும் போதுதான், பாண்டியன் அறந் தவறமாட்டான், அறத்திற் காகவே போர் செய்கின்றான் என்பதை உணர முடிகிறது. வறுமையால் துன்புறும் இரு கூட்டத்தாரைக் கவிதையிற் காண்கிறோம். ஒரு கூட்டத்தார் கொலைத் தொழிலில் ஈடுபட்டுத் தம் வறுமையை ஓரளவு தீர்த்துக்கொள்ளு கின்றனர். ஒரு கூட்டத்தார் வறுமையால் உந்தப்பட்டுத் தம் துன்பம் தீர்த்து அமைதி நல்கும் இன்ப வுலகமாகிய பாண்டியனது அவைக்களத்தை யடைதற்காக, மரணத் தின் பெரிய வாய்போன்ற கொடிய பாதையில் துணிந்து நடந்து வருகின்றனர். அவர்களுடைய வறுமையைத் தன் வண்மையால் மன்னன் போக்கவில்லையானால் என்ன நிகழும்? கொலையிலும் கொள்ளையிலும் அவர்கள் ஈடுபடு வதைத் தவிர வேறுவழி என்ன இருக்கிறது? இவ்வுலகம் தலைகீழாகப் பிறழ்ந்தாலும், வறியவர்க்கும் தேவையுள்ள

வர்க்கும் உதவி செய்வதே, தான் போரில் வெற்றிபெற விரும்புவதன் ஒரே நோக்கம், எனப் போருக்குமுன் அறிவித்த மன்னன், அது முடிந்து வெற்றிகண்ட பின் அச்சொற்களினின்றும் பிறழ்தல் கூடாது.

மன்னவனுக்குப் புலவன் சொல்ல நினைத்த கருத்தைக் கவிதையில் வளர்த்து முழுமையாகச் சொல்லும் வகையில் 'இரும்பிடர்த்தலை' என்ற சொற்றொடர் பெரிதும் உதவுகிறது. போர்க்களத்தில் மன்னன், பகைவரை எதிர்த்துக் கொல்லுவதில் காணும் தன்னலத் தியாகத்திற்கும், பாலை நிலத்தில் மறவர், தமது பொருள் விருப்பால் மனிதர்களைக் கொல்லுவதில் காணும் தன்னலத்திற்கும் உள்ள வேறுபாட்டை இச் சொற்றொடர் வலியுறுத்துகிறது. பாலை நிலக் கள்வரால் மரணத்தின் வாயில் தள்ளப்பட்டவர்கள், தற்காப் பில்லாதவர்கள். அவர்கள் வேண்டுமென்றே கொடுமை செய்யப்பட்டவர்கள். கள்வரின் செயலில் வீரமும் பெருமையும் இல்லை; தன்னலமே நிறைந்திருக்கிறது. அக் கொலைத்தொழிலைப் புரிந்த மறவர்கள், பிணங்களைத் தின்பதற்குச் சித்தமாக மரத்தில் அமர்ந்திருக்கும் பருந்துகளைவிட எந்த வகையிலும் உயர்ந்தவர்க ளல்லர்.

மூடிய கதவுகள் உள்ள மதிலினுள் காவலோடு இருந்துகொண்டு மக்களின் நாகரிகமான நல்வாழ்வை நுகர்கின்ற கொடுங்கோ லாட்சியை எதிர்த்துப் போர்க்களத்தில் போரிடுகின்றான் மன்னன். கொடுங்கோ லரசனுக்குக் காவலாக மனித மூளையாலும் கோணல் விஞ்ஞானத்தாலும் கண்டுபிடிக்கப்பட்ட செயற்கைத் தற்காப்புச் சாதனங்களை எதிர்த்துத்தான், மன்னன் மதிலை இடித்து நொறுக்கவல்ல யானையின் மேலேறிச் செல்லுகின்றான். மரணத்திற்கு அஞ்சாது, செருக்கோடு சென்று பொருகின்ற அவனுடைய செயலிலே வீரமும் பெருமையும் தோன்றுகின்றன. பகைவீரர்கள் குழுமியுள்ள மதிலின் எதிரே மதங்கொண்ட யானை—பகைவரைக் குத்திக்

கொல்வதுபோல் தன் அரசனையும் தூக்கியெறிந்து கொல்லும் குணமுடைய நரகத் தீப்போன்ற யானையின்மீதேறிப் பொருகின்ற மன்னன், வீரமும் பெருமையும் உடையவன். ஆம்! உலகமக்கள் நரகத் தீயை எளிதில் கடக்கவேண்டுமென்பதற்காக மன்னன், தானே அதன்மீது நடக்கின்றான்; நரகத் தீப்போன்ற கொடுமையை மக்கள் துய்க்கக் கூடாது என்பதற்காக அக் கொடுமையைத் தானே துய்க்கின்றான். மக்களைக் கொடுமைப்படுத்தும் கொடுங்கோலாட்சியை எதிர்த்து நடத்தும் போரில் அம் மன்னன் படைதாங்கி முன்னே செல்லுகின்றான். அவனுடைய யானை, தான் செய்வது இன்னதென்று அறியாத வகையில் மிக்க வலிமையால் மதங்கொண்டிருக்கிறது. பகைவர்களைக் காலின் கீழிட்டு நசுக்கிக்கொண்டு செல்லும் அதன் நடைக்குத் தாளம் போடுகின்றன, அதன் முதுகிற் கட்டிய மணிகள். அதன் மதநீரின் மணம், மரணத்தின் மணமாக உள்ளது. தன்மீது அமர்ந்திருக்கும் மன்னனைத் தூக்கியெறிந்து கொல்லுவதற்கு ஏற்றபடி அந்த யானையின் துதிக்கை நீளமாக இருக்கிறது. எனினும், மன்னன் அக் கொடிய தீப்போன்ற விலங்குடன் விளையாடுகின்றான்; தன்னுடைய ஆணையின்கீழ் அதை வைத்திருக்கின்றான். அமர்ந்திருக்க வசதியில்லாததாகிய அதன் கழுத்தின்மேல், மெத்தையிட்ட சிம்மாசனத்தில் வீற்றிருப்பதுபோல், வசதியாக அவன் அமர்ந்திருக்கின்றான். படையின் முன்னின்று வீரத்தோடு பொருது சிறப்படையுமாறு தங்களை அனுமதித்துவிட்டுப் பாசறையில் மெத்தையிட்ட தவிசில் அமைதியாக இருக்கும்படி அவனைச் சூழ்ந்துள்ள வீரர்கள் வேண்டிக்கொண்டிருப்பார்கள். யானையின் குறுகிய கழுத்தில், போதிய இடமின்மையால் துன்பத்தோடு அமர்ந்து, படையின் முன்னே சென்று மன்னன் வருந்துவதை அவர்கள் உடன்படாமல் தடுத்திருப்பார்கள். "யானையின்மீது வசதிக் குறைவே இல்லை" என்பதே மன்ன

னின் விடையாக இருந்திருக்கும். "யானை 'இரும்பிடர்த் தலை'யை உடையதுதான்; நீங்கள் மிகக் குறுகலானது என்று கூறும் யானையின் கழுத்து, உண்மையிலேயே ஒரு வீரனுக்கு மிக அகலமாகவும் வசதியாகவும் இருக்கிறது." இவ்வாறு கூறும் மன்னன், வீரத்தோடு உயிர்விட விரும்பி முன்நிற்கின்றான்; யானையின் முதுகில் இருந்தால் எங்கே வீர மரணம் கிட்டாது போய்விடுமோ என்று எண்ணி, அதன் கழுத்தில் அமர்ந்திருக்கிறான். சிங்கத்தை அதன் குகையிலேயே எதிர்ப்பதுபோல் உள்ளது அவன்செயல். விடுதலை யுரிமைக்காகவும் நாகரிகத்தின் வளர்ச்சிக்காகவும் எதையும் தியாகம் செய்யச் சித்தமாக இருப்பது பெருவீர மென்றே சொல்லவேண்டும்.

'இரும்பிடர்த்தலை' என்ற சொற்றொடரின் பொருள் இப்போதுதான் நமக்கு விளங்கத் தொடங்குகிறது. 'இரு' என்பது கருமை அல்லது இருள் என்று பொருள்படும். வானுலக இன்பத்தின் ஒரு சிறு திவலையை ஒருவன் இவ்வுலகத்திலேயே அடைவதற்கு இந்த இருள் என்னும் அறியாமையைக் கடத்தல்வேண்டும். 'இரு' என்பதற்குப் 'பெரிய' என்றும் பொருள் உண்டு. உயர் குறிக்கோளோடு செயலாற்றும் வீரனான மன்னனுக்கு யானையின் வசதியில்லாத சிறிய கழுத்து அகலமானதாகத் தோன்றுகிறது; போதிய அளவு பெரிதாகத் தோன்றுகிறது. வசதிக் குறைவு என்பதையே அம் மன்னவன் அறியான். யானையைத் தன் ஆணைப்படி நடத்திப் படையின் முன்னின்று போர்புரிவதிலேயே கருத்தாக இருக்கிறான் அவன். அவன் ஏந்தியுள்ள கூர்மையான தோட்டி (அங்குசம்) யானையை அடக்குவதற்கு உதவுகிறது.

இரும்பு + இடர் + தலை என்றும் பிரித்துத் 'தோட்டியால் வருந்துகின்ற தலை' எனப் பொருள் கொள்ளலாம். தோட்டியால் குத்தப்பட்டுப் புண்ணாகியுள்ள கழுத்திலேதான் அரசனும் அமர்ந்திருக்கிறான். எனவே, இக்

கவிதையின் முழுக்கருத்தும் ‘ இரும்பிடர்த்தலை ’ என்னும் சொற்றொடரில் அமைந்து விளங்குவது தெளிவாகிறது.

இச் சொற்றொடரைக் குறித்து மற்றுமொரு கருத்தும் கூறலாம். இக் கட்டுரையின் பின்னால் ஓரிடத்தில் ‘ஓரிற் பிச்சை’ என்பது ஒன்றற்கொன்று பொருள் வேறுபட்ட சொற்களால் அமைந்த சொற்றொடர் அல்லது தழுவாத் தொடர் எனக் காட்டப்படும். ‘ இரும்பிடர்த்தலை ’ என்னும் சொற்றொடரை அவ் வகையிற் சேர்க்க இடமுண்டு. எப்படி யெனில், பிடர் என்பது கழுத்தைக் குறிப்பதாதலால், ‘ கழுத்துத் தலை’ என்று அமையும் சொற்றொடர் ‘ மாறு பட்ட சொற்கள் தொடர்ந்த தொடர் ’ எனல் பொருந்தும் என்க. கழுத்தும் தலையும் ஒரே உறுப்பாக இருத்தல் இயலாதன்றோ ? கூர்ந்து நோக்குவார்க்கு ‘ இரும்பிடர்த்தலை ’ என்னும் தொடருக்கு மற்றொரு பொருளும் இருப்பது தெரியும். தலை என்பதற்கு இவ்விடத்தில் ‘ இடம் ’ என்று பொருள் கொள்ளவேண்டும். எனவே தலை என்ற சொல் புலவரால் சிலேடையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சிலேடை பல புலவர்களைத் தவறான வழிகளில் இழுத்துச் சென்றுள்ளது ; டாக்டர் ஜான்சன் குறிப்பிடுவதுபோல, ஷேக்ஸ்பியர் போன்ற முதல்தரமான கவிஞர்களையும் மயக்கியது. பொருளினின்று சொற்களைத் தமது ஊர்பேர் அறியாதவை யாக்கும் நிலையை உடையது சிலேடை.

புலவனின் கருவியாகப் பயன்படுபவை சொற்கள். புலவனின் கற்பனை எளிதாக விளையாடுவதற் கேற்ற சிலேடைச் சொற்கள் அவன் மனத்தைக் கவருவதில் வியப் பொன்றுமில்லை. பொருளுக்காகச் சொற்கள் விரும்பப் படுதலைவிடச் சில சமயங்களில் சொற்களுக்காகவே சொற் கள் விரும்பப்படுகின்றன. புலவன் தான் கருதிய பொருளை மறந்து சொற்களுக்கு அடிமையாகாமல் இருப்பானாகில் சிலேடை யமைத்துப் பாடுவதில் குற்றமொன்றுமில்லை.

**எயிற்றியனார் :**

இவர் குறுந்தொகை 286-ஆம் பாடலின் ஆசிரியர். "அவளை நான் நினைக்கும்போது, அவளுடைய செவ்வாயும், முள்போன்ற பற்களின் இடையிலிருந்து ஊறும் அமுதம் பொருந்திய புன்முறுவல் அரும்பிய இதழ்களும், காதல் துளும்பும் பார்வையை யுடைய ஒன்றோடொன்று போரிடு கின்ற பெரிய குளிர்ந்த கண்களும், அகிலும் சந்தனமும் மணம் வீசுகின்ற அறல் (கருமணல்)போன்ற கூந்தலும் என் மனக்கண்முன் வருகின்றன" என்று, தலைவியிடம் தான்கொண்ட காதலைத் தலைவன் தோழனுக்குக் கூறுகின் றான்; இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்த் தோழியிடம் கூறுகின்றான் என்றும் கருதலாம். தலைவியைக் கூடிய போது அவன் கண்ட அன்புகாட்டும் கண்களும், மகிழ்ச்சி யூட்டும் புன்சிரிப்பும், அறல் (கருமணல்)போன்ற நறு மணக் கூந்தலும், செவ் விதழ்களும் முத்துப் பற்களும் அவனது நினைவுக்கு வருகின்றன. அவனுடைய மனத்தில் தோன்றிய இன்ப நினைவு முழுதும் தலைவியின் அமுதமூறும் வெண்பற்களைச் சுற்றியே வட்டமிடுகிறது. செவ் வாயில் அமைந்திருக்கும் அந்த வெண்பற்கள் சிறுநகை செய்தன. அச் சிறுநகையில் அரும்பிய மகிழ்ச்சி அவள் முகமெங்கும் மலர்ந்தது. காதல் நிறைந்த இரு கண்களில் அது வெளிப் பட்டது. தலைவனைக் கூடியதால் கலைந்து காற்றில் ஆடி மணம் வீசிய கூந்தலிலும் அம் மகிழ்ச்சி நடம்புரிந்தது. தலைவியின் வெண்பற்கள் அமுதமூறும் ஊற்றுமட்டும் அன்று; காதலரின் சேர்க்கைக்கு உயிரொளியூட்டி இன்ப அலைகளைப் பரப்பும் இனிய ஊற்றும் ஆகும். இக் கருத்தைக் கவிதையில், அழகுற அமைத்ததாற்றான் புலவர் எயிற்றிய னார் எனப் பெயர்பெற்றார். 'எயிறு' என்ற சொல் 'பல்' எனப் பொருள்படும்.

இப் பெயர் அமைந்த முறையும் அதன் வடிவும் ஆராய் தற்குரியன. இதுவரை ஆராய்ந்த பெயர்களைப்போலன்றி,

இப் புலவரின் கவிதையில் உள்ள தொடராக அல்லாது, 'எயிறு' என்ற இன்றியமையாத ஒரு சொல்லாலேயே இவரது பெயர் அமைந்துள்ளது. இச் சொல்லோடு 'இன்' சாரியையும் 'ஆர்' விகுதியும் சேர்ந்தால் 'எயிற்றினர்' என்ருகும். தமிழ் இலக்கிய வரலாற்றில் 'இருட்காலம்' என்று சொல்லப்படும் காலத்தில், இப்பெயர் அமைந்ததன் காரணம் மறக்கப்பட்டுவிட்ட பின்னர் ஏடுபெயர்த்தெழுது வோர், எயிற்றினர் என்ற பெயரில் உள்ள 'எயிற்றி' என்பது பாலைநிலத்தில் வாழும் பெண்ணைக் குறிப்பது எனத் தவருகக் கருதினர். புறநானூற்று 182-ஆம் பாடலில் 'கருங்கண் எயிற்றி காதல் மகன்' (2-ஆம் வரி) என்னும் தொடர் வருகிறது. எனவே, 'எயிற்றி' என்னும் சொல் பாலைநிலப் பெண் என்ற பொருளில் பயன்படுத்தப்பட் டுள்ளமை தெளிவு. 'கழார்க்கீரன் எயிற்றியார்' என்பது சங்கப் பாடல்கள் எட்டுப் பாடிய ஆசிரியரின் பெயர்.* 'அன்' என்ற ஆண்பால் விகுதி பெற்றுள்ள 'கீரன்' என் னும் சொல்லும், இகரவிகுதி கொண்டுள்ள 'எயிற்றி' என் னும் சொல்லும் ஒன்ருகச் சேர்ந்துள்ளமையே, இப் பெயர் தவருக அமைந்தது என்பதைக் காட்டுகிறது. குறுந் தொகை 330-ஆம் பாடலின் ஆசிரியரின் பெயராகக் "கழார்க்கீரன் எயிற்றியனர்" என்பது குறிக்கப்பெற் றுள்ளது. இத் தொடரில் பால்மயக்கம் இல்லை. ஆனல், 'எயிற்றியனர்' என்ற பெயர் அமைந்த முறையை விளக்குவதெப்படி? எயிற்றியின் அழகைப் பாடியமை யின் இப் பெயர் பெற்ருர் எனல் பொருந்துமா? இவ்வாறு பெயர் அமைந்திருப்பின் அது மரபிற்கு மாருனதும் சிறப்புக் குறைந்ததும் ஆகும். மேலும் கவிதையில் அழகு பொதிந்துள்ள இடத்தை "எயிற்றி" என்ற சொல் வெளிப்

*(அகம், 163, 217, 235, 294; குறுந்தொகை, 35, 261; நற்றிணை, 281, 312).

படுத்தவில்லை. எனவே '**கழார்க்கீரன் எயிற்றியார்**', '**கழார்க்கீரன் எயிற்றியனார்**' என்பன வேறுவேறு பெயர்களாகத் தோன்றினாலும் ஒருவரின் பெயர்களாகவே இருத்தல் வேண்டும். அவர் சங்க இலக்கியத்தில் மொத்தம் ஒன்பது பாடல்கள் பாடினராதல் வேண்டும். '**கழார்க்கீரன் எயிற்றினார்**' என்று முதலில் அமைந்த பெயரே, நாளடைவில் யகரம் இடையிற் சேரப்பெற்றுக் '**கழார்க்கீரன் எயிற்றியனார்**' என வழங்கியது எனவும் இதனால் அறிகிறோம்.

'**கழார்க்கீரன் எயிற்றினார்**' என்பது இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட குறுந்தொகை 286-ஆம் பாடலைப் பாடிய புலவரின் பெயரன்று. அப் பாடலின் ஆசிரியரின் பெயரைச் சரியாக அறிவதற்கு உறுதுணையாகவே அஃது இங்கு ஆராயப்பட்டது. '**எயிற்றினார்**' என்பதுதான் சரியான பெயர் என்பது இப்போது தெளிவாகிறது. ஒரே பெயருடைய பல புலவர்கள் இருந்தால், அடைகளால் அவர்களை வேறுபடுத்திக் காட்டுவது அக்கால மரபு. **எயிற்றினார்** என்ற பெயருடன் இரு புலவர்கள் இருந்தனராக அறிகிறோம். ஒருவர் புறநானூறு 213-ஆம் பாடலைப் பாடிய '**புல்லாற்றூர் எயிற்றினார்**' (புறநானூற்றுப் பதிப்பில் '**எயிற்றியனார்**' என்றே தவறாக எழுதப்பட்டுள்ளது. '**எயிற்றியார்**' என்பது மற்றொரு பாடமாகக் குறிக்கப்பட்டுள்ளது.) மற்றவர் மேலே குறிக்கப்பெற்ற **கழார்க்கீரனெயிற்றினார்.**

**கழார்க்கீரன் எயிற்றினார்** (எயிற்றியார்) எனப்படுபவர் யார்? காவிரி கடலொடு கலக்குமிடத்தில் உள்ள வளமான நிலம் '**கழார்**' எனப்பட்டது. அஃது இப் புலவர் பிறந்த அல்லது வாழ்ந்த இடம் ஆக இருத்தல் வேண்டும். **கீரன்** என்பது இவருடைய தந்தையாரின் பெயராகவோ இவரது இயற்பெயராகவோ இருத்தல் வேண்டும். இவர் அகநானூறு 217-ஆம் பாடலின் ஈற்றயலடியில் பற்களைப்

பற்றிப் பாடினமையால் **எயிற்றினர்** என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பெற்றார்.

"வயல்கள் மழையைப் பெற்றன. (பெற்றுத் தானியக் களஞ்சியத்தின் வாயிலைத் திறந்தன, அல்லது நீர் சுமந்து வந்த கரு மேகங்கள் தம்மிடம் இருந்த நீரையெல்லாம் பெருமழையாகப் பொழிந்தன.) மழை பெய்தபின் வெண்மையாகிவிட்ட மேகங்கள் மகிழ்ச்சியோடு குதித்தும் தவழ்ந்தும் வான வீதியிற் சென்றன. (பளுவை இறக்கிவிட்டதனாலோ, கடமையைச் செய்து முடித்ததனாலோ வந்த மகிழ்ச்சிபோலும்!) வில்லால் அடிக்கப்பெற்ற பஞ்சு, வெண்மையான நிறத்தொடு தூயதாக எழுவது போல், மேகங்கள் தூய வெண்மை நிறத்தோடு மாசுமறுவற்று உலாவுகின்றன. பஞ்சினின்றும் இழுக்கப்பட்ட மெல்லிய இழையின் மெதுவான துணுக்குப்போலக் கடைசி மழைத்துளியும் விழுந்துவிட்டது. இப்போது சிறிதுகூட மழைத்தூறல் இல்லை. பரந்த வயல் வெளிகளில் கரும்புகள் மிக உயரமாக வளர்ந்திருக்கின்றன. கரும்பின் திரண்ட காம்போடு கூடிய வெண்மையான பூக்கள், கோடைக் காலத்தில் பூளைப்பூ அசைவதுபோல, வாடைக்காற்றில் அசைந்தாடுகின்றன. (பூளைப்பூக் கோடைக் காலத்தில் வீசும் மேல்காற்றில் அசைந்தாடும்.) புதர்கள் பச்சை இலைகளோடு அழகாக விளங்குகின்றன. அப் புதர்களிலே பகன்றை மலர்கள் இலைகளின் பசுமையையும் மறைத்து வெண்மையாக மலர்ந்திருப்பது, கேடயமென்னும் ஆயுதத்தில் (போர்க்கருவியில்) பசுமையும் நீலமும் ஊட்டப்பெற்ற தோலை உறையாக இட்டு, அதன் நிறம் மறையும்படி பதித்த கண்ணாடி வெண்மையாக ஒளிவீசி விளங்குவதுபோலிருக்கிறது. கொழுமையான இலைகளினூடே அவரையின் அரும்புகள் மலர்கின்றன. முறையாக முற்றிய தோன்றியின் ஒளியுள்ள பூக்கள், நன்றாக விரிந்து விளங்குகின்றன. வயல்களி லெல்லாம் பறவைகளின் ஒலி 'கல்'லென்று

கேட்கிறது. மக்கள் நீராடுகின்ற அகன்ற துறைகளில் இப்போது யாரும் இல்லாமையால் தண்ணீர் அலைகளின் சிறு ஒலியாற்பிறந்த பாட்டே அங்குக் கேட்கப்படுகிறது. (பனிக்கால மாதலின் குளத்தை நாடி யாரும் வரவில்லை.) உயர்ந்த பொன் (Metal) வகைகளாற் செய்யப்பெற்ற அணிகள் பனியால் 'சில்' என ஆகிவிட்டமையால், மகளிர் (துறவிகள் போல்) அவற்றைக் கழற்றி வைத்துவிட்டனர். ஆனால், இன்னும் அந்தப் பொல்லாத பனியின் குளிர், பொறுக்க முடியாததாக உள்ளது. மகளிரின் உடல் முழுதும் நடுங்குகிறது. இவ்வாறு வந்துள்ளது முன்பனிக் காலம். (குடும்பத்தையும் வெளியுலகத்தையும் மகிழச் செய்வதற்காக நெடுந்தொலைவுள்ள வெளிநாடுகட்குச் சென்று தலைவன் பொருளீட்ட வேண்டும் என்று சொல்லுகிறார்கள்.) 'தலைவனே! நீ நெடுநாள் வாழ்க! நண்பர்களின் துணையுடைய உனக்கு நான் சில சொல்ல விரும்புகிறேன்: நம்மிடம் உள்ள பொருள் போதும் என அமைதியாக வாழ்க! எத்துணைச் சிறந்த பொருளைப் பெறுவதாயிருந்தாலும் உன்னை நம்பியிருக்கும் தலைவியைப் பிரிந்து, அவளும் அவளைச் சேர்ந்தோரும் துன்பக் கடலில் ஆழும்படி செய்யற்க' என்று தலைவர்க்கு நீ எடுத்துச்சொல்லியும் அவர் நம்மைப் பிரிந்து செல்வரேல், பிரிந்த மறுவினாடியே நம்மை வந்தடைவதற்குச் சமயம் பார்த்திருந்த நோய்கள் எல்லாம் அவர் நமது நலத்தையுண்டு அருளில்லாமல் கைவிட்ட மேனியைக் கண்டு நம்மைப் பிடித்து வருத்தும். கொத்தாக மலர்ந்திருக்கும் பூக்களின் காட்சியைப் பார்க்கும்போது என் நெஞ்சம் தலைவரின் சேர்க்கையை விரும்பும். தலைவர் இன்மையால் அவை என் நெஞ்சை அழுத்தி உடைத்து விடுபவை போல் தோன்றும். பிரிவினால் உண்டாகும் துன்பம் நம் உள்ளங்காலிலிருந்து உச்சந்தலைவரை நடுங்கச் செய்யும். பனிக்காலத்தின் கடுங்குளிர் அந் நடுக்கத்தை மிகுதிப்படுத்தும். குளிர் தாங்கமுடியாமல், நம் எயிறுகள், (பற்கள்)

கடகட வென்ற ஒலியுடன், தீ எழும்படி ஒன்றையொன்று தாக்கிக்கொள்ளும்.''

புலவர் கழார்க்கீரன் எயிற்றினர் பாடிய அக நானூற்றுப் பாடலின் கருத்து மேலே தரப்பட்டது. எயிறு என்ற சொல் எவ்வாறு பயன்படுத்தப் பெற்றுள்ள தென்பதை அறிந்தோம். குறுந்தொகை 286-ஆம் பாடலில், பற்கள் அமுத ஊற்ருகப் புனைந்துரைக்கப்படுகின்றன ; இப் பாடலிலோ அவை தீப்பிறக்கும் இடமாக உள்ளன. இவ்வாருன வேறுபாடுகள்தாம் கவிஞனின் கவிதைமனம் எவ்வாறெல்லாம் வேலைசெய்கிறது என்பதை நமக்குக் காட்டுகின்றன. பல்லிலிருந்து தீப் பிறக்கிறது எனக் கூறுதல் பொருந்தாது. இது பொருந்துதற்கியலாத உயர்வு நவிற்சியாகும் எனக் கூறலாம். இப் பாடல் புறப்பொருள்கள் பற்றிய புனைந்துரையாயின் இம் மதிப்புரை நேரிதே. அக மனத்தில் தோன்றிய உணர்ச்சிக்குக் கவிதை வடிவம் நல்குவது இப் பாடல். வெளியே நடுக்கும் குளிராக இருக்கும் போது, தலைவியின் உடலினுள் நெருப்பு எரிகிறது. காதலன்பும் தலைவன் விரைவில் நலமாகத் திரும்பவேண்டுமே என்னும் ஆவலும் அவள் உள்ளத்தைச் சுட்டெரிக்கின்றன. எரிகின்ற உள்ளத்திலிருந்து சட்டென வெப்பமாக வெளிவரும் நீண்ட பெருமூச்சுத் 'தன் நடுங்கும் தாடைகளில் அமைந்த பல்லில்தான் தீ உண்டாகிறது போலும்' என்று தலைவியை எண்ணச்செய்து காற்ருேடு கலக்கிறது.

தீப் பிறக்குமாறு ஒன்ருேடொன்று இடித்துக்கொள்ளும் பற்களைப் புனைந்துரைக்கும்போது, தலைவியின் துன்ப வருணனையும் உச்சநிலை யடைகிறது. எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாக முதலில் நிகழ்வது பிரிவு. அடுத்துத் தலைவனின் அருளை இழந்துவிட்ட உணர்ச்சியும், அவன் நன்றி மறந்து பிரிந்தான் என்ற நினைவும், தன் உடலும் உடல் அழகும் வீணுகிவிட்டன போன்ற ஏதோ ஓர் உணர்வும் தலைவிக்கு உண்டாகின்றன. துன்பத்தைத் தாங்கும் மனவலிமை தன்னிடத்திலிருந்து நீங்கிவிட்டதையும் அவள்

உணர்கிறாள்; துன்பத்தை எதிர்க்க வழியின்றி அதன் அடி பணிகிறாள். அவளது மனச்சுமை தாங்க முடியாததாக உள்ளது. உள் மனத்தின் துன்பத்தினின்றும் விடுதலை பெற்று ஆறுதலடைவதற்காக அவள் வெளியுலகக் காட்சிகளில் கருத்தைச் செலுத்துகிறாள்; எங்குப் பார்த்தாலும் கொத்துக்கொத்தாகப் பூத்துக்கிடக்கும் அழகிய பூக்களைப் பார்க்கிறாள். அவற்றின் அழகில் ஒன்றிய அவள் மனம் மீண்டும் தலைவனை நினைந்து, 'அவன் அண்மையி லிருந்தால் இவ்வழகை நன்கு துய்க்கலாமே' என்று எண்ணத் தொடங்குகிறது. சிறிதே மறந்திருந்த துன்பம் மீண்டும் வந்து சூழ்ந்துகொள்ளுகிறது. தலைவனோடு சேர்ந்து இன்பமுற முடியாமையால் உண்டான துன்ப ஏமாற்றம் அவளது உடல் முழுதையும் சுட்டெரிக்கிறது. பனிக் காலத்தின் கடுங்குளிர் அவளுடலின் அடிப்படை வலிமையையே குறைத்துவிடுவதுபோல் ஆட்டிவைக்கிறது. குளிர் பொறுக்க முடியாமல் 'கடகடவென' அடித்துக்கொள்ளும் பற்களின்மீது அவள் நினைவு பதிந்துவிட்டது. வெளியே வீசும் கடும்பனியின் துன்பத்தை நினைந்து வருந்திய அவள் மனம் உடனே, தலைவன் பிரிந்ததால் தீப்போல் வருத்தும் பிரிவுத் துன்பத்தை நினைக்கிறது. மனத் துன்பத்தால் உண்டான வருத்தமும், வெளியில் வீசும் பனித் துன்பத்தால் உண்டான வருத்தமும் தலைவியின் பற்களில் எதிர்ப்படுகின்றன. குளிரின் மிகுதியால் பற்கள் ஒன்றோடொன்று தீப் பிறக்குமாறு இடித்துக் கொள்ளுகின்றன. தலைவியின் உள்ளத்தே பிறந்த தீ அவளுடலின் உயிர் அணுக்களைச் சுட்டெரித்து உள்ளத்தைப் பொசுக்கி நம்பிக்கையை நாசமாக்குகிறது. இப் பாடலைப் பாடிய புலவர் 'எயிற்றியனார்' என அழைக்கப்பெற்றமை பொருத்தமானதே என்பது இப்போது விளங்குகிறது.

புல்லாற்றூர் எயிற்றியனார் என்ற மற்றொரு புலவரும் 'எயிற்றை'ச் சிறப்பித்தே பாடியிருத்தல் வேண்டும்.

அவ்வாறு அவர் பாடிய பாடல் இப்போது கிடைக்கவில்லை. எனவே, குறுந்தொகை 286-ஆம் பாடலின் ஆசிரியராக உள்ள எயிற்றினர்தாம் (நமது ஆராய்ச்சிப்படி) புல்லாற்றூர் எயிற்றினர் என்று கருத இடமுள்ளது. எயிற்றைச் சிறப்பித்த பாடல்கள் இரண்டே சங்க இலக்கியத்தில் இருத்தலால், எயிற்றினர் என்ற பெயருடன் இரு புலவர்களே இருந்தனர் என்று கொள்வதில் தவறில்லை. இவ்வாறு, **எயிற்றியனர், புல்லாற்றூர் எயிற்றியனர், கழார்க்கீரன் எயிற்றியனர், கழார்க்கீரன் எயிற்றியார்** என நால்வராகக் கருதப்பட்ட புலவர்கள் உண்மையில், **புல்லாற்றூர் எயிற்றினர், கழார்க்கீரன் எயிற்றினர்** என இருவராக அடங்கி விடுகின்றனர்.

இது முடிவான கருத்தன்று. ஊட்டியார் என்ற புலவர் 'ஊட்டி' என்னும் சொல்லை இரு கவிதைகளிற் பயன்படுத்தியுள்ளதுபோல, **எயிற்றினர்** என்ற ஒரு புலவரே பற்களைப் பற்றிய கருத்துக்களை இரு பாடல்களில் வெளியிட்டிருக்கலாம். அவ்வாறாயின் **எயிற்றினர்** என்ற பெயருடைய புலவர் ஒருவரே இருந்தார் எனக் கொள்ளல் வேண்டும். ஆனல், **புல்லாற்றூர், கழார்** என்ற சொற்கள் இரு எயிற்றினர்களின் பிறந்த ஊர்களைக் குறிக்கும் அடைகளாக அமைந்துள்ளமை நம்மைச் சிறிது தயங்கச் செய்கிறது. பிற்காலத்தார் தவருக அவ்வடைகளைச் சேர்த்துவிட்டார்கள் என்றே, ஒரு புலவரையே இருவர் எனத் தவருகக் கொண்டுவிட்டார்கள் என்றே கூறிவிடுவது எளிது. ஆனல், இக் கருத்துச் சரியானது என்று கொள்ளுவதற்கில்லை.

**எயிற்றினர்** என்ற பெயருடன் மூன்று புலவர்கள் வாழ்ந்திருந்தனர் என்றும், ஒருவர் எவ்வித அடையுமின்றியும், அவருக்குப் பின் வந்த இருவரும் தத்தம் பிறப்பிடங்களைக் குறிக்கும் புல்லாற்றூர், கழார் என்ற இருவேறு அடைகள் சேர்ந்த பெயராலும் அழைக்கப்பெற்றனர் என்றும் கொள்ளலாம். ஒரு பெயருடைய பல புலவர்கள்

இருந்தால், மிக்க பேரும் புகழுமுடைய புலவரை எவ்வித அடையும் சேராத இயற்பெயராலும், மற்றவரைத் தக்க அடைகள் சேர்ந்த பெயராலும் அழைப்பது அக்கால மரபு. எடுத்துக்காட்டாகக் 'கபிலர்', 'தொல்கபிலர்' என்னும் பெயர்களையும் 'பரணர்', 'வன்பரணர்' என்னும் பெயர்களையும் காண்க.

**ஓரிற் பிச்சையார் :**

குறுந்தொகை 277-ஆம் பாடலுக்கு உயிரூட்டி அழகு செய்வது 'ஓரிற் பிச்சை' என்ற தொடர். இத் தொடரோடு '**ஆர்**' என்ற உயர்வுப் பன்மை விகுதி சேர்ந்ததால் புலவரின் பெயர் அமைந்தது. இறுதியில் மழையையுடைய வாடைக்குரிய காலத்தில் வருவதாகச் சொல்லித் தலைவன் வெளிநாடுகளுக்குப் பிரிந்து சென்றுள்ளான். பழங் காலத்தில் சோதிட நூல் வல்லார் வான நூலிலும் தெளிந்த அறிவு பெற்றிருந்தனர். பருவங்களின் வரவை முன்கூட்டியே கணக்கிட்டு அறிந்துகூற அவர்களால் முடியும். அவர்கள் '**அறிவர்**' என அழைக்கப்பெற்றனர். அவர்களுட் சிலர், துறவிகள். எந் நேரமும் அறிவியல் ஆராய்ச்சியிலேயே மூழ்கியிருந்த அவர்கள், புலவர்களைப்போல் யாருடைய உதவியும் விரும்புவதில்லை; தம் பசியைத் தீர்த்துக்கொள்ள வீட்டுக்கு வீடு பிச்சையெடுப்பர். ஒரு நாளில் முழு உணவை ஒரு வீட்டிலேயே பெற்று, அவ் வீட்டிலுள்ளார்க்கு அந்த ஒரு நாளில் துன்பம் உண்டாக்குவதை அவர்கள் விரும்புவதில்லை; எத்தனை வீடுகளில் பிச்சையெடுக்க இயலுமோ அத்தனை வீடுகளிலும் சிறுசிறு பகுதியாகப் பிச்சையெடுத்து உண்பர். நாள்தோறும் ஒவ்வொரு பூவாகச் சென்று சிறிதுசிறிதாகத் தேன் பருகும் வண்டின் வாழ்க்கையை இவர்களது வாழ்க்கையோடு ஒப்பிட்ட வடநூலார் இவர் பிச்சையெடுப்பதனை '**மதுகர விருத்தி**' என்றனர். எனவே, '**ஓரிற் பிச்சை**' என்பது பொருந்தாத

ஒன்று ; ஒன்றற்கொன்று மாறுபட்ட பொருளுடைய சொற்களின் சேர்க்கை. ஏன்? ஒரு வீட்டில் மட்டும் பிச்சையெடுப்பதால் வயிறு நிரம்பிவிடாதே!

இக் குறுந்தொகைப் பாடல், வானநூல் வல்ல அறிவர் ஒருவரை விளித்துப் பாடப்பெற்றது ; தலைவனுற் குறிக்கப் பெற்ற மீட்சி நாள் என்று வரும் எனத் தலைவியின் தோழி அறிவரை வினவுவதாக அமைந்தது.

"அறிவரே, மின்னல் போன்ற இடையுடையாள் என் தலைவி. அவளை நடுங்கச் செய்வதாகிய, இறுதியில் மழையையுடைய வாடைக்குரிய காலம் எப்பொழுது வரும் என்று சொல்லுங்கள்! அருள்கூர்ந்து சொல்லுங்கள்! அன்புடைய காதலர் திரும்பிவரும் காலம் அதுவே. அக் காலத்தைச் சரியாகச் சொன்னல், கொழுப்பு நிறைந்த வெண்மையான நிணம் (அல்லது நெய்) கலந்த உணவை ஒரு வீட்டுப் பிச்சையாகப் பெற்று வயிருர உண்டு, வாடைக் காலத்தில் விரும்பப்படுவதாகிய வெந்நீரும், சூட்டைப் பாதுகாப்பதாகிய ஒரு சேமச் செப்பில் பெறுவீர்கள்"—இதுதான் தோழியின் பேச்சு.

குழந்தையுள்ளத்தின் எளிமையை இப் பேச்சில் காண்கிரேம். தோழி உள்ளந் திறந்து பேசுகிருள். தலைவனைக் காண அவள் உள்ளம் துடிக்கும் துடிப்பு—அவளுக்கு உள்ள ஆவல்—அவள் பேச்சில் தெளிவாக வெளிப்படுகிறது. தன்போன்ற இல்வாழ்வார்க்கு நல்லனவாக உள்ள பொருள்களெல்லாம் துறவிகளுக்கும் கிடைக்கவேண்டும் என்று எண்ணுகிறது அவள் மனம். வயிற்றுப் பசி தீரும் மட்டும் ஒரு வீட்டிலேயே பிச்சைகொண்டு உண்ணும் இவ் வழக்கத்திற்கு அக் காலத்தில் தடையொன்றுமில்லை யென்று நாம் கொள்வதா? துறவிகள் என்று சொல்லிக் கொள்பவர் சிலர் தம் நாவிற்கு அடிமையாக இருப்பதைக் குறிப்பாக இடித்துக் காட்டுவதாகக் கொள்வதா? ஆனல், இவ்வாறு கொள்வது, அறிவரைப் பணிவோடு அணுகிப்

பேசும் தோழியின் பேச்சில் உயிராக அமைந்துள்ள உணர்வுக்கு ஊறு செய்வதாகும்.

**கபிலர் :**

சங்க காலத்தில் விளங்கிய புலவர்களுள் மிகச் சிறந்தவர் கபிலர். நக்கீரர்*, பெருங்குன்றூர்கிழார்†, பொருந்தில் இளங்கீரனார்‡, மாறோக்கத்து நப்பசலையார்§ என்னும் சங்கப் புலவர்கள் முறையே **பொய்யா நாவுடைய கபிலன்** என்றும், பரந்த அறிவுடையோ னென்றும், பொருள் செறிந்த கவிதைகள் பாடுவோன் என்றும் இவரைப் புகழ்ந்துள்ளார்கள். சங்க இலக்கியத்தில் 235 பாடல்கள் கபிலரால் பாடப்பெற்றவை. மிகுதியான எண்ணிக்கையுள்ள பாடல்கள் பாடிய புலவர் அவரே. தம்மை ஓர் அந்தணன் என்று அவர் கூறிக்கொள்ளுகிறார்.$ மாறோக்கத்து நப்பசலையார், மாசற்ற அறிவினையுடைய அந்தணாளன் என இவரைப் புகழ்கின்றார்.¶

சாங்கிய நெறியை நிறுவியவரின் பெயர் கபிலர் என்பது இந்திய தத்துவ நூல் கற்பார் ஒவ்வொருவரும் அறிந்ததே. மார்க்கண்டேயர்ம, வால்மீகி%, கார்க்கியர்**, சாகலையர்††, காசியபர்‡‡, கௌதமர்§§, சாண்டில்யர்$$, கௌசிகர்¶¶ என்ற வடநாட்டுத் துறவியரின் பெயர்கள் சங்கப் புலவர்களின் பெயர்களாக அமையும் அளவிற்கு அவர்கள் அக்காலத்தில் மக்களிடம் செல்வாக்குப் பெற்றிருந்தனர். ஒருவேளை, சாங்கிய நெறியைக் கண்டவரின் நினைவாக அவரது பெயர் இப் புலவருக்கு இடப்பெற்றது எனலாம். இந்து

*அகம், 78 : 16. †பதிற்று, 85 : 14. ‡புறம், 53 : 12.
§புறம், 174 : 10. $புறம், 207 : 7. ¶புறம், 126 : 11.
மபுறம், 365. %புறம், 358. **குறுந், 55, 212.
††அகம், 16, 270. ‡‡நற், 248.
§§பதிற்று, மூன்றாம் பத்து ; புறம், 366.
$$குறுந், 307. ¶¶மலைபடுகடாம்.

மதப் புராணங்களில் வரும் பதினொரு கபிலர்களைப் பற்றிப் பரிபாடல்* குறிப்பிடுகிறது. எனவே, வடமொழிப் பெயரான கபிலர் என்பது சங்க கால மக்களுக்குத் தெரிந்திருந்தது என்பதில் ஐயமில்லை. தொல்கபிலர்† என்ற பெயரையுடைய புலவரும் அவருடைய பெயர் பூண்டு சங்க காலத்தில் வாழ்ந்திருந்தவர் எனலாம்.

ஆயின், கபிலர் என்னும் இப் புலவர் தமது பாடலொன்றில் '**கபிலம்**' என்னும் சொல்லை யமைத்துள்ளார் என்பதும், அச் சொல் அப் பாடலின் உயிர் நிலையாக மிளிர்கின்றது என்பதும் தெரிகின்றன. பிற்காலத்தில் கீர்த்தனை, பதம் முதலிய இசைப் பாடல்களை இயற்றிய புலவர்கள் தமது பெயரை அப் பாடல்களின் முடிவில் அமைத்துள்ளதை இங்கு நினைவு கூரலாம். தியாகராசர், முத்துத் தாண்டவர் என்பவர்கள் இயற்றிய கீர்த்தனைகள் அவ்வாறு அமைந்துள்ளன. இப் புலவர்களின் பெயர்கள், இவர்களது முத்திரை, அல்லது அடையாளக் குறியாகப் பாடல்களில் அமைந்துள்ளன. கபிலரும் இதுபோலத் தம்முடைய பெயரை நிலைநிறுத்துவதற்காகக் **கபிலம்** என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்கலாம்.

'**கபிலம்**' என்னும் சொல் புறம், 337-ஆம் பாடலில்‡ காணப்படுகிறது. மறவர்கள் பெருவீரம் படைத்தவர்கள்; தங்கள் இனத்தின் வீரத்தைப் பற்றிச் செருக்குக் கொண்டவர்கள். இச் செருக்குக் காரணமாகத் தங்கள் மறக்குலப் பெண்களின் அழகில் மயங்கி அவர்களை மணக்க விரும்பிய வலிமைபொருந்திய பேரரசர்களுக்குக்கூட அவர்கள்பெண் கொடுக்க மறுத்தனர். மறவர்களின் நாட்டைத் தாக்கித் தங்கள் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ள நினைத்த மன்னர்களை அவர்கள் தம் உயிரையும் பொருட்படுத்தாது

---

*3 : 7. †அகம், 282; குறுந், 14; நற், 114, 276, 328, 399.
‡வரி : 11.

எதிர்த்து நின்றனர். இதுபோன்ற ஓரமயத்தில், வேந்தர்கள் விடாது படையெடுத்து வருவதாலும், மறவர்கள் அஞ்சாது எதிர்த்து நின்று வெல்லுவதாலும் ஒரு மறக்குல மங்கையின் திருமணம் நடக்குமோ நடவாதோ என்று பிறர் கவலைப்படுவதை இப் புறநானூற்றுப் பாடல் வெளியிடுகிறது.

"மறக்குல மங்கையைப் பெற்றாலன்றிப் போர்க்களத்தை விட்டு நீங்குதல் இல்லை" என்ற உறுதியோடு நன்கு போர்ப் பயிற்சி பெற்ற யானைகளுடன் அரசர்கள் வந்திருக்கின்றார்கள். அம் மங்கையோ பாரியின் பறம்பு மலையில் உள்ள குளிர்ந்த சுனை பிறர் கண்ணிற் படாமலிருப்பதுபோல, நகரினுள்ளே அமைந்த வீட்டில் மற்றவர் பார்க்கவும் முடியாதவாறு வாழ்கின்றாள். அந் நகரைச் சுற்றி முற்றிலும் காவலமைந்த பெரிய மதில் நிற்கின்றது. இருள் அல்லது நிழலிற் கிடப்பதுபோல் அந் நகர் காணப்கிறது. நன்கு சமைந்த அந் நகரின் அழகே அத் தோற்றத்திற்குக் காரணம் ஆகும்": இக் கருத்துத்தான் புலவரால் கலையழகுபட நன்கு வெளியிடப்பெற்றுக் கவிதையின் உயிர்க் கருத்தாக விளங்குகிறது.

"மகளிர் நீராடி, மணம் நிறைந்த அகிற் புகையால் தம் கூந்தலை உலர்த்துவர். காற்றடிக்கும் இடத்தில் கட்டி உலர்த்தப்பட்ட துகில், அக் காற்றோடு அசைந்தாடுவது போல் அகிற் புகை திரள் திரளாகச் சுருண்டு எழுந்து மாளிகை முழுதையும் சூழ்ந்துகொள்கிறது. மாளிகையின் உள்ளும் புறமும் அகிற் புகையின் கபில நிறமே காட்சியளிக்கிறது. அந்தப் பெரிய மாளிகையின் (கபில நெடு நகரின்) அடைபட்ட கதவுகளுக்குள்ளேயே வாழ்கிறாள் அழகிய மறக்குல மங்கை."

நகரமெங்கும் பரவியுள்ள ஒருவகையான மனக் குழப்பம் மாளிகையைச் சூழ்ந்துள்ள புகையால் படம் பிடித்துக் காட்டப்படுகிறது. எனவே, கவிதையின் அழகை

யுணர்ந்து அனுபவிக்கும் ஒருவன் 'கபிலம்' (புகை நிறம்) என்ற சொல்லில் தன் மனத்தைப் பறிகொடுக்கின்ருன்.

**கள்ளில் ஆத்திரையனர் (கள்ளில் ஆர்த்தியனர்):**

இவர், குறுந்தொகை-293, புறநானூறு-175, 389-ஆம் பாடல்களின் ஆசிரியர். கள்ளில் என்பது ஆசிரியரது ஊரின் பெயர் என்பர்.* குறுந்தொகை 293-ஆம் பாடலில்† வரும் **கள்ளில் ஆத்திரை** என்னும் சொற்ருெடரால் இப் புலவர் பெயர் பெற்ருர் என்பது டாக்டர் சாமிநாதையரவர்களின் கருத்து.

சமாஜத்தார் வெளியிட்டுள்ள சங்க இலக்கியப் பதிப்பின்படி‡ அந்தணர் மரபுக்கே சிறப்பாக உள்ள, தந்தை வழிமூதாதையின் பெயரை இடும் கோத்திர முறைமையால் பெயர் பெற்றவர் **ஆத்திரையனர்** என்று கொள்ளக்கிடக்கிறது. இக் கோத்திரத்தைச் சேர்ந்த **தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனர்** என்ற மற்ருெரு புலவரும் உள்ளார். **'ஆத்திரேய'** என்பது வடமொழிச் சொல்லுருவம். அது தமிழில் **'ஆத்திரேயன்'** என வழங்குத லல்லாமல், நாம் ஆராயப் புகுந்துள்ள புலவரின் பெயரான **'ஆத்திரையன்'** என வழங்காது.

இப் புலவரின் பாடல்களைக் கூர்ந்து ஆராயும்போது, குறுந்தொகை, 293-ஆம் பாடலின் முதல் வரியில் **'கள்ளில்'**, **'ஆத்திரை'** என்ற சொற்கள் வருதல் டாக்டர் சாமிநாதையரவர்களின் பதிப்பில் தரப்பெற்றுள்ள பாடத்தின்படி தெளிவாகிறது. 'செலவு' எனப் பொருள்படும் 'யாத்திரை' என்ற வடசொல், தமிழில் **'ஆத்திரை'** என்ருயிற்று என்பது ஐயரவர்களின் கருத்து. கள்ளில் என்ற சொல் கள்ளைக்

---

*திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் எழுதியுள்ள 'ஊரும் பேரும்' என்ற நூலின் 59-ஆம் பக்கம் பார்க்க.

†வரி : 1.

‡பக்கம் : 1426.

குறிப்பதாக அவர் கொள்ளுகின்றார். முன்னமேயே குறிப் பிட்டவாறு 'கள்ளில் ஆத்திரை' என்னும் சொற்றொட ரால் இப் புலவர் பெயர் பெற்றார் என்றும் அவர் கருது கின்றார். கள்ளில் ஆத்திரை என்பதற்குச் சிற்றூர்களில் கள்ளுண்பவர்கள் சிலர், கள்ளுண்டு மகிழ்வதற்காகக் கூட்டமாகச் செல்லும் செலவைக் குறிக்கும் எனக் கொள்ளுவது பொருந்தாது. எனவே, இச் சொற்றொடரின் உண்மையான பொருள் யாது என்பது இன்னும் ஆராயக் கிடக்கின்றது.

கள்ளில் ஆத்திரை என்பது சொற்றொடராயின் புலவ ரின் பெயர் ஆர் என்ற விகுதியுடன் கள்ளில்ஆத்திரையார் என்றே அமைதல் வேண்டும். 'கள்ளில் ஆர்த்தியர்' என்று பாடங்கொண்டால், 'ஆர்த்திய' என்பது பெயரெச்சம் ஆதல் அறியப்படும். ஊட்டி என்னும் வினையெச்சத்தி லிருந்து ஊட்டியார் என்ற பெயர் தோன்றியதை முன்னர்க் கண்டோம். 'ஆர்' என்னும் உயர்வு குறிக்கும் பன்மை விகுதி 'ஆர்த்திய' என்னும் பெயரெச்சத்தோடு சேரும் போது, கால்டுவெல்லின் கருத்துப்படி இரண்டு சொற் களுக்கும் இடையில் னகர மெய் வரலாம். விட்டிசையைத் தடுப்பதற்கே இந்த னகர மெய் வருகின்றது எனக் கால்டு வெல் கூறுவர். எனவே, முடிவாகப் புலவரின் பெயர் 'ஆர்த்தியனார்' என்று அமைகின்றது. டாக்டர் சாமிநா தையரவர்களே, சமாஜத்தார் தங்கள் சங்க இலக்கியப் பதிப்பில் கொண்டுள்ள 'கள்ளிற் கேளிர் ஆர்த்திய' என் னும் மற்றொரு பாடத்தையும் தமது பதிப்பில் தந்துள்ளார். இப் பாடம் கொள்ளப்படின், கள்ளில் ஆர்த்திய என்ற சொற்றொடர் பாடலில் காணப்படல் வேண்டும். 'கள்ளில் கேளிர் ஆர்த்திய உள்ளூர்' என்பதற்குப் பதிலாக 'கள்ளில் ஆர்த்திய உள்ளூர்க் கேளிர்' என்பதே சரியான பாடமாக இருக்கலாம்.

இக் கவிதையை ஊன்றிப் படிப்பவர்க்குக் '**கள்ளில் ஆர்த்நிய**' என்ற சொற்றொடரின் சிறப்பு விளங்கும். குழவி விளையாட்டுத் தன்மை இன்னும் நீங்காத இளம் பருவமுடைய ஒரு பரத்தையோடு தலைவன் கூடி உறைகின்றானோ என ஐயங்கொள்ளுகிறாள் தலைவி. பரத்தையிடத்திலிருந்து வீடு திரும்பும் தலைவன், வீட்டுக் கதவு தாழிடப் பட்டிருப்பதைக் காண்கிறான். தலைவனது குற்றத்தை மறந்து அவனோடு சேரும்படி தோழி தலைவியை வேண்டுகிறாள். சூதுவாதறியாத பேதைப் பருவத்தாளோடு அவன் விளையாட்டாகச் சிரித்துப் பேசுவதைத் தவறாகக்கொள்ளக் கூடாது என்றும், அவன் குற்றமற்றவன் என்றும் கூறிய தோழியிடம் தலைவி, "அந்த அழகிய இளம்பெண், செவ்விய அணி அணிந்து, ஆம்பல் பூவாற் செய்த தழையுடை உடுத்து, அவ்வுடை மாறிமாறி அசைவதால் தடுமாறி நடந்து, தனக்குக் கொழுகொம்பான தலைவனைக் காணும் பொருட்டு இங்கு வருவாளோ? ஐயோ! நான் இரங்கத் தக்கவள் அல்லளோ?" என்று கூறுகின்றாள். ஆம்பல் பூவும் தழையும் கலந்து பல நிறத்தோடு மிளிரும் தழை யுடையை யுடையவளை, **ஆநியருமன்** என்னும் வள்ளலின் பழைய நகரத்தோடு ஒப்பிடுகிறாள் தலைவி. அந் நகரில் வாழும் மக்கள் பனைமரத்திலிருந்து இறக்கப்பட்ட கள்ளைப் பருகி மகிழ்ந்து ஆடுகிறார்கள். கள் குடித்த மயக்கத்தோடு, பஞ்சுபோன்ற நாரினையுடைய பனங்காயின் நுங்குகளைக் கைகளில் ஏந்திக்கொண்டு அவர்கள் வீடு திரும்புகிறார்கள். குழவிபோன்ற பரத்தையின் அழகு மயக்குவிக்கத் தலைவன் மயங்குவதும், அவளை வீட்டுக்கு அழைத்து வருவதும் இங்குக் குறிப்பாகப் புலப்படுத்தப்படுகின்றன. எனவே, இப் பாடலில் '**கள்ளுண்பித்து மயங்கிய விருந்து**' என்பது **உயிர்நிலையாக உள்ளது.**

**தொடித்தலை விழுத்தண்டினர் :**

இவர் புறநானூறு 243-ஆம் பாடலின் ஆசிரியர். அப் பாடலில் '**தொடித்தலை விழுத்தண்டு**' என்ற சொற்றொடர் வருகின்றது. இச் சொற்றொடரோடு '**இன்**' சாரியையும் உயர்வுப் பன்மை விகுதி '**ஆர்**' என்பதும் சேர்த்துப் புலவரின் பெயர் அமைக்கப்பெற்றது. ஆதரவு அற்றதாகிய முதுமைப்பருவ நிலையை இப் பாடலில் புலவர் விவரிக்கிறார்; விளையாட்டும் மகிழ்ச்சியும் நிறைந்த இளம் பருவத்தோடு முதுமையை வேறுபடுத்திக் காட்டித் துன்பச்சுவையை மிகுதியாக்குகிறார்.

"பழைய காலத்தை இப்பொழுது நினைத்துக்கொண்டால், எங்களுக்கு வருத்தமாகவே இருக்கிறது. எங்கள் இளம் பருவத்தில், சிறுமியர், மணலில் வண்டலம்பாவை அமைத்து மரத்தினின்று பறித்த பூக்களால் கட்டிய மாலைகளைப் பாவைக்குச் சூட்டி விளையாடுவர். அம் மகளிர் காலை நேரத்தில் குளிர்ந்த பொய்கையில் நீராடுவர்; நீராடும் போது ஒருவரோ டொருவர் கைகோத்துக்கொண்டு ஒன்றாக நீந்தியும் அசைந்தாடியும் மகிழ்வர். அம் மகளிர் கூட்டம்போல் எங்கள் கூட்டமும் ஒன்று. எங்களுக்குள் சூதுவாது என்பதெதுவுமின்றி மிக்க மகிழ்ச்சியோடு இருந்தோம். எங்களுக்கிடையில் எவ்வித இரகசியமும் (மந்தணமும்) இருந்ததில்லை. அன்று நாங்கள் பொய்கைக் கரையில் விளையாடியபோது அங்கு நின்ற மரம் இப்பொழுதும் உயரமான சில கிளைகளோடும், தாழ்ந்து தண்ணீரில் மூழ்கும் சில கிளைகளோடும் நிற்கிறது. தாழ்ந்த கிளைகளின் வழியாக நாங்கள் மரத்தின்மேல் ஏறுவோம்; கரையிலிருந்து வியப்புடன் பார்க்கின்றவர்கள் கைதட்டும் தாளத்திற்கு ஏற்ப, மரத்தின் உச்சியிலிருந்து பொய்கைத் தண்ணீரில் குதித்து ஆழத்தின் எல்லை கண்டு வருவோம். நாங்கள் உயரத்திலிருந்து குதித்ததால் உண்டான 'துடும்' என்ற ஒலி

எங்கும் பரவும். எங்கள் செய்கை, கரையிலிருந்து பார்ப்ப வர்க்குப் பெரு வியப்பாக இருக்கும். நாங்கள் குதிக்கும் வேகத்தில் தண்ணீர் அலைகள் உடைந்து துளிகளாகச் சிதறும். தண்ணீரில் மூழ்கி அதன் ஆழத்தின் எல்லை கண்டு வந்ததற்குச் சான்ருகப் பொய்கையின் அடியிற்கிடக்கும் மணலைக் கைகளில் நாங்கள் அள்ளிவருவோம். செயற்கை யான நாகரிகமும் மெருகும் ஏறுதற்குக் காரணமான கல்வி இல்லாத அந்த இளமையை நினைந்து இப்போது இரங்க வேண்டுவதுதானே? அந்த இளமை இப்பொழுது எங்கே போயிற்று? முதுமையால் தளர்ந்து, பூண் இட்ட ஊன்று கோலின் துணையால் நடுக்கத்தோடு நடந்து, இடைவிடாத இருமலுக்கு இடையே மிக்க துன்பத்தோடு சில சொற் களே பேசும் எங்களுக்கு அந்த இளமை எங்கே இருக் கிறது?'' இஃது அப் புறப்பாடலின் கருத்து.

நடுக்கும் குளிர்கூட இளமையில் அவர்களையொன்றும் செய்ததில்லை. முதுமையில், எந்நேரமும் அவர்கள் நடுங்கிக் கொண்டே யிருக்கிருர்கள். இளமையில் யாருடைய துணையுமின்றிக் குதித்து விளையாடவும், தண்ணீரில் குதிக் கவும் பிற சாகசச் செயல்கள் செய்யவும் அவர்களால் முடிந்தன. முதுமையிலோ, தங்கள் உடல் சுமை முழு தையும் ஒரே நிலைக்களனுகிய ஊன்றுகோல் தாங்க அவர்கள் தள்ளாடுகிருர்கள். அவர்களுடைய இளம் பருவத்தில் உடன் ஆடிய தோழர்களும் தோழிகளும் இப்பொழுது கைகொடுத்துத் துணைபுரியும் நிலையிலில்லை. இளம்பருவத் தின் பாட்டும், இசையும், ஆடலும் எங்கோ மறைந்து உளறற் சொற்களும், இருமலும் உடல் நடுக்கமுமே அவர்க ளிடம் இப்பொழுது இடம்பெற்றுள்ளன. முதியவர்களின் இந்த வருந்தத்தக்க நிலையில் உள்ள துன்ப உணர்ச்சி, பூணினுல் அழகு செய்யப்பட்ட சிறந்த ஊன்றுகோலைப் பற்றிப் புலவர் குறிப்பிடும்போது, உச்சநிலை யடைகிறது. அவர்களுக்குத் துணைசெய்யும் ஒரே பற்றுக்கோடு அவ்

ஊன்றுகோல்தான். இளம்பருவ நிகழ்ச்சிகளோடு முதுமையின் துன்பங்களை வேறுபடுத்திக் காட்டுவதால் ஊன்றுகோலின் இன்றியமையாமை உணர்த்தப்படுகிறது. முதியவர்களுள் ஒருவனது அநுபவம் ஈண்டு உணர்த்தப்படுகிறது. இப்பொழுது தளர்ந்து குன்றிய இம் முதியோன், தன் காளைப்பருவத்தில் சமூகத்தில் சிறப்போடு குறிப்பிடத் தக்கவனாக இருந்தான்; செல்வர்களுக்குள் சிறந்த செல்வனாக இருந்தான். ஆனால், அச் செல்வத்தால் யாது பயன்? அக் காலத்தில் இருந்த செல்வத்தையும் செல்வாக்கையும் இனிமேல் அவன் பயன்படுத்த முடியாது. வெறும் காட்சியளவில் அவை அவனிடம் தங்கின. ஏழை முதியவனாக இருந்தால், ஊன்றி நடப்பதற்கு, மலிவான சாதாரணக் கோலை வைத்திருப்பான். செல்வக் கிழவன், பூண்போட்ட சிறந்த ஊன்றுகோலை வைத்திருப்பான். அவ்வளவுதான்! நகைகளை அணிய அவனால் முடியாது. ஆனால், அவனுடைய செல்வம், வலிமை இவற்றை அறிவிக்கும் அறிகுறிகள் எப்பொழுதும் அவனைச் சூழ்ந்திருக்கும். அவனுடைய விரல்களிலும் தோளிலும் மணிபதித்த பொற் கடகங்கள் ஒளி செய்யாவிட்டாலும், அவன் வைத்திருக்கும் ஊன்றுகோலின் பிடியிலாவது மணிபதித்த பொற்பூண் மிளிரும். அந்தக் காலத்தில் அவனது உடலில் காணப்பட்ட செல்வப் பொலிவு, இப்பொழுது அவனது ஊன்றுகோலுக்கு மாறியுள்ளது. எனவே, 'தொடித்தலை விழுத்தண்டு' என்று குறிக்கப்படும் ஊன்றுகோல், கவிஞனது கருத்தைத் தெள்ளிதின் விளக்குவதாய்க் கவிதையின் உயிர்நிலையாய் இருக்கின்றதெனல் மிகையாகாது.

**நெடுவெண்ணிலவினார்:**

குறுந்தொகை 47-ஆம் பாடல், நெடுவெண்ணிலவை விளித்துப் பாடப்பட்டது. 'நெடுவெண்ணிலவு' என்னுஞ் சொற்றொடரும் அப் பாடலில் வருகிறது.

"கடுமையான குண்டுக் கற்கள் காட்டில் கிடக்கின்றன. வேங்கை மரத்தின் மஞ்சள் பூக்கள் அக் கற்களின் மீது உதிர்ந்துள்ளன. பூக்களின் மஞ்சள் நிறமும் பாறையின் கருநிறமும் கலந்து புலிக்குட்டிகள்போல் தோற்றமளிக்கின்றன. (இளம் புலிக் குட்டிகளின் உடலில் மஞ்சளும் கறுப்புமான கோடுகள் தெளிவாகத் தோன்றமாட்டா. உயிரற்ற இந்தக் கருங்கற்கள் பார்ப்பவரை அச்சுறுத்துவனபோல, உண்மையில் அஞ்சத் தகாதனவும் இருட்டில் அச்சுறுத்துவனபோல் தோன்றுகின்றன. களவிற் கூடுவதற்காகத் தலைவன் இத்தகைய இரவில் வருகிறான்.) நெடுவெண்ணிலவே! அவனுக்கு நீ நன்மைசெய்யவில்லை": இது தோழியின் பேச்சு.

தோழி, முன்னிலைப் புறமொழியாக நிலவை நோக்கிப் பேசினாலும் உண்மையில் அங்கு வந்துள்ள தலைவன் அறிய வேண்டும் என்பதற்காகவே அவன் வரவை அறியாதவள் போல் பேசுகிறாள். தன் கருத்தையும் உணர்வையும் அவனுக்குப் புலப்படுத்தி விரைவில் மணத்திற்கு ஏற்பாடு செய்யத் தூண்டுதல் வேண்டும் என்பதே அவள் விருப்பம்.

பால்போல் பொழியும் நிலவைப் பல புலவர்கள் அழகுறப் புனைந்துரைத்துள்ளார்கள். நிலவு வெள்ளத்தில் உலகமே முழுகிக் கிடப்பதை 'நெடுவெண்ணிலவு' என்ற சொற்றொடர் குறிக்கலாம்; அல்லது நெடுந்தொலைவுக்கு ஒளிவீசிப் பச்சை இலைகளின் வழியாகவும் சிறு இடைவெளிகளின் வழியாகவும் புகுந்து, மரநிழலிலும் பூக்களின் அடியிலும் ஒளிந்திருக்கும் பாறைகளைக் காட்டிக்கொடுக்கின்ற நிலவின் தன்மையைக் குறிக்கலாம். தலைவன், தலைவியைக் களவிற் கூடுவதற்காக, மறைந்து வருவதை அது வெளிப்படுத்திவிடு மன்றோ? அவ்வாறு வெளிப்பட்டால் அதைவிடப் பெரிய கேடு வேறுண்டோ? அச்சத்தை உண்டாக்கும் கற்பனைத் தோற்றங்கள் எழுவதற்குக் காரணமான நிலவின் ஒளியை 'வெண்' என்ற சொல்

குறிக்கிறது. "நெடு என்ற சொல் குறிப்பது யாது?" எனின், தனிமைத் துன்பத்தின் தன்மையை அது குறிக்கின்றதென்க. எப்போதும் தன்னைக் காவல்புரியும் சுற்றத்தாரின் ஐயமுடைக் கண்களுக்கு இடையே தலைவனது வரவை எதிர்பார்க்கும் தலைவி, தான் நெடுங்காலமாகக் காத்திருப்பதுபோல் உணர்கிறாள்; நெடுங்காலம் காத்திருப்பது போன்ற இந்த உணர்ச்சியை நிலவின்மேல் ஏற்றி 'நெடு வெண்ணிலவு' என்று கூறுகின்றாள். சங்க இலக்கியங்களுள் ஒன்றான பத்துப்பாட்டுள் நக்கீரனார் பாடிய நெடுநல்வாடை என்ற பாடலின் பெயரை இச் சொற்றொடரோடு ஒப்பிடலாம். பொருள் விளக்கமும் கருத்துத்தெளிவுமின்றி அமைந்த இந்தத் தலைவியின்பேச்சு அவளது மனத்தில் நிகழும் உணர்ச்சிகளின் போராட்டத்தைப் புலப்படுத்துகிறது. இப் பேச்சைக்கொண்டு, அவள் மன நிலையை எவ்வாறு வேண்டுமானாலும் உணர்ந்து கொள்ளலாம். ஆனால், ஒவ்வொரு கருத்தும் 'நெடுவெண்ணிலவு' என்னும் சொற்றொடரையே உயிராகக் கொண்டிருக்கும். எனவே, இக் கவிதையைப் பாடிய புலவர் நெடுவெண்ணிலவினார் என்று அழைக்கப்பெற்றார். ஆனால், இப் பேச்சை எண்ணிப் பார்க்குந்தோறும் எத்தனையோ கருத்துக்கள் நம் மனத்தில் எழுந்துகொண்டே யிருக்கின்றன.

**மலையனார் :**

மலைபற்றி அழகுறப் புனைந்துரைக்கும் நற்றிணை 93-ஆம் பாடலின் ஆசிரியரே **மலையனார்** என்பவர். விரைவில் தலைவியை மணந்துகொள்ளுமாறு தலைவனைத் தூண்ட வேண்டும் என்ற நோக்கத்தோடு தோழி அவனிடம் பேசும் பேச்சாக இப் பாடல் அமைந்துள்ளது.

"இம் மலையில் சில நாள் வாழ்ந்திருந்து பின் அதை நீங்குபவர் அம் மலையில் தேன் கூடுகள் வளமாக அமைந்

திருத்தலையும், எங்கு நோக்கினும் பெரிய பழங்கள் குலை குலையாக விளங்குதலையும், பலவகையான தானியங்கள் நிறைந்து கிடக்கும் வயல்களையும் வெண்மையானதொரு மாலைபோல் விழும் அருவியையும் பற்றி இன்பச் செருக்கோடு நினைத்து மகிழ்வர்; எல்லா நலன்களும் வாழ்க்கை வசதிகளும் அமைந்த அம் மலையைவிட்டுப் போகவேண்டின் தங்கள் விதியை நினைத்து வருந்துவர். ஐய! நீ இந்த வள மான மலைநாட்டிற்குத் தலைவன். நாங்கள் செல்லுகின் றேம். நீ எழுந்து போவாயாக. நீ நெடிது வாழ்க. திருந் திய அணிகலன்களை உடலெங்கும் அணிந்தவளும், பருத்த தோளும் நுண்ணிய இடையும் உடையவளும், மாலைதாழ்ந்த மார்பகம் கொண்டவளும், மெல்லியவளுமாகிய என் இளந் தலைவி நாணத்தால் மிகவும் வருத்தமுற்றுத் துன்ப மிகுதி யால் மெலிந்து வெளுத்துப்போய்விட்டாள்; உன் அன் பைப் பெறலாம் என்ற பெரு நம்பிக்கையால் அவள் தன் வாழ்வையே உன்பால் அடைக்கல மாக்கிவிட்டாள். ஆனல், எமன் வாயிற் செல்லும் உயிரை மீட்பது, போர்க்களத்தில் எதிரொலி எழுப்பும் வெற்றி முரசுகளையுடைய வீரமிக்க மன்னர்களுக்கும் அரியதாகும்.”—பாடலின் கருத்து இது தான்.

தலைவியின் நலனை நுகர்ந்து, பின் அவளைப் புறக் கணித்துவிட்ட தலைவனது கொடுமையை இப் பேச்சு நன் ருகக் கண்டிக்கின்றது. அவர்கள் வாழ்கின்ற மலையின் அழகிய இயற்கைச் செல்வமும் அவனது கொடுமையைப் புலப்படுத்திக் காட்டுகிறது. இயற்கைகூடத் தலைவிக்குப் பகையாயிற்றுப் போலும்! தலைவன் கொடியவனுக இருந் தும் இயற்கை அவனை வளமாக வாழவைக்கிறது. இதை யெண்ணித் துன்புறுகின்ற மனத்திலிருந்து எழுந்த சோகக் குரலே மலையின் புனைந்துரையாக இப் பாட்டில் அமைந் துள்ளது. இப் புனைந்துரையே இக் கவிதையின் உயிர்நிலை யாக உள்ளமையை இப் புலவர் காலத்திலிருந்த பெரு

மக்கள் உணர்ந்தனர்; புலவருக்கு மலையனார் என்று பெயர் இட்டனர். மலையென்ற சொல்லோடு அன் சாரியையும், ஆர் விகுதியும் சேர்ந்தமையின் மலையனார் என்னும் பெயர் அமைந்தது.

முரஞ்சியூர் முடிநாகராயர் :

சங்கப்புலவர் வரிசையில் மிகப் பழமையானவர்களுள் ஒருவரும், புறநானூறு 2-ஆம் பாடலின் ஆசிரியரும் ஆன புலவரின் பெயர் முரஞ்சியூர் முடிநாகராயர் என்பது. இப் புலவரின் பிறந்த ஊர் முரஞ்சியூர் ஆகும். சில அறிஞர் களின் கருத்துப்படி இப் புலவரின் பெயர் முடிநாகர் ஆயர் என்றோ, முடிநாகர் அரையர் என்றோ கொள்ளலாம். ஆய் என்னும் பெயர் இப் பெயருள் அமைந்துள்ளது எனக் கொள்ளுதல் வலிந்து கொள்ளுதலாக முடியும். நாகராயர் என்பதன் சரியான வடிவம் யாது என்பது இன்னும் தெளிவாகவில்லை. சங்கவருணர் என்னும் நாகரியர் என் பாரை நாம் அறிவோம்.* நாகனார் (ஆண்பாலார்), நாகை யார் (பெண்பாலார்) என்பவையும் சங்கப் புலவர்கள் பெயர் களாக இருந்திருக்கின்றன.†

நாகனார் என்னும் பெயருடைய புலவர்களில் சிலர் பொன் வணிகராயிருந்தனர்; சிலர் கொல்லராயிருந்தனர் என்பது அவர்களின் பெயரின் முன்அடையாக உள்ள பொன், கொல்லன் ஆகியவற்றால் தெரிகிறது. தமிழ்ப் பெருங் கூத்தன் நாகன் என்று ஒரு புலவர்க்குப் பெயர் வழங்குகிறது. அவருடைய தந்தை தமிழ்ப்பெருங் கூத்தன் என்னும் பெயருடையவராய் இருந்திருக்கலாம். அல்லது, அவரே தமிழ்ப் பெருங்கூத்தன் என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பெற்றிருக்கலாம். மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகனார் என்பாரும் சங்கப் புலவராக விளங்கினர்.

---

*புறம், 360.

†பிற்சேர்க்கை, 4 : 6. காண்க.

மாங்குடி மருதனர் என்ற பெரும் புலவரின் மகனர் இளநாகனர் என்பாரும் புலவரே.* மாங்குடி மருதனருக்கு மாங்குடி கிழார் என்ற மற்ருெரு பெயரும் உண்டு. அவர் வேளிர் குடியைச் சேர்ந்தவர் என்பதை இது நன்கு அறிவிக்கிறது. எனவே, வேளிர் குடியினரும் நாகன் என்ற பெயரை வைத்துக்கொள்ளலாயினர் என்பது தெளிவு. தமிழ் நாட்டில் நாக வழிபாடு அதிகமாகப் பரவியிருந்தமை இதற்குக் காரணமாக இருக்கலாம்.

"அஸ்ஸாமிலும், இந்திய நாட்டின் பிற பகுதிகளிலும் நாகர் குடியினர் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். முண்டா, அல்லது கொலேரிய மொழியினத்தைச் சேர்ந்த சில மொழிகளை இவர்கள் பேசுகின்றனர். மிகப் பழங்காலத்தில் மக்களிடம் காணப்பட்ட நாகரிகமற்ற தன்மையே இன்று இவர்களிடம் இருந்தபோதிலும், இவர்களின் முன்னோர், பெரும் புகழும் உடையவராயிருந்தனர். 'மாகியரும் மௌரியரும்†' என்னும் நூல், நாகர் குடியினர் ஐரோப்பாவிலுள்ள ஹங்கேரியிலிருந்து கிளம்பி ஆஸ்திரேலியாக் கண்டம் வரை உள்ள பகுதிகளில் ஆங்காங்குத் தங்கிவாழத் தொடங்கியதை ஒருவாறு விளக்க முயலுகிறது. பாலினேசிய மொழிகள் முண்டா மொழிகளோடு தொடர்புடையவை. நாகர்கள் நகர நாகரிகமொன்றை வளர்த்தமைத்த தலைவர்கள் ஆவர். நாகரி என்னும் எழுத்து முறையைப் பரப்பியவர்கள் அவர்களே. இவ் வெழுத்து முறையின் பெயர் அவர்களின் பெயரோடு தொடர்புடையது. நாகர்களுக்கும் மற்றக் குடியினருக்கும் நடந்த போர்களைப் புனைந்துரைக்கும் புராணக் கதைகளில் நாகருடைய வலிமையும் செயல்களும் நன்கு கூறப்பட்டுள்ளன. நாகர்கள் வாழ்ந்த பகுதியை நாகலோகமென்றும், சுவர்க்கவகையில் அதுவும் ஒன்றென்றும் பிறமக்கள் கூறுமாறு அவர்கள் மிக்க மகிழ்ச்சி

---

*அகம், 34, 59 முதலியன.

†Magyars and Maoris.

யோடு இன்பமான பொருள்கள் பலவும் துய்த்து வாழ்ந்தனர்.* உலூபி, சித்திராங்கதை யென்ற நாககன்னியர் இருவரை அருச்சுனன் மணந்ததையும், நாகர் குடியினனாகிய தக்ஷன் என்பான் ஒரு புறமும், பரீக்ஷித்தும் அவன் மகன் ஜனமேஜயனும் ஒரு புறமும் நின்று போரிட்டதையும் மகாபாரதம் கூறுகிறது. பேரரசன் மாந்தாதாவின் மகன் புருகுச்சன், நரமதி யென்ற நாககன்னியை மணம் புரிந்ததும், அவனுடைய வழித்தோன்றல்களாகத் திரிசங்கு, ஹரிச்சந்திரன் என்பார் பிறந்ததும் விஷ்ணு புராணத்தில் பேசப்படுகின்றன. அனுமானும் பிற வானரரும் சீதையைத் தேடப் புறப்பட்டபோது, தென்னிந்தியாவில் போகவதி நதி அருகில் அமைந்த,அகன்ற தெருக்களும் கோட்டைகளும் நிறைந்த, நாகரது பெரு நகரத்திற்கும் சென்று தேடும்படி சுக்கிரீவன் அவர்களுக்குக் கட்டளையிட்டதாக வால்மீகி இராமாயணம் கூறுகிறது. மகதப் பேரரசு, ஒருகால், நாக மன்னர்களின் ஆணையின்கீழ் இருந்தது. அவர்களில் ஆரும் மன்னனே புத்தர் காலத்திலிருந்த அஜாதசத்துரு என்பான். இலங்கைத் தீவின் மேற்குப் பகுதி நாகர்களின் ஆணையின்கீழ் இருந்தமையின் பழங் காலத்தில் அது நாகத்தீபம் என்றழைக்கப்பட்டது. அமராவதி ஸ்தூபத்தில் நாகமுடியுடைய நாகர்களுடைய உருவங்கள் உள்ளன. அங்கே அரசரும் அரசியரும்-முத்தலை நாக முடிகளும், பொது மக்கள்-ஒருதலை நாக முடிகளும் உடையவராய் விளங்குகின்றனர். நாகத்தின் தலை வடிவமான முடியை அணிந்த மன்னரை முடி நாகராயர் என்ற பெயர் குறிக்கிறது எனலாம். இந்தியாவின் மேற்குப் பகுதியிலும் நாகர்கள் பரவியிருந்தனர். மணிமேகலைக் காப்பியம் நாக நாடு†, நாகபுரம்‡, நாகர்மலை§ என்பவைபற்றியும் மனிதரைக் கொன்று தின்னும் நாகர்$ பற்றியும் பேசுகிறது.

---

*சிலப்பதிகாரம் மங்கலவாழ்த்துப் பாடல் : 21 வரி.

†8 : 5; 24 : 54. ‡24 : 169. §16 : 15. $16 : 39.

கொலேரிய மொழிகளின் வாடை தமிழிலும் சிறிது வீசியமைக்குச் சான்றுகள் உள்ளன.* எனவே, இந்திய ரிடையேயும் தமிழ ரிடையேயும் விளங்கிய சிறந்த பண் பாட்டையும் நாகரிகத்தையும் உருவாக்கிய பெருமையில் கொலேரியர்களுக்கும் அவர்களுள் சிறப்பாக நாகர் களுக்கும் சிறந்த பங்கு உண்டு என்பதை மறுக்கவியலாது. நாகரையும் சோழரையும் தொடர்பு படுத்திக் கூறும் கதை இந் நூலில் தொண்டையர் என்னும் தலைப்பில் விரிவாக ஆராயப்படுகிறது. நாகர்களோடு சோழர்கள் கலந்த கலப்பின் வழிவந்தவரை நாகபல்லவ சோழர்கள் என்று காலஞ்சென்ற திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர் கள் கூறுகின்றனர்.† காலஞ்சென்ற திரு. கனகசபைப் பிள்ளை அவர்கள் தமது '1800 வருடங்களுக்கு முன் தமிழர்'‡ என்னும் நூலில், மறவர், எயினர், ஒளியர், ஓவியர், அருவாளர், பரதவர் என்பார் நாக்ர் குடியைச் சேர்ந்தவர் என்றும், அவருள் மறவர், தமிழர்களின் தீராப் பகைவர்கள் என்றும் கூறுகின்றார். இது வெறும் ஊகமே யன்றி வேறன்று. இக்குடியினர் எல்லோரும் தமிழகத்தின் வடக்குப் பகுதியி லிருந்ததாலும், சங்க காலத்தின் இறுதி யில் இவர்கள் நாளுக்கு நாள் மிக்க வலிமைபெற்று வாழ்ந் திருந்ததாலும் இவர்களை நாக குடியினர் என்று அவர் முடிவு செய்துவிட்டார். நாகர்களின் அரண்களைப்பற்றி வால்மீகி இராமாயணம் பேசுவது குறித்து முன்னமேயே குறிப்பிட்டுள்ளோம். அரண் என்ற சொல்லை அருவர், அருவாளர் என்ற சொற்களோடு ஒப்பிட்டு, இவற்றிலிருந்து தான் அது பிறந்தது என நாம் கூற முற்படுவோமானால், அருவர், நாகர் என்பன ஒரு குடியினரின் பெயர்களே

*பேராசிரியர் தெ. பொ. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் மணிமேகலை ' என்னும் பொருள் பற்றித் 'தமிழ் முரசில்' எழுதி யுள்ள கட்டுரை.

†கள்ளர் சரித்திரம். ‡Tamils, 1800 Years Ago.

என்று கூறுவது, முற்றிலும் தவறாகாது. முடிநாக அரையர் என்பதில் அரையர் என்ற சொல் 'அரு' என்னும் பகுதியினின்றும் தோன்றியதாகக் கொள்ளலாம். முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் பெயரை ஆராய்வதால் நாகருக்கும் அருவாளருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததை அறிய முடிகிறது. இத் தொடர்பு பற்றி இந் நூலில், அருவாளர் என்னும் தலைப்பில் விளக்கம் தரப்பெற்றுள்ளது.

மறவர்கள் கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தினராகக் கருதப்பெறுகிறார்கள். புறப் பாடலில் பாடப்படும் துறைகளுள் மகட்பாற் காஞ்சி என்பதும் ஒன்று. தமிழகத்தரச குலத்தினருக்குத் தங்கள் பெண்களை மணம் செய்விக்க மறுத்து, அதன் விளைவாக உண்டாகும் போரில் மடியவும் மறவர்கள் துணிந்திருப்பதைப் பாடுவது அத் துறை. இது தான் திரு. கனகசபைப் பிள்ளையவர்களை, மறவர் தமிழரின் வேறுபட்ட இனத்தவரென்றும், அவர்கள் இரு சாராருக்கும் தீராப் பகைமை இருந்துவந்ததென்றும் கருதச் செய்தது. மறவரையும் அவரைச் சார்ந்த பிற குடியினரையும் பிற மக்கள் சில வேளைகளில் பழித்துப் பேசுவதற்குக் காரணம், பழங் காலத்திலிருந்து அவர்கள் மனத்துட் பகையும் வேறுபாட்டுணர்வும் வெறுப்புணர்வும் அவர்கள் அறியாமல் தலைகாட்டுதலேயாகும். அருமை நாட்டார், அருவாட்டலைவர், அருவா நாட்டார் முதலியன, இன்றும் கள்ளர்களுடைய பட்டப் பெயர்களாய் வழங்குகின்றன.* அரையர் என்பதன் திரிபான 'ராயர்' என்று முடியும் பெயர்களைக் கொண்ட மற்றும் பல குடியினரை நாம் காண்கிறோம். கடாரம் தாங்கிய சீனத்தரையர் ஈழத்தரையர் போன்ற பட்டப் பெயர்களால் கிழக்கு ஆசிய நாடுகளோடு தமிழகம் கொண்டிருந்த தொடர்பு தெளிவாக அறியப்படுகிறது.

---

*கள்ளர் சரித்திரம் : பிற்சேர்க்கையில் உள்ள பட்டப் பெயர்களை நோக்குக.

**வண்ணப்புறக் கந்தரத்தனர் :**

இவர் அகநானூறு 49-ஆம் பாடல், நற்றிணை 71-ஆம் பாடல் ஆகியவற்றின் ஆசிரியர். புலவரின் இயற்பெயரான கந்தரத்தனர் என்பதற்கு முன் அடையாகச்சேர்க்கப் பெற்று இதே பெயருள்ள பிற புலவர்களினின்றும் இவரை வேறு பிரித்துக் காட்டும் **'வண்ணப் புறம்'** என்ற சொற்றொடர் நற்றிணை 71-ஆம் பாடலில்தான் வருகிறது. கீரந்தை என்னும் பெயர் கீரன் தந்தை எனப் பொருள்படும். கண்ணத்தனர் என்ற பெயர் கண்ணன் அத்தனர் (கண்ணன் தந்தையார்) எனப் பொருள்படும். கந்தரத்தனர் என்ற பெயரும் இவை போன்றதே. இச் சொற்றொடரின் முதற் சொல் தெளிவாக இல்லை. கந்து என்பது பசுக்கள் கட்டும் கம்பத்தைக் குறிக்கும். அக் கம்பத்திற்குரிய தெய்வம் கந்தன். கந்தன் தங்குதற்குரிய தூய உறைவிடமாக இக் கந்து கருதப்பட்டது.* சில இடங்களில் கம்பம் போன்ற கற்கள், நிலத்தைப் பிளந்து எழுந்த நிலையில் நிற்கும். (பிள்; பிள; பிள்; பிள்ளை.) இவையே **கந்தப் பிள்ளை** என்றும் **கதப் பிள்ளை** என்றும் அழைக்கப்பட்டன போலும் ! தெய்வத்தின் பெயர் கந்தன் என்பதாயின். இப் புலவரின் பெயர் **கந்தத்தனர்** என்றிருத்தல் வேண்டுமேயன்றிக் கந்தரத்தனர் என்று இருத்தல் இயலாது. பிற்கால இலக்கணக்காரர்கள் பந்து, கந்து என்பவற்றிற்குப் பந்தர் கந்தர் என்பவை போலிகள் என்று விளக்குகிறார்கள். இப்பொழுது கன்னட மொழியில் காணப்படும் ' அர் ' என்னும் சாரியை அக் காலத்தில் தமிழிலும் இருந்திருக்கலாம். கந்தர் என்பதன் ஈற்றில் உள்ள 'அர்' இவ்வகையான சாரியையே. பழங்கால இலக்கண வழக்கைக் கொண்டு 'அர்' என்பது சாரியையென உணராதார் 'அர்' என்பதைக் கந்தர் என்னும் சொல்லின் பொருளை முழுமை

*அகம், 307 : 12.

யாக்கும் முக்கியமான பகுதியென்றே கருதியிருக்க வேண்டும். எனவே, கந்து, அத்தனார் என்னும் சொற்களின் இடையே 'அர்' சாரியை சேரக் கந்தரத்தனார் எனப் புலவரின் பெயர் அமைந்தது.

இனி, இவர் பெயருக்கு முன் 'வண்ணப் புறம்' என்னும் அடைமொழி சேர்க்கப் பெற்றதன் காரணத்தை ஆராய்வோம். இவர் பாடிய நற்றிணை 71-ஆம் பாடல், பொருள் தேடுதற்குப் பிரிய எண்ணும் தலைவனை நோக்கித் தோழி கூறுவதாக அமைந்தது. இது புறாக்களின் வாழ்க்கையோடு தன் வாழ்க்கையை ஒப்பிட்டு நோக்கும் தலைவியின் உணர்ச்சிகளுக்கு வடிவம் தருகிறது.

" தலைவரே, நிலையற்றதாகிய பொருளைத் தேடும் ஆசையும் மனத்தை நன்கு பற்றிக்கொண்டுவிட்டது. அவ்வாசையினின்றும் விடுபட முடியாதவாறு அதற்கு அடிமைப் பட்டுவிட்டீர். அதிலேயே கருத்துச் செலுத்தி, என்னிடம் வந்து, 'என் விருப்பத்தை வளையணிந்த கையையுடைய உன் தோழிக்கு (தலைவிக்கு)க் கூறுவாயாக', என்று பல முறை இரக்கிறீர். நான் இதைத் தலைவிக்கு அறிவிப்பேனாயின், நீர் பலமுறை இரப்பது கண்டு நும்மிடம் இரக்கம் கொண்டு, 'சென்று வருக' என அவள் விடை தரலாம். அவ்வாறு அவள் விடை தந்தாலும், அவள் கண்ணையும், நெற்றியையும் அன்போடு தடவி அவள் கண்முன்பே பிரிந்து செல்ல நும்மால் முடியுமா? பல கட்டுகள் உள்ள செல்வருடைய வீடுகளின் உள் இறப்பில் இருக்கும் சிவந்த கால்களையுடைய அழகிய வெண் புறா தன் அன்பிற்குரிய பெண் புறாவை அழைக்கும் குரலை—ஆசை மிகுதியால் செயலற்ற நிலையை வெளிப்படுத்தும் விரகக் குரலை, நும்மைப் பிரிந்து தனியே இருக்கும்போது கேட்குந் தோறும் எழில்மிக்க கூந்தலையுடைய என் தலைவி, ஆசையால் நெஞ்சு மிக வேகமாக அடித்துக்கொள்ள, வருந்தி நடுங்குமாறு விட்டுப்பிரிய நும்மால் முடியுமா?"

பாடலின் கருத்துத் தெளிவாக இருக்கிறது. ஆயின், வெண்ணிறப் புறுவை இங்குக் குறிப்பிட்டதன் பொருத்தத்தை நாம் ஆராய்ந்து விளக்கவேண்டும். தலைவன் பொருள் கருதிப் பிரிந்த பிறகு தலைவி அவனை நினைந்து வருந்துவாள். அவளது மனக் கண்ணின்முன் தலைவன் தோற்றமளிப்பான். அவன் அழகிய நிறங்கள் ஊட்டப் பெற்ற ஆடைகளும் விலையுயர்ந்த மணியணிகளும் அணிந்து பெரிய மாளிகையில் தன் காதலி அண்மையில் இல்லாததால் வருந்தும் உள்ளத்தோடு அமைதியற்றிருப்பவனாகத் தோற்றமளிப்பான். அவ்வாறு தோன்றும் தலைவனைச் செல்வரது மாளிகையின் உட்பகுதிகளில் சிறை வாழ்வு வாழும் புறுக்கள் தோழிக்கு நினைவூட்டுகின்றன. தலைவன் பிரியப்போகிறான் என்பதற்காகத் தலைவி வருந்தமாட்டாள். ஆனால் தன்பால் மிகுந்த அன்புடையவனாதலின் பிரிந்து சென்ற நாட்டில் கடமைகளுக்கு இடையே, இடைவிடாது தன்னை நினைந்து உருகுவான் என்றுதான் வருந்துவாள் என எண்ணுகிறாள் தோழி; இந்த எண்ணத்தைப் பேச்சிலும் வெளியிடுகிறாள். இக் கருத்தை மனத்துட்கொண்டு பாடலைப் படிக்கும்போது, புறுக்களைப்பற்றிக் குறிப்பிட்டதன் உட்கருத்துத் தெளிவாகப் புலனாகிறது.

## ஆ

### கழாத்தலையார் :

இவர், புறநானூறு 62, 65, 270, 288, 289, 368-ஆம் பாடல்களின் ஆசிரியர். இவற்றுள் 288-ஆம் பாடல் முழுமையானதாய் இல்லை. இந்தப் பாடல்கள் ஒன்றிலும் **கழாத்தலை** யென்ற சொற்றொடர் காணப்படவில்லை. 270-ஆம் பாடலில் ஐந்தாம் வரியாக '**நறுவிரை துறந்த நாறு நரைத்தலை**' என்ற தொடர் போர்க்களத்தில் இறந்துபட்ட வீர மைந்தனுடைய தாயின் தலையைப் புனைந்துரைப்

பதாக வருகிறது. 'நறுவிரை துறந்த' என்றமையின் வெளுத்து வாசம் நீங்கிய அவளுடைய தலை கழுவப்படாம லிருந்தது எனக்கொள்ள இடமுண்டு. சில அறிஞர்கள் இவ்வாறு கொண்டுள்ளார்கள்.

நற்றிணைக்கு உரையெழுதிய காலஞ்சென்ற பின்னத் தூர் நாராயணசாமி ஐயரவர்கள், கழாத்தலை, சீத்தலை, முகத்தலை, செந்தலை, இரும்பிடர்த்தலை என்பன சிற்றூர் களின் பெயர்கள் எனத் தம் உரைநூலில் கூறியுள்ளார் கள்.* திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் தமது 'தமிழகம் ஊரும் பேரும்' என்ற நூலில், பெருந்தலை என்பது கொங்கு நாட்டில் பெருந்தலையூர் என இப்பொழுது அழைக்கப்படும் ஊரேயெனக் கருதுகிறார்.† ஆயின், இரும்பிடர்த்தலையார் என்னும் பெயர், அப்பெயரையுடைய புலவராற் கையாளப் பட்ட சொற்றொடரிலிருந்தே அமைக்கப்பட்டது என இந் நூலில் முன்னரே நிறுவியுள்ளோம். எனவே, பெருந்தலை, கழாத்தலை, சீத்தலை என்ற சொற்றொடர்கள், இவற்றால் அமைந்த பெயருடைய புலவர்களால் தம் பாடல்களில் அமைக்கப்பட்டனவென்றும், வருந்தத்தக்க விதமாக அப் பாடல்கள் தொல்காப்பிய உரையாசிரியர்கள் காலத்தி லேயே காணமற் போய்விட்டனவென்றும் கொள்ளலாம். ஏனெனில், இளம்பூரணர், சொல்லதிகாரம் 26-171-ஆம் சூத்திரங்களின் உரையில் பெருந்தலைச் சாத்தனார், சீத்தலைச் சாத்தனார் என்ற பெயர்களை அடை சினை முதல்கள் முறையே அடுக்கிவந்த வண்ணச் சினைச் சொல்லுக்கு எடுத்துக்காட்டாகத் தந்துள்ளார். சேனாவரையர் சொல் லதிகாரம் 26, 174-ஆம் சூத்திரங்களின் உரையில் இவ்வகை ஆட்சிக்கு இவற்றையே எடுத்துக்காட்டுகிறார்; திருவள் ளுவ மாலையில் ஒரு பாடல்‡ சீத்தலை என்ற தொடருக் குச் சீச் சொட்டும் தலை எனப்பொருள் கொள்ளுமாறு ஒரு விளக்கம் தருகிறது.

---

*பக்கம், 38. †பக்கம், 146. ‡11-ஆம் பாடல்.

தமிழ் நாட்டில் வழங்கிவரும் வழிவழிக் கதையொன்றன்படி, தமிழ்ச் சங்கத்தார் ஏற்றுக்கொள்வதற்காகக் கொணரப்படும் நூல்களில் சிறந்தனவற்றைத் தெரிந்தெடுக்கும் திறனுய்வாளராகச் சீத்தலைச் சாத்தனர் இருந்தார். அந் நூல்களில் பிழை காணுந்தோறும் வருந்தி எழுத்தாணியால் தம் தலையிற் குத்திக்கொள்வது இவர் வழக்கம். சங்கத்திற்கு வந்த ஒவ்வொரு நூலிலும் பிழைகள் மலிந்திருந்தமையால் இவர் தலையில் ஏற்பட்ட புண்கள் ஆற நேரமில்லாமலே போயிற்று. திருக்குறளை இவர் படிக்க நேர்ந்தபோது, அப் பெரு நூலில் ஒரு பிழையும் இல்லாமையால் இவருடைய தலைப்புண்கள் எல்லாம் ஆறின என்று அக் கதை கூறுகிறது. அக்கதையை உட்கொண்டே மேலே குறிப்பிட்ட திருவள்ளுவ மாலைப் பாடல் பாடப்பட்டுள்ளது. **சீத்தலைச் சாத்தனர்** போன்ற பெயர்கள் அமைக்கப்பெற்ற முறையைப் புரிந்துகொண்டால் இவை புலவர்களின் பாடல்களில் வந்திருக்க வேண்டும் என்றும், அப் பாடல்கள் திருவள்ளுவ மாலை தோன்றிய பழங் காலத்திலேயே காணமற் போயின என்றும் கொள்ளுவதில் யாதோர் ஐயப்பாடும் இராது.

**சீத்தலை** என்பது திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூரின் பெயர். சீத்தலைச் சாத்தனர் என்ற புலவரின் நினைவாக அவ்வூருக்கு அப் பெயர் ஏற்பட்டிருக்கலாம். இதுபோலவே பெருந்தலை என்னும் சொற்றொடரைக் கவிதையில் கலையழகும் இலக்கிய நயமும் செறியக் கையாண்ட சிறப்பால் பெருந்தலைச் சாத்தனர் என அழைக்கப்பெற்ற புலவரின் நினைவாகப் பெருந்தலையூர் என்னும் பெயர் ஒரு சிற்றூருக்கு இடப்பெற்றிருக்கலாம். புலவர்களின் பெயரால் சிற்றூர்கள் அமைந்தன என்பதற்குச் சான்றுகள் நிரம்ப உள்ளன. அரக்கோணத்தின்

அருகில் உள்ள மோகூர் என்பது மோசி என்னும் புலவரின்* ஊரான மோசியூரே எனக் கூறப்படுகிறது.

எனவே, கழாத்தலை என்ற சொற்றொடர் இப்பொழுது கிடைக்கும் சங்கப் பாடல்களில் எங்கேனும் வந்துள்ளதா என ஆராய முற்படுவோம் :

சமாஜத்தார் பதிப்பின்படி **அடைநெடுங் கல்வியார்**, அல்லது டாக்டர் சாமிநாதையர் அவர்களின் பதிப்பின்படி **அடைநெடுங் கல்வியார்** பாடிய புறநானூற்று 345-ஆம் பாடல் பதினேழாம் வரியில் **கழாத்தலை**யென்னும் சொற்றொடர் வருவதைக் காண்கிறோம். மறவரால் மகள் மறுக்கப்பட்ட வம்ப மன்னர்கள் அம் மறவரின் நகரை முற்றுகையிடுவதை அப் புறப்பாடல் புனைந்துரைக்கிறது.

"பருத்தி வேலிகள் சூழ்ந்த வயல்கள் நிறைந்த இந்தச் சிறந்த நகரம் என்ன ஆகப்போகிறதோ? புதிய மன்னர்களின் புதிய வீரர்கள் ஏராளமாக வந்துள்ளனர். நகருக்கு வெளியேயுள்ள சோலைகளில் அவ் வீரர்கள் யானைகளைக் கட்டியமையால் அச் சோலைகள் நிலைகுலைந்து அழகிழந்தன. தேர்கள் ஒன்றன்பின் ஒன்றாக விரைந்து சென்றமையால் நகரத் தெருக்களில் தூசி பறந்தது. தெருக்களின் இரண்டு முனைகளிலிருந்தும் குதிரைகள் வந்துகொண்டேயிருந்தமையால் மக்கள் நடப்பதற்கு வழியே இல்லாமற் போயிற்று. வீரர்கள் தேக்கி வைத்திருக்கும் நீர்நிலைகளில் தங்கள் படைக்கலங்களைக் கழுவியமையால் தண்ணீர் சேற்றுடன் கலந்து கலங்கியது. முரட்டுத்தனம் மிக்க பகைவீரர்கள் அங்கே பாசறையமைத்துத் தங்கியமையால், அவர்களின் சுமை பொறுக்கலாற்றாது பூமியும் நெளிந்தது. (மறவர்கள் தம்முடைய பெண்ணைக் கொடுக்க மறுத்தமையால் சினங்கொண்டு, இம் மன்னர்கள் தம் வீரர்களைத் திரட்டிப் போருக்கு வந்துள்ளார்கள்). மறக்குலக் கன்னியின் தந்தையும் தமையன்மாரும் செல்வத்திற்கு ஆசைப்பட்டவர்க

*புறம், 158 : 14.

ளல்லர். அவர்கள் விரும்புவதெல்லாம் வீரத்தோடு போர் செய்து பெறும் புகழே யாதலின், தமக்கு இணையில்லாத மன்னர்களுக்குப் பெண் கொடுக்க மறுத்தனர். போருக்குப் புறப்படும் அவர்களின் கைகளில் மூங்கிற் கழியோடு பிணிக்கப்பட்ட கேடயமும், சுடர்வாளும் இருக்கின்றன. குருதி நாற்றம் வீசும் புண்கள் நிறைந்த கழுவாத தலையையுடைய பல மறவர்கள் இங்ஙனம் போருக்கு எத்தனித்து ஒன்றுகூடிச் செல்லுகின்றனர்'':—இஃது அப் புறப்பாடலின் கருத்து. டாக்டர் சாமிநாதையரவர்களின் புறநானூற்றுப் பதிப்பிலும், சமாஜத்தாரின் சங்க இலக்கியப் பதிப்பிலும் உள்ள இப் பாடலின் பாடம் தெளிவாக இல்லை. மறவர் ஏந்திய வேல்கள் பகைவரின் உடம்பில் பாய்ந்து, அவர் மடியத்தக்க கொடிய புண்களை உண்டாக்க வேண்டுமென்பதற்காக அவற்றின் முனைகள் கழுவப்படாமல் இருந்திருக்கலாம்; அல்லது மேலே விளக்கியவாறு நாள்தோறும் நீராடித் தன்னை அழகு செய்து கொள்ளும் மறக்குலக் கன்னியை இடைவிடாது காக்கும் வேலையில் ஈடுபட்ட அவள் தந்தையும் தமையன்மாரும், அக் காவலிலேயே கருத்து முழுதும் செலுத்தித் தம்மைத் தூய்மைப்படுத்திக்கொள்ளுவதையும் அழகுசெய்து கொள்ளுவதையும் மறந்தனர் என்று கருதுவதும் பொருத்தமாகலாம். தம் தோற்றம் பற்றிய கவலை அவர்களுக்கு இல்லை. தம் பகைவர்கள்மீது அவர்கள் சீற்றம் எனும் கனலைக் கக்கினர். அவர்களின் எண்ணமெல்லாம் பகைவரை அழிப்பதிலேயே சென்றது. அவர்களுடைய இந்தப் பயங்கரமான நிலையைப் புலவர் 'கழாத்தலை' என்ற சொற்றொடர் கொண்டு தம் கவிதையில் விளக்க முயன்றுள்ளார்.

'கழாத்தலை' என்ற சொற்றொடர் அமைந்துள்ள பாடலை அறிந்தோம். ஆனால், அப் பாடலை இயற்றியவர் கழாத்தலையார் அல்லர். புறநானூற்றுப் பதிப்பில் அடை நெடுங் கல்வியார் இதனை இயற்றினார் என்றே குறிக்கப்

பட்டுள்ளது. கழாத்தலை யென்னும் சொற்றொடரை, அது வந்துள்ளதும் இப்பொழுது கிடைக்காததுமான கழாத்தலை யாரின் பாடலிலிருந்து அடைநெடுங் கல்வியார் பெற்றுக் கொண்டிருக்கலாம்; அல்லது புறம். 345-ஆம் பாடல் உண்மையில் கழாத்தலையாரால் பாடப்பெற்றதாக இருக்க லாம்; ஆனால், படி எழுதுவோர் அப் பாடலின் இறுதியில் தவறாக அடைநெடுங் கல்வியார் என எழுதிவிட்டனர் எனல் பொருத்தமாகும்.

இதுபோன்ற இலக்கியச் சிறப்புப்பெயர் பெற்றுள்ள புலவர்கள், சங்ககாலத்திலும் இப் பெயர்களால் அறியப் பட்டனரா என்ற வினா ஒருமுறை எழுந்தது. கபிலர், தமது புறநானூற்றுப் பாடல்* ஒன்றில், மேலே நாம் ஆராய்ந்த புலவரைக் கழாத்தலை யென்ற பெயரால் குறிப் பிடுகிறார். பாரிவள்ளல் இறந்தவுடன், கபிலர் அவன் மகளிரை இருங்கோவேளிடம் அழைத்துச் சென்று, அவரை மணக்கும்படி வேண்ட, அவன் மறுத்தது கண்டு, அவனை விளித்துப் பாடிய பாடல் அது. வேளிர் குல மன்னன் ஒருவனைக் கழாத்தலையார் சினந்து கூறிய தீமொழியால் சிற்றரையம், பேரரையம் என்ற பகுதிகளை யுடைய பெருநகரம் பாழானமையைப் புலவர் கபிலர் அப் பாடலில் குறிப்பிடுகிறார். இந்த இடத்தில், கழாத்தலை யென்பது ஒருரின் பெயரெனல் பொருந்தாது; அஃது ஒரு புலவரின் பெயர் என்று கொள்ளுதலே பொருந்துவ தாகும்.

பராயனார் :

இவர் நற்றிணை 155-ஆம் பாடலின் ஆசிரியர். இப் பெயர், புலவர் ஏதோ ஒரு பாடலிற் கையாண்டுள்ள பராய்

---

*புறம், 202 : 12.

என்னும் வினையெச்சச் சொல்லினின்றும் தோன்றியிருக்கலாம். அன்றி, இந் நற்றிணைப் பாடலில் 'ஒரு சிறை'* என்ற தொடர் வருவதால் அத் தொடர்கொண்டு ஒருசிறைப் பெரியனார் என்றழைக்கப்படும் புலவர்தாம் இவர் எனவும் கருதலாம். பெரியனார்† என்பது பராயனார் எனத் திரிந்திருக்கலாம்; அல்லது மேலே குறிப்பிட்ட நற்றிணைப் பாடலில் தொழுதனெம்‡ என்ற சொல் வருவது கொண்டு இப் பாடலின் ஆசிரியருக்குப் பராயனார் என்னும் பெயர் வழங்கப்பட்டிருக்கலாம்.

**பொன்மணியார் :**

குறுந்தொகை 391-ஆம் பாடலின் ஆசிரியர் பொன்மணியார் என்பார். குறுந்தொகை 67-ஆம் பாடலில்§ 'பொலங்கல ஒரு காசு' என்ற தொடர் குறிப்பிடப்பட்டுள்ளது. பொன்மணியார் பாடி, நமக்குக் கிடைக்காது போன ஒரு பாடலிலிருந்து இச் சொற்றொடரை, 67-ஆம் பாடலின் ஆசிரியரான அள்ளூர் நன்முல்லையார் பெற்றிருக்கலாமோ? ஆசிரியர் பெயர் காணாத நற்றிணைப் பாடல் ஒன்றில்$ 'பொன்னும் மணியும்' என்ற தொடர் காணப்படுகிறது. ஆங்குத் தலைவியின் உடலுக்குப் பொன்னும் அவளது கருங்கூந்தலுக்கு மணியும் உவமையாக்கப் பெற்றுள்ளன. அப் பாடலின் ஆசிரியர் இப் பொன்மணியார் தாமோ? அச் சொற்றொடரைப் பயன்படுத்தியமையாலேயே இவருக்குப் பொன்மணியார் என்ற பெயர் அமைந்ததுபோலும்!

---

*3-ஆம் வரி.

†குறுந், 272; நற், 121; புறம், 137—இவற்றின் ஆசிரியர்.

‡நற், 155 : 4. §4-ம் வரி. $166 : 1.

## இ

கீழ்வரும் பெயர்கள் எல்லாம், பாடல்களில்வரும் சொற்றொடர்களிலிருந்தே தோன்றியிருத்தல் வேண்டும். ஆனால், வருந்தத்தக்க வகையாக அப் பாடல்களுள் ஒன்றும் நமக்குக் கிடைக்கவில்லை.

**அடைநெடுங் கல்வியார் (அடைநெடுங் கல்லியார்):**

தானாகவந்து ஒருவரையடைந்து நிறைந்த கல்வியெனப் பொருள்படும் '**அடைநெடுங் கல்வி**' யென்னும் சொற்றொடரிலிருந்து இப் பெயர் தோற்றுவிக்கப்பெற்றது. இப் பெயருடைய புலவர் புறநானூற்றில் 283, 344, 345-ஆம்* பாடல்களைப் பாடியுள்ளார். இவற்றுள் 283, 344-ஆம் பாடல்கள் அரைகுறையாக உள்ளன. இப் புலவரின் பெயரை '**அடைநெடுங் கல்லியார்**' என டாக்டர் சாமிநாதையர் அவர்களும், '**அடைநெடுங் கல்வியார்**' எனச் சமாஜத்தாரும் (சங்க இலக்கியம் - சைவ சித்தாந்த மகா சமாஜம்) குறித்துள்ளனர்.

**ஊன்பொதி பசுங்குடையார் ;**

இப் பெயர், '**ஊன்பொதி பசுங்குடை**' யென்ற சொற்றொடரிலிருந்து அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். உட்குழிந்த கலம்போன்ற பச்சோலைக் குடம் (இக் காலத்தில் தொன்னை எனப்படுவது) என்பது இத் தொடருக்குப் பொருள். இக் குடம் பசிய பனையோலையாற் செய்யப்படுவது. நிறைய ஊன் பொதிந்து வைக்கப்பட்ட இத்தகைய குடம் ஒன்று ஊன்பொதி பசுங்குடை எனப்பட்டது. இப் பெயருடைய புலவர் புறநானூறு 10, 203, 370, 378-ஆம் பாடல்களைப் பாடியுள்ளார். இவற்றுள் 370-ஆம் பாடல் முழுமையும் கிடைக்கவில்லை.

---

*இறுதிப் பாடலில் கழாத்தலை யென்னும் சொற்றொடர் வருதலின் (வரி 17) அது கழாத்தலையார் பாடியதாக இருக்கலாம்.

**ஓரம்போகியார் :**

'ஓரம்போகி' யென்னும் சொற்றொடர் பாடலில் வருவது கொண்டு, அப் பாடலின் ஆசிரியர் 'ஓரம்போகி யார்' என்றழைக்கப்பட்டிருத்தல் வேண்டும். இப் புலவர் பாடியனவாக நமக்குக் கிடைப்பவை, அகநானூற்றில் 286, 316-ஆம் பாடல்களும், ஐங்குறுநூற்றில் முதல் நூறு பாடல்களும், குறுந்தொகையில் 10, 70, 122, 127, 384 எண்ணுள்ள பாடல்களும், நற்றிணையில் 20, 360-ஆம் பாடல்களும் புறநானூறு 284-ஆம் பாடலும் ஆகும்.

**ஒருஉத்தனார் :**

'ஒருஉத்த' என்னும் சொல்லிலிருந்து இப் பெயர் தோன்றியிருத்தல் வேண்டும். எனினும், இச் சொல்லின் பொருள் தெளிவாக விளங்கவில்லை. இப் புலவர் புற நானூறு 275-ஆம் பாடலைப் பாடியுள்ளார்.

**கடுந்தொடைக் காவினார் :**

இப் புலவர் அகநானூறு 109-ஆம் பாடலின் ஆசிரியர். 'கடுந்தொடை' யென்ற சொற்றொடரைத் தம் கவிதையிற் பயன் படுத்தியமையால் இவர் இப் பெயர் பெற்றிருக்க லாம். இச் சொற்றொடரின் பொருள் தெரியவில்லை. தற் காலத்தில் 'பூங்காவனம்' என்றழைக்கப்பெறும் சோலைத் தெய்வம் அக் காலத்தில் 'காவினார்' என்றழைக்கப் பெற் றிருக்கலாம். அல்லது, இரு முனைகளிலும் கயிறுகள் கட்டித் தொங்குகின்ற கழியொன்றில் விரைவாகச் செல் லும் கூரிய அம்புகளைக் கட்டித் தூக்கிச் செல்லும் ஒருவனைப் புலவர் புனைந்துரைத்திருக்கலாம் எனக் கருத இடமுண்டு. இவ்வாறு தூக்கிச் செல்லுவதற்குரிய கருவி அக் காலத்தில் 'கா' என வழங்கப்பெற்றது. இக் காலத் தில் இதனைக் 'காவடி' என்பர்.

**கடுந்தோள் கரவீரன் :**

இவர் குறுந்தொகை 69-ஆம் பாடலைப் பாடியவர். 'கடுந்தோள் கரவீரன்' என்ற சொற்றொடரைப் பயன் படுத்தியமையின் இப் புலவர் இப் பெயரைப் பெற்றிருக்க லாம். ஆனல், டாக்டர் சாமிநாதையரவர்கள் இதைக் 'கடுந்தோட் காவீரன்' என்றும் படிக்க இடமுண்டு என்று எழுதியுள்ளமையின் கடுந்தொடைக் காவினர் என்பதுதான் இங்ஙனம் தவருக எழுதப்பட்டதோ என நினைக்கவேண்டி யுள்ளது.

**காமஞ்சேர் குளத்தார் :**

'காமஞ்சேர் குளம்' எனக் கவிதையிற் கண்ட சொற் றொடரால் இப் பெயர் தோற்றுவிக்கப்பட் டிருத்தல்கூடும். இப் பெயருடைய கவிஞர் குறுந்தொகை 4-ஆம் பாடலின் ஆசிரியர் ஆவர்.

**கோண்மா நெடுங்கோட்டனர் :**

கொல்லுந் தன்மையுடைய ஒரு விலங்கின் நீண்ட கொம்பு என்று பொருள்படும் 'கோண்மா நெடுங்கோடு' என்னும் சொற்றொடரிலிருந்து இப் பெயர் தோன்றி யிருக்கலாம். நற்றிணை 40-ஆம் பாடலை இப் புலவர் பாடி யுள்ளார்.

**நரிவெரூஉத் தலையார் :**

'நரியை அச்சுறுத்தும் தலை' என்ற பொருளுடைய நரிவெரூஉத் தலை யென்னும் சொற்றொடரிலிருந்து இப் பெயர் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். இப் புலவர் பாடியுள்ள குறுந்தொகை 5, 236; புறம்., 5, 195 எண்ணுள்ள பாடல்களுள் ஒன்றிலும் இச் சொற்றொடர் வந்திலது. நரியும் ஓநாயும் சுடுகாட்டில் கூட்டம் கூட்ட மாக இருக்கும். விசித்திரமான பல்வரிசைகளும் எலும்பு களும் கொண்டு பயங்கரமாகச் சிரிக்கும் தோற்றத்தோடு

சுடுகாட்டில் கிடக்கும் உலர்ந்த மண்டையோடு, வழக்கமாகச் சுடுகாட்டில் மண்டையோடுகளை உண்ணும் நரியையும் அச்சுறுத்தும். அச்சம் மிகுந்த மரணத்தையும், வன்கணாளரையும் கலங்கச் செய்யும் சுடுகாட்டையும் இதுபோன்ற ஒரு முறையில் இப் புலவர் புனைந்துரைத்திருக்கவேண்டும். இச் சொற்றொடர் வந்துள்ள பாடல் காணமற்போனமையால், புறநானூற் றுரையாசிரியர், தமது காலத்திற்கு* முன்னிருந்தே வழங்கிவந்த கதையொன்றை நம்பவேண்டியதாயிற்று. இப் புலவர், நரியும் கண்டு அஞ்சும்படியான தலையும், விகாரமான உருவமும் உடையவர் என்றும், அவர் சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ் சேரல் இரும் பொறையைக் கண்டபோது, விகாரம் நீங்கி நல்லுடம்பு பெற்றார் என்றும் அக் கதை கூறுகின்றது. இம் மன்னனைக் காணும்போது நல்லுடம்பு பெறப்போவதை அவர் யார் மூலமோ முன்னமே அறிந்திருந்தார். அவ்வாறு அறியும்போது மன்னனின் பெயரைமட்டும் அறிவாரேயன்றி அவனது அங்க அடையாளங்களை அறியார்; எனவே, திடீரென அவனை நேரிற்கண்டபோது தம் விகார உருவம் நீங்கப் பெற்றதைக் கண்டு வியந்து, "நீயோ சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ் சேரல் இரும் பொறை?"† எனப் பாடுகிறார். இது புறநானூற்று உரையாசிரியர் தரும் விளக்கம். இப் புலவர் 'அரச நோய்' என்னும் ஒருவித நோயால் வருந்தினாரெனவும், சேரமானைக் கண்டவுடன் அந் நோய் நீங்கப்பெற்றாரெனவும் பேராசிரியர் ச. த. சற்குணர் கூறுவர்.

**தேரதரன் :**

இவர் குறுந்தொகை 195-ஆம் பாடலின் ஆசிரியர். தேர் செல்லும் வழி யெனப் பொருள் படும் 'தேர் அதர்'

---

*13 அல்லது 14-ஆம் நூற்றாண்டுக்கு. †புறம், 5.

என்ற சொற்றொடரிலிருந்து இப் பெயர் தோன்றியிருக்கலாம்.

**நரைமுடி நெட்டையார் :**

அகநானூறு 339-ஆம் பாடலைப் பாடியவர் **நரைமுடி நெட்டையார்** என்னும் புலவர். 'நரைமுடி' என்னும் சொற்றொடரைத் தம் பாடலொன்றில் பயன்படுத்தியமையால் அவர் இப் பெயர் பெற்றார் எனக் கருத வேண்டியுள்ளது.

**நெட்டிமையார் :**

இவர் புறநானூற்றில் 9, 12, 15 எண்ணுள்ள பாடல்களின் ஆசிரியர். தம் கவிதை ஒன்றில் நீண்ட இமையைப் புனைந்துரைத்தமையின் இவர் இப் பெயர் பெற்றிருக்கலாம்.

**நெடும் பல்லியத்தனார் :**

புறநானூறு 64-ஆம் பாடலைப் பாடியவர் இப் புலவர். தமது பாடலில் யாழ், ஆகுளி, பதலை எனப் பல இசைக் கருவிகளை (இயங்களை)க் குறிப்பிடுவதால் **நெடும்பல் இயத்தனார்** என இவர் அழைக்கப்பெற்றாரோ என எண்ணவேண்டியிருக்கிறது.

**நெடும்பல்லியத்தை :**

இது **நெடும்பல்லியத்தனார்** என்ற பெயரின் பெண்மைப் பெயராக இருக்கவேண்டும். அல்லது அப் பெயரையே **நெடும்பல்லியத்தை** எனப் படியெழுதுவோர் தவருக எழுதியிருக்கலாம். இப் பெயருடைய புலவர் குறுந்தொகை 178, 203-ஆம் பாடல்களைப் பாடியுள்ளார்.

**பார் காப்பான் :**

இப் புலவர் பாடிய பாடல் குறுந்தொகையில் 254-ஆம் எண்ணுள்ளதாகத் தொகுக்கப்பட்டுள்ளது. **உலகம் காப்**

பவன் என்றபொருளுடையது இச்சொற்றொடர். இப்புலவர் தமது பாடலொன்றில் 'பார் காப்பு'—'உலகத்தைக் காத்தல்' என்பது பற்றிக் குறிப்பிட்டிருத்தல் வேண்டும். டாக்டர் சாமிநாதையரவர்கள் தமது குறுந்தொகைப் பதிப்பில் இப் பெயரின் பாடபேதங்களாகப் 'பாரகாபரன்', 'பாரகரபரன்' என்பனவற்றைத் தந்துள்ளார். அவற்றின் பொருள் விளங்கவில்லை.

**பாவைக் கோட்டிலார் :**

அகநானூற்றில் 336-ஆம் எண்ணுள்ள பாடல் இப் புலவர் பாடியது. வீரர்கள் விற்பயிற்சி பெறும் இடத்திற்குக் 'கொட்டில்' என்று பெயர். பாவை யென்பது பெண் அல்லது பொம்மை எனப் பொருள்படும். பாவைக் கொட்டில் என்பது பெண்கள் படையைச் சேர்ந்தவர் வில் தொழில் பயிலும் இடத்தைக் குறிக்கிறது போலும்! இலக்கியத்தில் வேறு எங்கும் பெண் படையைப் பற்றிய குறிப் பெதுவும் நமக்குக் கிடைக்காதது வருந்தத் தக்கதே.

**பூங்கண் உத்திரையார் :**

இஃது ஒரு பெண் புலவரின் பெயர் எனலாமா? உத்திரை யென்பது இவரது இயற் பெயரெனவும் 'பூப் போன்ற கண்களை'ப் புனைந்துரைத்தமையின் பூங்கண் என்னும் அடைமொழியைப் பெற்றாரெனவும் கொள் ளலாமா? அலைகளின்மேல் நீண்டதொரு கம்பம் (உத்திரம்) போலவும் அலைகளுக்கு இடையே யமைந்த கணுக்கள் (மூட்டுக்கள்) போலவும் பூக்கள் மிதந்து செல்வதைப் பாடினமையின் இவர் இப் பெயர் பெற்றிருக்கலாம். டாக்டர் சாமிநாதையரவர்களின் குறுந்தொகைப் பதிப்பில், பூங்கணுத்தரையார் என்ற மற்றொரு பாடமும் உள்ளது. தரையின்மேல் கிடக்கும் பூக்கள் நீண்ட கம்பம்

போலவும், கணுக்கள் போலவும் விளங்குவனவாகப் பாடியவர் இப் புலவர் எனலாமா? இப் புலவர் குறுந்தொகையில் 48, 171-ஆம் பாடல்களையும் புறநானூற்றில் 277-ஆம் பாடலையும் பாடியுள்ளார்.

**பொத்தியார் :**

புறநானூறு 217, 220, 221, 222, 223 எண்ணுள்ள பாடல்களைப் பாடியவர் பொத்தியார் என்னும் புலவர். பொத்தி யென்னும் வினையெச்சச் சொல்லைக் கலைநயம் படப் பயன்படுத்தினமையால் இப் புலவர் இப் பெயர் பெற்றார் எனக் கருத வேண்டியுள்ளது. பொத்தி யென்பது ஒருவகை இரத்தினத்தின் பெயர்.* அல்லது சோழர்களின் பழைய நகரங்களில் ஒன்றாகிய பொத்தி† என்னும் ஊரில் இப் புலவர் பிறந்தமையால், பொத்தியார் எனப் பெயர் பெற்றார் எனலாமா?

**பொன்முடியார் :**

பொன்னாற் செய்த முடியைப் பற்றி இப் புலவர் புனைந்துரைத்திருக்கலாம். இவர் புறநானூறு 299, 310, 312-ஆம் பாடல்களைப் பாடியுள்ளார்.

**மாற்பித்தியார் :**

கண்டாரை மயக்கும் அழகும் மணமும் உள்ள பித்திப் பூவை இப் புலவர் அழகுறப் புனைந்து பாடியவர் போலும்! இவர் புறநானூறு 251, 252-ஆம் பாடல்களின் ஆசிரியர்.

**முடத்தாமக்கண்ணியார் :**

வளைந்த ஒளியுள்ள தலைமாலை யென்னும் பொருள் படும் 'முடத்தாமக்கண்ணி' என்னும் சொற்றொடரை இப் புலவர் தமது கவிதை யொன்றில் கையாண்டிருக்கலாம்; அல்லது அசையும் வலிமையில்லாத ஒளியுள்ள கண்களைப்

---

*S. I. I., III, 143. †பதிற், 9-ஆம் பத்து, பதிகம்.

பற்றிப் பாடியிருக்கலாம்; அல்லது ஒளியுள்ள கண்களை யுடைய முடப் பெண்ணொருத்தியை இச் சொற்றொடர் குறிக்கிறது எனக் கொள்ளலாம். இப் புலவர் பத்துப் பாட்டின் இரண்டாம் பாடலான பொருநராற்றுப் படையின் ஆசிரியர் ஆவர்.

**வெள்ளெருக்கிலையார் :**

புறநானூறு 233, 234-ஆம் பாடல்களைப் பாடியுள்ள இப் புலவர் வெள்ளெருக்கஞ் செடியின் இலைகளைப் புனைந் துரைத்திருக்கலாம். அதனாற் போலும் இவர் இப் பெயர் பெற்றார்!

---

## 5. மனங்கவரும் சொற்றொடர்கள் சிறப்புப் பெயர்களாக வருதல்

இதுவரை ஆராயப்பெற்ற சிறப்புப் பெயர்கள் எல்லாம் புலவர்கள் கையாண்ட சொற்கள், சொற்றொடர் களினின்றும் தோன்றியவை. இனி இரண்டாவதாக, வேறு ஒரு வகையான பெயர்களை ஆராய்தல் வேண்டும். இப் பெயர்களில், பாடல்களில் காணும் அழகிய சொற் களோ அல்லது சொற்றொடர்களோ, புலவர்களின் இயற் பெயருக்கு அடையாக அமைகின்றன. ஒரே பெயருடைய பல புலவர்கள் இருந்தால் அவரை வேறு பிரித்து அறிவது இன்றியமையாத தாகின்றது. **எயிறு** என்னும் சொல்லைக் கலையழகுடன் திறம்பட அமைத்துப் பாடினமையின் '**எயிற்றியார்**' என்ற பெயரைப் பெற்ற பல புலவர்கள், அவர்கள் பிறந்த ஊர்களைக் குறிக்கும் அடைகளால் வேறு பிரித்தறியப்பெற்றமையை முன்னர்க் கண்டோம். இப் பொழுது ஆராய எடுத்துக்கொண்ட இரண்டாம் வகைப் பெயர் வரிசையில், இலக்கியச் சொற்களையும் தொடர்

மொழிகளையும் புலவர்களின் இயற் பெயருக்கு அடை களாக அமைக்கும் முறையே காணப்படுகிறது. இவ் வழக்கம், முன்னமேயே குறிப்பிட்டவாறு, காளிதாசனைத் 'தீபசிகா காளிதாச:' என்று அழைக்கும் வழக்கத்தை ஒத்திருக்கின்றது. நாம் முதலில் ஆராய்ந்த பெயர்கள் வெறும் இலக்கியத் தொடர்மொழிகளால் மட்டும் அமைந்தவை. ஒரு பாடலைப் படிக்கும்போது, அப் பாடலுக்கு உயிராக உள்ள சொல், அல்லது சொற்றொடரைக் கண்டு, அதன் இன்றியமையாமையையும் அழகையும் அறிந்து மகிழ்ந்த சங்ககால மக்களின் சுவையழகை அவ்வகைப் பெயர்கள் காட்டுகின்றன. அதே சுவைத்தன்மைதான், புலவர்களின் இலக்கியத் தொடர்மொழிகளை அவர்களின் இயற் பெயருக்கு அடைமொழியாக்கி, அதே பெயருடைய வேறு புலவரினின்றும் வேறு பிரித்தறியும் முறையையும் காணச் செய்தது. எனவே, இம் முறையில் அமைந்த பெயர்களிலும் இலக்கிய மணம் கமழ்கிறது என்பதில் ஐயமில்லை.

### அந்தி இளங்கீரனார் :

சங்க காலத்தில் கீரன் என்ற பெயர் பெருவழக்குடையதாக இருந்தது. அச் சொல்லின் பொருள் தெளிவாக விளங்கவில்லை. சிலர் 'சொல்லுக்குக் கீரன்' என வழங்கிவரும் மரபைக்கொண்டு, 'கீர்' என்பது 'சொல்' எனப் பொருள்படும் என்பர். 'சங்கறுப்பது எங்கள் குலம்' என்று தொடங்கும் வெண்பா, நக்கீரனார் பாடியதாகப் பண்டைக் காலந்தொட்டுத் தமிழ் நாட்டில் வழங்கி வருகிறது. வேள்வி இயற்றுதலைக் கைவிட்ட அந்தணர் சங்கறுக்கும் தொழிலை மேற்கொண்டனர் எனச் சங்க நூல்களால் அறிகிறோம்.* கீரனார், இந்த அந்தணர் குலத்தைச் சேர்ந்தவரென்று கருதப்பெறுகிறார். சிவபெருமான் பாடியதாக வழங்கும் ஒரு வெண்பாவில் 'சங்கதனைக்

*அகம், 24 : 1 - 2.

கீர் கீர் என அறுக்கும் கீரனே என்கவியைப் பாரிற் பழுதென் பவன்?' என்னும் அடிகள் வருகின்றன. சங்கு அறுக்கும்போது உண்டாகும் 'கீர் கீர்' என்ற ஒலியிலிருந்து 'கீரன்' என்ற பெயரை இவ் வெண்பாவின் ஆசிரியர் தோற்றுவிக்க முயலுகிறார் என்பது தெளிவு. பாமர மக்கள் சில சொற்களைப் புதியவாக ஆக்கிக் கொள்ளுவதற்குக் கையாளும் முறையில்தான் இவ் வாசிரியரும் 'கீரன்' என்ற சொல்லை ஆக்குகிறார். பின், கீரன் என்ற சொல்லின் உண்மையான பொருள்தான் யாது?

பின்னண்ண மெய்யான ககரம், முன்னண்ண மெய்யான சகரமாக மாற்றி ஒலிக்கப்படுவதுண்டு. இவ்வாறு ஒலிக்கும்போது, 'கீரன்' என்ற சொல் 'சீரன்' என்ற வடிவம் பெறுகிறது. 'மிகு புகழ் படைத்தவன்' என்பது இச் சொல்லுக்குப் பொருள். கீரன் என்ற பெயர் உடையவர்களில் மிகச் சிறந்தவன் நக்கீரன். 'ந' என்ற அடை, சிறப்புக் குறிப்பதே. கீரர்களிற் சிலர், அவர்கள் பிறந்த ஊர்களின் பெயரைக் குறிக்கும் அடைகளால் தனித்தனியாக வேறு பிரித்து அறியப்பெற்றார்கள். இவ் வகையில் அமைந்த **கழார்க்கீரன் எயிற்றியார்** என்னும் பெயரை முன்னரே நாம் கண்டோம். உண்மையில் அந்தப் பெயர் தான் இவ் விரண்டாம் வகைப் பெயர்களை ஆராயுமாறு தூண்டுகிறது. மற்றுஞ் சில கீரர்கள், தம் தந்தையார்களின் பெயர்கள் தம் பெயருக்கு முன் அடையாக அமைந்ததனால் வேறு பிரித்தறியப்பெற்றார்கள். (கீரன் கீரனார்*, குட்டுவன் கீரனார்†) ஒரே பெயருடைய புலவர்கள் பொதுவாக இளமை, அல்லது முதுமை குறிக்கும் அடைகளால் வேறு பிரித்தறியப்பெறுவர். எடுத்துக்காட்டாக 'இளங்கீரன்'‡ என்ற பெயரைக் கொள்ளலாம். இளங்கீரன் என்ற பெயருடைய புலவர் இருவர் இருந்தனராக

---

*நற், 78. †புறம், 240. ‡ அகம், 3, 225 முதலியன.

அறியப்படுகின்றமையால் இந்த அடையும் பயன்பட வில்லை. எனவே, இப் புலவர்களை வேறு பிரித்தறிய வேண்டுமாயின், அவர்கள் பயன்படுத்திய கலையழகு பொருந்திய சொற்களை, அவர்கள் பெயருக்கு அடையாக அமைத்தல் வேண்டும். 'இம் என் கீரனர்' என்ற பெயரை ஆராயும்போது கீரனர் என்னும் பெயர் படைத்த எல்லாப் புலவர்களின் சிறப்புப் பெயர்களும் ஆராயப் படும்.

**அந்தி இளங்கீரனர்** என்பவர் அகநானூறு 71-ஆம் பாடலைப் பாடியவர். அப் பாடலில் **அந்திவருணனை** அழகுற அமைந்துள்ளது. **அந்தி** என்ற சொல்லும் வருகிறது. இவ் வருணனையின் அழகாலும் **அந்தி** யென்ற சொல்லாலுமே இப் புலவர் புகழ் பெற்றுள்ளார். எனவே, **அந்தி** யென்ற சொல்லை இவரது பெயருக்கு அடையாகச் சான்ருேர் அமைத்து வழங்கலாயினர்.

நெடுந்தொலைவில் உள்ள நாட்டிற்குத் தலைவன் பிரிந்து சென்ற பிறகு, அவனது பிரிவால் வருத்தமுற்றுத் தனிமைத் துன்பத்தை மிகுதியாக உணர்ந்த தலைவி யொருத்தி, தன் தோழியிடம் பேசும் பேச்சாக மேலே குறிப்பிட்ட அகநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது. தன் உயிர் சிறிது சிறிதாகத் தேய்ந்துகொண்டிருப்பதுபோல் தலைவிக்குத் தோன்றுகிறது. "செல்வம் உடையவரையே எப்பொழுதும் நாடும் உள்ளமுடைய கயவர், தம்மைப் புரந்தோர் வறியவராக ஆனபோது சிறிதும் அன்பின்றி அவரைத் துறந்து செல்வதுபோல், வண்டுகள், சுனையில் பூத்த பூக்களை நீத்து, மரங்களில் கொத்துக் கொத்தாய் (இப்போது மலர்ந்திருக்கும்) பூக்களைச் சுற்றிச் சுழல்கின்றன. நொடிக்கு நொடி நிறம் மாறும் அந்தி வானத்தைக் கண்டு, கள்ளங் களங்கமற்ற மானினங்கள் மருளுகின்றன. உலையில் காய்ந்து மெதுவாக ஆறிவரும் பொன்போல் அந்திவானம் விளங்குகிறது. தலைவன் நம்மைத் தனியாக விட்டுப் பிரிந்து

சென்றதையே எண்ணிக்கொண்டிருக்கும் நமக்கு ஐம் புலன் உணர்வும் இல்லாது போயிற்று. கருநீல நிறமான அகன்ற வானத்தில் அழகிய மேகங்கள் அணியணியாக மிதந்து செல்லுகின்றன. துன்பந்தரும் மாலைக்காலம், பகல் நேரத்திற்கு விடைகொடுத்து வழிகாட்டி அனுப்புகிறது. இணையற்ற துன்பத்தால் வருந்துகின்ற ஒருவரது மார்பில் கூர்மையான வேலை எறிபவரைப்போல், காதலித்தவரின் பிரிவால் உண்டான தனிமை நோயால் வருந்தி நொந்து போயிருக்கும் மக்களை இம் மாலைக்காலம் மேலும் மேலும் நோகச் செய்கிறது. உருவம் காட்டும் கண்ணாடியின் மேல் ஊதப்பட்ட ஆவி, முதலில் பரந்து, பிறகு பையப் பையச் சுருங்குவதுபோல, என் உயிர் சிறிது சிறிதாகக் குறைந்து இப்போது வலிமை இழவாநிற்கின்றது. புயற்காற்றால் அலைக்கப்படும் மரத்தைத் துறந்து, பறந்து செல்லும் பறவை போல, வலியற்ற இவ்வுடலைத் துறந்து என் உயிர் நீங்கும் காலம் இதுதான் போலிருக்கிறது :" இதுவே அந்த அக நானூற்றுப் பாடலின் கருத்து.

நடுப்பகலில் காயும் கதிரவனது வெப்பம் தனிமைத் துன்பத்தை மிகுதியாக்கும் என்பது மரபு. இம் மரபுக்கு மாறாக, அந்தி நேரம் தனிமைத் துன்பத்தைப் பெருக்கு கிறது என்று இப் புலவர் பாடுகிறார். இளங்கீரனார் பாடி யுள்ள பாடல்களிலும் இப் புதுமை காணப்படுகின்றது. அவர் அகநானூற்றில் 3, 225, 239, 289, 299, 361, 371, 395, 399 எண்ணுள்ள பாடல்களையும், குறுந்தொகையில் 116-ஆம் பாடலையும், நற்றிணையில் 3, 62, 113, 269, 308, 346 எண்ணுள்ள பாடல்களையும் பாடியுள்ளார். சிறப்பாக, நற்றிணை 3, 62-ஆம் பாடல்களில் இக் கருத்துத் தெளிவாக இருக்கின்றது. இக் கருத்தொற்றுமையால் இவ் விளங் கீரனார்தாம் அந்தி இளங்கீரனார் என்று கருத இடமுள் ளது. ஆனால், இப் பாடல்களில் காணப்படும் பல்லிகள் பற்றிய குறிப்பீடு முதலிய கருத்துக்கள் மற்றோர் இளங்

கீரனுரான பொருந்தில் இளங்கீரனுரை நமக்கு நினைவு படுத்துகின்றன. சிதல்கள் அரித்தமையாலோ அல்லது வேறு காரணத்தாலோ சில கையெழுத்துப் படிகளில் புலவர்களின் பெயர்களுக்கு அமைந்த அடைகள் மறைந்து போயின. ஆதலின் அந்தி இளங்கீரனும் பொருந்தில் இளங்கீரனும் பாடிய பாடல்களுள் சில, இளங்கீரனர் பாடியனவாகக் கருதி அச்சிடப்பெற்றன போலும்! இரண்டு இளங்கீரனர்கள், அடைமொழிகளால் வேறு பிரித்தறியப்படுதலால் எவ்வித அடையுமின்றி இளங்கீரனர் என்றே அழைக்கப்பட்ட ஒரு புலவர் இருந்தார் எனக் கொள்ளுவதில் தவறில்லை என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

அந்தி இளங்கீரனரின் அகநானூற்றுப் பாடலை மீண்டும் பார்ப்போம். சுவை மிகுந்த தேன், வண்டுகளின் இனிமையான இசை, மென்மையும் மணமும் உள்ள மலர்கள், மிகுந்த ஒளி வீசுவதினின்றும் சிறிது சிறிதாக மாறிச் சிவந்த ஒளிவீசும் கதிரவன், கருநீல நிறமுள்ள அகன்ற வானம், வானத்தில் மிதக்கும் கருமுகிற் கூட்டங்கள், அழகாக மலர்ந்திருக்கும் பூக்கள், மருண்டு பார்க்கும் மான்கள் - இவையெல்லாம் ஐம்புலன்களுக்கும் நல்ல விருந்தாக அமைகின்றன. எனினும், தனிமையில் வாடும் தலைவிக்கு இவற்றல் யாதோர் இன்பமும் உண்டாகவில்லை. எனவே, மாலைக்காலம், பிரிந்து தனியே இருக்கும் காதலரை வருத்தவல்லது என்ற புதுக் கருத்தையே இங்குப் புனைந்துரைக்கப்பட்ட ஒவ்வொரு பொருளும் வலியுறுத்துகின்றது. பாடலில் பொதுவாகப் பரவியுள்ள கருத்திற்கு வேருக உலையிற் காய்ந்து மெதுவாக ஆறிவரும் பொன் போலக் கதிரவன் மெதுவாக ஒளி குறைந்து நிறம் மாறி மறைகின்றான் என்ற புனைந்துரையே கவிதைப் பண்பு நிறைந்ததாக இருக்கின்றது. இதனல்தான், இக் கவிதையின் உயிர்நிலையான '**அந்தி**' என்னும் சொல் புலவரின்

பெயருக்கு அடையாக அமைய, அந்தி இளங்கீரனர் என்னும் பெயர் அவருக்கு வழங்கலாயிற்று.

**இம்மென் கீரனர் :**

இவர் அகநானூறு 398-ஆம் பாடலின் ஆசிரியர். கீரனர் என்ற பெயருடைய பல புலவர்கள் அக் காலத்தில் வாழ்ந்திருந்தனர். அவர்களுள் சிலரைப் பற்றி 'அந்தி இளங்கீரனர்' என்ற சிறு தலைப்பின்கீழ்க் கூறினேம். சில கீரர்கள், தம் தந்தையர்களின் பெயர்கள் தம் பெயருக்கு அடையாக அமையப்பெற்றவர்கள். அந்தஅடையாலேயே அவர்கள் வேறு பிரித்தறியப் பெற்றூர்கள். அல்லங்கீரனர்,* புல்லங்கீரனர்,† கீரங்கீரனர்,‡ சேந்தன்கீரனர்,§ மோசி கீரனர்,$ மாதங்கீரனர்,¶ மூலங்கீரனர்,ꝑ குட்டுவன்கீரனர்** என்ற பெயர்கள் இம் முறையில் அமைந்தவையே. மற்றும் சிலர், தம் குடும்பப் பெயர்களைத் தம் பெயருக்கு அடைகளாகப் பெற்றுள்ளனர். காசிபன்கீரன்†† என்பதை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். கழார்க்கீரனர்,‡‡ குடவாயிற் கீரனர்§§ என்ற புலவர்கள் தாம் பிறந்த ஊர்களின் பெயரை அடைகளாகப் பெற்று வேறு பிரித்தறியப்பெறுகின்றனர். சில கீரனர்கள், அவர்தம் பாடல்கள் தொகுக்கப்பெற்ற தொகைநூல்களின் பெயரால் வேறு பிரித்தறியப்பெறுகிறூர்கள். இளையன் நெடுங்கீரனர் பாடிய பாடல் நெடுந்தொகையெனப்படும் அகநானூற்றில்$$ காணப்படுகிறது. குறுங்கீரனர் என்ற புலவர் பாடிய பாடல் குறுந்தொகையில்¶¶ உள்ளது. இவர்களுள் முன்னவர் நெடிய உருவமுடையவராகவும் பின்னவர் குறுகிய உருவமுடையவ

*நற், 245. †அகம், 146. ‡நற், 78, §குறுந், 311.
$அகம், 392 முதலியன. ¶குறுந், 182; நற், 377.
ꝑநற், 73. **புறம், 240. ††நற், 248.
‡‡குறுந், 330. அகம், 163 முதலியன.
§§அகம், 44 முதலியன. $$பாடல், 166. ¶¶பாடல், 382.

ராகவும் இருந்திருக்கலாம். **குறுஞ்சாத்தன்** என்ற புலவர் பாடிய பாடல் குறுந்தொகையில்* சேர்க்கப்பெற் றுள்ளது. எனினும், **குறுவழுதி** என்பாரின் பாடல்கள் நெடுந்தொகை† குறுந்தொகை‡ இரண்டிலும் உள்ளன. மற்றுஞ் சில கீரனார்கள், அவர்தம் பாடல்களில் அமைந்த 'உயிர்நிலை'ச் சொற்களால் வேறு பிரித்தறியப்பெறு கிறார்கள். எடுத்துக்காட்டாக, **இம்மென் கீரனார், தும்பிசேர் கீரனார்** என்னும் பெயர்களைக் கொள்ளலாம்.

'**இம்மென் கீரனார்**' பாடிய அகநானூறு, 398-ஆம் பாடலில் (7-ஆம் வரி) '**இம் என்**' என்ற சொற்றொடர் வருகிறது. இளங்கீரனார் பாடியதாக உள்ள நற்றிணைப் பாடல் ஒன்றிலும்§ இத் தொடர் வருகிறது. ஆனால், 'மிகுந்த ஒலியுள்ள' என்னும் பொருளில் அது வருகிறது. அந்தப் பாடலும் உண்மையில் இம்மென் கீரனார் பாடிய தாக இருக்கலாமோ என்ற ஐயம் எழுகிறது. நற்றிணை 161-ஆம் பாடலில் (4-ஆம் வரி) '**இம் என்**' என்ற தொடர் வருகிறது. (**இம் என் பறவை – இம் என்று ஒலிசெய்யும் வண்டு**). இந்த இடங்களில் எல்லாம் கவிதை அழகு ஒன்றும் காணப்படவில்லை. அம்மூவனார் பாடிய நற்றிணைப் பாட லிலும்$ '**இம்மென் பேரலர்**' என்னும் தொடர் காணப் படுகிறது.

இம் என்ற சொல் விரைவையும், தடையின்றி எழும் உணர்வையும் புலப்படுத்துவதோர் ஒலிக் குறிப்பிடைச் சொல். இதற்கு உள்ளத்தில் உண்டாகும் மிகுந்த துன்ப உணர்வை வெளிப்படுத்துவதென்று பொருள்கொள்ளுதல் பொருந்தும். இம்மென்கீரனார் பாடிய அகநானூற்றுப் பாடல், வேட்கை மிகுந்தமையால் துன்பம் எய்திய தலைவி, தலைவனது மலையினின்றும் தன்னூருக்குள் புகும் ஆற்றைப் பார்த்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

---

*பாடல், 308. †அகம், 150, 228. ‡குறுந், 345.
§113 : 10. $76 : 6.

"என் உடம்பினின்றும் நகைகள் நெகிழ்ந்துவிட்டன. நாளுக்கு நாள் துன்பம் மிகுந்துகொண்டே செல்லுகிறது. எந்நேரமும் என் துன்பத்தையே எண்ணிக்கொண்டிருப்ப தால் உடம்பின் வலியும் மிகுதியாக இருக்கிறது. வாழ்க் கையில் பல பொருள்களின்மீது எனக்கு வெறுப்பு உண் டாகிறது. தளர்ச்சி, என்னை ஆட்கொண்டுவிட்டது. என்னுடைய மெல்லிய தோள்கள் மெலிந்து எலும்புருவ மாக ஆகிவிட்டன. தலைவனைப் பிரிந்த வருத்தத்தால் உடல் நிலை கெட்டு, இரத்தம் வெளிறி, நன்கு மலர்ந்து பிறகு ஊழ்த்த கொன்றைப் பூப்போல உடலெல்லாம் பசலை பாய்ந்துவிட்டது. உடலைப்பார்த்து என் நெற்றியும் வெளிறி விட்டது. இந்த அவலமான நிலையில் நாம் வாழுகிறோம். ஆனால் அவனோ இந் நிலையில்கூட நமக்கு இரங்கி அருள் செய்யவில்லை. உன் தலைவனாகிய அவன் செய்யும் இந்தக் கொடுமையால் (சுற்றுப்புறத்தில் உள்ள எல்லாப் பொருள் களும் மங்கலாகவும், கனவுக்காட்சிகள்போலவும் நிகழ்கால உலகினின்றும் இறந்தகால உலகிற்கு மாறிவிட்ட பழம் பொருள்கள்போலவும், அழகிழந்தவை போலவும் தோன்றி என் கருத்தைக் கவராமையால் சிறப்பாக எந்தப் பொருளை யுமே பார்த்தறியாத) என் கண்கள்—'இம்' என்று விரைந்து சுழலும் குளிர்ந்த கண்கள்—பனித்துளிபோல் தெளிந்த கண்ணீரை இம்மென விரைந்து சிந்துகின்றன. அவன் அறத்தைக் கைவிட்டு என்னைப் பிரிந்து சென்றுவிட்டான். நீ பிறந்த இடமாகிய மலைக்குத் தலைவனான அவனது இந்த அறங்கெட்ட செய்கையை என்னவென்று சொல்லுவது? அவனது பெருமைக்கு இஃது அடுக்குமோ? கரைகளில் மோதிக்கொண்டு ஓடிவரும் நீர் வெள்ளமே! நீயே கூறு. நான் உன்னோடு புலந்து கொடிய சொற்களைச் சொல்லுவே னென்று நீ அஞ்சுகிறாய். அதனால், என்னால் அறிந்துகொள் ளப்படாமல் இருப்பதற்காக, அவனது மலையில் உள்ள பல வகை மலர்களாலும் உன்னைப் போர்த்துக்கொண்டு,

நாணத்தால் மிக ஒடுங்கி மறைவாக ஓடிச் செல்லுகின்றாய். அவன்தான் உன்னைச் செலுத்தினான். எனது ஊரின் வழியாக ஓடுமாறு உன்னைச் செலுத்தியவனும் அவனே. ஆனால், என்னிடம் அவனுக்கிருந்த அன்பெல்லாம் மறைந்தொழிய, என்னைவிட்டு நீதியின்றிப் பிரிந்து செல்லும் அளவுக்கு அவன் வன்கண்ணனாகிவிட்டான்; தன் நினைவாக ஒன்றையும் என்னிடம் தாராமல் பிரிய வல்லவனாகி விட்டான்; முன் நெருங்கிய உறவினனாக இருந்த அவன், இப்பொழுது அயலானாகிவிட்டான். இனி என்ன செய்வது? சென்றதை மறந்துவிடுவோம்; சென்ற காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளுக்காகச் சிறப்பான சலுகை ஒன்றையும் நான் எதிர்பார்க்கவில்லை. எங்கள் ஊரில் தீயைப் போல் பூத்துள்ள வேங்கை மர நிழலில் சிறிது நேரம் தங்கி ஓய்வு எடுத்துக்கொள். பருவந்தோறும் பெய்யும் மழையால் செழிப்புற்றுப் பலவகை அழகிய மலர்கள் நிறைந்து ஆரியரது பொன் பொருந்திய நீண்ட இமயமலையைப் போல் விளங்கும் எங்கள் தந்தையின் காட்டில் அமைதியாகத் தங்கியிரு. தலைவன் எமக்கு இனிமை நல்குவது போல நீயும் இனிமை தருகின்றாய். எங்களோடு இன்று ஒரு நாள் நீ தங்கினால், உனக்கு என்ன குறைந்துவிடும்? உனக்குத் தீமை ஏதாவது ஏற்படுமா? உன்செயல் ஏதேனும் கெட்டுவிடுமா? தலைவனது உயர்ந்த முடியையுடைய மலையிலிருந்து நீ வருகின்றாய். உனக்கும் தீங்கு நேருமோ? நீ பிறந்த அந்த மலையில், வளைந்த கோடுகளைத் தன் உடம்பிற் கொண்ட புலி ஆண் யானையொன்றைத் தாக்கியது; புண்பட்ட யானை வலிமை இழந்துவிட்டது; அதனால் வருந்திய பெண் யானை, தன் துணை யானையைத் தழுவியவாறு பெருமூச்சு விட்டது. புண்ணால் உண்டான வலியைப் பொறுக்கமாட்டாமல் ஆண் யானை கதறியது; மூங்கில்கள் காற்றில் ஒன்றோடொன்று உராய்தலால் உண்டாகும் ஒலி போல அக் கதறல் ஒலி, மலையெங்கும் எதிரொலித்தது.

தலைவனைப் போலவே அவனது மலையும் கொடியதாகவே இருக்கிறது. தலைவன் இங்கு என்முன் இருக்கும்போது, 'அவன் ஒருவேளை பிரிவான்' என்று நினைத்தாலே என் மனம் வருந்தும். அப்பொழுது என்னை அறியாமல் என் கண்களில் நீர் பெருகுவதை அவன் நேரில் பார்த்திருந்தும் இப்பொழுது பிரிந்து சென்றுவிட்டான். கண்ணீர் நிறைந்த என் கண்களுக்குப் போலியாகப் பேரிரைச்சலோடு இடைவிடாது கலங்கி ஓடுமாறு உன்னைச் செலுத்திவிட்டுப் பிரிந்து போயினன்."

மலையிலிருந்து மெதுவாக விழும் அருவியின் காட்சியும், நீர் வெள்ளம் ஆங்காங்கே பூக்களால் மூடப்பட்டிருப்பதும், மலையிலுள்ள பாறைகள் மறைப்பதால் அவ்வப்போது கண்ணுக்குத் தெரியாமல் அருவி மறைவதும், திடீரென்று கண்ணுக்குத் தோன்றுவதும், தலைவியின் ஊருக்கருகே அலைபாய்ந்து ஓடுவதும் இப் பாடலில் தெளிவாகக் காட்டப்பட்டிருக்கின்றன. தன்பால் மிகுந்த அன்பு கொண்டிருந்த தலைவியைவிட்டுத் தலைவன் நீதியில்லாமல் பிரிந்தமையால் தலைவிக்கு எழுந்த துயர உணர்ச்சி இப் புனைந்துரைக்கு உயிர் ஊட்டுகிறது. 'இம்' என்னும் ஓசையோடு ஆறு ஓடுகிறது. தலைவியின் கண்களிலிருந்தும் 'இம்' என்று விரைவாகக் கண்ணீர் பெருகுகிறது. 'இம்' என்ற சொல் கண்ணீர் பெருகும் விரைவையோ, அல்லது தலைவியின் தாங்கமுடியாத மன வருத்தத்தையோ குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இவற்றில் பின்னதே கவிதையின் போக்குக்குப் பொருத்தமாக இருக்கிறது. 'இம் என்' என்ற இச் சொற்றொடர் இக் கவிதையில் பெற்றிருக்கும் முதன்மை இப்பொழுது தெளிவாகிறது.

### தும்பிசேர் கீரனர்

சங்க இலக்கியங்களுள் காணப்பெறும் கீரனர்களுள் இவரும் ஒருவர். இவரது பாடல் ஒன்றில் வரும் சிறப்பான

சொற்றொடர் ஒன்று இவரது பெயருக்கு அடையாக அமைந்து மற்றக் கீரனார்களினின்றும் இவரை வேறு பிரித்துக் காட்டுகிறது. நற்றிணையைப் பதிப்பித்த ஆசிரியர் 'தும்பிசோ கீரனார்' என்று இருந்ததை, அது விளங்காமையினால் 'தும்பிசேர் கீரனார்' என மாற்றிப் பதிப்பித்துள்ளதாகக் கூறுகின்றார். நற்றிணையைப் பாடிய புலவர் வரலாற்றைக் கூறும்போது, கையெழுத்துப் படிகளில் காணப்பெற்ற பெயர் 'தும்பிசோ கீரனார்' என்பதே என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.* 'சோ' என்பது சங்க காலத்தில் வழங்கிய பல இயற்பெயர்களுக்கு அடைமொழியாக இருந்ததையும் அவர் சுட்டிக்காட்டுகிறார். இதற்கு எடுத்துக்காட்டாக அவர் எழுதிய பாடினோர் வரலாற்றுட் காணும் வினைத்தொழில் சோகீரனார்,† மதுரைப் பள்ளி மருதன்கிழார் மகனார் சோகுத்தனார்,‡ கிள்ளிமங்கலங்கிழார் மகனார் சேரகோவனார்§ என்பவற்றைக் கொள்ளலாம். இந்தச் 'சோ' என்னும் அடைமொழியின் பொருள் யாது எனத் தமக்கு விளங்கவில்லை என்றும் அப் பதிப்பாசிரியர் புகன்றுள்ளார்.$ இது 'கோ' என்ற சொல்லின் திரிபாக இருக்கலாம். விச்சிக்கோ, கண்டீரக்கோ, இருங்கோ, போர் வைக்கோ, முடித்தலைக்கோ, குடக்கோ, கடுங்கோ என்ற பெயர்களின் இறுதியில் 'கோ' என்பது பின் அடைமொழியாக வருகிறது. ஆனால், கோக்கோதை மார்பன், கோப் பெருஞ் சோழன் முதலிய பெயர்களில், இவ் வடைமொழி இயற்பெயருக்கு முன் அமைந்திருக்கிறது. கோக்குள முற்றனார் என்பது ஒரு சங்கப் புலவரின் பெயர். இப் பெயரை விளக்கும்போது, நற்றிணைப் பதிப்பாசிரியர், பல உழவர்களின் துணை கொண்டு பரந்த நன்செய் நிலத்தை உழுவித்து உண்டுவந்த வேளாண் மரபினர் உரிமையாற்

---

*பக்கம், 42. †பக்கம், 79. ‡பக்கம், 68.
§பக்கம், 30. $பக்கம், 30.

பெற்றபட்டம்தான் 'கோ' என்றும், அம் மரபில் வந்தவரே கோக்குள முற்றனர் என்றும் கூறுகின்றனர்.* இலக்கிய உலகில் புகழ்பெற்று விளங்கும் இளங்கோவடிகளைத் தமிழ் இலக்கியம் பயிலுவோர் எல்லோரும் நன்கு அறிவர். கோ, இளங்கோ என்ற பட்டப் பெயர்கள் அரச மரபில்வந்த இளவரசர்களுக்கும், அரசமரபின் கிளைவழியில் வந்த இள வரசர்களுக்கும் வழங்கப்பட்டன. இவ் விளவரசர்கள் நாட்டின் சிறு பகுதிகளை ஆண்டுவந்தனர். இவர்கள் அரசு கட்டிலில் ஏறிப் பேரரசரான பிறகும் பழைய பட்டப்பெயர் களைத் துறக்கவில்லை. கோப்பெருஞ் சோழன், போர்வைக் கோப் பெருநற்கிள்ளி என்னும் பெயர்களைக் காண்க. எனவே, கோ என்ற பின் அண்ண மெய்யொலியுள்ள பெயர், முன் அண்ண மெய்யொலிபெற்றுச் 'சோ' எனத் திரிந்தது எனக் கொள்ளலாம். அல்லது பழைய நூல்கள் எழுதப்பட்ட ஏடுகளைப் படியெடுத்தோர் 'கோ' என்பதைச் 'சோ' எனத் தவருக எழுதினர் என்றும் கொள்ளலாம்.

அரசர்களும், குறுநில மன்னர்களும் புலவர்களாக இருப்பினும், அவர்களுடைய பெயர்களின்பின் 'ஆர்' என்னும் விகுதி சேர்க்கப்பெருமல் விலக்கப்பெற்றது என்று இக் கட்டுரையில் முன்பே காட்டப்பட்டுள்ளது. டாக்டர் சாமிநாதையர் அவர்கள் பதிப்பித்துள்ள குறுந் தொகையில் 392-ஆம் பாடலைத் தவிர, 61, 315, 316, 320 எண்ணுள்ள பிற பாடல்களின் கீழ்த் 'தும்பிசேர் கீரன்' என்ற பெயரே காணப்படுகிறது. இதனுல் 'தும்பிசேர்கீரன்' என்ற இப் புலவர் அரசகுலத்தினர் என நாம் ஊகிக்கலாம். இவ்வாறு ஊகிப்பின் 'கோ' என்னும் அடைமொழி பெற்றவர்கள் எல்லோரும் அரச மரபினரே என்று முடிவு செய்வதும் எளிது. சங்க இலக்கியப் பதிப்புக்களில் சில இடங்களில் தவறுதலாக அவர்கள் பெயர் 'ஆர்' விகுதி யோடு அச்சிடப்பெற்றுள்ளது எனக் கொள்ளலாம்.

---

*பக்கம், 35.

இங்ஙனம் அச்சிட்டவர்கள், அரசர் பெயருக்கு 'ஆர்' விகுதி சேர்ப்பதில்லை என்னும் சங்க இலக்கிய மரபை அறியாதவர்கள்.

இதுவரை ஆராய்ந்தவற்றால், தும்பி கோக் கீரனார் என்றும், வினைத்தொழிற் கோக் கீரனார் என்றும் பாடம் கொள்வதே பொருத்தமென அறிகிறோம். இரண்டு கோக் கீரனார்கள் சங்க இலக்கியத்துட் காணப்பெறுகிறார்கள். ஒருவர் தும்பி கோக் கீரனார் ; மற்றொருவர் வினைத்தொழிற் கோக் கீரனார். முன்னவர், தேன்பருகி இசை பாடும் வண்டைப்பற்றி அழகுறப் பாடியமையாற் புகழ்பெற்றவர். பின்னவர், தன் அரசனுக்கு உதவியாகப் போர்க்களம் சென்று வீரப்போர்புரிந்த வீரனுடையவன்மையைப் புனைந் துரைத்தமையால் புகழ் பெற்றிருக்கலாம். அவ்வாறு அவர் புனைந்துபாடியபாடல் இன்று நமக்குக் கிடைக்கவில்லை.

'தும்பியைப் பாடும் புலவர்' என்று அழைக்கப் பெறும் சிறப்பைத் தும்பி கோக் கீரனாருக்கு அளித்த பாடல்கள் இன்று கிடைக்கின்றன. சங்கப் புலவர்கள் பலர், தேன் அருந்தும் வண்டைப் புனைந்து பாடியுள்ளார் கள். ஆசிரியர் பெயர்காணாத நற்றிணைப் பாடல் ஒன்றில் "இம் என் பறவை' என்ற குறிப்பு வருகிறது என முன்பே அறிந்தோம்.* வண்டை விளித்துப் பாடிய பாடல்களும் உள்ளன. அவற்றுள் ஒன்று, குறுந்தொகையில் இரண் டாவதாக உள்ளதும், இறையனார் பாடியதுமான "கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி' என்று தொடங்கும் பாடல். (இதைச் சிவபெருமான் பாடினதாக வும், நக்கீரனார் இதில் பொருட்குற்றம் இருப்பதாகக் கூறி ஏற்றுக்கொள்ள மறுத்ததாகவும் கூறுவர்).

காதலருடைய பிரிவால் வருந்தித் தனிமை பொறுக்க மாட்டாமல் ஆதரவு அற்ற நிலையில் வாழும் தலைவியர்கள், காதல் நோயால் பித்துப் பிடித்தவர்கள்போலாகிறார்கள் ;

---

*நற், 161.

அஃறிணைப் பொருள்களுக்கும் தமக்கும் உள்ள வேறு பாட்டை அறியாமல், அவையும் தம்மைப்போல் பேசும், உணரும் என்று எண்ணுகிறார்கள்; தாம் ஆறறிவுடைய மக்கள் என்பதை மறந்து இயற்கையோடு ஒன்றிவிடுகிறார் கள். எல்லாப் பொருள்களும் தம்முடைய துன்பத்தைக் கண்டு இரங்கி வருந்துவனவாகவும் எண்ணுகிறார்கள்; மரத்தோடும், வண்டுகளோடும், பறவைகளோடும் பேசித் தம் தலைவரிடம் தூது செல்லுமாறு அவற்றை வேண்டு கிறார்கள். இரக்கம் மிகுந்த இவ்வுலகில், உயிர் போகும் நிலையில் இருக்கும் தங்களைப் பற்றிய செய்தியைத் தலைவர் அறிந்தால் உடனே தங்களிடம் திரும்பி வருவர் என்று அவர்கள் உறுதியாக நம்புவதே இதற்குக் காரணம். இது போன்று தலைவியர் அஃறிணைப் பொருள்களைத் தலைவனிடம் தூது அனுப்புகின்றனர் என்று பாடுவது இலக்கிய உலகில் ஒரு மரபாகவும் வழக்காகவும் ஆகிவிட்டது. காளிதாச னுடைய **மேகசந்தேசமும்** இந்தியாவில் வழங்கும் பிற மொழிகளில் இம் முறையில் உள்ள பல நூல்களும் இம் மரபை ஒட்டியே எழுந்தன. **தும்பி கோக்கீரனார்** பாடிய இரண்டு பாடல்களில் இப் பொருள் அமைந்திருப்பதைக் காணலாம். அவற்றுள் முதலாவது குறுந்தொகை 392-ஆம் பாடல்.

"நீலமணிபோல் ஒளிவீசும் சிறகுகளை உடைய தும்பி! நீ நெடுநாள் வாழ்க! நல்ல மொழிகளைச் சொல்ல யாரும் அஞ்சவேண்டுவதில்லை. அரசர்களுடைய அழகிய கிடுகு படைகள் வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருத்தல் போலத் தேன் கூடுகள் வரிசையாகத் தொங்கும் அந்த மலைக்கு நீ சென்றால், அதன் தலைவனான என் காதலனிடம், 'தினைப்புனத்தில் களை நீக்குபவர்களுடைய தங்கை, தன் அன்புக்குரிய உறவினனான காதலனைப் பிரிந்து உயிர் வாழ மாட்டாள்' என்று கூறுவாயாக!"—இஃது அப் பாடலின் கருத்து.

இரண்டாம் பாடல், நற்றிணையில் 277-ஆம் பாடலாக அமைந்திருக்கிறது. "தும்பி! நீ கொடியை! வாழ்க! என் நோயை—தலைவனைப் பிரிந்து நான் படும் துன்பத்தை—உனக்குச் சொல்லிவிட்டேன். இனி இத் துன்பத்திலேயே அழுந்தி மாண்டுபோகிறேன். உன் உடல் மட்டும்தான் கறுப்பாயிருக்கிறது என்று எண்ணினேன். அறநெறி அறியாத உனது உள்ளமும் அறிவும்கூடக் கறுப்பாயிருக் கின்றனவே. இதோ, இங்குப் பரந்து வளர்ந்து கிடக்கின்ற முட்செடிகள் அழகாகத் தோன்றுதலோடு, வேலியாகவும் அமைந்து இந்த வீட்டைக் காக்கின்றன. வேலிக்கு அருகே, உட்புறத்தில், பீர்க்க மலர்கள், நிறையத் தேனும் மகரந்தப் பொடியும் உடையனவாய் மலர்ந்திருக்கின்றன. அம் மலர்களைச் சுற்றிச்சுற்றி வந்து, அவற்றில் உள்ள தேனைப் பருகுகிறாய். (என் வீட்டில் உள்ள மலர்களில் தேன் பருகி வயிறு வளர்த்த நீ, சிறிதும் நன்றியுணர்வு இல்லாமல்) என்னிடத்தில் வர மறுக்கிறாய். தலைவனைப் பிரிந்த வருத்தத்தால், குருதி வெளிறி, உடல் வெளுத்துப் பீர்க்க மலர்களைப் போலவே தோன்றுகின்ற மேனியை யுடைய என்னிடத்தில் 'மணம்' ஏதும் இல்லாததால் நீ வர மறுக்கிறாய். அவனுக்கு என்னிடம் அன்பு இல்லை; அதனால் தான், என்னைப்பிரிந்து, வெப்பம் மிக்க மலைகளையும் பாலை நிலத்தையும் கடந்து நெடுந்தொலைவுள்ள நாட்டிற்குச் சென்றான். அவனைப் பிரிந்ததால் யான் படும் வருத்தத்தை நான் உனக்குக் கூறியும் நீ அவன்பாற் செல்ல மனம் கொள்ளவில்லை; சென்று, என் துயரநிலையை அவனுக்கு எடுத்துக் கூறி, அவன் இங்கே விரைந்து வருமாறு செய்ய விரும்பவில்லை. இது எதனால் விளைந்தது? சிறிய பெண் வண்டின் பின்னால் பறந்துபறந்து, அதை உன் விருப்பத் திற்கு மிக விரைவில் இணங்கச் செய்து, காதல் நாடகம் நிகழ்த்துகிறாயே, அதனாலா? (என்னுடைய அவல நிலையைக் கவனியாமல் இருக்கும் அளவுக்கு, அவ்வளவு காதல் பித்தா

உனக்குப் பிடித்துவிட்டது? அல்லது, நீ பெண் வண்டை விட்டுப் பிரிவதுபோல, ஆடவர்கள் பெண்களை விட்டு அன்பில்லாமற் பிரியும்போது மெலிந்தவரான பெண்கள் வருந்துவது இயல்புதான் என்று எண்ணுகிருயா?"

மேலே விளக்கிய இரு பாடல்கள் தவிர, இன்னும் ஐந்து பாடல்கள் தும்பி கோக் கீரனர் பாடியனவாக உள்ளன. அவை, குறுந்தொகையில் 61, 315, 316, 320 எண் உள்ள பாடல்களும், புறநானூற்றில் 249-ஆம் பாடலும் ஆகும். இப் பாடல்களில் தும்பியைப் பற்றிய குறிப்பு இல்லை. மேலே காட்டியவாறு வண்டினைத் தலைவனிடம் தூதாக அனுப்பும் நோக்கத்தோடு, அதை விளித்துப் புகழ்ந்தும், பழித்தும் தலைவி தன் மனநிலையை வெளியிடுவதாக அமைந்த பாடல்களே, பிற்காலத்தில் சந்தேச காவியங்களாகவும் தூதுப் பிரபந்தங்களாகவும், இலக்கியங்கள் தோன்றுவதற்கு அடிகோலின. இச் சிறப்பால், அவற்றைப் பாடிய புலவர், தும்பிகோக்கீரனர் என்னும் சிறப்புப் பெயரால் போற்றப்படுகிருர்.

**பொருந்தில் இளங்கீரனர் (பொருந்துழி இளங்கீரனர்) :**

மற்ருேர் இளங்கீரனர், பொருந்தில் இளங்கீரனர் என்று வழங்கப்பெறுகின்ருர். அந்தி இளங்கீரனர் என்ற பெயரில், அடையாக உள்ள 'அந்தி' என்னும் சொல், அப் புலவர் பாடிய பாடல் ஒன்றன் உயிர்ச் சொல்லாக அமைந்து நிற்றல்போல், இப் புலவரது பெயருக்கு அடையாக இருக்கும் 'பொருந்தில்' என்னும் சொல்லும், பல அறிஞர் கருதுவதுபோல் ஊரின் பெயராக இராமல், கவிதையில் அமைந்த கலைச் சொல்லாகவே இருந்திருக்கவேண்டும். ஆனல், வருந்தத்தக்க வகையில், இப் புலவர் பாடியுள்ள மூன்று பாடல்களிலும் இச் சொல் காணப்படவில்லை. அகநானூற்றில் 19, 351-ஆம் பாடல்களும், புறநானூற்றில் 53-ஆம் பாடலும் அவராற் பாடப்பெற்றவை. ஆயின்,

'பொருந்துழி' என்னும் சொல், அகநானூறு 351-ஆம் பாடலில் காணப்படுகிறது. இதனாலும், அப் பாடலிற் கூறப்படும் செய்திகளாலும் இச் சொல், அப் பாடலின் உயிர்ச் சொல்லாக இருக்கத் தகுதியுடையது எனக் கருதலாம். வினை முடித்துப் பொருள் சேர்த்து மீண்டுவரும் தலைவன், தன் மனத்தோடு மொழிவதாக அப் பாடல் அமைந்துள்ளது.

"பொருள் சேர்ப்பதற்காக வேற்று நாட்டிற் சென்று தங்கவேண்டுமென்று மிகவும் விரும்பினேன். அவ்வாறே புறப்பட்டேன். வேறு எங்கும் பெறமுடியாத சுற்றமாக அமைந்து என்னோடு உறவாடிய தலைவி என்னைப் பற்றிய கவலையே தன் மனத்தில் நிறையப் பெற்றவளாய், வாயிற் கதவுவரை வந்து எனக்கு விடை தந்தாள். அவள் என்பால் கொண்ட காதல் விந்தைக்குரிய விளைவை உடையது. விரும்பிய அளவு பொருளைச் சேர்த்துவிட்டேன். என் மனத்தில் மகிழ்ச்சி துளும்புகிறது. பொருள் வேண்டும் என்னும் குறை இருந்தது. அதனால் தூண்டப்பட்டு வெளி நாடு சென்று தொழில் இயற்றிப் பொருள் சேர்த்தேன். என் தொழில் இப்பொழுது முடிந்தது. மனத்தில் குறை தீர்ந்து நிறைவு தோன்றியதனால் என் ஊர்க்கு விரைகின்றேன். நான் ஏறிச் செல்லுகின்ற தேரின் ஒலி தலைவியின் செவியில் விழும். அதன் மூலம், அவள், நான் வருவதை அறிந்துகொள்ளுவாள். 'பகலவன் வெப்பமான கதிர்களை வீசிப் பொசுக்கும் உச்சிவேளையில், காற்று அடிப்பதனால் தன் பழுத்த இலைகளை உதிர்த்துவிட்டு மிகுதியுள்ள சிவந்த தளிர்கள், தீயானது கப்பு விட்டு எரிவதுபோல் கிளைகளில் அசைந்து ஆட, உள்துளை பொருந்திய பூக்களையுடையனவாய் இங்கு ஒன்றும் அங்கு ஒன்றுமாக இருப்பை மரங்கள் நிற்கின்ற பாலைநில வழியில், மீண்டும் என்னைப் பிரிந்து போகாத உறுதியோடு தலைவன் திரும்ப வேண்டும்' என்று அவள் எண்ணிக்கொண்டிருப்பாள்.

இதுதான் தலைவியின் வேண்டுகோளாக இருக்கும். நான் வருவேன் என்று, தான் எதிர்பார்த்த நாளில் வருவேனோ, மாட்டேனோ என்று அறிவதற்காகத் தலைவி தன் கண்ணை மூடிக்கொண்டு, சுவரில் ஒரு வட்டம் எழுதுவாள். அந்த வட்டத்தின் இரு முனைகளும் சேராவிடின், நான் குறித்த காலத்தில் திரும்பமாட்டேன் என்று பொருள்படும். ஆதலின், இரு முனைகளும் சேரும்படி முழுவட்டமாகவே அவள் எழுதியிருக்கவேண்டும். இவ்வாறு, ஒன்றன்மேல் ஒன்றாகப் பல வட்டங்கள் எழுதுவாள்; இறுதியில் அவற்றை எண்ணிக் கணக்கிடுவாள்; இவ்வாறு ஒவ்வொரு நாளும் எண்ணுவாள்; வட்டங்களை எண்ணும்போது கூட, என் வருகையைப் பற்றியே நினைத்துக்கொண்டிருப்பாள். ஆதலின், வட்டங்கள் எழுதிய சுவர், அவளது பார்வையி னின்றும் மெல்ல மெல்ல மறையும். என்னுடைய உருவம் தான் அவள் கண் முன்னே நிற்கும். இடையிடையே சுவரும், அதில் எழுதிய வட்டங்களும், பல நாட்களுக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சி மனக்கண் முன்னர்த் தோன்றுவது போல், வெறும் நிழல் உருவமாய்த் தோன்றும். தன் உடல், வீடு, பொருள்கள் எல்லாவற்றையும் மறந்து என் வருகை பற்றிய நினைவிலேயே தோய்ந்து கிடப்பாள் அவள். அவளுடைய குளிர்ந்த கண்களில் கண்ணீர் நிறைந்திருக் கும். அக் கண்ணீரால் வட்டம் எழுதிய சுவர் நனையும். பிறகு படுக்கையின்மீது, கன்னத்தில் கையை வைத்துத் தலைசாய்த்து அவள் அமர்ந்திருப்பாள். தலைசாய்த்துள்ள தால் கண்ணீர் பக்கவாட்டில் ஓடிக் காதில் உள்ள பொன் குழைகளின்மீது தெறித்து விழும். இவ்வாறு, தலையைத் தன் உள்ளங் கைகளால் தாங்கி, முழங்கையைத் தலையணை யில் ஊன்றிய நிலையிலேயே நெடுநேரம் தன்னை மறந்து அவள் அமர்ந்திருப்பாள். இனியோ அவள் ஒருபோதும் இவ் வாறு எனது பிரிவை எண்ணி வருந்தமாட்டாள். நான் பிரிந்திருக்கும்போது, படுக்கை, அவளுக்குப் பொறுக்க முடி

யாத துன்பத்தைக் கொடுத்திருக்கும். பின்னல் பெறப் போகும் இன்பத்தை நினைத்து, இப்பொழுது படும் துன்பத்தைப் பொருட்படுத்தாமல் மறந்து, அவள் அப்படுக்கையில் கிடப்பாள். இந்த இன்ப நினைவு இல்லையென்றால் அப் படுக்கை நரகமாகவன்றே இருந்திருக்கும் ?

"தலைவி தன்னை மறந்து அப் படுக்கையிற் படுத்திருப்பதால், என்னோடு கூடியிருந்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகள் எல்லாம், இப்போதும் உண்மையிலேயே நிகழ்வனபோல் அவளுக்குத் தோன்றும். அவளுடைய தோள்களில் வலி மிகுதியாக இருக்கும். இந்த வலி நீங்குவதற்கு ஒரே மருந்து, அப் படுக்கையில் 'பொருந்துழிக் கிடப்பதுதான்'— படுத்திருக்கவேண்டும் முறையில், இன்பத்தோடு, மன நிறைவோடு படுப்பதுதான். அஃது எப்பொழுது வாய்க்கும் ? 'தலைவன் என்னைவந்து அடையும்போதுதான் வாய்க்கும்' - என்றெல்லாம் தலைவி எண்ணிக்கொண்டிருப்பாள். அந்தச் சமயத்தில் எங்கிருந்தோ ஒரு பல்லி ஒலி செய்யும். 'தலைவன் மீண்டு வருகிறான்' என்று அது நற்சொல் சொல்லுவதாக எண்ணித் தலைவி ஏக்கமும் ஏமாற்றமும் நிறைந்த தன் மனத்தைத் தேற்றிக்கொள்ளுவாள் ; நற்குறி சொன்னதற்காக அப் பல்லியைத் தொழுவாள்."

இவ்வாறு, தான் பிரிந்திருக்கும் காலத்தில் தலைவி வாழும் வகையைத் தலைவன் கற்பனை செய்து பார்க்கிறான்.

"இந்தத் தேரின் ஒலி அவள் காதில் விழுந்து, என் வருகையை அறிவிக்கட்டும்" என்று அவன் எண்ணுகிறான். இப் பொருளைத் தரும் பாடல் வரியை மற்றுமொரு வரியுடன் சேர்த்து மற்றொரு வகையாகவும் விளக்கலாம். "என் முயக்கத்திற்காக வருந்தியிருக்கும் அவளுடைய தோள்களின் நோய்க்கு மருந்தாக என் தேரின் ஒலி அவள் காதில் விழட்டும்" என்று அவன் எண்ணுவதாகக் கொள்ளுவதும் பொருத்தமே.

இக் கவிதையில், முதலில் தலைவியின் துயரநிலை புனைந்துரைக்கப்படுகிறது. தலைவி சுவரில் வட்டம் எழுதுதல், நாள்தோறும் அவற்றை யெண்ணித் தலைவன் வாராதது கண்டு ஏமாற்றம் அடைதல், காதில் உள்ள குழையில் தெறித்து விழுமாறு கண்ணீர் பெருகுதல்—இவையெல்லாம் அவளுடைய துயரத்தின் உச்ச நிலையைக் காட்டுகின்றன. இதை அடுத்தே தலைவியின் மகிழ்ச்சி நிலையும் காட்டப்படுகிறது. படுக்கையோடு தனக்கு உள்ள தொடர்பைப் பற்றித் தலைவி எண்ணுவது, தலைவனோடு இன்பமாகக் கழித்த பழைய நாட்களை நினைத்து அப்போது நிகழ்ந்தவையெல்லாம் இப்போதும் நிகழ்கின்றனவாகக் காண்பது, தலைவன் உண்மையாகவே திரும்பி வந்துவிட்டான் என்று எண்ணுவது, அவன் வரவில்லையே என்ற ஏமாற்றம் தீரப் பல்லி ஒலி செய்வதைக் கண்டு அதைத் தொழுவது, அவன் ஏறி வருகின்ற தேரின் ஒலி, அவன் தலைவியின் வீட்டை அடைவது—இவற்றில் எல்லாம் மகிழ்ச்சியின் உச்ச நிலையைக் காண்கிறோம். துன்ப மயமாக இருந்த காட்சி, திடீரென இன்பமயமாக மாறுகிறது; மிக விரைவில் உண்டான இம் மாற்றம் இயற்கையில் காணப்படாதது. இந்த மாற்றத்தைக் காட்டுவது, 'பொருந்துழி' என்ற தொடர்தான். 'படுக்கை பெருந்துன்பமா யிருந்த நிலை மாறி, அதன்மீது அமைதியாகவும் இன்பமாகவும் படுத்திருக்கும் அமயம் வரும்போது' என்பது அத் தொடரின் பொருள். சுவரில் எழுதிய வட்டம் முழுமையாக அமைந்து, தலைவன் விரைவில் வருவான் என்பதைக் காட்டியதாலும், வட்டம் எழுதிய அந்தச் சுவரை மறந்து, தலைவனைப் பற்றியே எண்ணி, அவனது உருவத்தைக் கற்பனைக் கண்ணால் பார்க்கும் நிலை ஏற்பட்டதாலும், இன்ப உலகிற்கு வழி திறக்கப்படுவதைத் தலைவி உணர்கிறாள். எனவே, 'பொருந்துழி' என்ற தொடர்தான் இக் கவிதைக்கு உயிராக உள்ளது என்பது வெளிப்படை. இதனால் இக் கவிதையைப்

பாடிய இளங்கீரனார், 'பொருந்துழி' என்ற அடையைப் பெற்றுப் 'பொருந்துழி இளங்கீரனார்' என்று அழைக்கப் பெற்றார் எனலாம். இப்போது கிடைக்கும் சங்க இலக்கியப் பதிப்புக்களில் உள்ள 'பொருந்தில் இளங்கீரனார்' என்னும் பெயர், படி எழுதுவோர் தவறாக உணர்ந்தமையால் எழுதிய பெயராக இருக்கலாம். 'பொருந்துழி' என்ற தொடரின் சிறப்பை உணராத அவர்கள், 'பொருந்தில்' என்றதொடர்புலவரின் ஊரைக்குறிப்பிடுவதாகலாம் எனக் கருதி, அதுவே பொருந்துவது எனக் கொண்டு 'பொருந்தில் இளங்கீரனார்' என்று திருத்தி எழுதிவிட்டனர் எனலாம்.

### அஞ்சில் அஞ்சியார் :

அஞ்சி என்பது ஓர் இயற்பெயர். இதில் உள்ள 'சி' என்னும் இறுதி, 'அழிசி' என்பது போன்ற பெயர்களி லும் காணப்படுகிறது. 'அம்' என்பதற்கு 'அழகு' என்று பொருள். எனவே, இயற்கையில் இருப்பதைவிட உயர்ந்த அழகுருவத்தை 'அஞ்சி' என்ற சொல் குறிக்கிறது எனக் கொள்ளலாம். அல்லது, அஞ்சு என்ற வினை அடியிலிருந்து இச் சொல் பிறந்திருக்கலாம். அஞ்சி என்பதில் உள்ள 'இ' ஊருணி (ஊரினர் உண்ணும் குளம்) என்னும் சொல்லில் உள்ள 'இ' போலச் செய்யப்படும் பொருளை—செயப்படு பொருளைக்—குறிப்பது. இவ்விடத்தில் அஞ்சி என்பது மற்றவரை அஞ்சச்செய்வது எனப் பொருள்படும். அஃதா வது அஞ்சத்தக்கது அஞ்சி எனப்படும். தெய்வ சக்தியின் வியத்தகு பண்பான, உயிர்களுக்கு அச்சம் ஊட்டுகின்ற தன்மையை, இச் சொல் குறிக்கிறது எனலாம். சங்க இலக் கியப் பதிப்பாசிரியர் இப் பெயரைப் பெண்பாற் பெயராகக் கொண்டுள்ளார். (பக்கம், 1430). அதற்கு அடிப்படை எதுவும் இல்லை என்பது இதனால் பெறப்படும். சங்க காலத் தில் புகழ்பெற்று விளங்கிய அதியமானின் இயற்பெயர் 'அஞ்சி' என்பதே.

அஞ்சி என்னும் பெயருடைய மற்றப் புலவர்களி னின்றும் இப் புலவரை வேறு பிரித்து அறிவதற்காக அஞ்சில் என்னும் அடை இவரது இயற்பெயருக்கு முன் சேர்க்கப்பெற்றது. ஆனல், அஞ்சி என்னும் பெயருடைய வேறு புலவர் இருந்தனரா என்பது இப்போது அறியக் கூடவில்லை. புலவர் பெயர் காணுதனவாக இப்போது கிடைக்கும் சங்கப் பாடல்களுள் சில, அஞ்சி என்னும் பெயருடைய புலவர்களுள் ஒருவரால் பாடப்பெற்றன வாக இருக்கலாம்.

ஆயின், அஞ்சில் என்னும் அடையுடைய மற்ருெரு பெயர் காணப்படுகிறது. அஃது 'அஞ்சில் ஆந்தையார்' என்பது. 'இல்' என முடியும் அஞ்சில் என்பது போன்ற பெயர்கள், 'குடி' என முடியும் பெயர்களைப் போல ஊர் களைக் குறிப்பனவாகும். பெருமை வாய்ந்த 'அஞ்சி' என் னும் மன்னனின் நினைவாக 'அஞ்சி இல்' என ஓர் ஊருக் குப் பெயர் ஏற்பட்டு, நாளாவட்டத்தில் அப்பெயர் அஞ்சில் என மருவியிருக்கலாம். ஆனல், அஞ்சில் அஞ்சியார் என் னும் பெயரில் உள்ள 'அஞ்சில்' என்பது ஊரைக் குறிப்ப தாகக் கொள்ளமுடியாது. கபிலர், தம் கவிதைகளுள் ஒன்றில் 'கபிலம்' என்னும் சொல்லை அழகான முறையில் கையாண்டு, அதை நிலைபெறச் செய்ததுபோலவே, இப் புலவரும் தமது பாடலொன்றில் 'அஞ்சில்' என்னும் பெயரைக் கலையழகுபடக் கையாண்டு, அதன் நினைவு எல்லோரது மனத்திலும் நிலைபெறுமாறு செய்துள்ளார். எவ்வாறு அச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார் என்பது பின்னர் விளக்கப்படும். இச் சொற்ருெடர் முதன் முதல் இப் புலவரால் படைக்கப்பெற்றது என்றும், பின்னர் மற்றவர்கள் அதைப் பயன்படுத்தினர் என்றும் கூறலாம். எடுத்துக்காட்டாகக் 'காவன்முல்லைப் பூதனர்' என்னும் புலவர், குறுந்தொகை 211-ஆம் பாடலிலும், கூடலூர் கிழார் என்னும் புலவர், குறுந்தொகை 214-ஆம் பாடலி

லும், நக்கீரர், குறுந்தொகை 280-ஆம் பாடலிலும், ஓரம் போகியார், ஐங்குறுநூறு 49-ஆம் பாடலிலும் இச் சொற்றொடரைப் பயன்படுத்தியுள்ளனர். இஃது அஞ்சியாரின் கவிதைப் பண்பு என்னும் தங்கசாலையிலிருந்து வெளியான இலக்கிய நாணயம் ஆதலின், அவரது இயற்பெயருக்கு அடைமொழியாக அமைந்து சிறப்புச் செய்தது எனல் வேண்டும்.

அஞ்சில் அஞ்சியார், நற்றிணை 90-ஆம் பாடலின் ஆசிரியர். அப் பாடல் தோழியின் பேச்சாக அமைந்துள்ளது. தலைவன் ஓர் இளம் பரத்தையோடு நட்புக்கொண்டு, அவள் வீட்டிற்கு அடிக்கடி சென்றுவரத் தொடங்கினன். இதனல் வெறுப்புக்கொண்ட தலைவி, அவன் தன் வீட்டினுள் நுழைவதை மறுத்தாள்; அவனிடம் இன்முகத்தோடு பேச மறுத்தாள். தலைவனின் நண்பனன பாணன் ஒருவன், அவன் சார்பில் அவளிடம் சென்று, அவன் குற்றமற்றவன் என்று கூறி அவள் சினத்தைத் தணிக்க முயலுகின்றன். இச் சமயத்தில் தோழி, தலைவிக்குச் சொல்லுபவள்போல், பாணன் கூறிய நொண்டிச் சமாதானங்களை ஏற்றுக் கொள்ள முடியாது என்று அவனுக்குக் குறிப்பாக உணர்த்துகிறள்.

“ கூத்து முதலியவற்றுடன் விழாக்கள் நாள்தோறும் கொண்டாடப்பெறுகின்ற காரணத்தால் நமது பழைய ஊரில் எப்பொழுதும் ஒலி நிறைந்திருக்கிறது. வண்ணாத்தி, உடைக்கலைப் பண்பில் அறிவு சான்றவள்; உடைகளை வெளுக்கும் கலையில் தேர்ந்தவள்; ஆனல் புலால் உண்ணும் வழக்க முடையவள்; அறநெறி யறியாதவள்; கைத்தொழில் தேர்ச்சியால் வறுமை அறியாதவள்; அழுக்கு உடைகளை எல்லாம் இரவில் அவள் கஞ்சியில் தோய்த்து வைக்கின்றள்; வைகறையில் அவற்றினை நன்கு அடித்துத் துவைத்து அழுக்கு நீக்குகிறள். அவளால் இங்ஙனம் கஞ்சியேற்றிச் சலவை செய்யப்பட்ட, சிறு பூவேலையுடன்

கூடிய உடைகளை உடுத்திக்கொண்டும் ஒளி குன்றுத பொன்னரிமாலையை அணிந்துகொண்டும் சோலையில் ஒரு பெதும்பைப் பருவப் பெண் ஓடுகிருள். பனைநார்களால் முறுக்கப்பட்ட ஊசற் கயிறு அங்குத் தொங்குகிறது. அவளுடைய தோழிமாரும் அங்கு இருக்கின்றனர். ஆனல் வழக்கம் போலத் தோழிமார் ஊசற் கயிற்றை ஆட்டிவிட, அதன் மேல் அமர்ந்து அவள் ஆடவில்லை. அதற்குப் பதிலாக அழுத வண்ணம் ஓடிக்கொண்டிருக் கிருள். பாவம்! பெண்மைப் பண்புகள் முற்றும் அமையப் பெருத அவள் தன் கையில் சில வளைகளே அணிந்திருக் கிருள். அவள் தலையில், நீண்ட கூந்தல் இல்லை; சிறு கூந்தலே உள்ளது. ஆனல், அஃது அழகாகத் தோன்று கிறது. அவளுடைய தாய் அருமையாய்ப் பெற்றெடுத்த மகள் அவள்! இவ்வாறு அச் சிறு பெண் இங்கு அழுது வருந்திக்கொண்டிக்கிருள். அவள்தன் துன்பம் நீங்கத் தலைவன் அவளை ஊசலில் ஏற்றி ஆட்ட, மீண்டும் ஊசலில் ஆடி அவள் மகிழும் இன்பவாழ்விற்கு வழி செய்யாமல், இவ்வூர் மன்னனின் அவை வாளா விருக்கின்றது. அவ்வவையில் இருப்பவர்கள் எல்லாம் நீதியும் இரக்கமும் இல்லாதவர்கள்:"—இது தான் தோழியின் பேச்சு.

பரத்தை ஊடல் கொண்டமையால்தான் தலைவன் தன் வீட்டிற்கு வந்திருக்கிருன் என்று கருதினள் தோழி. அப் பரத்தை மிகவும் சிறு வயதுடையவள் என்று கூறி அந்தச் சிறு பெண்ணுடன் தொடர்பு வைத்துக்கொண்ட தலைவனின் செயலைக் கண்டு அவள் சிரிக்கிருள்; "அவள் சிறு குழந்தைதானே" என்கிருள். 'அம் சில் ஓதி' (அழகிய சிலவாகிய கூந்தலை உடையாள்) என்ற சொற்ருெடர் பரத்தையின் இளமையைக் குறிக்கிறது. அவள் வயது உண்மையான காதல் செய்வதற்கு ஏற்ற வயதன்று. இதைச் சொல்லுவதனல் தோழி தலைவனுடைய அறிவின் மையை எடுத்துக் காட்டுகிருள். ஆதலால், 'அஞ்சில்'

என்ற தொடர் அவளுடைய பேச்சில் முக்கியமான பகுதி யாகிவிடுகிறது. எனவே, இக் கவிதையைப் பாடிய அஞ்சி யார் ' அஞ்சில் அஞ்சியார் ' என்று அழைக்கப்பெற்றார்.

**அம்மூவனார் :**

சங்கப் புலவர்களில், கபிலருக்கு அடுத்தபடியாக நிறை யப் பாடல்கள் பாடியவர் இப் புலவர். இவர் 127 பாடல் கள் பாடியுள்ளார். இவற்றுள் 100 பாடல்கள் ஐங்குறு நூற்றில் நெய்தல்திணைப் பாடல்களாக அமைந்துள்ளன. மூவன் என்பது இவருடைய இயற்பெயராகக் கொள்ளப் பட்டுள்ளது. அவ்வாறாயின் மூவன் என்னும் பெயருடைய பல புலவர்களில், இவரை வேறு பிரித்தறிவதற்காக 'அம்' என்ற அடை இவருடைய பெயருக்குமுன் சேர்க்கப் பட்டிருத்தல் வேண்டும். ஆனால், மூவன் என்னும் பெயருடைய வேறு புலவர் யாரும் சங்க இலக்கியத்துட் காணப்பெறவில்லை. மூவன் என்பது ஓர் இயற்பெயராயின், அஃது ' எலிபெண்டா ' குகைகளில் உள்ள ஒரு பாறையில் செதுக்கப்பட்டுள்ள, பிரம்மா, விஷ்ணு, சிவன்-இவர் மூவர் தலைகளையும் கொண்ட ஒரு கடவுள் உருவத்தின் பெயராய் இருத்தல் வேண்டும். இந்த முத்தலையுருவமுடைய கடவுள் பற்றிய கொள்கை மிகப் பழமையானதுதான். என்றாலும், சங்ககால மக்கள் இதை நன்கு அறிந்திருந்தார்கள் என்று கூற இயலாது. மூவன் என்ற பெயருடைய வேறு புலவர் யாரும் இருந்ததாக அறியக்கூடவில்லை யெனினும், அப் பெயர், சங்க கால மக்களுக்கு நன்கு தெரிந்திருந்தது என்பது கண்கூடு.

பொய்கையார் என்னும் புலவர், மூவன் என்ற குறு நில மன்னன் ஒருவனின் பற்களைச் சேரன் பொறையன் என்ற மன்னன் பிடுங்கித் தொண்டி நகரின் மதில் வாயிலில் பொருத்தினான் என்று கூறியுள்ளார்.*

---

*நற், 18 : 2 - 4.

பெருந்தலைச் சாத்தனார், நெய்தல் நிலத்தில் அமைந்த நாட்டுப் பகுதி யொன்றற்குத் தலைவனான மூவன் என்பானை விளித்துப் பாடிய பாடல் புறநானூற்றில் உள்ளது.* இவன் சேர மன்னனால் பல் தகர்க்கப்பட்ட மூவனே யாகலாம்.

மூப்பன் என்பது ஒரு குடியினரின் பெயராக இப் பொழுது வழங்கிவருகிறது. அச் சொல்லுக்கு 'முதியவன்' என்பது பொருள். முதியவர்களுக்கும் முதிய பொருளாகிய பரம்பொருள், (முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருள்) 'மூவன்' என்று அழைக்கப் படுதல் பொருந்துவதே.

நற்றிணையின் பதிப்பாசிரியர், அம்மு என்ற சொல்லி னின்றும் 'அம்மூவன்' என்னும் பெயர் தோன்றியிருக் கலாம் என்று எழுதியுள்ளார். அம்மு என்ற பெயர் மலையாள நாட்டில் மிகுதியாக வழங்கிவருகிறது. இப் புலவரும் பெரும்பாலும் மேற்குக் கடற்கரை பற்றியே பாடியுள்ளார். ஆனால், அம்மா என்னும் பெண்பாற் பெயரின் திரிபான அம்மு என்பது ஆண்பால் விகுதியான 'அன்' என்பதனோடு சேர்ந்து 'அம்மூவன்' என நிற்றல் இயலாது. அம்மூவன் என்ற பெயர்பற்றிப் பிறிதொரு வகையாகவும் ஆராய்ச்சி செய்ய இடமுண்டு. தமிழ் எழுத்துக்களில் 'ல'—'வ' என்ற இரண்டு எழுத்துக்களும் ஏறத்தாழ வரி வடிவில் ஒரே மாதிரி இருப்பதனால், ஒன்றற் கொன்று மாறித் தவறாக எழுத நேரிடுவது இயல்பு. எனவே, அம்மூலன் என்ற பெயரே அம்மூவன் எனத் தவறாக எழுதப்பட்டிருக்கும் எனக்கருதலாம். எனவே, இப் புலவர், மேலே கூறிய குறுநில மன்னன்—இவர்கள் இருவர் களுடைய இயற்பெயரும் 'மூலன்' என்பதே எனலாம்.

மாமூலனார் என்பது ஒரு சங்கப்புலவரது பெயர். 'மா' என்பது பெருமையைக் குறிக்கும் அடை. உரை

*புறம்; 209.

யாசிரியர்கள் இப் புலவரை ஒரு சிறந்த முனிவர் எனக் குறித்துள்ளனர். ஆதலால் மாமூலனார் என்று இவர் அழைக்கப்பெறுவது பொருத்தமானதே. மேலும், இவர் பாடியுள்ள பாடல்களில் பல இடங்களில் பெருமை என்னும் பொருள்படும் 'மா' என்னும் சொல்லைப் பயன் படுத்தியுள்ளார். எடுத்துக்காட்டாக மாவண் புல்லி,* வளங்கெழுமாமலை,† மைபடு மாமலை,‡ மாமலர் வண்ணம்,§ மாகெழுதானை,$ மாநிலம்,¶ மாமடல் அவிழ்ந்த காந்தள்‡‡ கோட்டுமா** என்ற செய்யுள் தொடர்களைக் கொள் ளலாம். இத் தொடர்களில் 'மா' என்னும் சொல், பெருமை, நீலம், குதிரை, விலங்கு முதலிய பொருள்களிற் பயன்படுத்தப் பட்டுள்ளது, என்றாலும், பெருமை என்னும் பொருளிலேயே மிகுதியாக வருகிறது. மாமூலனார் எப்பொழுதும் சிறந்த பெரிய பொருள்களைப் பற்றியே எண்ணினார் என்பதை இது காட்டுகிறது என்பதைத் தவிரச் சிறப்பாகக் குறிப்பிட்டுச் சொல்லும் அளவுக்கு 'மா' என்னும் சொல்லாட்சியில் சிறப்புப் பண்பு ஒன்றும் இல்லை. சங்கப் புலவர் வரிசையில் காணப்படும் மாதீர்த்தன்,†† மாமிலாடன்,‡‡ மாவளத்தான்,§§ மாயேண்டன் $$ என்னும் பெயர்களை நோக்கும்போது, மாமூலனார் என்ற பெயருக்குப் பழைய உரையாசிரியர்கள் விளக்கம் செய்துள்ளவாறு 'பெருமை பொருந்திய மூலனார்' எனப் பொருள் விரிப்பதே பொருத்தம் எனத் தோன்றுகிறது. நாம் இங்கு ஆராய்வதற்கு எடுத்துக்கொண்ட புலவரது உண்மையான பெயர் வடிவம் 'அம்மூலனார்' என்பதே என நாம் ஊகித்தது சரியாயின் அம் என்னும் அடை, பிற

---

*அகம், 61 : 12. †அகம், 91 : 2. ‡அகம், 187 : 24. §அகம், 197 : 1. $அகம், 251 : 12. ¶அகம், 251 : 17. ‡‡நற்,14 : 7. **நற், 75 : 6. ††குறுந், 113. ‡‡குறுந், 46. §§குறுந், 348. $$குறுந், 235.

மூலனார்களின்றும் அவரை வேறு பிரித்தறிவதற்காகச் சேர்க்கப்பட்டதேயாகும்.

மூலன் என்ற பெயரின் பொருள் என்ன? மூலம் என்பது, இந்து சமயத்தவரின் வான நூலில் குறிப்பிடப் பெற்றுள்ள 27 விண்மீன்களுள் ஒன்றன் பெயர். 27 விண் மீன்களுள் 19-ஆவதாக இம்மூல விண்மீன் அமைந்துள்ளது. திருவாங்கூர் அரசர்கள் இன்றைக்கும், அவர்கள் பிறந்த நேரத்தில் திங்களோடு பொருந்தியிருந்த விண்மீனின் பெயராலேயே அறியப்பெறுகிறார்கள். எடுத்துக்காட் டாகச் சித்திரைத் திருநாள், சுவாதித் திருநாள் என்ற பெயர்களைக் காணலாம். எனவே, மூல நட்சத்திரம் சந்திரனோடு கூடி இருக்கும்போது பிறந்த ஒருவருக்கு மூலனார் என்று பெயர் அமைந்தது எனக் கொள்ளலாம்.

சில சிற்றூர்களின் பெயர்கள் மூலம் என்ற சொல்லை யுடையனவாயிருக்கின்றன. ஒரு மனிதன் ஒரு சிற்றூரில் உள்ள நிலங்கள் அனைத்திற்கும் உரியவனாய் இருந்தால், அவ்வூரின் பெயரோடு கிழார் என்ற சொல்லைச் சேர்த்து, அவ்விரண்டும் சேர்ந்த பெயரால் அவனைக் குறிப்பிடுவது மரபு: கோவூர்கிழார் என்ற பெயரை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். இதுபோலவே, ஆவூர், ஐயூர் என்பனவும் சிற்றூர்களின் பெயரே என அறியப்படுகின்றன. 'ஆவூர் மூலங்கிழார்',* 'ஐயூர் மூலங்கிழார்'† என்ற பெயர்களைச் சங்க இலக்கியத்துள் காண்கிறோம். ஆவூர் மூலம், ஐயூர் மூலம் என்பனவும் ஊர்ப்பெயர்களாக இவற்றினின்றும் அறியப்படுகின்றன. 'ஐ' ஒலி இருக்கும் இடங்களில், அதற்குப் பதிலாக 'அம்' ஒலியும் வருவதுண்டு. செயப்படு பொருளைக் குறிக்கும் 'ஐ' ஒலி கன்னடத்தில் 'அம்' ஒலியாக உள்ளது. ஏன்? தமிழிலேயே பனை, வழுதுணை, ஆவிரை முதலிய சொற்கள் புணர்ச்சியின்போது 'அம்'

---

*அகம், 24 முதலியன. †புறம், 21.

ஒலி பெற்றே வருகின்றன. இதை மனத்துட்கொண்டு நோக்கும்போது, ‘மூலை’ என்ற சொல்லுக்கும் ‘மூலம்’ என்ற சொல்லுக்கும் தொடர்பு இருக்கும் என்று கருதத் தோன்றுகிறது. மூலம் என்ற வடமொழிச் சொல்லோடு இஃது ஒத்திருப்பதைக் கண்ட எவரும், இவ்விரு வேறுபட்ட சொற்களும் முற்றும் மாறான பொருளுடையன என்று அறியாமல் மயங்குவது இயல்பே. ஆலூர் மூலம் முதலிய பெயர்கள் அவற்றால் குறிப்பிடப்பட்ட ஊர்கள் தோன்றிய காலமுதல் இருந்துவரும் நடு இடங்களைக் குறிப்பனவாய் நிற்க, நாளாவட்டத்தில் மக்கட் பெருக்கத்தால் அவ்வூர்கள் விரிவடைந்தபோது, அந்த விரிவடைந்த பகுதிகள் ஆலூர் முதலிய பெயர்களால் குறிக்கப்படுவன ஆயின எனவும், அப்பகுதிகட்குச் சிலர் தலைமை பூண்பதற்கு உரியவ ராயினர் எனவும் கருதலாம். சிற்றூர்களின் நடுவிடம் தூய்மையுடையதாகவும், மக்களால் தெய்வத்தன்மை யுடையதாக மதிக்கப்பெற்றதாவும் இருந்திருக்கலாம். அவ்விடத்தில் எழுந்தருளியிருந்த கடவுளுக்கு ‘மூலன்’ என்ற பெயர் வழங்கியிருக்கலாம். சிற்றூர்களில் குடியேறி வாழ்ந்த பழங்குடிமக்கள், தாங்கள் வழிபடும் தெய்வத்தை அவ்வூர்களின் நடு இடத்தில் எழுந்தருளுவித்து, அதைச் சுற்றிலும் தங்கள் குடில்களை அமைத்துக்கொள்ளும் வழக்கமுடையவராயிருந்தனர்: ஊர்த்தெய்வம் அம் மக்களின் வாழ்க்கையில் நடுநாயகமாக விளங்கியது எனலாம். சிற்றூர்களில் வாழ்ந்த மக்களின் ஒற்றுமையைக் காட்டும் குறியீடாக அத்தெய்வம் விளங்கியது.

அம்மூவனார் என்னும் தொடரில் ‘அம்’ என்பதை மற்றவர்களினின்று வேறு பிரித்தறிவதற்காகச் சேர்க்கப் பட்ட அடைமொழியாகக் கொண்டால், அஃது எக்காரணத் தால் அடைமொழியாக அமைந்தது என்பதை ஆராய்தல் வேண்டும். கவிதையில் வரும் சிறப்பான சொல், புலவரின் பெயருக்கு அடைமொழியாக வருவது உண்டன்றோ?

அதன்படி 'அம்' என்ற சொல், கவிதை நயத்தோடும், சிறப்போடும் அம்மூலனார் (அம்மூவனார்) பாடியுள்ள எந்தக் கவிதையிலேனும் கையாளப்பட்டிருக்கிறதா என்று பார்த்தல் வேண்டும். அத்தகைய பாடலைக் கண்டுபிடிப்பது சிறிது வன்மையான செயலே. நற்றிணை 327-ஆம் பாடலில் 'அம்' என்ற சொல் கவிதை நயத்தோடு வந்துள்ளது எனச் சிலர் கருதலாம்.

இப் பாடலில் குறிப்பிடப்படும் தலைவன், திருமணத்தைப் பற்றியே எண்ணாமல், களவில் வந்து தலைவியைக் கண்டு செல்லுவதிலேயே காலங்கடத்துகின்றான். தலைவனுடைய இந்தச் செய்கை, தலைவிக்கு அளவில்லாத வருத்தத்தைக் கொடுக்கின்றது. தோழி அவளைத் தேற்றுகிறாள்; பலமுறை நயமாகச் சொல்லிப் பார்க்கிறாள். என்ன சொல்லியும் கேளாமல் தலைவி வருந்திக்கொண்டேயிருக்கிறாள். இது கண்ட தோழி, ஒரு நாள் சிறிது கடுமையாகவே பேசுகிறாள்: "தலைவனைப் பற்றி நினைந்து, வருந்தி வருந்தி உன் உடல் அழகையெல்லாம் நீ ஏன் இழக்கவேண்டும்? ஏன் இவ்வளவு கவலை? உன் அழகை இழக்கும் அளவிற்கு அவன்மீது ஏன் நீ நம்பிக்கை கொள்ளவேண்டும்?" இந்த வன்மையான பேச்சுக்குத் தலைவி விடை தருகிறாள்; அதுவே கவிதையில் அமைந்துள்ளது.

"அன்புள்ள தோழி! நம்மைத் தம் வாழ்க்கைக்கு இன்றியமையாத் துணையாகக் கருதுமளவு நம்மிடத்தில் மிக்க அன்பு கொண்டவர்மேல் நம்பிக்கை வைப்பது குற்றம் என, உண்மை நாட்டமுடைய பெரியவர்கள் சொன்னால், அந்த நம்பிக்கைக்காக உறக்கமில்லாமல் வருந்தும் கண்ணோடு கூடிய இந்த உடல் தேய்ந்தழிந்து மண்ணோடு மண்ணாகிப்போவது இனிமையானதே. இந்த உடலின் உறுப்புக்கள், உடல்—இவற்றின் அழகு என்றும் நிலைத்திருக்கப் போவதில்லை; இஃது உண்மை. ஆனால்,

சான்றோராக வாழ்பவர்கள் ஒருநாளும் தங்கள் கடமையி னின்றும் வழுவமாட்டார்கள் என்று இவ்வுலகம் முழுதும் ஒரு குரலெடுத்து உவகையோடு சொல்லுகிறது. நம் தலைவன் சான்றோன். அதனால் மலர்கள் நிறைந்த புன்னை மரங்கள் உயர்ந்து வளர்ந்துள்ள கானலோடுகூடிய குளிர்ந்த அழகிய நெய்தல் நாட்டிற்குத் தலைவனான அவனது மென்மையான மார்பு நமக்கே உரியது.'' இது தான் தலைவியின் பேச்சு.

தலைவனிடத்தில் கொண்ட நம்பிக்கைக்காகத் தன்னையே தியாகம் செய்யச் சித்தமாக இருக்கும் தலைவியின் தூய்மை யான அன்பு இக் கவிதையில் வெளிப்படுகிறது. தலைவன் அவளைப் பிரிந்து சென்று அளவில்லாத துன்பத்தைக் கொடுத்தபோதும், அவள் அவனுடைய நாட்டில் அழகாக வளர்ந்திருக்கும் புன்னை மரங்கள் ஓங்கிய கடற்கரைச் சோலையின் அழகிய துறையின் தோற்றத்தைக் கற்பனைக் கண்ணால் கண்டு மகிழ்கிறாள். அவளுடைய அழகு நாளுக்குநாள் குறைந்து கெடும்போதும், 'தலைவன் தன் னுடையவன்' என்று நம்பி எண்ணும் எண்ணத்தில் அவள் ஆறுதல் அடைகிறாள். அவளுடைய இந்த ஆறுதலைத் தான் கவிதையிற் காண்கிறோம். தலைவன் பிரிந்து சென்று தன்னை மறந்தபோதும் தன் அழகு கெடுவதுபற்றிக் கவலைப் படாமல், அவனுடைய நாட்டின் அழகிய இயற் கைக் காட்சிகளை நினைந்து மகிழ்ந்து, அவன் தன்னுடைய வனே என்று எண்ணி, அவனுக்காக உயிரையும் தரச் சித்தமாக இருக்கும் தலைவியின் உள்ளத்தையே கவிதை அழகுறக் காட்டுகிறது. தலைவனுக்காகத் தன் அழகையும் துறக்கச் சித்தமாயிருக்கிறாள் தலைவி. '**அம்**' என்றால் அழகு. தலைவியின் பல உறுப்புக்களிலும் உள்ள அழகும், அவள் செய்துகொள்ளும் கோலங்களின் அழகும் '**தண் அம் துறை**' என்பதிலுள்ள **அம்** என்ற இந்த ஒரு சொல் லால் குறிப்பிடப்படுகின்றன. தலைவன் பிரிவதற்குமுன்

தனக்கு இருந்த இயற்கை யழகையும், செயற்கை யழகை யும் இப்பொழுது நினைத்துப் பார்க்கிறாள் தலைவி. தன் னுடைய சிறந்த அழகெல்லாம் கெட்டுவிட்டதை எண்ணும் போது அவளுடைய துயரம் உச்ச நிலையை அடைகிறது. ஆயினும் தலைவனுக்காக எவ்வளவு துயரத்தையும் ஏற்கச் சித்தமாயிருக்கிறாள் அவள். உச்ச நிலையையும் தாண்டித் துன்பம் கரைகடந்துவிட்டாலும் அதையும் ஏற்றுக்கொள் ளும் மன உறுதி—தலைவனிடத்தில் வைத்த நம்பிக்கையால் உண்டான மன உறுதி—உடையவள் அவள். எனவே அவள் மனத்தில் துன்பம் மிகமிகத், தியாக உணர்வும் அன்புஉணர் வும் தலைதூக்கி நிற்கின்றன. தன் அழகை யெல்லாம் துச்ச மாகக் கருதி, அதைத் துறக்கவும் சித்தமாயிருக்கிறாள் தலைவி. எனவே இக் கவிதையில் விளங்கும் உணர்ச்சியின் உயிர் இழையாக **'அம்'** என்ற சொல்லைக் கொள்ளலாம். இதனாலேயே 'அம்' என்ற இச்சொல், புலவரின் பெயருக்கு அடைமொழியாக அமைந்தது என்று கூறுவதற்கு இடமுண்டு.

ஆயின், '**அம்**' என்ற சொல் அடைமொழியாக வேறு எங்கேனும் வந்துள்ளதா என்ற வினா எழுகிறது; வர வில்லையென்றே சொல்லவேண்டும். நற்றிணை 252-ஆம் பாடலைப் பாடிய புலவரது பெயர் **அம்** மெய்யன் நாகனார் என்பது. நாகனார் என்பதே அவரது இயற்பெயர். **அம்** மெய் யன் என்பது அவருடைய தந்தையாரின் பெயர். எனவே, '**அம்**' என்பது இங்கே அடைமொழியன்று. 'அழகிய மேனியையுடையவன்' என்று பொருள்படும் 'அம்மெய்யன்' என்பதை இயற் பெயராகக் கொள்வது இழுக்காகாது.

**கூவல் மைந்தன் :**

இவர் குறுந்தொகை 224-ஆம் பாடலின் ஆசிரியர். சார்பு, வலிமை என்ற பொருள்களையுடைய **மைந்து** என்ப தன் அடியாகப் பிறந்த **மைந்தன்** என்பதே இவரது இயற்

பெயராதல் வேண்டும். கூவல் என்ற சொல் இக் குறுந் தொகைப் பாடலிலேயே வருகிறது. கிணற்றைப் பற்றிய ஒரு நிகழ்ச்சியே இக் கவிதையின் உயிராக உள்ளது. இதனால்தான் கூவல் என்ற சொல் புலவரது பெயருக்கு அடை மொழியாக அமைந்து, மைந்தன் என்ற பெயரு டைய பிற புலவர்களினின்றும் இவரை வேறு பிரித்துக் காட்டுகிறது. ஆயின், மைந்தன் என்னும் பெயருடைய வேறு புலவர் யாரும் சங்கப் புலவர் வரிசையில் காணப் படாமை இரங்குதற்கு உரியதே. இனிக் **கூவல் மைந்தன்** பாடியுள்ள கவிதையை நோக்குவோம் :

(தலைவன் தலைவியைப் பிரிந்து வெளி நாட்டிற்குச் சென்றுள்ளான். தலைவி தாங்கமுடியாத துயரத்தில் ஆழ் கிருள். துயரந் தாங்க முடியாமல் அவள் உயிர்நீத்து விடு வாளோ என்று தோழி கவலைப்படுகிருள். கவலைப்படும் தோழி, தன் பக்கத்தில் இருக்கத், தலைவி தன் நெஞ்சோடு பேசுவதுபோல் பேசுகிருள். ஆனல் அது தோழிக்கும் கேட்கிறது. தன்னைவிட்டுப் பிரிந்த தலைவனை நினைந்து வருந்தியதைவிடத் தனக்காகத் தோழி கவலைப்படுவது கண்டே, தலைவி மிகுதியாக வருந்துகிருள்.)

"பாதைகள் பல பிரிவாகப் பிரிந்து மயங்கிக் கிடப்ப தும், பள்ளங்கள் நிறைந்ததுமாகிய காட்டுவழியில் தலைவன் சென்றிருக்கின்றுன். அதை நினைத்தாலே கொடுமையாக இருக்கிறது. இரவில் அந்த நினைப்பின் மிகுதியால் தூக்க மும் வரவில்லை. தலைவனது பிரிவை நினைந்து, அவன் சென்ற வழியின் கொடுமையை நினைந்து வருந்துவதே பெரிய நோயாக என்னைப் பிடித்துக்கொண்டது. என் அளவுக்கு இத் துன்பமே மிகுதியாகும். ஆனல், இதைவிட மிகுதி யாக என்னை வருத்துகிறது ஒரு நோய். நான் தலைவ னுடையபிரிவைநினைந்து வருந்துவதைப்பார்த்து மனமிரங்கி வருந்தி நையும் தோழியின் நிலைதான் என்னை மேலும் வருத்துகிறது. அந்த நோய் இரவு நேரத்தில், கருநிறமுள்ள

ஆ ஒன்று கிணற்றில் வீழ்ந்ததையும் அது துன்பத்தால் வருந்துவதையும் கண்ணால் கண்ட, இரக்கப் பண்புமிக்க ஊமை யொருவன், அதைத் தானே எடுத்துக் காப் பாற்றவோ, மற்றவர்களுக்கு அதை அறிவித்து அவர்கள் மூலம் அதன் துன்பத்தைத் தீர்க்கவோ வழியற்றவனாய் வருந்துவதுபோல, நானும் வருந்துகிறேன்.''—இதுதான் அக் கவிதையின் கருத்து.

தலைவியின் துன்பம் எவ்வகையானது என்பதைக் கிணற்றில் நடந்த இந் நிகழ்ச்சி பற்றிய உவமை தெளிவாக விளக்குகிறது. தலைவியின் துன்பத்தைப் பற்றிச் சொல் வதே கவிதையின் நோக்கமாதலின், கிணற்று நிகழ்ச்சி இக் கவிதையில் முக்கியமான பகுதி யென்பது தெற்றென விளங்குகிறது. இந்திய நாட்டு உழவர்கள் ஆவைத் தெய்வ மாக மதித்து வணங்குவர். அது குரால் ஆனாய்—கருநிற முள்ள பசுவாய்—இருப்பின் அதனை மிகுதியாகக் கொண் டாடுவர். இப்பொழுதுகூடக் காராம்பசுவினது பால் கோயிலுக்கே கொடுக்கப்படுகிறது. மக்கள் அதைப் பருகுவதில்லை; உயர்ந்தது ஆதலின் ஆண்டவனுக்கு அர்ப் பணித்து விடுகின்றனர். இத்தகைய காரான்தான் கிணற் றில் இரவு நேரத்தில் விழுந்தது. இதைப் பார்த்த ஊமை யின் மனச்சான்றும் கடமையுணர்வும் அந்த ஆவினைக் காப்பாற்றுமாறு கட்டளையிடுகின்றன. ஆனால், அவன் தானாக அதனைக் காப்பாற்றவே முடியாது. வேறு யாரை யாவது அவன் கூப்பிட்டாகவேண்டும். ஆனால், எவ்வாறு கூப்பிடுவது? அவனோ ஊமை! பாவம்! நடந்ததைச் சைகை யால் காட்டலாம் என்றால், இரவுநேர மாதலின் அதுவும் முடியாது. பக்கத்திலிருக்கும் வீட்டிலிருந்து யாரையேனும் கிணற்றடிக்கு இழுத்துவர அவனால் முடியும். ஆனால் அவர்களைக் கிணற்றினுள் இருக்கும் பசுவைப் பார்க் கும்படி செய்வது எப்படி? இரவுதான் அதற்கும் தடை யாக இருக்கிறது. அந்த ஊமை மனிதன் ஒரு முட்டா

ளாகவோ, வன்னெஞ்சனாகவோ இருப்பானாயின், அவனுடைய மனச்சான்று அவனை வருத்தாது. ஆனால், அவன் மனம், இரக்கம் நிரம்பியது ; அன்பு நிரம்பியது. பாவம் ! என்ன செய்வான் ? அவனுடைய துன்பம் பெருகுகிறது. பிறரைத் துணைக்கு அழைக்கமுடியாத தன் நிலைமைக்காகவும், ஆவினுடைய துயரத்திற்காகவும், அது காரான் ஆதலின் அதைக் காக்கவேண்டுவது கடமையாயிருக்க, வாளா இருக்க நேரிட்டதற்காகவும் அவன் வருந்துகிறான். அவனது வருத்தம் உச்சநிலையை அடைகிறது. தலைவி, தன் நிலையை, இந்த ஊமையின் நிலையோடு ஒப்பிடுகிறாள். தோழி வருந்துவதை அவளால் தடுக்க முடியாது; மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லவும் முடியாது. "தலைவியைத் தவிர மற்றவர்கள் யாரும் தோழியின் வருத்தத்தை உணரமுடியாது. அவர்கள் உணருமாறு சொல்லவும் தலைவியால் முடியாது." (தன் பொருட்டுத் தோழிபடும் கவலை குறித்துத் தலைவிபடும் துயரத்தால், அத் தலைவியின் பண்பாட்டை இப்பாடல் இயம்புவது எவர்க்கும் இனிய விருந்தாகும்).

**கொட்டம்பலவனார் :**

நற்றிணை 95-ஆம் பாடலின் ஆசிரியர் கொட்டம்பலவனார் என்பவர். நற்றிணையின் பதிப்பாசிரியர், அதன் 34-ஆம் பக்கத்தில், சங்ககாலத்துச் சேரமன்னன் (புறம், 245) ஒருவன் இறந்த இடத்தின் பெயராகிய கோட்டம்பலம் என்பதிலிருந்தே, கொட்டம்பலவனார் என்னும் பெயர் பிறந்திருக்கவேண்டும் என்ற கருத்தை வெளியிட்டுள்ளார். நற்றிணை 95-ஆம் பாடலிலேயே 'கொட்டு' என்னும் சொல் வந்துள்ளது. அதையும் அவர் சுட்டிக்காட்டியுள்ளார். அம்பலவனார் என்பது அவரது இயற்பெயராயின், 'கொட்டு' என்னும் சொல், அதே பெயருள்ள பிற புலவரினின்றும் இவரை வேறு பிரித்துக் காட்டுதற்காக வந்த அடைமொழியாதல் வேண்டும். ஆனால், அப் பெயருள்ள வேறு புலவர்

யாரும் சங்க இலக்கியத்துள் காணப்படவில்லை. அம்பலம் என்ற சொல் வழிபடும் இடம், அஃதாவது கோயில் என்ற பொருள் உடையது. இச் சொல் இப் பொருளில் இன்றும் மலையாளத்தில் வழங்குகிறது. அக் கோயிலில் உறையும் தெய்வம் அம்பலவன் எனப்படும். நடனம் ஆடுகின்ற தெய்வமான சிவபெருமானுக்கு அம்பலவன் என்ற பெயர் வழங்குகிறது.

" புல்லாங்குழல் இசைக்க, இனிமைவாய்ந்த பலவகை இசைக் கருவிகளும் முழங்க, நன்ருக முறுக்கப்பட்ட வலிய கயிற்றின்மேல் ஏறிக் கழைக் கூத்தாடிப் பெண், தாளத் திற்குப் பொருந்தவும் அந்த இசைக் கருவிகளின் இசைக்கு ஏற்பவும் ஆடினுள். ஆட்டம் முடிந்ததும் அவள் சென்று விட்டாள். கயிறுமட்டும் அங்கேயே இருந்தது. அவள் ஆடியதை முன்னுள் கவனித்துக்கொண்டிருந்த, (அத்திப் பழம் போன்ற சிவந்த முகத்தையும், மயிருள்ளமையால் மென்மையான பஞ்சுபோன்றிருந்த தலையையும் உடைய) மந்தியின் கொழுவிய குட்டி, அக் கயிறு வாளா கிடப் பதைக் கண்டு, அதில் ஏறிக்கொண்டு, கழைக் கூத்தாடிப் பெண் ஆடியதைப் போலவே ஆடுகின்றது. இதைக் குறவர் சிருர்கள் பார்க்கிருர்கள் ; குன்றின்மீது விரைந்து ஏறி அங்கு வளர்ந்திருக்கும் மூங்கிலின்மீது தாவிக் குரங் குக் குட்டி கயிற்றுடன் ஆடுவதற்கு ஏற்பக் கைதட்டி மகிழ்கிருர்கள். இத்தகைய காட்சிகள் நிறைந்த குன்று களுக்கு இடையே, காவற்காட்டினுல் பாதுகாக்கப்பட்ட அந்தச் சிற்றூர் இருக்கிறது. அந்தச் சிற்றூரில் மணம் கமழும் கூந்தலையுடைய ஓர் அழகிய குறமகள் வாழ்கிருள். என்நெஞ்சு அவள்கையில் சிக்கிக்கொண்டது. அதை அவள் கையினின்றும் விடுவிக்க வேறு யாராலும் முடியாது.''

நற்றிணை, 95-ஆம் பாடலின் கருத்து இதுவே.

தாள இசைக்கு ஏற்பக் கைகளைத் தட்டுதல், 'கொட்டு' எனப்படும். தலைவியை முதன் முதலில் எதிர்ப்பட்டு

நெஞ்சைப் பறிகொடுத்துவிட்டு வந்த தலைவன், தோழனிடம் தன் காதலைப்பற்றிச் சொல்லுகிறான். இதைக் கேட்ட தோழன், 'போயும் போயும் ஒரு குறப் பெண்ணா உன்னை மயக்கிவிட்டாள்?' என்று ஏளனமாகச் சொல்லிக் கைகொட்டிச் சிரிக்கின்றான். இது கண்டு தலைவன் கூறுவதாக உள்ள இப் பாடலில் வரும் குரங்குக் குட்டி கயிற்றில் ஏறி ஆடுவதும், குறவரின் சிறுவர்கள் மரத்தில் ஏறிக் கைகொட்டி மகிழ்வதும் வேடிக்கையான காட்சிகளாகவே இருக்கின்றன. ஆனால், இப் புனைந்துரை ஏதோ ஒரு கருத்தை நமக்குச் சொல்லுவதுபோல் அமைந்துள்ளது. உயர்ந்த கலைகளைக் கற்றுணர்ந்தவனும் சிறந்த குறிக்கோள்கள் உடையவனும் ஆகிய தலைவன், இப்பொழுது ஒரு சிறு குழந்தைபோல அழகில் மனத்தைப் பறிகொடுத்து நிற்கின்றான். தலைவனது இப்பொழுதைய மனநிலையையும் அவன் கூறிய புனைந்துரையின் உட்கருத்தையும் உணராத தோழன், கேலியாகக் கைகொட்டிச் சிரிக்கிறான். தலைவனுடைய மனமாற்றத்தை—குழந்தைத்தன்மையைக்—காட்டுவதே இப் புனைந்துரையின் நோக்கம். புனைந்துரையில் முக்கியமான பகுதி, குரங்கின் ஆட்டத்திற்கு ஏற்பக் குறச் சிறார் கைகொட்டுவதே. எனவே 'கொட்டு' என்ற சொல் இக் கவிதையில் முதலிடம் பெறுகிறது. அதனால் தான் புலவரும் 'கொட்டம்பலவனார்' என்று சிறப்பாக அழைக்கப்பெற்றார்.

**கோவேங்கைப் பெருங்கதவனார்:**

கதவனார் என்பதை வெறும் இயற்பெயராகத்தான் கொள்ளவேண்டும். அது வாயிலை இடமாகக் கொண்டு வீற்றிருக்கும் தெய்வத்தின் பெயராகலாம். ஆதிகால மக்களினத்தவருள் பலர் இத் தெய்வத்தைப் பற்றி அறிந்திருந்தனர். இன்றும் இந்திய புராணங்களில் இத் தெய்வம் 'வாஸ்து புருஷன்' என வழங்கப்படுகிறது. பெருங்கதவ

னூர் என்பது, வயதில் மூத்த கதவனூர் என்று பொருள் படும். 'கோ' என்னும் அடைமொழிபற்றி முன்னமேயே ஆராய்ந்துள்ளோம். பெருங் கதவனூர் என்பார் வேங்கைப் பெருங் கதவனூர் என்று அழைக்கப்பெறும் சிறப்பைப் பெற்றபிறகே, 'கோ' என்ற சிறப்பு அடைமொழியைப் பெற்றிருத்தல் வேண்டும். 'கோ' என்னும் அடைமொழி 'கோக்கிரனூர்' என்பது போலக் 'கோக்கதவனூர்' என இவரது இயற்பெயரோடு நேராகச் சேர்க்கப்பெறாமல் 'கோ வேங்கைப் பெருங்கதவனூர்' என இவருடைய சிறப்புப் பெயருக்கு முன்பு சேர்க்கப்பெற்றதன் காரணத்தை இஃது உணர்த்தும். டாக்டர் சாமிநாதையரவர்கள் பதிப்பித்த குறுந்தொகையில் ' ஆர் ' என்ற சிறப்புணர்த்தும் விகுதி யின்றிக் ' கோவேங்கைப் பெருங்கதவன் ' என்ற வடிவமே காணப்படுகின்றது. எனவே இப் பெயருடையவர் ஒரு குறுநில மன்னராக இருந்திருப்பார் எனக் கருதுதற்கு இடமேற்படுகின்றது. இவர் ஒரே பாட்டுத்தான்* பாடியிருக்கிறார். அதில்தான் 'வேங்கை' என்னும் சொல் வருகிறது. ஒரு மலையின்மீது உயர்ந்து, வளர்ந்து, மலர் நிறைந்த கிளைகள் அசைய, அழகிய தோற்றத்தோடு நிற்கும் வேங்கை மரம் ஒன்றை அப் பாட்டில் புலவர் புனைந்துரைத்திருக்கிறார். பல பொருள்களிலும் உள்ள பொதுமையை ஆராய்ந்து கூறுவது அறிவியல் நூல் ; தனித்தனியான பொருள்களின் சிறப்பை - எல்லாப் பொருள்களிலும் பொதுப் பண்பாய் இராமல் ஒரே ஒரு பொருளில் மட்டும் காணப்படும் தனிப் பண்பை – அழகாக எடுத்துக் காட்டுவதே கவிதை. பொருள்களின் இயற்கையில் ஈடுபடும் புலவன் தன்னை மறந்து அப் பொருளில் கலந்து அதுவேயாகும் உணர்ச்சி பெறுகின்றான். இந்த நிலை ஒரு நொடிப்பொழுததான் நிற்கிறது. ஆனால் புலவனே தன் நொடிப்பொழுதைய அவ்வுணர்ச்சிக்

---

*குறுந், 134.

குத் தன் கவிதையால் அழியா வாழ்வு தந்துவிடுகின்றான். சிறிது நேரம் புலவனது தெளிந்த மனத்தில் வாழும் சிறப்பானதோர் உணர்வை இவ் வுலகில் எந்நாளும் வாழவைப்பதே கவிதை. கவிதையின் இத் தன்மைக்கு ஒப்புயர்வற்ற சான்றாக விளங்குவதே குறுந்தொகை 134-ஆம் பாடல்.

வெளிநாடு சென்று பெருஞ் செல்வம் சேர்த்துவந்து, தலைவியின் பெற்றோரிடம் அதைக் கொடுத்து, அவளைத் தனக்கு மணம் செய்விக்குமாறு கேட்டால், அவர்கள் அதற்கு இசைவார்கள் என்று கருதிய தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்துசென்றான். அவன் பிரிந்து நெடுநாள் ஆகிவிட்டமையால், தலைவி பிரிவாற்றாமல் வருந்தினாள். அவளது நிலையைக் கண்ட தோழி, "தலைவனது மனக்கருத்தை அவளிடம் எடுத்துச் சொல்லி, அவளை மணம் புரிவதற்கு உதவும் செல்வத்தைச் சேர்க்கவே அவன் சென்றுள்ளான்; ஆதலின், விரைவில் வந்து பலர் அறிய மணந்துகொள்வான்," என்று கூறித் தேற்றுகிறாள். இவ்வாறு தேற்றிய பின்னும் வருத்தம் மாறாத தலைவி தோழியைப் பார்த்துக் கூறுவதாக அமைந்துள்ளது இக் குறுந்தொகைப் பாடல்:

"காட்டின் இடையிலே உயர்ந்தோங்கி நிற்கும் தலைவனது மலையிலிருந்து அழகான அருவியொன்று பேரொலியோடு பாறைகளில் மோதிக்கொண்டு கீழே விழுகிறது. இந்த மலையை அடுத்தே ஒரு குன்றும் நிற்கின்றது. அதன் உச்சியில் நீண்ட பெரிய அரையையுடைய வேங்கை மரம் ஒன்று வளர்ந்திருக்கின்றது. மலர்கள் நிறைந்த அதன் கிளைகள் காற்றில் மெதுவாக அசைந்தாடுகின்றன. முழுதும் மலர்ந்து நிற்கும் அதன் தோற்றம், மணம் நிகழும் பருவத்தை உலகத்தார்க்கு உணர்த்துகின்றது. மலையிலிருந்து விழும் அருவி பெரு வெள்ளமாக ஓடி வருகிறது. மலையின் உச்சியில், எங்கேயோ நெடுந் தொலைவிலிருந்து அந்த நீர் வெள்ளம் ஓடி வருகிறது; பெரு வேகத்துடன் கீழே விழுகிறது. மலையானது கண்டோர்

அஞ்சும் வண்ணம் செங்குத்தாக உயர்ந்திருக்கிறது. ஆத லின், அதையடுத்து நேர் கீழே இருக்கும் குன்றின்மீது பெரு முழக்கத்தோடு நுங்கும் நுரையுமாக விழுகிறது அருவி. குன்றின்மீது அருவி விழும் இடத்தை யடுத்தே வேங்கைமரம் நிற்கின்றது. ஆனல், அருவியால்தான் அது வளம்பெறவேண்டும். அருவியின் ஒரு சிறுபகுதி வேங்கை மரத்தின் கிளைகளில் வேகமாக விழுந்து தாக்குகின்றது. மரம் முழுதும் அருவி நீரால் நனைந்துவிடுகின்றது. உயர மான மலையிலிருந்து பேராற்றலோடு விழும் அருவியின் வேகத்தால் வேங்கையின் கிளைகளில் அணியாக விளங்கிய மலர்கள் எல்லாம் உதிர்ந்து சின்னபின்னமாகின்றன. பொல்லாத அருவி, அருமையான மலர்களைக் கிளைகளினின் றும் பிரித்துவிட்டது. குன்றிலேயே நின்றுவிடவில்லை அந்தக் கொடிய அருவி. அங்கிருந்து தரையில் விழுந்து பாம்புபோல் வளைந்து வளைந்து ஓடி ஆருகப் பெருகி ஆங் காங்கு இருக்கும் வயல்களுக்கு நீர் அளிக்கிறது."

அருவியின் வேகம், ஓட்டம், அதில் உள்ள நுரை, செங்குத்தான மலையிலிருந்து குன்றின்மீது அது விழும் காட்சி, கண்களை நிலைகொள்ளச் செய்யும் மலையின் செங் குத்தான தோற்றம், குன்றிலிருந்து பாம்புபோல் வளைந் தோடும் அருவி வெள்ளம், அருவியின் வெள்ளத்தில் அகப் பட்டுப் பூக்களை இழந்து இங்குமங்கும் அசைந்து வருந்தும் வேங்கைமரம்—எல்லாம் சேர்ந்து அச்சம் தரும் காட்சியாய் விடுகின்றன. அச்சம் தரும் காட்சி உடையதாகவும் தீமை செய்வது போலவும் தோன்றினுலும், உண்மையில், அந்த அருவி மிகுந்த நன்மையே செய்கின்றது. சிறிது சிந்திப் பார்க்கு அதன் செயலில் உள்ள நன்மை தெளிவாகும். குன்றில் உள்ள காட்டில் வளர்ந்திருக்கும் மரங்களுக்கும், ஆங்கு வாழும் விலங்குகளுக்கும், குன்றுக்குக் கீழேயுள்ள வயல்களுக்கும், அருவிநீர் மிக இன்றியமையாதது அன்ருே? அருவி, தன் வேகத்தால் வேங்கை மரத்தின் பூக்களை

உதிர்த்துச் சிதைத்தாலும், அருமையான நீரை அந்த மரத்திற்கு ஊட்டி உயிர்வாழச் செய்கின்றது அன்றோ? கண்காணாத நெடுந்தொலைவில் நீரைச் சேர்த்துக்கொண்டு இந்த அருவி வீழாவிடின் வேங்கைமரத்தின் வாழ்வு யாதாகும்? நீர் இல்லாமல் வாடி உலர்ந்து கருகி மடிந்து போகுமன்றோ? நீர் நிறைந்த மலையருவி, மலையையும் வயல்களையும் வளம் படுத்துகிறது. எங்கேயோ நெடுந்தொலைவிலிருந்து ஓடி வந்து, செங்குத்தான மலையிலிருந்து விழும் அருவியின் நோக்கம்—குறிக்கோள்—மலையையும் வயல்களையும் நீரால் வளம்படுத்திய பிறகே நிறைவேறுகிறது. உயர்ந்த பண்புகளோடு மலைபோல நிற்கும் தலைவன், தலைவியிடம் கொண்ட காதலின் அடையாளமாக இந்த அருவி விளங்குகிறது. வேங்கை மரத்தைத் தலைவியோடு உவமிக்கலாம். குடும்பம் இன்பமாக வாழ்வதற்கும், அக் குடும்பத்தார் தம் சமூகத்தாரையும் வாழ்வித்துத் தொண்டாற்றுவதற்கும், வறுமையால் வாடும் ஏழைமக்களுக்கு உதவி செய்து தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் வாழ்வதற்கும் செல்வம் இன்றியமையாதது. ஆயின், அச் செல்வத்தைச் சேர்ப்பது எளிதான செயலோ? அதைச் சேர்ப்பதற்காகப் படும் துன்பங்கள், கேட்பார்க்கு அச்சம் உண்டாக்குவன: சொந்த நாட்டைவிட்டு, வழிபறி கொள்ளைக்காரர்கள் நிறைந்த வழியில், கதிரவனின் வெப்பம் கொடுமையாகத் தாக்கும் வழியில், பல பிரிவாகப் பிரிந்து மயங்கிக் கிடக்கும் வழியில் தலைவன் செல்லவேண்டும்; அந்த வழியைக் கடந்தவுடன், கொடுமையான பாலை நிலத்தில் செல்ல வேண்டும். குடிக்கும் நீரும் அந்த வழியில் கிடைப்பது அரிது. அதையும் தாண்டி வேற்று மொழிகள் வழங்கும் நாடுகளின் இடையே செல்லவேண்டும். இவ் வழிகளில் சென்று, இடருற்று மாண்டவர்களைப்பற்றிய செய்திகள் தமிழ்நாட்டுக் குடும்பங்களில் உள்ள ஒவ்வொருவருக்கும் தெரிந்திருந்தன. பொருள் சேர்ப்பதற்காகக் கூட்டங்

கூட்டமாகச் செல்லுபவர்களிலும், பலர் வழியிலேயே கள்வரின் வாளுக்கும் வில்லுக்கும் இரையாகி மடிந்து போவார்கள். இது நிற்க. செல்வம் சேர்ப்பதற்காகச் சென்று தங்கும் நாட்டில் என்னென்ன கொடுமைகள் நிகழுமோ? இதையெல்லாம் எண்ண எண்ணத் தலைவியின் மனம் பெருந்துன்பம் அடைகிறது. தலைவன் திரும்பி வருவான் என்று உறுதியாகச் சொல்லமுடியாது. இதை நினைக்கும்போதே தலைவி, தன் நிலைமையையும், ஆதரவற்ற தனித்த நிலையில் தான் உயிர் வாழ்வதையும் எண்ணிக் கலங்குகிறாள்; "தலைவன் திரும்பி வாராவிட்டால் என்ன செய்வது? அவன் உயிருக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால் என்ன செய்வது? அவன் வாராமலே இருந்துவிட, என் பெற்றோர் வேறு இடத்தில் மணம் பேசினால் என் நிலைமை யாதாகும்?" என்றெல்லாம் பலவாறாக எண்ணிக் கலங்குகிறாள். திருமணம் செய்துகொள்வதற்கு முக்கியமான ஒரு தகுதி, தலைவன் செல்வ வளம் உடையவனாக இருக்கவேண்டும் என்பது. எனவே, இங்குக் குறிப்பிட்ட தலைவனும் செல்வம் சேர்க்கவே சென்றிருக்கிறான். அவன் செல்வனாகத் திரும்பிவந்து, தலைவியிடம் தான் கொண்ட அன்பைத் திருமணத்தின் மூலம் உண்மையாக்குவான் என்று கூறித் தோழி தலைவியைத் தேற்ற முயலுகிறாள். தலைவி அதற்கு விடை கூறுகிறாள்: "தலைவன் பிரிந்த காரணத்தை நீ குறிப்பாக உணர்த்தியதற்கு நன்றி. தோழி, நீ நெடுநாள் வாழ்வாயாக! நீ புனைந்துரைத்த இயற்கைக் காட்சிகள் நிறைந்த மலையையுடைய தலைவனோடு நாம் கொண்ட நட்பில், பிரிவு மட்டும் ஏற்படாமலிருந்தால், நம் வாழ்க்கை நன்றாக இருக்கும்; அந்த நட்பும் சிறந்ததாக இருக்கும்." தலைவனின் இன்பத்தில் பங்கு கொள்வதுபோல், அவன் பொருள் தேடுவதற்காகப் பிரிந்து செல்லும்போதும் உடன் சென்று, அவன் செயல் முற்றிலும் கைகொடுத்து, அவனுக்கு நேரும் துன்பங்களைத் தானும் அனுபவித்து,

என்றும் பிரியாது வாழவேண்டும் என்பது தலைவியின் எண்ணம். "தான் இங்கே, தலைவன் அங்கே என்று தனித் தனியாக ஏன் வாழவேண்டும்? ஈருடல் ஓருயிராக இரு வரும் என்றும் பிரியாமல் வாழக்கூடாதா?" என்று அவள் ஏங்குகிறாள்; அன்பிற்குரிய தலைவனை மீண்டும் பார்க்க முடியாமற் போய்விடுமோ என்ற தன் கவலையைத் தன் சொற் களில் வெளியிடுகிறாள். "பிரிவு மட்டும் ஏற்படாமல் இருக்குமாயின் எங்கள் நட்பு எவ்வளவோ நல்லதாக இருக் கும்!"—என்ற சொற்களில் எத்துணைக் கவலை பொதிந்து கிடக்கிறது! கவலை மட்டுமோ! இன்னும் எத்தனையோ எண்ணங்கள் இந்தச் சொற்களில் அடங்கிக் கிடக்கின்றன. இதுகாறும் இங்குக் கூறியவாற்றால், கவிதையிற் கூறப்படும் கருத்திற்கும், வெளியிடப்படும் உணர்ச்சிக்கும் உயிராக விளங்கும் வேங்கை மரத்தின் இன்றியமையாமை தெளி வாகிறது. இதனால்தான் இக் கவிதையைப் பாடிய புலவர், வேங்கையைப் பாடிய பெருங்கதவனார் என்று பொருள் படும் 'வேங்கைப் பெருங்கதவனார்' என்ற பெயரால் அழைக்கப்பெறுகின்றார்.

**தொல் கபிலர் :**

இப் புலவரது இயற்பெயர் 'கபிலர்' என்பதே. சங்க காலத்தில் வாழ்ந்திருந்த புலவர்களில் மிகச் சிறந்தவரான கபிலர் வேறு, இவர் வேறு எனக் காட்டுவதற்காகத் 'தொல்' என்ற அடைமொழி, இவரது பெயருக்குமுன் சேர்க்கப் பெற்றது. இப் புலவர், அகநானூறு 282, குறுந்தொகை 14, நற்றிணை 114, 276, 328, 399 என்ற எண்ணுள்ள பாடல் களைப் பாடியிருக்கிறார். இவற்றுள் நற்றிணை 114-ஆம் பாடலில் மட்டும்* 'தொல்' என்ற சொல் வருகிறது.

இந்த நற்றிணைப் பாடல், களவொழுக்கமுடைய தலைவன் சிறைப்புறமாக வந்து நின்றதை அறிந்த தோழி,

*7-ஆம் வரி.

அச்சம் நிறைந்த வழியில் இரவுநேரத்தில் அவன் அஞ்சாது வருவதுபற்றித் தலைவிக்குக் கவலை மிகுதியாகிறது என்று அவனுக்கு உணர்த்த விரும்பி, நேர்முகமாகச் சொன்னால் அவனது உறுதி இன்னும் மிகுதிப்படலாம் என்று அஞ்சி, அவன் வந்திருப்பதை அறியாமல் தலைவியிடம் பேசுவது போல் அவன் காதில் விழுமாறு பேசித் தன் கருத்தை வெளியிடுவதாக அமைந்துள்ளது. தலைவியின் அச்சமும் கவலையும் நீங்குமாறு விரைவில் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யும்படி தலைவனைத் தூண்டுவதே அவள் நோக்கம்.

"ஈரம் நிறைந்து கடுமையாக விளங்கிய மேகங்களினிடையே உண்டான கடுமையான குரலையுடைய இடியேறு, உயர்ந்து விளங்கும் ஒரு மலையை—பாம்புகள்போல் வளைந்து வளைந்து செல்லும் அருவிகளைக் கொண்டமையால் பாம்பைவிட அழகாகத் தோன்றும் மலையைக் கடுமையாகத் தாக்கியது. (மக்கள் நன்கு அறிந்த, பழைய புராணங்களில் பாம்புகளைத் தனது பகையாகக் கருதி அழிக்கும் தன்மை வாய்ந்ததாகக் கூறப்படும் இடியேறு, பாம்புகள் போல் வளைந்து செல்லும் அருவிகளையுடைய மலையைப் பாம்புகள் வாழும் இடமாக நினைத்துத் தாக்கியது போலும்!) இந்த வழக்கிற்கு ஏற்பப் பாம்புகளின் அழகை யழிக்கவே இடியேறு அந்த மலையின்மீது விழுந்தது எனவும் கருதலாம். ஈரம் உள்ள வழுக்கலான மலைவழியில் தனது பிடியோடு இறங்கிச் சென்ற ஒருயானை, வழுக்கி விழுந்துவிடாமல் நடப்பதற்காகத் தன் துதிக்கையை நிலத்தில் அழுத்தமாக ஊன்றி ஊன்றி நடந்தது. ஆனல், பாவம்! நிலத்தினல் கேடு வரக்கூடாது என்று அது நினைத்தது. வானத்தினல் தீங்கு நேரிடும் என்று அதற்குத் தெரியாது. மலையைத் தாக்கிய அந்தப் பொல்லாத இடி, யானையையும் தாக்கிக் கொன்று வீழ்த்தியது. இதுகண்டு கருநிறமுள்ள இளம்பிடி துன்ப மிகுதியால் அலறியது. இந்த நிகழ்ச்சி நம்மூர்க்கு மிக்க அண்மையில் நேற்றிரவு நடந்தது. தலைவனைப் பற்றியும்

உன் எதிர்காலத்தைப் பற்றியும் எண்ணிக் கவலை மிகுதியால் நான் நேற்றிரவு முழுதும் உறக்கம் கொள்ளாமல் விழித்துக்கொண்டிருந்தேன். களிறு இறந்ததனாலும், பிடி அலறியதனாலும், அதைப் பற்றி ஊரில் மக்கள் பலவாறாகப் பேசியதாலும் எழுந்த ஒலி என் காதில் விழுந்தது. மறுநாட் காலையில் அந்த யானையின் கொம்புகளைத் தனியே எடுத்துப் பெரிய பாறையில் உலர்த்தவேண்டு மென்றும், அதன் பச்சை நிணத்தைத் தனியாக எடுக்கவேண்டு மென்றும், அதன் கால் நகங்களை எடுத்துப் புதைத்து வைக்கவேண்டு மென்றும் நம் ஊரார் பேசினார்கள். யானை இறந்தது ஊருக்கு மிக அண்மையிலேயே ஆதலின், அதன் ஊன் நாற்றம் தெருக்களில் எல்லாம் வீசியது. ஊரில் மூலைக்கு மூலை இதைப் பற்றியே பேசிக்கொண்டார்கள். பேச்சரவம் எங்கும் நிறைந்திருந்தது. இதையெல்லாம் கேட்டுக் கொண்டு விழித்திருந்த எனக்கு அச்சம் மேலிட்டது; மனம் சோர்ந்தது. நேற்றிரவு உண்மையிலேயே இரங்கத் தக்க இரவுதான். (ஊரில் சிறுவர் முதல் முதியவர் வரை எல்லோரும் விழித்துக்கொண்டிருந்தார்கள். அந்த நேரத்தில், இந்த ஊருக்குப் புதியவனாகிய தலைவன் இங்கு வந்தால், யாரேனும் அவனைப் பார்த்துவிடுவார்களே என்ற கவலை ஒருபுறம் என் மனத்தை வாட்டியது. தலைவன் வரும் வழியில், வழுக்கலான பாறைகளும், கொடிய விலங்குகளும், உயிர் வாங்கும் இடியேறும் உள்ளனவே என்ற அச்சம் ஒரு புறம் என்னை வருத்தியது). இத்தகைய அச்சம் நிறைந்த வழியாக ஊராரைப் பற்றியும் கவலைப்படாமல் தலைவன் நேற்று இங்கு வந்தான். (அவன் யார் கண்ணிலாவது பட்டுவிடுவானோ என்று, நான் ஒவ்வொரு விநாடியும் நடுங்கிக்கொண்டிருந்தேன். அப்படி யொன்றும் நிகழாதது நமது நல்ல காலந்தான்! ஆனால், தலைவன் எவ்வாறு திரும்பிச் செல்வான் என்ற கவலை என்னைப் பற்றிக் கொண்டது). நம் ஊர்க்கு அண்மையில் காட்டாறு ஓடு

கின்றதன்றோ? நாம் இளமையில் விளையாடிய அந்த ஆற்றங் கரையில் சிறிதாக மழைத் தூறல் விழும்போதெல்லாம் மழைத் துளிகளால் உண்டான கணக்கற்ற புள்ளிகள் மணலில் அழகாகத் தோன்றும். அந்தக் கரை மிகப் பழமை யானது. ("புள்ளித் தொல் கரை"). காட்டாறு பெரு வெள்ளமாக ஓடுகிறது; அதில் மிக உயரமாக எழும் அலை கள், அந்தப் பழைய கரையின்மீது விழுந்து விசையாகத் தாக்குகின்றன. அந்தக் காட்டாற்றை நினைத்தாலே எனக்கு அச்சமாக இருக்கிறது. (வெள்ளத்தின் வேகத் தால் அதன் பழைய கரை எந்த நேரத்திலும் இடிந்து விடலாம். கரை இடிந்துவிட்டால் என்ன நேரும்? தலை வனை என்றும் காணமுடியாத நிலைமை ஏற்பட்டுவிடும். நீயும் தலைவனும் என்றுமே கூடி இன்புற முடியாத நிலைமை ஏற்பட்டுவிடும். மகிழ்ச்சி கொப்புளிக்கும் இந்த ஊருக்குத்தான் எவ்வளவு கேடு உண்டாகும்? காட் டாற்று வெள்ளத்தாலும், இடிந்த பழைய கரையாலும் வர இருக்கும் கேட்டை உணராமல், இந்த வெள்ளத்திற்குக் காரணமான இடியினால் உயிரிழந்த யானையைப் பற்றி மகிழ்ச்சியோடு பேசி ஊரார் ஆடிப் பாடுகிறார்களே என் பதை நினைக்க எனக்கு வருத்தமாக இருந்தது. தலைவன், தன்னூர்க்குத் திரும்பும்போது, இந்தக் காட்டாற்று வெள்ளத்தை எவ்வாறு தாண்டிச் செல்வான் என்ற கவலை யும் என் மனத்தை வாட்டியது)."

வெள்ளத்தின் வேகத்தால், ஆற்றினது பழைய கரை சிறிதுசிறிதாக இடியும் என்று எண்ணுங்கால் தன் கவலை பெருகியது எனத் தோழி கூறும்போது, அவளது கவலை யுணர்வின் உச்ச நிலையைக் காண்கிறோம். கரையின் பழமையை உணர்த்தும் தொல் (பழைய) என்ற சொல், கவிதையில் அமைந்த கவலையுணர்வை மிகுதிப்படுத்து கிறது. இளமைப் பருவத்தில் தானும் தலைவியும் விளை யாடிய அந்தப் பழைய கரை, இப்போது இடிந்து

சிதைவதை நினைத்துத் தோழி வருந்துகிறாள்; அதே சமயத்தில் தலைவன் எவ்வாறு அந்த ஆற்றைக் கடந்து செல்வான் என்றும் எண்ணிக் கலங்குகிறாள். அவளது கலக்கத்தைக் கூறும் கவிதையின் வரிகள் கருத்தாழ முடையவை. குற்றம் செய்தவனுடைய மனம், தன்னைப் பற்றியே எல்லோரும் பேசிக்கொள்கிறார்கள், என்று நினைக்கும். களவில் எதிர்ப்பட்டுக் கூடிய தலைவனும் தலைவியும் இவ்வாறே, பிறர் தம்மைப்பற்றிப் பழித்துப் பேசுகிறார்கள் என்று நினைக்கிறார்கள். ஈண்டு இடியேறானது பழிகூறுபவரையும், ஆண் யானையையும் பெண்யானையை யும் தலைவன் தலைவியரையும் குறிக்கும். இடியோசையினால் யானை இறத்தல், அதன் கொம்புகளை உலர்த்தல், அதன் நகங் களைப் புதைத்தல் – இவையெல்லாம் ஊரார் தலைவனுடைய உயர்ந்த குணங்களை மதியாமல் அவனைப்பற்றித் தாழ்வான பழிச்சொற்களைப் பேசுவதைக் குறிக்கும். நாளுக்கு நாள் வளரும் தலைவன்தலைவியரின் காதலைக் காட்டாற்று வெள் ளம் குறிக்கும். தலைவியின் கூடவே பிறந்து அவள் குணங் களில் கலந்திருந்த நாணத்தை—அவள் மனத்தில் தோன் றிய உணர்ச்சிகளுக்குப் பலியாகிவிடும் நிலையில் இருந்த நாணத்தை வெள்ளத்தால் சிதையும் பழைய கரை குறிப் பிடும். இந்தக் கருத்தை உட்கொண்டு நோக்கும்போதும் ‘தொல்’ என்ற சொல்லின் ஆழம் புலப்படுகிறது. இத் தகைய ஆழம் உடைமையினால்தான், இக் கவிதையில் வெளி யிடப்படும் இருவித உணர்வுகளைப் பிணைக்கும் பாலமாகத் ‘தொல்’ என்ற சொல் அமைந்தது. இக் கவிதையைப் பாடிய புலவரும் இச்சிறப்பால், ‘தொல் கபிலர்’ என்று அழைக்கப்பெற்றார்.

**மாலை மாறன் :**

இப் புலவரது இயற்பெயர் **மாறன்** என்பதே. இயற் கையைவிட மேம்பட்ட ஆற்றலையுடைய தெய்வம், இந்த

உலகத்தில் உள்ள உயிர்களினின்றும் மாறி வேறுபட்ட தாகவே இருக்கும். எனவே, **மாறன்** (மாறிய உருவ முடையவன்) என்னும் பெயர் ஏதேனும் ஒரு தெய்வத்தின் பெயராக அமைதற்குத் தகுதியுடையது. பாண்டிய மர பினர்க்கு **மாறர்** என்ற பெயர் அமைந்ததும், அவர்கள் சாதாரண மனிதரையும்—பிற மன்னர்களையும்விட உயர்ந் தவர்கள், மாறுன பண்பும் வலிமையும் உடையவர்கள் என்ற காரணத்தாலேயே எனக் கருதலாம். அல்லது, மன்னரைக் கடவுளாகக் கருதிப் போற்றிய மக்கள், கடவு ளது பெயரையே மன்னர்க்கும் வழங்கி அவர்களைச் சிறப் பித்தார்கள் ஆதலின், தெய்வத்தின் பெயராகிய ‘மாறன்’ என்பது, பாண்டிய மன்னர்க்கும் குடிப்பெயராக அமைந் தது என்றும் கருதலாம். பிற்காலத்தில், நாட்டில் வாழ்ந்த புலவர், அரசியல் ஆணையாளர் முதலிய முக்கியமான மனி தர்களுக்குப் பழங்கால மன்னர்களின் குடிப்பெயர்கள் சிறப்புப் பெயர்களாக—பட்டப்பெயர்களாக—அளிக்கப் பட்டன. இவ் வழக்கம் சங்க காலத்திலேயே இருந்து வந் தது என்பது, அண்டர்மகன் குறுவழுதியார்,* கோழியூர் கிழார் மகனர் செழியனர்,† செம்பியனர்,‡ நல்வழுதியார்§ முதலிய சங்கப் புலவர்களின் பெயர்களால் தெரியவரு கிறது. முன்னமேயே குறிப்பிட்டவாறு, ‘ஆர்’ என்னும் சிறப்புக் குறிக்கும் விகுதி, மன்னர்கள், குறுநில மன்னர் களின் பெயர்களோடு சேர்க்கப்பெறுத வில்லை. எனவே, மேலே கண்ட பெயர்கள் எல்லாம் மன்னர்களல்லாத பிற மக்களின்பெயர்களே என்பது தெளிவு. ஆயின், நாம் இங்கு ஆராய்வதற்குமேற்கொண்ட புலவரதுபெயரில்‘ஆர்’விகுதி காணப்படவில்லை. ஆதலின், இப் புலவர் ஒருகுறுநில மன்ன ராக இருந்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

---

*அகம், 150, 228 முதலியன. †நற், 383. ‡நற், 102.
§பரிபாடல், 12.

மாறன் என்னும் பெயருடைய பிறரினின்றும் இவரைப் பிரித்து அறிதற்காக, **மாலை** என்னும் அடைமொழி இவரது பெயருக்கு முன்னால் சேர்க்கப்பெற்றுள்ளது. நமக்குக் கிடைக்கும் சங்கப் பாடல்களில், குறுந்தொகை 245-ஆம் பாடல் ஒன்றே இப் புலவரது பாடலாகக் காணப்படுகிறது. இவர் பல பாடல்கள் பாடியிருக்கலாம்; ஆயின் இன்று கிடைப்பது ஒரு பாடலே. **மாலை** என்ற சொல் அந்தப் பாடலில் வருகிறது. இது போன்ற சிறப்பு அடைமொழி பெற்ற பிற புலவர்களைப் போலவே, மாறன் என்ற புலவருக்கும் ஒரு தகுதியான அடைமொழி தரவேண்டும் என்று முயன்ற மக்கள், அவர் பாடிய இப் பாடலில் உயிர்போல அமைந்திருக்கும் சொல், அல்லது சொற்றொடர் எது என ஆராய்ந்திருப்பார்கள்; அந்த ஆராய்ச்சியில் வெற்றியும் கண்டிருப்பார்கள். அவர்கள் கண்ட சொல், '**மாலை**' என்பதே. எனவே, பிற புலவர்களைப்போலவே இப் புலவரும், தாம் உணர்ந்த உணர்வையும் எண்ணிய எண்ணங்களையும் ஒருசேரத் தன்னகத்து அடக்கிக் காட்டும் ஒரு சொல்லை யமைத்துக் கவிதைபாடும் குறிக்கோளையுடையவர்; கவிதையில் கருத்தாழம் நிறைந்த ஒரு சொல்லைப் பெய்து பாடும் கொள்கையுடையவர் என்பது தெளிவு. இப் புலவர் தமது பாடலில் அமைத்துக் காட்டும் சூழ்நிலையில் '**மாலை**' என்னும் சொல் பெற்றிருக்கும் கவிதைச் சிறப்பு யாது என்பதை இனி நாம் ஆராய்தல் வேண்டும்.

தலைவனும் தலைவியும் களவிற்கூடிக் காதல் கொண்டார்கள். ஆனால் பலரறிய அவர்கள் திருமணம் செய்துகொள்ளவில்லை. திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தமையால், வழக்கம்போல இரவுக் காலத்தில் வந்து தலைவியைக் கூடத் தலைவனால் முடியவில்லை. அவனைப் பிரிந்திருக்க நேர்ந்ததனால், அவனுக்கு யாது நேர்ந்ததோ எனத் தலைவி கவலைப்பட்டாள். அவனோடு கூடி

அளவளாவாமல் இருந்ததனாலும் அவளுக்குக் கவலை வளர்ந்தது. உரிய நேரத்தில் உணவுகொள்ளவும் விரும்பாமல், இரவு நேரத்தில் துயில்கொள்ளவும் முடியாமல் வருந்தி வருந்தி அவள் மெலிந்தாள். தலைவியின் தாங்கவொண்ணாத் துயரத்திற்குக் காரணமான கவலையை—பலவாறு எண்ணி வருந்துவதற்கு இடமான கவலையை—அவளுடைய தோழி உணர்கிறாள்; அன்பு மிகுதியால் தானும் கவலைப்படுகிறாள்; 'தலைவனுடைய பிரிவினால் தலைவி இவ்வாறு துரும்பாய் மெலிந்துவிட்டாளே, இவள் நிலை இனி யாது ஆகுமோ?' என்று கலங்குகிறாள். தனக்காக அன்புடைத் தோழி வருந்துவதைக் கண்ட தலைவி அவளைப் பார்த்துச் சில கூறுகிறாள்: அவள் பேச்சே இப் புலவரது கவிதை மனத்தில் பாடலாக வடிவெடுக்கிறது.

"கடற்கரையில் உள்ள கானலில் நாம் விளையாடிய போது, நம் தோழியர் எல்லோரும், எனக்கு ஆய்ந்து ஆய்ந்து ஒப்பனை செய்து என்னுடைய அழகே மிகச் சிறந்தது எனக் கூறினர். அந்த அழகை இப்பொழுது நான் இழந்துவிட்டேன். ஆனால், அதற்காகக்கூட வருந்தவில்லை; வாளைப்போன்ற கூர்மையான ஓரங்களையுடைய தாழை மலர்கள் மாலை போல் வரிசையாகப் பூத்து, வரிசையாக உள்ள வேல்களை நாட்டிய வேலிபோலத் தோன்றும் கடற்கரையையுடைய நெய்தல் நாட்டுத் தலைவனாகிய நம் காதலன், இப்பொழுது தன் பிரிவினால் செய்துள்ள கொடுமை என் மனத்தளவில் நில்லாமல் பலருக்கும் தெரிந்துவிடுமே என்றுதான் வருந்துகிறேன். கழிந்தொழிந்த என் அழகைவிட இதுவே என் மனத்தைப் பெரிதும் வாட்டுகிறது."

இங்கே கடற்கரைக் கானலில் பூத்த தாழை மலர்கள் 'மாலை' போல் மலர்ந்துள்ளன என்று புனைந்துரைக்கப் படுகின்றன. "வாள்போல் வாய கொழுமடல் தாழை மாலை வேல் நாட்டு வேலியாகும்" என்ற அடியைக்

காண்க. தாழைமலரின் வரிசை ஒரு மாலையாக உருவகிக்கப்படுகிறது. கடற்கரையை வானத்திலிருந்து பார்ப்பவர்க்கு அஃது அளிக்கும் காட்சியை இந்த அழகான உருவகம் சித்திரிக்கிறது. மாலையாக முதலில் உருவகிக்கப்பெற்ற தாழை மலர்வரிசை, மீண்டும் வேல்களின் வேலியாக—வேல் வேலியாக—உருவகிக்கப்படுகின்றது. கலைமனத்தில் இயற்கைப் பொருள்கள் காட்டும் இந்திரஜாலம் போலும் இது! கண நேரத்தில் மாறி மாறித் தோன்றும் தாழைமலர்களின் காட்சி ஈது. (எல்லோருக்கும் இது போன்ற இந்திரஜாலக் காட்சிகள் தோன்றும் என்று எண்ணிவிடாதீர்கள்; இக் காட்சி கலைமனம் வாய்க்கப்பெற்ற புலவர்களுக்கு மட்டுமே கிடைக்கக் கூடியது). வடமொழி, தென் மொழிகளில் அணியியல் கற்கும் மாணவர்கள், இவ் வகையான தோற்றங்களை யமைத்துப் பாடும் கவிதையழகு, 'ரூபகாரூபகம்' அல்லது 'உருவக உருவகம்' என்னும் பெயருடையதென அறிவார்கள்.* புலவர் மாறனார் பாடும் கவிதையில் வெளிப்படையாகத் தோன்றும் பொருளில் கவிதைப் பண்பு உள்ளது என்றாலும் அக் கவிதையினுள் புதைந்து மறைந்து கிடக்கும் ஒரு கருத்துக் கவிதைப்பண்பு நிறைந்ததாய், கலையழகு மிளிர்வதாய்த் திகழ்கிறது. "அழகும் மணமும் உள்ளனவாய் மலர்ந்த தாழை மலர்கள், கொடுமையான, கூர்மையுள்ள வேல்களால் அமைத்த வேலிபோல் தோன்றுகின்றன. தலைவனைப்பற்றி நாம் கொண்டுள்ள கவலையாலும், அவன் ஒருகால் வாராமலே இருந்துவிடுவானோ என்று தோன்றும் ஐயத்தாலும், அவன் நம்மைவிட்டுப் பிரிந்தது, வழக்கம் போல் நம்மை வந்து கூடாதது, தன்னைப் பற்றி நமக்கு அறிவிக்காதது—இவையெல்லாம் மிக்க கொடுமையான செயல்களாக நமக்குப் படுகின்றன. ஆனால், இச் செயல்

* தண்டி அலங்காரம் : சூத், 35 : 10.

கள் கொடுமையானவையாகத் தோன்றுகின்றனவே அன்றி, உண்மையில் அத்தகையவை அல்ல. தாழைமலர் மிகவும் மென்மையானது ; ஆனால், வாள்போன்ற அதன் வெளித்தோற்றம் நம்மை அச்சுறுத்துகிறது. அதுபோல, நல்ல நோக்கத்தோடுதான் தலைவன் இத்துணைநாள் பிரிந்திருக்கிறான். என்றாலும், அவனுடைய வெளிப்படையான செயல்கள் கொடுமை நிறைந்தவைபோல் தோன்றுகின்றன. உண்மையில் தாழைமலர்கள் மெல்லியனவாய், நன்மணமுள்ளனவா யிருத்தல்போல அவன் மிக நல்லவன் ; அவனுடைய பண்புகள் நல்லவை. அவன் ஒன்றன்பின் ஒன்றாக மாலைபோல் செய்த செயல்கள் நம்மைச் சுற்றிலும் கொடுமையான தோற்றத்தோடு வட்டமிடுகின்றன. அவன் பலவாறாக முயல்வதெல்லாம் நம்மைத் தன் வாழ்க்கைத் துணையாகப் பெறுவதற்கே; நம்மை அடைவதுதான் அவனது குறிக்கோள். நமக்காக—நம் இன்ப வாழ்விற்காக—நம் இல்லற வாழ்விற்காக அவன் பலவாறு முயன்று பொருளீட்டச் சென்றிருக்கிறான். அதனால், அவனது பிரிவை நான் பொறுத்துக்கொண்டிருக்க முடியும். அவனது தியாக உணர்ச்சியை எண்ணி, அவனுடைய நல்ல மனத்தை எண்ணி, அவன் பிரிவினால் உண்டாகும் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டிருக்க முடியும். அன்புள்ள தோழி! எனக்காக நீ கலங்குதல் வேண்டா,'' என்று கூறும் தலைவியின் குரல், கவிதை வரிகளின் மேற்பரப்பில் பார்ப்பவர்க்குக் கேளாது; உள்ளே நுழைந்து, மூழ்கிக் காண்பவருக்குத்தான் கேட்கும். அவ்வாறு மூழ்கிச் சென்று தலைவியின் அகமனம் எழுப்பும் குரலைக் கேட்கத் துணைசெய்வது மாலையாகவும், வேல் வேலியாகவும் உருவகிக்கப்பட்ட வரிசையான தாழைமலர் மடல்களின் தோற்றமே. 'மாலை' என்ற சொல், அக் கவிதையில் அமைந்த அமைப்பின் சிறப்பு இப்போது தெளிவாகிறது.

**வன்பரணர் :**

**பரணர்** என்பது இவருடைய இயற்பெயர். பரண் என்னும் சொல் இன்று, காவல் மேடை அல்லது உயர்ந்த இடத்தில் அமைந்த குடில் அல்லது விறகு முதலியன போட்டு வைப்பதற்கு அடுக்களையில் அமைத்துக்கொள்ளப்படும் மேற்பரப்பு என்ற பொருளில் வழங்குகின்றது. பரணில் அமர்ந்திருக்கும் தெய்வத்திற்குப் **பரணர்** என்பது பெயராக இருந்திருக்கலாம். இத் தெய்வத்தின் பெயரால் அழைக்கப் பெற்ற இரு புலவர்கள் சங்ககாலத்தில் இருந்தனர். அவர்கள் **பரணரும், வன்பரணரும்** ஆவர். பரணர் என்ற புலவரினின்றும் பின்னவரை வேறு பிரித்தறிவதற்காக, அவரது பெயர் **வன் பரணர்** என அடைமொழி சேர்த்து வழங்கப்பெற்றது.

வன் பரணர் நற்றிணையில் 374-ஆம் பாடலும், புறநானூற்றில் 148, 149, 150, 152, 153, 255 எண்ணுள்ள பாடல்களும் பாடியுள்ளார். **'வல்'** என்னும் சொல் அமைந்த **'வல் வில்'** என்னும் சிறு சொற்றொடர் புறநானூறு 150*, 152† எண்ணுள்ள பாடல்களில் வருகிறது. இச் சொற்றொடரில் உள்ள **'வல்'** தான், பரணர் என்னும் பெயருக்கு அடைமொழியாகச் சேர்ந்தபோது, **'வன்'** என மாறியமைந்தது. வன்மையாவது ஆற்றல்; ஓரி என்பானது வில், பல விலங்குகளை அழித்த வன்மையைச் சித்திரிக்கும் புறநானூற்றுப் பாடலில்தான்‡ அவனுடைய வன்மை நன்கு விளக்கப்படுகிறது. அவனது வில்லினின்றும் பாய்ந்து சென்ற அம்பு, யானையின் ஒரு புறத்தில் பாய்ந்து உடலினுள் வேகமாக ஊடுருவிச் சென்று அதைக் கொன்று வீழ்த்தியது; பின்பு அதன் மறுபுறத்தின் வழியாக வெளிப்பட்டு ஒரு புலியின் உடலில் பாய்ந்து, அது வாய் பிளந்து மடியுமாறு செய்தது; இதனுடன் தீர்ந்துவிடவில்லை அந்த அம்பின் விரைவு; புலியைக் கொன்றபின், உட்டொளை

---

*7-ஆம் வரி. †6-ஆம் வரி. ‡152.

யுடைய கொம்புகளும் புள்ளிகளையுடைய உடலும் கொண்ட ஓர் ஆண் மானையும், வலிய தலையையுடைய பன்றியையும் கொன்று வீழ்த்தியது. கடைசியாக அந்தப் பொல்லாத அம்பு, ஒரு புற்றைத் தொளைத்து உள்ளே பாய்ந்து, அங்கே வாழ்ந்த உடும்பினது உடலிற் பாய்ந்தது. ஓரி வேட்டை யாடிப் பல விலங்குகளைக் கொன்று வீழ்த்தும் முறையைக் கண்டு புலவர் வியந்தார். வியந்தவர், இந்த வியப்பையும் அவனது வில்லாற்றலின் திறமையையும் தமது கவிதையில் வெளிப்படுத்தலானார். அவன் கண்மூடித் திறப்பதற்குள் குறி பார்த்துப் பல அம்புகள் எய்து, பல விலங்குகளைக் கொல்லுகிறான். பார்ப்பவர்க்கு ஓர் அம்புகொண்டே எல்லா விலங்குகளையும் அவன் கொன்று வீழ்த்துவதுபோல் தோன்றுகிறது. அவன் கைகள் அத்துணை விரைவாகச் செயலாற்றுகின்றன. கவிதையில் அவனது ஆற்றல் பற்றிக் கூறும் அடிகளுக்குச் செம்பாகமாகப் பொருள்கொண் டால், அழகற்ற, பொருளற்ற உயர்வு நவிற்சி என்றுதான் சொல்லத் தோன்றும். ஓரியினது வேட்டைத் திறமையைக் கண்டு வியந்த வியப்பையே புலவர் அந்த அடிகளில் கவிதையழகோடு வெளியிடுகிறார். இதனால் 'வல்' என்ற சொல், கவிதைப் பண்பு நிறைந்ததாக உள்ளது ; புலவருக் குச் சிறப்பு அடைமொழியாக அமைந்து, அவரை மற் றொரு பரணரிடமிருந்து வேறு பிரித்துக்காட்டும் சிறப் பையும் பெற்றுள்ளது.

**விழிக்கட் பேதைப் பெருங்கண்ணனார் :**

இப் பெயர், நற்றிணை—242-ஆம் பாடலின் ஆசிரியரது பெயர். கிருஷ்ண : என்ற வட சொல்லின் திரிபு என்று கருதப்படும் கண்ணன் என்பது அவரது இயற்பெயர் என்பர். செங்கணன் (செங்கணான் உலகு) என்பது போன்ற சொற்களில், கடவுள், மலர்ந்த அழகிய கண்களையுடையவ ராகக் குறிக்கப்படுகிறார். கடவுள், உயிர்களிடத்தில் பரந்த அருள் உடையவர் ; அவருடைய அருளை வெளிப்படுத்துவது

கண் என்ற கருத்தை உட்கொண்டு செங்கணுன் என்று அவர் அழைக்கப்படுகிருர். இந்தக் கருத்தைக்கொண்டு பார்க்கும்போது கண்ணன் என்பது தமிழ்ச் சொல் ஆகிறது. பழங்காலத்தில் கண்ணன் என்ற பெயர் பரந்த வழக்குடையதாக இருந்தது. இன்றும் அவ்வாறே இருக்கிறது. சைவ சித்தாந்த மகா சமாஜத்தாரின் சங்க இலக்கியப் பதிப் பின்படி, கண்ணன் என்ற பெயருடைய 34 புலவர்கள் சங்ககாலத்தில் இருந்தனர் என்பது அறியப்படுகிறது.*

பெருங்கண்ணனுர், இளங்கண்ணனுர் என்னும் பெயர் கள் சங்க இலக்கியத்துள் காணப்படுகின்றன. அப் பெய ருடையவர்களுள் முன்னவர் வயதில் மூத்தவராகவும், பின் னவர் வயதில் இளையவராகவும் இருந்திருத்தல் வேண்டும். அவர்களின் வயதைக் குறிக்கும் அடைகளால் அவர்கள் பிரித்தறியப்பெறுகிருர்கள். பெருங்கண்ணனுர் என்ற பெயர் தாங்கியவர்களே பலர் இருந்திருக்கிருர்கள் : 1. பெருங்கண்ணனுர், 2. மதுரை மருதங்கிழார் மகனுர் பெருங்கண்ணனுர், 3. மருங்கூர் கிழார் பெருங்கண்ணனுர், 4. விழிக்கட் பேதைப் பெருங்கண்ணனுர் என்னும் பெயர் களை நோக்குக. இவருள் இரண்டாமவர் தம் தந்தையாரின் பெயரைத் தமக்கு அடைமொழியாகக் கொண்டுள்ளார் ; அதனுல் பிற புலவர்களிலிருந்து வேறு பிரித்தறியப்பெறு கிருர். மூன்ருமவர் தமது ஊரின் பெயரை அடைமொழி யாகக் கொண்டுள்ளார். நான்காமவரும் இப்பொழுது ஆராய்வதற்கு எடுத்துக்கொண்ட புலவரு மானவரின் பெயருக்கு அடைமொழியாக, அவரது கவிதையில் அமைந்த அழகிய சொற்ருெடர் அமைந்துள்ளது. முதலா மவர் எவ்வித அடைமொழியும் பெருமல் இருப்பதனுலேயே வேறு பிரித்தறியப்பெறுகிருர். இனி, நாம் ஈண்டு எடுத் துக்கொண்ட பெயரை ஆராய்வோம் :

---

*சங்க இலக்கியம் - பக்கம், 1431-1432.

இப்புலவர் பாடிய நற்றிணைப் பாடல், தான் மேற்கொண்டு சென்ற போர்த்தொழிலை வெற்றியோடு முடித்துத் தலைவியிடம் மீண்டுவருவதாகக் குறித்திருந்த கார்காலத் தொடக்கத்தில் திரும்பிவரும் தலைவன் தேர்ப்பாகனைப் பார்த்துச் சொல்வதாக அமைந்தது :

“பிடவம் தன் இலைகளையெல்லாம் உதிர்த்துவிட்டுக் குளிர்ச்சி வாய்ந்த அரும்புகள் நிறைந்து அழகுற விளங்குகிறது. புதலின்மேற் படர்ந்த செம்முல்லைக் கொடிகள் மலர்ந்திருக்கின்றன. கொன்றைமரம் பொன்போன்ற பூக்களோடு விளங்குகிறது. காயாமரத்தின் குறுகிய கிளைகள் நீல மணிபோன்ற பல மலர்களையுடையனவாய் அடர்ந்து அழகுறத் தோன்றுகின்றன. கார்காலம் இவ்வாறு தொடங்கிவிட்டது. தேர்ப்பாக! இந்தக் காலை நேரத்திலேயே தலைவியை நான் அடையுமாறு, தேரை விரைவாகச் செலுத்துக. அதோ பார்! பயிர்செய்யமாட்டாத பாழ்நிலம் இப்பொழுது பெய்த மழையால் விரைவாகத் தன் இயல்பு மாறி நன்னிலமாகிறது. அந்த நிலத்தில் மான் கூட்டம் ஒன்று செல்கிறது. அக் கூட்டத்தில் ஒரு பெண் மான், வியப்போடு விழித்து நோக்கும் கண்ணையுடைய தன் குட்டி, கூட்டத்தை விட்டுப் பிரிந்து ஓடுவதைப் பார்த்துத் தானும் அதன் பின்னல் ஓடுகிறது. அவை கூட்டத்தை விட்டு நெடுந்தொலைவு சென்றுவிட்டதை அறிந்த ஆண்மான் அன்புநிறைந்த நெஞ்சத்தோடு அவற்றைத் தேடி ஓடுகிறது.”

பேதை என்பது, இளம் பெண் குழவியைக் குறிக்கும்; விழிக்கண் என்பது வியப்போடு அகல விரித்துப் பார்க்கும் கண் எனப் பொருள்படும். இக் கவிதையில், பருவம் மாறியதால் இயற்கையில் தோன்றிய அழகைக் கண்டு வியந்து நோக்கும் மானின் இளங்குழவி, வைத்த கண் வாங்காமல் பார்க்கும் குழந்தையோடு ஒப்பிடப்படுகிறது. இந்தப் புனைந்துரை அழகாக விளங்குவது மட்டுமன்றித் தலைவ

னுடைய மனைவியையும் குழந்தையையும் பற்றிக் குறிப்பாக உணர்த்துவதாகவும் உள்ளது. கார்காலத்தில் பெய்யும் மழையைக் கண்டு மகிழும் தன் குழந்தையின் வியப்பு நிறைந்த கண்கள் தலைவனுடைய நினைவில் எழுகின்றன. இந்தக் காட்சியைத்தான் அவன் தன் முன்னுல் சென்ற மான் கூட்டத்தில் கண்டான். இந்த உண்மை, அவன் மானின் குழவியை 'விழிக்கண் பேதை' என அழைப்பதாலேயே தெளிவாகிறது. இஃது உருவகத்தைவிட மேம்பட்ட தொன்றுகும். தலைவனது மனம், தன்னை யறியாமல் தலைவன் மறந்ததை நினைப்பூட்டுகிறது. குழந்தையின் பேதைக் குணத்தை மான்குழவியின்மேல் ஏற்றி, அதைப் பேதைக் குணமுடைய குழவியாகத் தலைவன் உணர்கிருன். தலைவனுடைய இந்த மனநிலையை நன்கு உணர்ந்து, 'விழிக்கண் பேதை' என்ற சொற்ருெடரால் அதை வெளிப்படுத்திய காரணத்தால்தான் இப் புலவர் 'விழிக்கண் பேதை' யைப் பாடிய சிறப்புடைய பெருங்கண்ணனர்—விழிக்கண் பேதைப் பெருங்கண்ணனர் என்று அழைக்கப்பெற்ருர்.

---

## 6. விரிவான பொதுவகையில் அமைந்த இலக்கியச் சிறப்புப் பெயர்கள்

விரிவான பொதுவகையில் புலவர்கட்கு அமைந்த சிறப்புப் பெயர்களைப்பற்றி இனி நாம் ஆராய்வாம். இங்கும் சங்ககாலக் கவிஞர்கள் அவர்களுடைய இலக்கியத் திறமையால் வேறு பிரித்தறியப்பெறுகிருர்கள்; ஆனுல், அவர்களால் கவிதையிற் பயன்படுத்தப்பட்ட சிறப்புச் சொற்களோ, அன்றிச் சொற்ருெடர்களோ பற்றி அல்ல; அவர்கள் பாடிய பாடல் அல்லது பாடல்களின் பொதுவான போக்கு அல்லது வழியைப்பற்றியே ஆம்.

## அ

அத்தகைய பெயர்களுள் இங்கு முதலில் ஆராய எடுத்துக்கொண்ட பெயர்க்குழு தமிழ் மக்களின் ஐந்திணை வாழ்க்கை மரபைப் புலப்படுத்துவதாகும். தமிழர்களின் ஐந்திணை வாழ்க்கைக்கும், அவர்கள் நிலத்தை ஐந்துவகை யாகப் பிரித்து அமைத்ததற்கும் நெருங்கியதொடர்பு உண்டு. (1) மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி யென்றும், (2) காடும் காடு சார்ந்த இடமும் முல்லை என்றும், (3) கடற் கரை, உப்பங்கழி ஆகிய இவையும் இவற்றைச் சார்ந்த இடங்களும் நெய்தல் என்றும், (4) வயல்களும், அவைகள் சூழ்ந்த நகரங்கள், ஊர்கள் ஆகிய இடங்களும் மருதம் என்றும், (5) குறிஞ்சியும் முல்லையும் திரிந்த பாழ் நிலம் பாலை என்றும் அழைக்கப்பெறும்.

இந்த ஐந்து வகை நிலங்களுள் ஒவ்வொன்றிலும் ஒவ் வொரு வகையான அக ஒழுக்கம் வகுத்துக்கொண்டு சங்க காலப் புலவர்கள் கவிதை இயற்றியுள்ளார்கள். இந்த ஒழுக்கத்தை 'உரிப்பொருள்' என்று அவர்கள் வழங்கி யிருக்கிறார்கள். ஒவ்வொரு நிலத்திற்கும் அக ஒழுக்கத்திற்கு ஏற்பப் புற ஒழுக்கமும் உண்டு.

மலையும் மலைசார்ந்த இடமும் ஆன குறிஞ்சியே, கூதிர்கால நள்ளிரவில், காதலர், முதல் முதலில் களவொழுக் கத்தால் கூடும் இடமாகும். இதனோடு தொடர்புடைய புறவொழுக்கமும், இதே குறிஞ்சியில்தான் நடைபெறும். இப் புறவொழுக்கம் போர் தொடங்கும் மன்னர்களின் வீரர்கள், பகைவர் நாட்டிற் புகுந்து, பசுக் கூட்டங்களைக் கவர்ந்து வந்து, பாதுகாவலான இடத்தில் நிறுத்துவதான 'வெட்சி' எனப்படும்.

தலைவன் பிரிந்து நெடுநாள் ஆகிவிட்டால், தனிமைத் துயர் பொறுக்கலாற்றாமல் வருந்தும் தலைவி, அவன் பிரிவை நினைந்து எற்பாட்டு நேரத்தில் இரங்குதற்கு நெய்தல் நிலம்

இடமாகும். பிரிவினுல் துன்புறும் காதலரின் இரங்குத லாகிய அக ஒழுக்கம் புலவர்களின் புலனெறி வழக்கில் நெய்தல் எனப் பெயர் பெற்றது. இதற்கேற்ற புற ஒழுக் கம் நெய்தல் நிலத்தில் மன்னர்களுக்கிடையே தும்பைப் போர் நிகழ்தலாகும். இதனைத் 'தும்பைத் திணை' யென்று புலனெறி வழக்கம் உணர்த்தும்.

வேனிற்கால நடுப்பகலில் வெம்மை நிறைந்து விளங் கும் பாலைநிலம் காதலரின் பிரிவு ஒழுக்கத்திற்கு இடமாகும். பொருள் சேர்ப்பதற்காகவோ, கற்றுணர்தற்காகவோ, அரசனுக்கு உதவி செய்வதற்காகவோ, நாட்டில் அமைதி யுண்டாக்குதற்காகவோ வேண்டிப் பிரியும் தலைவன் சாதா ரணமாகப் பாலை நிலங்களின் வழியாகச் செல்வான். புற வாழ்க்கையில் இந் நிலத்திற்கு ஏற்புடையதாக அமைந்த ஒழுக்கம் வாகையாகும். 'வாகை' என்ருல் வெற்றி என்று பொருள். இயற்கை நமக்கு விதித்த கடமைகளை நிறை வேற்றும்போது, அதே இயற்கையின் பிற ஆற்றல்களோடு நாம் போராடியே தீரவேண்டியிருக்கிறது. அந்தப் போராட்டத்தில் நாம் பெறும் வெற்றியே வாகையாகும். வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலிருப்பவர்க்கும் ஒவ் வொரு வகையான போராட்டம் உண்டு. அதில் அவர் பெறும் வெற்றியும் வாகை எனப்படும்.

முல்லை நிலம் என்பது அடர்ந்த மரங்களும் செடி கொடிகளும் நிறைந்த காட்டு நிலமாகும். கார்கால மாலை வேளைகளில் காடெங்கும் உள்ள மரங்களும் செடிகொடிக ளும் அழகாக மலர்ந்து தோன்றும். அமைதியான, கற்பு நிறைந்த குடும்ப வாழ்க்கைக்கு அந்நிலம் ஏற்ற இடமாக அமைகின்றது. இங்குத் தலைவி தன் கொழுநனேடு அமைதி யான இல்வாழ்க்கை நடத்துவாள்; அல்லது, கார்காலத் தொடக்கத்தில் திரும்பி வருவதாக உறுதி கூறி வெளி நாடு சென்ற கொழுநனின் வரவை மகிழ்ச்சியோடு எதிர்நோக்கி யிருப்பாள். 'தலைவன் நிச்சயமாக வெற்றியோடு திரும்பு

வான்; குறித்த காலத்தில் திரும்புவான்' என்று அவள் உறுதியாக நம்பியிருக்கின்றமையால் அவள் மனத்தில் கவலைக்கு இடமில்லை; அமைதியே நிலவும். முல்லை நிலத்தின் புற வாழ்க்கை 'வஞ்சி' எனப்படும். கொடுங்கோல் மன்னர்களின் கொடிய ஆட்சியால் துன்புறும் நாட்டின் மீது ஓர் அரசன் படை எடுத்துச் செல்வது வஞ்சியாகும். மகிழ்ச்சி நிறைந்த குடும்ப வாழ்க்கையால் குறிக்கப்படுகின்ற அமைதியையும், வளத்தையும், பண்பாட்டையும் அக்கொடுங்கோலரின் நாட்டில் நிலவச் செய்வதற்காகவே இந்தப் படையெடுப்பு நடக்கிறது. இம்மாதிரி படையெடுத்துச் செல்லும்போது, யானை, குதிரை, தேர் முதலியவற்றை நடத்தும் வீரரும் பிற காலாள் வீரரும் நாட்டைச் சூழ்ந்துள்ள காடுகளிலேயே பாடிவீடு அமைத்துத் தங்குவது வழக்கம்.

வயலும் வயல் சூழ்ந்த பெரிய ஊர்களும், மாட மாளிகைகள் நிறைந்த நகரங்களும் மருத நிலமெனப்படும். அவற்றில் வாழும் ஆண் மக்கள் பலவகைக் கடமைகளை உடையவர்கள். அக் கடமைகளைச் செய்தாலன்றி அவர்கள் அங்குப் பெருமையோடும் சிறப்போடும் வாழமுடியாது. வாழ்க்கை நடத்துவதற்குச் செய்யவேண்டும் கடமைகளே பலவாக இருக்கும். இந்தக் கடமைகளைச் செய்யும்போது அவர்கள் அடையும் துன்பமும் கொஞ்சம் அன்று. குறிப்பாகச் சொன்னால், அவர்களுடைய உடலுக்கும் உள்ளத்திற்கும் அலைவு மிகுதியும் உண்டு. இந்த 'அலைவு' அக வாழ்க்கையில், தலைவனது ஒழுக்கத்தைப் பற்றித் தலைவியின் மனத்தில் எழும் போராட்டத்தைக் குறிக்கும். எப்போதும் வீட்டில் தங்காமல், ஓய்வில்லாமல் வெளியில் சுற்றும் தலைவன், ஒருவேளை பரத்தையர்களின் வலையில் விழுந்துவிட்டானோ என்று தலைவியின் மனத்தில் ஓர் ஐயம் எழும். அவ்வளவுதான்! அங்குப் போராட்டம் தொடங்கிவிடும். தலைவி, பண்பாடு நிறைந்த மென்மை

நெஞ்சம் உடையவளாதலால் போராட்டம் வளரும். தலைவியின் ஒருமனம், தலைவனைப் பழித்துக் கூறும்; ஒவ்வொரு நாளும் பரத்தையரின் இல்லத்திற்குச் சென்று, மறு நாள் பொழுது விடியுமுன் வீடு திரும்புகிறான் என்று குற்றஞ்சாட்டும். மற்றொரு மனம், 'ஐயோ, தலைவன் ஒழுக்கம் உள்ளவனாயிற்றே, பிறரைத் துன்புறுத்தக் கூடாது என்ற பண்பாடு நிறைந்தவனாயிற்றே, அவன் அவ்வாறு ஒழுக்கம் தவறுவானா? அவன் ஓய்வின்றி அலைவதற்கு வேறு காரணம் இருக்கவேண்டும்' என்று கூறும். இந்த இரண்டில் ஒன்றை நிச்சயிக்க முடியாமல் தலைவியின் மனம் ஊசலாடும். சில போது அவள் தலைவனோடு வெளிப் படையாகவே சினங்கொண்டு, அவனை வீட்டிற்குள் வர இடம் தாராமல் மறுப்பாள். இஃது ஊடல் எனப்படும். ஆனால், இந்த ஊடல் நெடுநாள் நீட்டித்து நிற்பதில்லை. தலைவன், தனது திறமையால் எப்படியேனும் தலைவியைச் சமாதானம் செய்துவிடுவான். அவர்கள் இருவரிடையேயும் உள்ள அன்பு இன்னும் மிகுதியாகும். குடும்ப வாழ்க்கையின் மகிழ்ச்சி பன்மடங்காகப் பெருகும். இவ்விதமாக ஊடல் கொண்டு, பிறகு தெளிந்து, மிக்க அன்போடு இன்புற்று வாழும் வாழ்க்கைக்கு 'மருதம்' என்று பெயர். இதற்குப் புறமாக அமைந்தது, பகைவருடைய நகரத்தைச் சூழ்ந்திருக்கும் மதிற்புறத்தே முற்றுகையிட்டுப் போர் புரிவதைக் குறிக்கும் 'உழிஞை' என்னும் திணையாகும்.

காதலை அடிப்படையாகக் கொண்ட அகவாழ்க்கையின் ஐந்து பகுதிகளும், வீரத்தை அடிப்படையாகக் கொண்ட புறவாழ்க்கையின் ஐந்து பகுதிகளும், வரையறை செய்யப்பட்ட இடம் பருவ பொழுதுகளை உடையன. பல்வகைப்பட்ட உடல் உழைப்புத் தொழில்களும், சமூகத் தொழில்களும் ஆற்றும் மக்கள் பற்பலவான இசைப் பண்கள், பல்வேறு வகையான கூத்துக்கள், முரசுகள், பல்

வேறு வண்ணமும் மணமும் உடைய மலர்களையும் பழங்களையும் தாங்கிய மரம் செடி கொடிகள், பல்வேறு விலங்குகள், பறவைகள், பல்வகைத் தெய்வங்கள், பற்பல வகையான வழிபாட்டு முறைகள், விழாக்கள், களியாட்டங்கள் ஆகப் பருவந்தோறும் நாழிகைதோறும் இடந்தோறும் மாறி மாறி வரும் இவ் வெல்லாவற்ருேடும் கூடிய இயற்கையே காதலுக்கும் வீரத்திற்கும் உரிய சால்புடைய அடிப்படையாகும். உயர்திரு. பண்டித ஜவஹர்லால் நேரு, இந்தியக் கலைகளைப் பற்றி எழுதியுள்ள ஒரு செய்தி*, தமிழர்களின் அகம் புறம் பற்றிய கவிதைக்கும் பொருந்தும். அவர் எழுதியுள்ளதாவது: "வடமொழிக் கவிதையிலும் இந்திய இசையிலும் போலவே, கலையிலும் இயற்கையோடும், உலகத்தோடும் மனிதன் இன்றியமையாத ஒருமைப்பாடுடையவன் என்பதைத் தெளிவிப்பதற்காக, எல்லா வகையான சுபாவங்களிலும் அதனேடு கலைஞனும் ஒற்றித்திருப்பான் என்றே கருதப்படுகிறது" என்பது. உயிரற்ற கொள்கைகளைக் கடந்து இவ்வாறு நின்று நிலவும் உண்மையைப் போற்றிப் பாதுகாக்கும் வகையில் சங்ககாலப் புலவர்கள் நற்றிணை 79, 149 முதலிய பாடல்களில் இன்னும் வேறுவகைப்பட்ட இயற்கையான ஒருமைப்பாடுகளையும் அடிப்படைகளையும் அஞ்சாது குறித்து வைத்துள்ளார்கள். தமிழ் நாட்டில் இயற்கையோடு ஒன்றி வாழும் அகவாழ்வும் புறவாழ்வும் மறையத் தொடங்கிய போது, புலனெறி வழக்கம் என்ற கவிதை மரபு, அகம் புறம் பற்றிய கவிதைகளின் கால்கழிகட்டிலாக அமைந்துவிட்டது. இந்த அழிவு, தமிழ்க் கவிதைகளின் வாழ்வில் ஏற்படுவதற்குமுன், மனித வாழ்க்கையில் சிறந்திருந்த காதலை, இறைவனிடம் கொள்ளும் பக்தியாகவும், காதல்

---

*நேரு எழுதியுள்ள 'Discovery of India' என்னும் நூலில் பக்கம், 176.

கொண்டவர் தம்முள் ஒருவரையொருவர் அடைய ஏங்கும் ஏக்கத்தை, இறைவனையடைய உயிர்கள் ஏங்கும் ஏக்கமாகவும், உயிர்களுக்கு அருள இறைவன் பலவகையான செயல்கள் செய்வதாகவும் வளர்த்தமைக்கத் தமிழ்ப் புலவர்கள் முயன்றனர். இக் கருத்தைத் தேவாரப் பாடல்களாலும், நாலாயிரப் பிரபந்தங்களாலும் நன்கு தெரியலாம். இறையனார் களவியல் இரண்டாம் சூத்திரத்தின் உரை, சங்க இலக்கியத்தில் பல கோணங்களில் நின்று பாடப்படும் காதலே இவ்வகையான உயர்ந்த காதலுக்கு வழிகாட்டுவது என விளக்குகிறது. இம் முயற்சிகள் எல்லாம் பிற்காலத்தில் தோன்றியவை. சங்க காலத்தில் தோன்றிய அகப்பாடல்கள் புறப்பாடல்களெல்லாம் இயற்கைத் தன்மை நிறைந்தவை. பிற்காலக் கவிதைகளில் காணும் செயற்கை மனோபாவங்களை விட மிகுதியாக மக்கட் பண்பாடும் இன்பமும் பற்றியே அவை இலங்குவன.

சால்புடைய இச் சிறந்த வாழ்க்கையைத் தமிழர்கள் வியத்தகு முறையில் விரித்துப் பாடியுள்ளார்கள். காதல் தவழும் அக வாழ்க்கையென்றும், வீரம் நிலவும் புற வாழ்க்கை என்றும் வாழ்க்கையை அவர்கள் இரு பயனுள்ள பிரிவுகளாகப் பிரித்துள்ளார்கள். தன்னலம் துறந்து பிறர் நலத்திற்காக வாழும் பண்பே இரண்டு வாழ்க்கையிலும் அடிப்படை உண்மையாக விளங்குகிறது. எனவே இவை, ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் போன்றவையே. மனிதன் தனிப்பட்ட வாழ்க்கையிலும், சமூகத்தாரோடும், உலகத்தாரோடும் கலந்து வாழும் வாழ்க்கையிலும் எவ்வாறு படிப்படியாகப் பண்பட்டுச் சால்புநிலை அடைந்திருக்கின்றான் என்பதை இவ்விரண்டு வாழ்க்கைகளும் காட்டுகின்றன. இவைகள் இவ்வாறு காட்டுமாறு செய்வதே இவற்றிற்கு இலக்கணமும் புலனெறி வழக்கமும் அமைத்த புலவர்களின் நோக்கம் ஆகும்.

ஆ

இனிச் சங்கப் புலவர்களின் பெயர்களை நோக்குவோம். அவற்றில் இவ் வகையான அடைகள் இருத்தலும் இல்லாமையும் ஏதோ ஒரு சிறப்புப் பொருளைத் தருதலாகவே உள்ளன.

**பாலைபாடிய பெருங்கடுங்கோ :**

இப் புலவர் பாடிய 68 பாடல்கள் சங்க இலக்கியத்தில் உள்ளன. இவற்றுள் குறுந்தொகை 231-ஆம் பாடலொன்றே மருதத் திணை பற்றியதாகும். பிற பாடல்களெல்லாம் பாலைத்திணைப் பாடல்களே. அந்த மருதத்திணைப் பாடலும் இவர் பாடியதாகத் தவறுகக் கருதப்பெற்றிருக்கலாம். இவர் பாடிய அகப் பாடல்கள் அனைத்தும் பாலைத் திணையைச் சார்ந்தவையாயின், 'கடுங்கோ' என்ற இவரது இயற்பெயருக்கு முன்னர்ச் சேர்க்கப்பெற்ற 'பாலை பாடிய' என்ற அடை, பொருத்தமானதெனக் கொள்ளலாம். கடுங்கோ என்ற பெயர், இவர் ஓர் அரசர் என்பதைக் காட்டுகின்றது. இவரது பெயர் சில இடங்களில் 'சேரமான் பாலைபாடிய பெருங் கடுங்கோ' என்றும் காணப்படுதலின், இவர் ஒரு சேர மன்னர் ஆவர் என்பதையும் அறியலாம். தமது—கலித்தொகை—பாலைக்கலிப் பாடல்களில் இவர் மதுரையையும் பாண்டிய மன்னனையும் பாராட்டிப் புகழ்ந்துள்ளார்.

கலித்தொகை முழுதிலும் பாண்டிய மன்னனும் மதுரையும் புகழ்ந்து பேசப்பெறுதலைக் காணலாம். இது கண்ட சில அறிஞர்கள், மதுரையிடத்தும் பாண்டிய மன்னரிடத்தும் ஈடுபாடும் அன்பும் மிகவுடைய நல்லந்துவனார் போன்ற ஒரு புலவராலேயே கலித்தொகை நூல் முழுதும் பாடப்பெற்றது எனக் கருதுகிறுர்கள்.

கலித்தொகை தவிரப் பெருங்கடுங்கோப் பாடியனவாக உள்ள பிற பாடல்களில் 'நன்னன்' என்பான் சிறப்

பிக்கப்பெற்றிருக்கிறுன். இளையவரான இளங்கடுங்கோ என்பாரினின்றும் வேறு பிரித்தறிவதற்காகச் சங்ககாலப் புலவர்கள் மூத்தவரான நம் புலவரைப் 'பெருங் கடுங்கோ' என அழைத்தனராதல் வேண்டும். அரச மரபைச் சேர்ந்தவர்களான பல பெருங்கடுங்கோக்களிலிருந்து பிரித்தறியும் பொருட்டுப் 'பாலைபாடிய பெருங் கடுங்கோ' என இவர் அழைக்கப்பெற்ருர் எனல் வேண்டும். பாலை என்பது, 'பாலை நிலத்து உரிப்பொருளாகிய பிரிவு' என்று கூறுகிறது தமிழ்ப்பேரகராதி.* இவர் பாடல்களில், தலைவியைப் பிரிந்த தலைவன் செல்லும் வறண்ட பாலைநிலத்தின் புனைந்துரைகள் தலைசிறந்தனவாக அமைந்துள்ளன. பிரிவினுல் வருந்தும் தலைவி, அவளைப் பிரிந்து செல்ல நேர்ந்தமையையும் பொருள் தேடவேண்டிய கடமையையும் எண்ணி வருந்தும் தலைவன், தலைவியின் துன்பங்கண்டு துயருறும் தோழி—இவர்களுடைய உள்ளங்களைப் புலவர் படம்பிடித்துக் காட்டுவது ஒப்புயர்வற்றதாக உள்ளது. எனவே, 'பாலை பாடிய' என்ற அடை இவருக்குப் பொருத்தமானதே.

**மருதம் பாடிய இளங்கடுங்கோ :**

இப் புலவர் அகநானூறு 96, 176-ஆம் பாடல்களையும், நற்றிணை 50-ஆம் பாடலையும் பாடியுள்ளார். இம் மூன்று பாடல்களும் மருதத் திணை பற்றியவையே. மருதம் என்பது 'வயலும் வயல் சார்ந்த இடமுமான மருதநிலத்தில் ஊடியும் கூடியும் போகம் நுகர்வதான ஒழுக்கம்' எனத் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.†

மருதன் இளநாகனர் என்ற பெயருடைய ஒரு புலவர் சங்கநூலில் காணப்படுகிருர். இவர் பெயரிலுள்ள மருதன் என்பது இப் புலவருடைய (இளநாகனருடைய) தந்தையாரின் பெயராக இருக்கலாம். ஈண்டு, மருதத் திணைக்கும்,

*பக்கம், 2631. †பக்கம் : 3093.

மருதன் என்ற அடைக்கும் தொடர்பு ஏதும் இல்லை. உண்மையில் இளநாகனர் மருதத் திணை பற்றி 39 பாடல்கள் பாடியுள்ளார் எனினும், பாலை பற்றி 17 பாடல்களும், குறிஞ்சிபற்றி 8 பாடல்களும், முல்லைபற்றி 5 பாடல்களும், நெய்தல் பற்றி 5 பாடல்களும், வாகை, காஞ்சி என்ற புறத் திணைகள் பற்றி முறையே 4, 1 பாடல்களும் ஆகமொத்தம் 79 பாடல்கள் பாடியுள்ளார். ஆகையால் பாடல்கள் பற்றி இவருக்கு அடை ஏற்பட்டது என்பதற்கில்லை.

**நெய்தல் கார்க்கியார் :**

இவரது இயற்பெயர் கார்க்கியார் என்பது. கார்க்கி என்ற பெயர், உபநிடதங்களில் சிறப்பாக வழங்கும் ஒரு (பெண்பால்) பெயராகும். சங்ககாலத்தில் வாழ்ந்த இந்துக்கள் உபநிடதங்களிலும்புராணங்களிலும் புகழ்பெற்று விளங்கும் பெயர்களைத் தம் மக்களுக்கு விருப்பத்தோடு இட்டனர் என்பது இதனால் விளங்கும். பிற கார்க்கியார்களினின்றும் இப் புலவரை வேறு பிரித்தறிவதற்காக 'நெய்தல்' என்னும் அடை இவரது பெயருக்குமுன் சேர்க்கப்பட்டது. குறுந்தொகையில் 15, 212 எண்ணுள்ள பாடல்கள் இவர் பாடியவை. இவ்விரண்டு பாடல்களும் நெய்தல் திணை பற்றியவையே. நெய்தல் என்பது, 'கடலும் கடல் சார்ந்த இடமுமாகிய நெய்தற்றிணையின் உரிப் பொருளாகிய இரங்கல்' எனத் தமிழ்ப் பேரகராதி விளக்கம் தருகிறது.*

**நெய்தல் தத்தனர் :**

இவர், நெய்தல் திணைபற்றி அகநானூற்றில் 243-ஆம் பாடலும், நற்றிணையில் 49, 130-ஆம் எண்ணுள்ள பாடல்களும் பாடியுள்ளார். இப் பாடல்கள் எல்லாம் நெய்தல் திணைபற்றியே அமைந்துள்ளமையால் நெய்தல் தத்தனர் என்று இவர் பெயர் பெற்றூர். தத்தனர் என்னும் பெயர்

---

*பக்கம் : 2342.

சங்ககாலத்தில் பல புலவர்களுக்கு இயற்பெயராக இருந் தது. அவர்களிற் சிலர் அவரவர் செய்யும் வெவ்வேறு தொழில் பற்றிய அடைகளால் வேறு பிரித்தறியப்பெற் றனர். எடுத்துக்காட்டாகக் குழல் தத்தனர்* கணக்காயன் தத்தனர்,† வண்ணக்கன் தத்தனர்,‡ என்ற பெயர்களைக் கூறலாம். இன்னும் சிலர் 'நெடு' என்பது போன்ற அடை களால் பிரித்தறியப்பெற்றனர். எடுத்துக்காட்டாக நெடுந் தத்தனர்§ என்ற பெயரைக் கூறலாம். மற்றும் சிலர், தாம் பாடிய பாடல்களின் பொருள்களால் அமைந்த அடை களைப் பெற்றனர். அவ்வாறு அமைந்த அடையோடு கூடிய பெயரே நெய்தல் தத்தனர் என்பது.

**பாலைக் கௌதமனர் :**

இப் புலவர் பதிற்றுப்பத்து மூன்றும் பத்தையும், புற நானூறு 366-ஆம் பாடலையும் பாடியவர். அகப் பொரு ளில் பிரிவு பற்றியதாகிய பாலைத் திணையில் இவர் இயற்றிய பாடல்கள் இப்பொழுது நமக்குக் கிடைக்கவில்லை எனல் வேண்டும்.

## இ

அகப்பொருள் திணைகளுள் ஒவ்வொரு திணையையும் சிறப்பாகஆராய்ந்து,நுணுக்கமும் அழகும் அமையப் பாடிய பல புலவர்களின் பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணப் படுகின்றன. ஆனல் மேலே கண்டவாறு, பிறரினின்றும் வேறு பிரித்தறிதற்குரிய சிறப்பு அடைகள் அப் பெயர் களுக்கு முன்னல் சேர்க்கப்பெறவில்லை. முல்லைக்கலியின் ஆசிரியராகிய நல்லுருத்திரனர் என்னும் புலவர் முல்லைத் திணை பற்றிப் பலகோணங்களில் நின்று அதை ஆராய்ந்து அதில் தனித்திறன் பெற்றுள்ளார்.

---

*குறுந், 242. †குறுந், 304. ‡நற், 298.

§புறம், 179.

பேயனார் என்னும் புலவர் முல்லைத்திணை பற்றி ஐங்குறு நூற்றில் நூறு பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடலும்,* குறுந்தொகையில் இருபாடல்களும்† சிறப்பாகப் பாடியுள்ளார். இவற்றோடு குறிஞ்சி பற்றியும், மருதம் பற்றியும் ஒவ்வொரு பாடலும்‡ இவர் பாடியுள்ளார் என்பதும் உண்மையேயாகும்.

நல்லந்துவனார் என்னும் புலவர் நான்கு பரிபாடல்களும்,§ ஒரு குறிஞ்சித் திணைப்பாடலும்,$ ஒரு பாலைத்திணைப் பாடலும்¶ தவிர, நெய்தல் திணைபற்றிப் பாடுவதில் தனிச் சிறப்புப் பெற்றவராகக் காணப்படுகிறார்.

கபிலர் பாடிய 235 பாடல்களில், பதிற்றுப்பத்தில் ஏழாம்பத்து, அகநானூற்றில் 203-ஆம் பாடல் (பாலை), குறுந் தொகை 246-ஆம் பாடல் (நெய்தல்), நற்றிணையில் 59 (முல்லை), 267, 291 (நெய்தல்), 320 (மருதம்), புறநானூற்றில் 28 பாடல்கள்—இவற்றைத் தவிரப் பிற பாடல்கள் எல்லாம் குறிஞ்சித்திணையைப் பற்றியவையே ஆகும்.

ஓரம்போகியார் பாடிய பாடல்களுள், குறுந்தொகை 70-ஆம் பாடல் (குறிஞ்சி), 122-ஆம் பாடல் (நெய்தல்), புறநானூற்று ஒரு பாடல்ρ இவற்றைத் தவிரப் பிறவெல்லாம் மருதத்திணையைச் சார்ந்தவையே.

ஓதலாந்தையார் என்பவர் இயற்றிய பாடல்களுள் குறுந்தொகை 21-ஆம் (முல்லை) பாடலைத் தவிர மற்றவை யெல்லாம் பாலைத்திணை பற்றியனவேயாகும்.

அம்மூவனார் பாடிய பாடல்களுள், குறுந்தொகை 327-ஆம் பாடல் (குறிஞ்சி), அகநானூறு 35 (பாலை), நற் றிணை 76, 397-ஆம் பாடல்கள் (பாலை) இவற்றைத் தவிரப் பிறவெல்லாம் நெய்தல் திணைபற்றியவையேயாகும்.

---

*234. †233, 400. ‡குறுந், 339, 359.
§6, 8, 11, 20. $நற், 88. ¶அகம், 43.
ρ284.

இப் புலவர்கள் சிறப்பாக ஆராய்ந்து பாடிய பொருள்களைக் குறிக்கும் அடைமொழிகளால் இவர்கள் சிறப்புச் செய்யப்படாமைக்குக் காரணம், இவ்வாறு இவர்களை வேறு பிரித்தறிய வேண்டிய இன்றியமையாமை நேராததேயாகும். சங்ககாலத்தில் பெரும் புலவராகக் கபிலர் சிறப்புற்று விளங்கினர். 'கபிலம்' என்னும் சொல்லைக் கவிதையில் பயன்படுத்தியமையால் கபிலர் என்ற பெயர் அவருக்கு அமைந்ததெனின், அப்பெயரை அளித்தமையே அவருக்கு மற்றவர் செய்த சிறப்பாகும். நல்லந்துவனர் என்னும் புலவர் 'நல்' (சிறந்த) என்ற அடைமொழியாற் சிறப்பிக்கப்பெற்றிருக்கிறர். நல்லுருத்திரனும் இவ்வாறு சிறப்பிக்கப்பெற்றிருக்கிறர். அம்மூவனரின் சிறப்பை அம்' என்ற அடைமொழி தெரிவிக்கிறது. 'ஓரம்போகி' என்ற சொற்றொடரைக் கவிதையில் ஆண்டமையால்தான் 'ஓரம்போகியார்' என்னும் புலவர் அப்பெயரைப் பெற்றர் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். எனவே, அவரை வேறு பிரித்தறியவும் சிறப்புறுத்தவும் வேறு அடைமொழி தேவைப்படவில்லை. ஓதல் ஆந்தையார் என்பார், ஓதல் என்னும் அடைமொழியால் சிறப்பிக்கப்பெற்றிருக்கிறர். பேயனர் என்னும் பெயருடைய பிறபுலவர் இன்மையினல் போலும் இப் பெயருள்ள ஒரு சங்கப் புலவர் வேறு அடைமொழி பெருதது.

இங்குக் குறிப்பிடற்குரிய மற்றொரு செய்தியும் உள்ளது. புலவர்களின் பெயர்களுக்கு அடைமொழியாக நெய்தல், மருதம், பாலை என்ற திணைப் பெயர்கள் வந்துள்ளனவே யன்றிக் குறிஞ்சி, முல்லை என்ற திணைப் பெயர்கள் வரவில்லை. இதன் காரணம் என்னை? முன்னைய மூன்றும் பிரிவினல் ஆம் துன்ப உணர்ச்சியைப் பாடுவன. குறிஞ்சித் திணையோ அன்பு நிறைந்த கூடலைப் பற்றியது. அங்கே துன்ப உணர்ச்சி இல்லை. முல்லைத்திணை, தலைவியின் கற்பை விளக்கும் பகுதி; தலைவன் தன்னைவிட்டுப் பிரிந்திருக்கும்

காலத்திலும் அவன் திண்ணமாகத் திரும்பி வந்துவிடுவான் என்ற நம்பிக்கையால் தலைவி மன நிறைவோடும் அமைதியோடும் இல்லறத்தில் இனிது வாழ்வதை நாம் காண்கிறோம். தலைவன் வந்துவிடுவான் என்ற இனிய நம்பிக்கை அவளுடைய வாழ்வுப் பயிருக்கு வளமளிக்கும் தெள்ளிய நீராக உள்ளது. பிரிவுபற்றிப் பாடும் பாடல் துன்பியற் பாடல் ஆகும். கூடல் பற்றிய பாடல் இன்பியற் பாடலாகும். எனவே, துன்பம் நிறைந்த பிரிவைப் பற்றிய பாடல்கள், இந்தப் பரந்த உலகில் மனித இனம் அனுபவிக்கின்ற துன்ப உணர்ச்சியை யெல்லாம் வரையறை செய்து துன்பமின்றி வாழ வழிவகுப்பன வாகும். துன்பப் பாடல்களே நம் மனத்தில் மிக ஆழமான உணர்ச்சியை உண்டாக்குவனவாகும். மனித மனம் துன்பத்தில் ஆழ்ந்திருக்கும்போது, அதன் பல்வேறு நிலைகளைச் சித்திரிக்கப் பிரிவுப் பாடல் நிறைந்த வாய்ப்பளிக்கிறது. இதனால்தான் அகநானூற்றில் சரிபாதியான அளவுள்ள பாடல்கள் பாலைத்திணையைப் பற்றியனவாக அமைந்தன. இவ்வாற்றால் சங்க காலத்தின் தொடக்கத்தில் குழந்தை போல் சிரிப்பும் களிப்புமாகக் காலங்கழித்த மக்கள், நாளடைவில் படிப்படியாக மாறிச் சங்க காலத்தின் பிற்பகுதியில் ஆன்றவிந்தடங்கும் பண்புடையவர் ஆயினர் எனலாம்.

ஈ

பரந்த பொதுவகையில் அமைந்த இலக்கியச் சிறப்புப் பெயர்க் குழுவினுள் அடங்கிய மற்றொரு சிறு உட்குழு உண்டு. அப் பெயர்கள் மேலே கூறியவற்றைப்போல ஐந்திணைப் பெரும் பகுதியைச் சார்ந்தன அல்ல. ஆனால், அத் திணைகளுள் அமைந்த துறைகளைப் பற்றியன. எடுத்துக் காட்டாக '**மடல் பாடிய மாதங்கீரனார்**', '**வெறி பாடிய காமக் கண்ணியார்**' என்ற பெயர்களைக் காணலாம்.

**மடல் பாடிய மாதங்கீரனர் :**

இப் புலவரின் இயற்பெயர் 'கீரன்' என்பது. **மாதன்** என்பது அவர் தந்தையாரின் பெயர். 'மாது' என்பது, அழகு, காதல் என்ற இரண்டு பொருள்கள் உடைய அடிச் சொல்லாகத் தொல்காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.* எனவே, மாதன் என்பது 'கண்டார் விரும்பும் கட்டழகன்' எனப் பொருள்படும். இவ் வுலகில் இலைமறை காயாகத் திகழும் தெய்வீக சக்தியைத் தமிழன் அன்புணர்ச்சி கலந்த அழகுருவமாகவே கண்டான். **அம்மெய்யன்** என்ற பெயரைப் பற்றி முன்னரே குறிக்கப் பட்டது. வடமொழியாளர் இப் பெயரைச் 'சுந்தரன்' என மொழிபெயர்த்துக்கொண்டார்கள். மதுரையில் விளங்கும் சிவ பெருமானின் பெயர் சொக்கர் என்பது அனைவரும் அறிந்தது. அழகின் தெய்வீகத் தன்மையைக் கண்டு, தெய்வத்தையும் அழகு வடிவமாகவே உணரும் நிலை சங்க காலம் போன்ற மிகப் பழங்காலத்திலேயே தமிழ் நாட்டில் தோன்றிவிட்டது. சங்கப் புலவரின் இயற் பெயராக அமைந்த **மாதன் கீரனர்** என்பதோடு '**மடல் பாடிய**' (மடல் எனும் துறையைப் பாடிய என்னும்) அடை மொழி சேர்க்கப்பெற்றுள்ளது. **மடல்** என்பது தன்னைத் தியாகம் செய்தல் எனப் பொருள்படும். இத் தியாகமும் ஒருவன் தான் விரும்பியதை—உயிரினும் மேலாக விரும்பியதை—அடைய முடியாதபோது உயிரை விட்டுவிடத் துணிதலாகும். தயங்கும் தன்மை தலைவனுக்கு இல்லை. 'செய் அல்லது செத்து மடி'—இதுதான் அவனுடைய வாழ்க்கையின் கொள்கை. தான் காதலித்த நங்கை தன்னைக் காதலிக்காத நிலையிலும், தலைவனும் தலைவியும் காதல் கொண்டிருந்தும் தலைவியை மணப்பதில் மிக்க இடையூறு இருக்கின்ற நிலையிலும், தலைவன் தன் உயிரை

---

*'மாதர் காதல்'—தொல், சொல், 328.

விடத் துணிந்து பனைமரத்தின் மடலால் ஒரு குதிரை செய்வான்; அதன்மேல் ஏறி, அதன் முட்கள் போன்ற கருக்குக்கள் தன் உடலெல்லாம் அறுக்க அதனால் குருதி சோர,—(புனைந்துரையாகக் கூறுபவர் குருதி தோன்றலாகாதென்பர்)—நாற் சந்தியில் யாவரும் காண அதை ஊர்ந்து செல்வான். ஆம், அஃது அவனுடைய சாவுப் பயணம். அன்பில்லாத, இடையூறு நிறைந்த இந்த உலகத்தைவிட்டுப் புனிதமான சாவு உலகத்திற்கு அவன் பயணம் செய்கிறான்; உடல் முழுதும் சாம்பல் பூசி, எலும்பு மாலையும் எருக்கம் பூ மாலையும் அணிந்து செல்லுகிறான். அது மட்டுமா? தான் காதலித்த பெண்ணின் உருவம் வரைந்த ஓவியத்தையும் அவன் தன் கையில் வைத்திருக்கிறான். (சாம்பலும் எலும்பும் சாவின் சின்னங்கள். எருக்கம் பூ இவ்வுலகில் வாழ்விழந்த பூ.) இந்தக் கோலத்தோடு தலைவன் நாற் சந்தியில் செல்லுகிறான். பனங்கருக்குக் குதிரையில் அவன் இழுத்துச் செல்லப்படுகிறான். ஊரில் உள்ள சான்றோர்கள் இந்தக் கொடுமையைக் கண்டு, ஆற்றாமல் தலைவனுடைய செயலிற் குறுக்கிட்டு அவனது துன்பம் யாதெனக் கேட்டுப் பின் அவனது விருப்பத்தை—தலைவியை மணமுடிக்கவேண்டும் என்ற தலையான விருப்பத்தை—நிறைவேற்றிவைப்பர். தமிழ்ப் பேரகராதியில் 'மடல்' என்பது, 'தான் காதலித்த தலைவியைப் பெறுதவிடத்துத் தலைவன் ஏறுதற் பொருட்டுப் பனங்கருக்காற் குதிரைபோற் செய்த ஊர்தி" என விளக்கப்பட்டிருக்கிறது.† மாதன் கீரனார் பாடிய இரண்டு பாடல்களே இப்போது நமக்குக் கிடைக்கின்றன; அவை குறுந்தொகை 182-ஆம் பாடலும், நற்றிணை 377-ஆம் பாடலும் ஆகும். இந்த இரண்டு பாடல்களும், பனங்கருக்குக் குதிரை மீதேறிச் சாவு நோக்கி யாத்திரை செய்யத் துணிந்த தலைவனின் துணிவையே பாடு

†பக்கம் : 3020.

கின்றன. அதனால்தான் இவற்றைப் பாடிய புலவர் 'மடல் பாடிய மாதங் கீரனார்' என அழைக்கப்பெற்றார். மடல் என்பது நாளடைவில் புலவரின் புனைந்துரையமைந்த புலனெறி வழக்கமாகிவிட்டது. பிற்கால இலக்கியங்களில் 'மடல்' என்ற ஒரு தனிவகை நூல், பிரபந்தங்கள் என்ற வரிசையில் ஒன்றாக இருப்பதைக் காணுகின்றோம்.

**வெறி பாடிய காமக்கண்ணியார் :**

**காமக்கண்ணி** என்பதுதான் இப் புலவரின் இயற்பெயர். காமக்கண்ணி என்பது காமாட்சி என இக்காலத்தில் வழங்குகிறது. காமாட்சி என்ற சொற்றொடரில் 'காம' (காமம்) என்ற சொல் அப்படியே சங்க காலத் தமிழ் நாட்டில் பலராலும் வழங்கப்பட்ட இயற் சொல்லாதலின் அதைத் தமிழில் மொழி பெயர்க்கவேண்டிய இன்றியமையாமை இல்லாது போயிற்று. 'அட்சி' என்ற சொல்லைத்தான் 'கண்ணி' என மொழிபெயர்த்துள்ளார்கள். கன்னட மொழியில் உள்ள யாப்பிலக்கண விதிகள் சில, இங்ஙனம் இரு மொழிச் சொற்கள் கலப்படமாக அமைந்த சொற்றொடருக்குத் தடை எழுப்புவனவாம். ஆனால் பழந் தமிழர்கள் இதில் ஒரு குற்றமும் காணவில்லை. வட மொழி பாதி, தமிழ் மொழி பாதியாக அமைந்த இது போன்ற தொடர்கள் தமிழ் நாட்டில் இயல்பாக வழங்கி வந்துள்ளன. (நிறைவு என்று பொருள்படும் கமம் என்ற உரிச் சொல்லடியாகப் பிறந்த தனித் தமிழ்ச் சொல்லே காமம் என்பது, என யாம் வேறு ஒரு கட்டுரையில் ஆராய்ந்து கூறியுள்ளோம்.).

பெற்றோரின் பாதுகாப்பிலும் தோழியின் அரவணைப்பிலும் வளர்ந்துவந்த தலைவி, ஊழின் செயலால் ஆண்மகன் ஒருவனைச் சந்தித்து, அவன்பால் அன்பு கொண்டு, அவனைக் கூடி முயங்கியபின் உடலும் உள்ளமும் மாறுபடுகிறாள். அவளுடைய நடை உடை பாவனைகள் அடி

யோடு மாறிப் போகின்றன. உணவுண்ணும் முறையில் வீட்டில் உள்ளவரோடு பழகும் முறையிலும் அவளிடம் மிக்க மாறுதல் காணப்படுகிறது. இந்த மாறுதலைக் கண்டு மனங்கலங்கிய பெற்றோர் அறிவரையும், குறிகூறுபவளையும் அடுத்து இதைப் பற்றிக் கேட்கின்றார்கள். வழக்கம் போல அவர்கள் முருகன் தாக்குதலால் இந்த மாறுதல் உண்டாயிற்று எனக் கூறுகிறார்கள். (அவர்களுக்கு அதைத் தவிர வேறு என்ன தெரியும்? 'முருகன் பிடித்துக்கொண்டான்', 'மலைத் தெய்வம் பிடித்துக் கொண்டது', 'சூர் பிடித்துக்கொண்டது' என்று இப்படி ஏதாவது சொல்லுவதுதான் அவர்கள் வழக்கம்.). 'முருகன் பிடித்துக்கொண்டான்' என்று அவர்கள் கூறியதைக் கேட்ட பெற்றோர், முருகனுடைய முனிவைத் தணிப்பதற்காக, அத் தெய்வத்திற்குப் பூசை செய்யும் வேலனை அழைக்கிறார்கள். அவன் தலைவியின் வீட்டிற்கு வந்து பல வகையான படையல்களும் மலர்களும் இட்டுப் பறையும் சங்கும் முழங்க ஆடம்பரமான வழிபாடு நடத்துகிறான். இது போன்ற வழிபாட்டின்போது முருகனே அவனிடம் வந்து தங்குவதாக மக்கள் நம்பினார்கள். அவன் ஆடுகிறான்; அவள் ஆடுதலும் உண்டு. இந்த ஆட்டத்திற்கு '**வெறி ஆடல்**' என்று பெயர். **வெறி** என்ற சொல்லுக்கு '**மணம்**' என்று பொருள். வேலன் தன்னை மறந்து மயங்கி ஆடும்போது, அறிவின் வசமில்லாமல் வேலை செய்கின்ற அவனுடைய உடற்கோளங்கள் மிகுந்த மணம் வீசுகின்ற வேர்வையை வெளிவிடுகின்றனவாகல் வேண்டும். பார்க்கின்றவர்களின் உள்ளத்தில் இஃது அச்சத்தை மூட்டும். எனவே, அவனது ஆட்டம் தெய்வீக ஆட்டமாக ஆகிவிடுகிறது. தமிழ்ப்பேரகராதி 'வெறியாட்டு' என்பதற்கு 'வேலனாடல்' எனத் தமிழிலும், 'ஸ்கந்தக் கடவுளின் ஆவேசத்தால் கோயிற்பூசாரி ஒருவன் ஆடுதல்' என்னும்

பொருள்பட ஆங்கிலத்திலும் விளக்கம் தந்துள்ளது.*
காமக்கண்ணியார் என்னும் இப் புலவர் இந்த வெறியாட்டைப்பற்றி அகநானூற்றில் இரண்டு பாடல்களில்† பாடுவதோடு, இதே வெறியாட்டைப் பற்றித் தாம் பாடிய குறுந்தொகை 268-ஆம் பாடலில் 'வேலனை'ப் பற்றியும் குறிப்பிடுகிறார். அகநானூறு 22-ஆம் பாடலில் ஒரு வேடிக்கையான நிகழ்ச்சி சித்திரிக்கப்படுகிறது. தலைவியின் வீட்டிற்குள் வெறியாட்டு நடந்துகொண்டிருக்கும்போதே, தலைவன் யாரும் அறியாமல் சிறைப்புறத்தில் வந்து தலைவியைக் கண்டு செல்லுகிறான். அதனால், முன் வாடியிருந்த அவள் உடல் அழகு பெறுகிறது. பீர்க்கம் பூப்போல் அழகிழந்து வாடியிருந்தவள், காலையில் அலர்ந்த தாமரை மலர்போல் அழகு பெற்று விளங்குகிறாள். அவள் முகத்தில் பழைய எழில் காணப்படுகிறது. அவளைச் சுற்றியிருந்த பெற்றோர் உள்ளிட்ட எல்லோரும் வேலனின் வெறியாடலினால்தான் அவளது நோய் தீர்ந்தது என எண்ணுகிறார்கள்.

அகநானூறு 98-ஆம் பாடலில் தலைவியின் அவலமான மனநிலை விவரிக்கப்படுகிறது. அவளுடைய தாயும் செவிலி முதலிய மற்றவர்களும் அவளது உடலில் தோன்றிய மாறுதலைக் கண்டு அஞ்சி, அதைப் போக்குவதற்காக 'வெறியாட்டிற்கு' ஏற்பாடுகள் செய்கின்றார்கள். அந்த வெறியாட்டத்தினால் விளையப்போகும் பயனைப் பற்றித் தலைவி எண்ணிப்பார்க்கிறாள். அவள் மனம் குழம்புகிறது. என்ன செய்வது என்று அறியாமல் அவள் துன்புறுகிறாள். வெறியாடலினால் அவளுடைய பழைய எழில் திரும்பவில்லையாயின், தாயும் சுற்றத்தாரும் ஊராரும் அவளிடம் மேலும் ஐயம் கொண்டு, உண்மைக் காரணத்தைக் கண்டுபிடிக்க முயலுவார்கள்; அவள் ஆண் மகன் ஒருவனைப் பிறர் யாருமறியாமல் சந்தித்துக் காதல் செய்ததையும் அறிந்து

---

*பக்கம் : 3815. †22, 98.

விடுவார்கள். அப்பொழுது ஊர்முழுதும் பழி தூற்றும். வெறியாடலால் முருகன் மனம் நெகிழ்ந்து தன் அழகு திரும்பும்படி செய்தானயின், தன்னுடைய பிரிவினுல்தான் தலைவியின் அழகு வாடியிருக்கிறது என்று எண்ணிக் கொண்டிருக்கும் தலைவன் இச் செய்தியைக் கேட்டவுடன் பேரிடியுற்றவனுவான். அறிவர் முதலியோர் கூறியது போலத் தலைவியின் நோய்க்கு வேறு ஏதோ காரணம் என்று கேள்விப்பட்டவுடன் அவன் மனம் முறியும். ஏமாற்றம், மனமுறிவு இவற்றைத் தலைவனுக்கு உண்டாக்கி விட்டு உயிர் வாழ்ந்திருக்கத் தன்னுல் இயலாது என்று எண்ணுகிருள் தலைவி. இதுதான் அகம், 98-இல் உள்ள சோக சித்திரம்.

'**வெறியாடல்**' என்ற துறையைப் பாடுவதில் காமக் கண்ணியாருக்கு இருந்த பேராற்றலை அகநானூற்றில் அமைந்த இரண்டு பாடல்களும் உள்ளங்கை நெல்லிக்கனி எனக் காட்டுகின்றன. குயவன் களிமண்ணைத் தன் விருப் பப்படி உருவாக்க முடியும். இப் புலவரும் தம் விருப்பப்படி மகிழ்ச்சியான சூழ்நிலையையோ துயரமான சூழ்நிலை யையோ உண்டாக்க முடியும். இதனுல்தான் இவருக்கு '**வெறி பாடிய காமக்கண்ணியார்**' என்ற பெயர் அமைந்தது.

**நோய் பாடியார் :**

இப் புலவரது இயற்பெயர் தெரியவில்லை. எனவே, வெறும் இலக்கியப் பெயரை மட்டுமே கொண்ட புலவர் களிடையே இவரும் ஒருவர் ஆகிருர். இவரது பெயரைப் பற்றிய ஆராய்ச்சியை இக் கட்டுரையின் முதற்பகுதியி லேயே அமைத்திருத்தல் வேண்டும். ஆயின், அங்கு ஆரா யப்பட்ட பெயர்களைப் போலப் பாடலில் வரும் சொல் லையோ, தொடரையோ குறிக்காமல், பாடலில் அமைந்த கருத்துணர்ச்சியை இப் பெயர் குறிப்பிடுதலின், பரந்து பட்ட பொதுவகையில் அமைந்த பெயர்களின் இடையே

இதை அமைக்கவேண்டுவதாயிற்று. அகநானூற்றில் 67-ஆம் எண்ணுள்ள ஒரு பாடலே இவர் பாடியதாக நமக்குக் கிடைத்துள்ளது. பொருள் சேர்ப்பதற்காகப் பிரிந்த தலைவனை நினைந்து மிகவும் வருந்திய தலைவியிடம், தோழி, "சிறிது காலத்திற்குப் பிரிந்த தலைவனை எண்ணி இவ்வாறு வருந்துதல் முறையன்று" எனக் கூறுகிறாள். தலைவி அவளுக்குப் பதில் சொல்லுகிறாள்: "என் ஆருயிர்த் தோழி! நான் என்ன செய்வது? அவர் சென்ற வழியைப் பற்றியே நான் கவலைப்படுகிறேன்; அந்த வழியில், வானம்பாடி மழைபொழியும் மேகத்தைப் பார்த்துப் பாடியுங்கூட, அந்த அருளற்ற முகில், மழை பொழியாமல் சென்றுவிட்டது. அங்கு உள்ள மரங்களில் பசுமையான இலைகளே இல்லை. வழிமுழுதும் முரம்பு (வன்னிலம்) மிகுந்துள்ளது; அவ் வழியில் முன்பு சென்ற வீரமக்களை, நரகவாசிகள் போன்று அப் பாலை நிலத்தில் வாழும் வழிபறி கொள்ளைக்காரர்கள் மறித்துத் தாக்கிக் கொன்று வீழ்த்தினர். அவர்கள் இறந்த இடத்தில் அவர்களின் நினைவாக நடுகல் நாட்டியுள்ளார்கள். அந் நடுகற்களின் மேல் அவ் வீரர்கள் ஏந்தியிருந்த வாளும் வேலும் நிறுத்திவைக்கப்பட்டிருக்கின்றன. தொலைவில் இருந்து பார்ப்பவர்க்கு, வாளும் வேலும் ஏந்திக்கொண்டு போருக்குச் சித்தமாக ஒரு படையே நிற்பது போலத் தோன்றுகிறது, அந்தப் பாலை நிலக்காட்சி. அங்குத் தோன்றும் கானல் நீரிடையே கிடக்கும் கூழாங்கற்கள் நிலத்தில் கிடக்கும் மின்மினி போல் ஒளிவிடுகின்றன. ஐயோ! தோழி, (இப்படியெல்லாம் இருக்கும் என்று கூறப்படும்) இந்த வழியில்தான் நம் தலைவர் சென்றாராம். இதை நினைத்தாலே என் மனம் நடுங்குகிறது; நான் என்செய்வது?" எனத் தலைவி தன் மனத் துன்பத்தை இச் சொற்களால் வெளியிடுகிறாள். தாங்க இயலாத மனத்துன்பமே 'நோய்' எனப்படுவது. உடலில் உண்டாகும் வலிக்கும், நோய் என்ற பெயருண்டு. சிலர், இப்

பாடல் பிரிவைப் பற்றியதாக இருப்பினும் ஆழமான துன்ப உணர்ச்சி இதில் காட்டப்பெறவில்லை எனக் கருதுகிறார்கள்.

ஆசிரியர் பெயர் காணப்பெறாத பாடல்களுள் ஒன்று, இப்புலவர் பாடியதுபோல் தோன்றுகிறது. அப்பாடல் நற்றிணையில் 185-ஆம் எண்ணுடையது. அதன் கருத்து இது தான்: "என் நோய்க்கு முடிவே இல்லை. என் மனம் அவளையே எண்ணி வருந்துகிறது; மிகவும் கலங்குகிறது. அவள்மேல் நான் கொண்ட காதல் உணர்ச்சி மனத்தில் நிறைந்ததோ டமையாது வெள்ளம்போல் பெருகி வழிகிறது. இத்துன்பம் என்னைச்செயலற்றவனாக ஆக்கிவிட்டது. நண்பா! என் துன்பத்தை நீ பார்த்துக்கொண்டிருந்தும் என்பால் இரக்கம் கொள்ளவில்லை. இரவலர்கள் கொல்லி மலையை யாளும் பொறையினிடம் பரிசில் பெறுவதற்காக மலைமீது கற்கள் நிறைந்த குறுகிய வழியில் தளராமல் ஏறிச் செல்லுகிறார்கள். பாணர்கள் அம் மன்னனிடம் முன்பு பரிசிலாகப் பெற்ற நல்ல சாதிக் குதிரைகளின் குளம்புச் சுவடுகளால் ஏற்பட்டதேயாகும் அக் குறுகிய வழி. இந்தக் கொல்லிமலை உயர்ந்தசிகரத்தோடு பொருந்திப் புகழ்பெற்று விளங்குகிறது. அசைந்தாடுகின்ற இலைகளையுடைய காந்தள் செடியின் மலர்களில் படிந்து தேனுண்ட வண்டுகள் கட்டிய பல சிறு அறைகளையுடைய தேன் கூடு அந்த மலையின் மேற்குப்புறத்துச் சரிவை அழகுபடுத்துகின்றது. அச் சரிவின் ஒரு புறத்தே தெய்வத்தால் வரையப்பட்ட அழகு நிறைந்த பெண் பாவையின் உருவம் ஒன்று உள்ளது. என் மனத்தைக் கவர்ந்தவள், அந்தப் பெண் பாவையைப் போன்று சிறந்த அழகினையுடையவள். அவள் தன் அழகை என்னைக் கொல்லுங் கருவியாகப் பயன்படுத்திவிட்டாள். நான் தனியனாக இருந்து இந்த வருத்தத்தில் உழன்று இறக்கத்தான் வேண்டுமா?" இது காமநோயால் வருந்தும் தலைவன் தன் நண்பனாகிய தேர்ப்பாகனிடமோ அல்லது தலைவியின் தோழியிடமோ பேசும் பேச்சாகும். இக்

கவிதையில் 'நோய்' என்ற சொல்லே வருகிறது. நோய் பாடியார் எனின் காதலால் உண்டாகும் துன்பத்தைப் பாடியவர் என்றுதான் பொருள். எனவே நற்றிணையில் 185-ஆம் எண் உள்ளதாக அமைந்த இப் பாடல் அவரால் பாடப்பட்டதெனக் கொள்வது பொருத்தமேயாகும்.

**காக்கை பாடினியார் நச்செள்ளையார் :**

செள்ளையார் என்பதுதான் இப் புலவரின் இயற்பெயர். பேராசிரியர் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள், தொன்மை ஆரிய மொழியைப் போலவே தொன்மைத் திராவிட மொழியிலும் அண்ண மெய்யொலி கிடையாது என்றும், மெதுவான ஒலியையுடையனவாய்ப் பின் அண்ணத்தி லிருந்து பிறப்பிக்கப்பட்ட மெய்களே அண்ண மெய்களாக வழங்கிவந்தன என்றும் கூறியுள்ளார்கள். இக் கருத்தை அடிப்படையாகக்கொண்டு 'கேள்' (உறவுமுறையார்) என்ற சொல்லிலிருந்துதான் 'செள்ளை' என்ற சொல் பிறந் தது என்பதைக் காணலாம். 'ஐ' என்பது பெண்பாலைக் குறிக்கும் விகுதி. செள்ளை என்ற சொல் 'விரும்பத்தக்கவள்' எனப் பொருள்படும். இப்பொழுது பேச்சுவழக்கில் செல்ல மாக வழங்கப்படும் 'செல்லி' என்ற சொல்லை இக் காலத் தார் பலர் 'செல்வி' என்ற சொல்லின் மரூஉ என்பர். அதைவிடச் செள்ளை என்பதிலிருந்து அது தோன்றியது எனக் கொள்ளுதல் பொருத்தமாக இருக்கும். 'ந' என் பது பெருமை, அல்லது சிறப்பைக் குறிக்கும். ஆசிரியர்க் கும் பெருமைக்குரிய சிலர்க்கும் இது பட்டமாக அளிக்கப் பட்டு, அவர் பெயருக்கு முன்னர்ச் சேர்க்கப்படும். 'நல்' என்ற சொல்லே 'ந' என விகாரமாயிருப்பின் இதற்கு 'நல்ல பண்புள்ள' என்று பொருள் கொள்ளலாம். நச் செள்ளையார் என்னும் இப் புலவர் 'காக்கை பாடினியம்' என்றதொரு யாப்பிலக்கண நூலை இயற்றியுள்ளார். தொல் காப்பியத்தின் உரையாசிரியர்களுள் ஒருவரான பேரா

சிரியர், தொல்காப்பியரின் காலத்தில் வாழ்ந்திருந்த காக்கை பாடினியார் என்பவரால் இயற்றப்பட்ட காக்கை பாடினியம் என்னும் நூலைப் பற்றியும், அவருக்குப் பிற் காலத்தில் வாழ்ந்திருந்த காக்கை பாடினியாரால் பர்டப் பெற்ற சிறுகாக்கை பாடினியம் என்னும் நூலைப்பற்றி யும் தமது உரையிற் குறிப்பிட்டுள்ளார். நச்செள்ளையார் இவ்விரண்டாம் காக்கை பாடினியாராகத்தான் இருத்தல் வேண்டும். இவர் ஆடுகோட் பாட்டுச் சேரலாதனைப் புகழ்ந்து பதிற்றுப்பத்தின் ஆறும்பத்தை இயற்றியுள்ளார். ஈதன்றிக் குறுந்தொகை 210-ஆம் ப்ாடலையும் புறநானூறு 278-ஆம் பாடலையும் பாடியுள்ளார்.

காக்கை பாடினியார் என்ற தொடருக்குக் ‘ காக்கை யைப் பாடிய ஒரு பெண்பாற் புலவர் ’ என்பது பொருள். காக்கையைப் பற்றிக் குறுந்தொகை 210-ஆம் பாடலில் இவர் பாடியிருத்தலால் இவர் பெயருக்குமுன் இவ் வடை மொழி சேர்க்கப்பெற்றது.

தலைவன் நெடுநாள் பிரிந்திருந்து திரும்பி வருகிறான் ; தான் வரும்வரையில் தலைவிக்கு, ஆறுதல் கூறி அவளைத் தேற்றியதற்காகத் தோழிக்கு அவன் நன்றி கூறுகிறான். ஆனல் தோழியோ, அவனுடைய நன்றியெல்லாம் காக் கைக்கே உரியது எனக் கூறுகிறாள். காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர், அல்லது பிரிந்த சுற்றத்தார் வருவர் என்பது இன்றும் நாட்டுப்புற மக்களிடையே நிலவும் நம் பிக்கை. தன் வீட்டு முற்றத்தில் காக்கை விடாது கரைந்து கொண்டிருந்ததால், தலைவன் விரைவில் திரும்பி வந்துவிடு வான் என்று நம்பித் தலைவி அமைதியாக இருந்தாள். “ திண்ணிய தேர்களை உடைய நள்ளியின் கானத்தில் வாழும் ஆயர்கள், பல பசுக்களை வைத்திருக்கின்றனர். அவர்களுடைய பசுக்கள் தரும் பாலிலிருந்து எடுக் கப்படும் நெய்யை எல்லாம் ஒன்றுசேர்த்துத் தொண்டி நகரில் விளையும் ஏராளமான வெண்ணெல்லைக் கொண்டு

அரிசியாக்கிச் சமைத்த சோற்றுடன், அந் நெய்யைக் கூட்டி ஏழு பெரிய பானைகளில் இட்டுக் கலந்து காக்கைக்குப் பலியாக வைத்தாலும் அது செய்த உத விக்கு இக் கைம்மாறு மிகவும் சிறியதே. என் தோழி உன்னைப் பிரிந்த வருத்தத்தால் உடல் மெலிந்து, தன் தோள் களில் அணிந்திருந்த அணிகளை நெகிழவிட்டு வாடிக்கொண் டிருந்தபோது 'விருந்து வரும்' என்று கரைந்த காக்கை அவளது உயிரைக் காப்பாற்றிக்கொண்டிருந்தது"—இது தான் மேற்குறித்த குறுந்தொகைப் பாடலின் கருத்து. இப் பாடலுள் காக்கை சிறப்புறப் பாடப்பெறுகின்றதாதலின் இப் பாடலைப் பாடிய இப் புலவருக்குக் காக்கைபாடினி யார் என்னும் அடைமொழி தரப்பட்டது பொருத்தமே.

**காவன் முல்லைப் பூதனர் :**

ஐந்து திணைகளிலும் வாழும் மக்களின் அகப்புற வாழ்க்கைகளைப் பற்றிய செய்தி முன்னரே குறிக்கப் பட்டது. வாழ்க்கையில் நாம் பெறும் சிறந்த வெற்றியும் புறத்திணைப் பகுதிகளுள் ஒன்ருகும். களப் போரில் பகை வரைப் புறங்காண்பது மட்டும் வெற்றியன்று; நம் கடமை களை ஒழுங்காக நிறைவேற்றுதற்குரிய வாழ்க்கைப் போரில் அக் கடமைகளைச் செவ்வையாகச் செய்து முடிப்பதும் வெற்றியாகும். இவ் வெற்றியே தலைசிறந்த வெற்றியாகும். கீதையும் உபநிடதங்களும் கடமை ஆற்றி இன்பம் எய்து பவனைக் 'கிருத கிருத்தியன்' என்று பாராட்டும். கடமை யாற்றி மகிழ்ச்சி அடைதலே வாழ்க்கையின் குறிக்கோள் என்று கடைப்பிடித்தல் வேண்டும். வெற்றி நமக்குப் புகழைத் தேடித் தரும். நிலையில்லாமல் மாறிக்கொண் டிருக்கும் இந்த உலகில் நம் செயல்களை நிலைபெறவைப்பதே புகழாகும்.

கவிஞன் இறந்து விடுகிருன்; ஆனல், அவன் கவிதை என்றும் வாழ்கிறது. புத்த பகவான் இறந்துவிட்டார்;

ஆனல் அவர் பரப்பிய கொள்கைகள் இன்றும் உலகில் வாழ்கின்றன; என்றும் அவை அழியா. சோழன் கரிகாலன் இறந்துவிட்டான்; ஆனல், காவிரிக்குக் கரையும் அணையும் கட்டிய அவனது புகழ் என்றும் அழியாமல் வாழும். தமிழ் இலக்கியத்தில் உள்ள 'வாகை' என்னும் புறத் துறையின் கருத்து இதுவேயாகும். என்றும் மங்காத புகழைத் தருவதாகிய வெற்றியைப் பெறுவதே வாகை. தமிழரின் கொள்கைப்படி இவ் வெற்றி, வலிமையை யறிதற் காகப் போட்டியிட்டுப் போர் செய்து பெறும் வெற்றி யாகவோ, கடமைகளை நன்கு நிறைவேற்றி வாழ்க்கையில் பெறும் வெற்றியாகவோ இருக்கலாம். கலிங்கப் போர்க் களத்தே நிகழ்ந்த பெரும் போரில் அசோகன் வெற்றி பெற்ருன். ஆனல் அதைவிட அருமையான வாழ்க்கை வெற்றியை அவன் அற ஆட்சியால் நாட்டை ஆண்டதன் வாயிலாகப் பெற்ருன். மக்கள் வாழ்க்கையில் எத்தனையோ துறைகள் உண்டு. ஒவ்வொரு துறையிலும் இவ் விருவகை வெற்றிகளும் உள்ளன. போதி மரத்தின் நிழலில் அமர்ந்து தியானம் செய்யும்போது, அத் தியானத்தைக் கலைக்க முயன்ற தீயசக்திகளை அடக்கிப் புத்தர் வெற்றி பெற்ருர். ஆனல் மனித சமுதாயத்தோடு இரண்டறக் கலந்து வாழ்ந்து அதற்காகவே தம்மை அர்ப்பணித்துத் தொண்டு செய்த போதுதான் அவர் உண்மையான 'புத்தர்' தன்மையை—தம் வாழ்வின் வெற்றியைப் பெற்ருர். போட்டி யிட்டுப் பெறும் வெற்றி, வாகை யெனப்படும்; வாழ்வில் மனத்தைத் தூய்மை செய்து, கடமைகளை நிறைவேற்றிப் பெறும் இயற்கையான வெற்றி 'முல்லை' எனப்படும். இந்த வெற்றி, உலகில் கண்ணுக்குத் தெரிய வாழும் ஒன்றை வென்று பெறுவதன்று; ஒரு மனிதனின் உடலும் உள்ளமும் இந்தப் பரந்த அண்டத்தோடு ஒற்றித்து, அதன் சேவையில் முழுமையாக வளர்ந்து மலர்ந்து நிற்பதே 'முல்லை' என்று அழைக்கப்படும் இயற்கை வெற்றியாகும்.

காவல் முல்லை என்பது ஓர் அரசன் இவ் வகையில் அடைந்த வெற்றி; அதாவது அசோகன் அற ஆட்சியால் வெற்றிகரமாக நாட்டை ஆண்டதுபோல் ஆளும் ஒரு மன்னன் பெறும் வெற்றி. வாகைத் திணையின் பல துறைகளில் இதுவும் ஒன்று. தொல்காப்பியத்தில் இது குறிப்பிடப் படவில்லை; ஆனால் பிற்காலத்து நூலான 'புறப்பொருள் வெண்பாமாலை'*யில் குறிப்பிடப்பட்டுள்ளது. தொல்காப்பியம் தோன்றிய காலத்திற்குப் பின் இந்த வகையான ஒரு துறையைப் பாடும் வழக்கம் தோன்றி வளர்ந்திருக்கலாம். சங்க இலக்கியத்தில் இத் துறை காணப்படுதலால் தொல்காப்பியம் சங்ககாலத்திற்குப் பல ஆண்டுகளுக்கு முன் தோன்றியிருக்கவேண்டும் என்று துணியலாம். தமிழ்ப் பேரகராதி **'காவல் முல்லை'** என்பதற்கு **"அரசன் ஆட்சியைச் சிறப்பிக்கும் புறத்துறை"** எனப் பொருள் கூறுகிறது.† இதுபற்றி இதனுடன் நிறுத்தி மேற்செல்வோம்.

நாம் நம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட பெயர், **காவல் முல்லைப் பூதனார்** என்பது. புலவரின் இயற்பெயர் **பூதனார்** என்பதே. 'பூத' என்ற வடமொழிச் சொல்லிலிருந்து பூதன் என்ற சொல் தோன்றியதாகத் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.‡ இச் சொல் ஆதன் என்ற சொல்லைப்போல் உள்ளது. ஆதன் என்ற சொல் 'ஆ' (உண்டாதல்) என்ற பகுதியும், 'து' என்றபொருட்சிறப்புத் தரும் உறுப்பும் (இடைநிலையும்), அன் என்ற ஆண்பால் விகுதியும் உடையதெனக் கொள்ளலாம். இவ்வாறே தோன்று என்னும் பொருளையுடையதாகிய 'பூ' (பூத்தல்) என்னும் அடிச் சொல்லிலிருந்து பூதன் என்ற சொல் பிறந்ததாகக் கொள்ளலாம். இச் சொல் மலர்மரங்களின் தெய்வத்தையோ அல்லது மலர்களின் தெய்வத்தையோ, அல்லது திடீரென வெளிப்பட்டு முன்வந்து தோன்றும்

---

* திணை, 8, பாடல், 24. †பக்கம்: 902. ‡பக்கம்: 2835.

தெய்வத்தையோ குறிப்பிடுவதாகலாம்; தமிழ்ப் பேரகராதி கூறுவதுபோல வடமொழியினின்று பிறந்ததுமாகலாம். நற்றிணை 29-ஆம் பாடலைப் பாடிய பூதனார் என்னும் புலவரினின்றும் இவரை வேறுபிரித்தறிவதற்காகக் 'காவல் முல்லை' என்ற அடைமொழி இவரது பெயருக்குமுன் சேர்க்கப்பட்டது. ஆதலால் இத் துறையைப் பற்றி இப் புலவர் தமது கவிதையொன்றில் அழகுறப் பாடியிருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது. இவர் பாடியனவாக எட்டுப் பாடல்கள்* இன்று நமக்குக் கிடைக்கின்றன. இப் பாடல்கள் எல்லாம் அகத்தைப் பற்றியனவே யன்றிப் புறத்தைப் பற்றியன அல்ல. காவல் முல்லைத் துறை, புறத்திணையைச் சேர்ந்ததாகும். புறநானூற்றில் 361-ஆம் எண் உள்ள பாடல் காவல் முல்லைத் துறைபற்றிப் பாடுவதெனச் சொல்லலாம். ஆனால் ஏடுகளில் அப் பாடலின் அடியில் கொடுக்கப்பட்ட துறை விளக்கமும், பாடினோர் பாடப்பட்டோரின் பெயர்களும் சிதலால் அரிக்கப்பட்டுள்ளன. அதனுடன் பாடலின் இறுதி வரிகளும் இடையில் பல வரிகளும் சிதலால் அரிக்கப்பட்டுள்ளன. இப்பொழுது கிடைக்கும் பாடற் பகுதியின் கருத்துக் கீழ்வருமாறு :—

"இடிபோல முழங்கி இனிய உயிர்களைக் கொல்வதற்காகச் சுழலும் கூற்றமே! அவன் உன் வரவுக்காக அஞ்சவில்லை. கல்வி கேள்விகளில் அறிவுடைய சான்றோராகிய வேள்வி அந்தணர்க்கு அரிய கலன்களையெல்லாம் அவன் தாரை வார்த்துக் கொடுத்திருக்கிறான்; தாயினும் மிகுந்த அன்போடு பலர்க்கும் பெருஞ்செல்வம் வழங்கியிருக்கிறான்; தன்னுடைய அருட் குணத்தைப் புகழ்ந்து பாடியவர்க்குச் சிறந்த குதிரைகளும், ஆண் யானைகளும் கொடுத்திருக்கிறான்; தன்னுடைய தாளை வணங்கி அடைந்தவர்க்கு உருண்டோடுகின்ற தேர்கள் தந்திருக்கிறான்; பாணர்க்கும்

---

*அகம், 21, 151, 241, 293, 391; குறுந், 104, 211; நற், 274.

பாடினியர்க்கும் அவர்கள் பாடிய பாடலுக்குப் பரிசிலாகப் பொற்பூக்களை நிரம்பக் கொடுத்திருக்கிறான்; மான் போன்ற கண்ணும், வில்போன்ற புருவமும், இரைந்தோ, கடுமையாகவோ பேசினால் தம் பற்கள் நாவை ஊறுபடுத்தும் என அஞ்சி மெல்லெனப் பேசும் பேச்சும், தம் உடலையே தாங்கமுடியாத மென்மையும் உடைய மங்கையர் பொற்கிண்ணங்களில் மதுவை ஏந்தி நிற்ப, அவன் அவற்றை வாங்கி அவற்றில் உள்ள மதுவை அமுதம் பருகுவதுபோல மகிழ்ச்சியோடு பருகுபவன். அவன்பால் எந்த விதமான குற்றமும் காணமுடியாது.........'' இவ்வாறு ஓர் அரசனின் பண்பைப் புனைந்துரைக்கிறது அப் புறப்பாடல். ஆனால் வருந்தத்தக்க வகையாக அப் பாடல் அரை குறையாக இருக்கிறது. அப் பாடலைக் காவல் முல்லைப் பூதனார் பாடியிருக்கலாம் என்று தோன்றுகிறது. எனினும் இஃது அறிஞரின் ஆராய்ச்சிக்கு உரியது.

**கோடை பாடிய பெரும்பூதனார் :**

பூதனார் என்பது இப் புலவரின் இயற்பெயர். இவர் பெற்றுள்ள அடைமொழியிலிருந்து, இவர் கோடையைப் பற்றிப் பாடியிருத்தல் வேண்டும் என்று தெரிகிறது. கோடை என்பது கோடைக்கானலாக இருக்கலாம். பாண்டியர்கட்கு அடங்கிக் குறுநிலப் பகுதிகளை யாண்ட தலைவர்களுள் கோடைக்கானலை யாண்ட கோடைப் பொருநன் என்பவனும் ஒருவன். இவனைப் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் அகநானூறு 13-ஆம் பாடலில் படர்க்கையாகவும், புறநானூறு 205-ஆம் பாடலில் முன்னிலையாகவும் வைத்துப் புகழ்ந்துள்ளார். புறநானூற்றுப் பாடலின்* கீழ் உள்ள விளக்கம் இவனைக் 'கடிய நெடு வேட்டுவன்' எனக் குறிப்பிடுகிறது. பெரும் பூதனார் பாடியதாக ஒரே ஒரு பாடல்தான்† இன்று நமக்குக்

*புறம், 205. †புறம், 259.

கிடைக்கிறது. அப் பாடலில் கோடை பற்றிய குறிப்பே இல்லை. கோடை பாடிய வென்னும் அடைமொழி இவருக்கு உண்டாகக் காரணமாயிருந்த இவரது பாடல் மறைந்து போயிருக்கக் கூடும். மலை, ஊர் முதலியவற்றைப் பற்றிக் கூறும்போது அவற்றை முன்னரே பாடியவரையும் குறிப்பிடுவது அக் காலப் புலவரின் வழக்கமாக இருந்திருக்கிறது. எடுத்துக்காட்டாக, அகநானூறு 59-ஆம் பாடலையும், 227-ஆம் பாடலையும் கூறலாம். 59-ஆம் பாடலைப் பாடிய மருதனிள நாகனர், அதில் திருப்பரங்குன்றத்தைப் பாடும்போது அதன் சாரலைப் பற்றி அந்துவன் என்ற புலவன் பாடியுள்ளதாகக் குறிப்பிடுகிறார் :

"... . ... ... தண்பரங்குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை."*

அகம், 227 - இல் நக்கீரனர் தழும்பன் என்ற புலவனைப் பற்றிக் குறிப்பிடுவதையும் காண்க :

"தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்லிசைப்
பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்
கடிமதில் வரைப்பின் ஊணூர்."†

இப் பாடல்களில் அந்துவனும் தழும்பனும் புகழப்பட்டிருத்தல் போலப் பெரும்பூதனரும் கோடைபாடிய பெரும்பூதனர் என்று புலவர் பிறரால் புகழப்பட்டிருத்தல் வேண்டும்.

பாரதம் பாடிய பெருந்தேவனர் : (நம்முடைய முடிவின்படி பாயிரம் பாடிய பெருந்தேவனர்) :

தேவன் என்பதே இவரது இயற்பெயர். இதே பெயருடைய மற்றவர்களிடமிருந்து இவரைப் பிரித்தறிவதற்

*அகம், 59 : 11 - 12.

†அகம், 227 : 16 - 18.

காகப் 'பெரு' என்னும் அடைமொழி இவரது பெயருக்கு முன் சேர்க்கப்பெற்றது. 'தேவ' என்னும் வடமொழிச் சொல்லிலிருந்து தேவன் என்ற பெயர் தோன்றியது என்பர். இவ் வடசொல் தெய்வம் அல்லது ஒளியுடைப் பொருள் எனப் பொருள்படும். (தேவு என்ற தமிழ்ச் சொல்லின் அடியாகத் தேவன் என்ற சொல் பிறந்ததெனலாம்.). அல்லது நாடு எனப் பொருள்படும் தேஎம் என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து தோன்றியதாகக் கொள்ளலாம். அவ்வாறு கொள்ளும்போது நாட்டுக்குத் தலைவன், அரசன் என்று பொருள்படும். புறநானூறு, அகநானூறு, ஐங்குறு நூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய ஐந்து தொகைநூல்களிலும் முதலில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள் இவராற் பாடப்பட்டவை என்பது யாவரும் அறிந்தது. பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை இவற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல்களைப் பாடியவரும் இவரேயோ என்பது உறுதியாகத் தெரியவில்லை. ஏனெனில், கலித்தொகையின் கடவுள் வாழ்த்தைப் பாடியவர் நல்லந்துவனாரே என அறிஞர்கள் பலரும் முடிவுசெய்துள்ளனர். நூலில் முதன் முதலாகக் கடவுள் வாழ்த்துப் பாடும் வழக்கம் சங்ககாலத்திற்குப் பிற்காலத்தில் தோன்றியது என்பர். நற்றிணையின் பதிப்பாசிரியர், அதன் கடவுள் வாழ்த்துப் பாடலைப் பற்றி ஆராய்ந்து, அது வடமொழியில் உள்ள விஷ்ணு சகஸ்ரநாம தியான சுலோகத்தின் மொழி பெயர்ப்பே என முடிவு கட்டியுள்ளார்.* இத் தமிழ்ப் பாடலின் மொழி பெயர்ப்புத்தான் அவ் வடமொழிச் சுலோகம் என்று காரணம் ஒன்றும் கூருமல் வேண்டுமானுல் மாற்றிச் சொல்லிக்கொண்டு நாம் அமைதியுறலாம். இம் முடிபைக் கொண்டு பெருந்தேவனர் பிற்காலத்தவர் என்று சிலர் கருதுகின்றனர். இப்பொழுது கிடைக்கும்

*நற்றிணை, பக்கம் : 54.

அரைகுறையான ஒரு பாரத நூல் இவர் பாடியது எனக் கூறப்படுவதும் இக் கருத்தை வலியுறுத்துகிறது. இப் பாரத நூல் 8-ஆம் நூற்றாண்டில் இருந்த தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் என்ற பல்லவ மன்னனைப் பற்றிக் குறிப்பிடுகிறது. மேலும், இந்நூல் சங்ககாலத்தைச் சேர்ந்தது என்று சொல்லமுடியாத அளவுக்கு இதன் செய்யுட்கள் உரைநடை ஆகிய இருபகுதிகளிலும் வடமொழிச் சொற்கள் மிகுதியும் கலந்துள்ளன. ஆயின், இந்தப் பிற்காலப் பாரத நூலின் வேருகச் சங்ககாலத்தில் தோன்றிய பாரத நூல் ஒன்றிருந்தது என்பதை நாம் அறிதல் வேண்டும். நச்சினுர்க்கினியராலும், தொல்காப்பியத்தின் பிற உரையாசிரியர்களாலும் மேற்கோள்களாக எடுத்தாளப்பட்ட பாரத நூற்செய்யுட்கள் முற்காலத்தைச் சேர்ந்தன என்றே தோன்றுகின்றன. பாண்டியர்களின் வேள்விக்குடிச் சாசனம், தமிழ்ச்சங்கம் நிறுவிய சில்லாண்டுகட்குப் பின் வந்த பாண்டிய மன்னர்களில் ஒருவன் செய்த பெருமுயற்சியால் பாரதம் தமிழில் ஆக்கப்பட்டது என்று கூறுகின்றது. எனவே, பாரத நூல் முதன் முதலில் தமிழில் எழுதப்பட்டது, சங்ககாலத்தை அடுத்த காலத்திலேயே என்பது தெளிவாகிறது. சங்ககாலத்தின் முடிவிலேயே அந்நூல் தோன்றியிருக்கலாம். தொகை நூல்களின் உள்ளே பெருந்தேவனுர் பாடிய பாடல் ஒன்றுகூட இல்லை. அந்நூல்களின் கடவுள் வாழ்த்தை மட்டும் அவர் பாடினுர் ஆதலின், அவரது பெயர் பாயிரம் பாடிய பெருந்தேவனுர் என்று கூறுவதே பொருத்தம். முதலில் அவரது பெயர் இதுவாகத்தான் இருந்திருத்தல் வேண்டும். பல்லவர் காலத்தில் இருந்த பாரதம் பாடிய பெருந்தேவனுர் இவருக்கு முற்றிலும் வேருனவர். பிற்காலத்தவர் இவர் இருவரையும் ஒருவராகக் கருதிக் குழப்பமுற்றுப் பாயிரம் பாடிய பெருந்தேவனுர் என்ற பெயரைப் பாரதம் பாடிய பெருந்தேவனுர் எனத் திருத்திவிட்டனர் எனலாம்.

# 7. முடிவுரை

இதுகாறும் சங்கப்புலவர்களின் இலக்கியச் சிறப்புப் பெயர்கள் ஆராயப்பெற்றன. வாழ்க்கையின் எந்த நிலையைப் பாடுகிறார்களோ அந்த நிலையின் உயிர்நிலையாக இருக்கும் உணர்ச்சியை ஒரு சில சொற்களாலேயே யமைந்த சொற்றொடரால் வெளிப்படுத்த முயலும் சங்கப்புலவர்களின் சிறப்பியல்பு இவ் வாராய்ச்சியில் புலனாகிறது. பதிற்றுப்பத்தில் உள்ள ஒவ்வொரு பாடலுக்கும் அதில் அமைந்துள்ள ஓர் அழகான சொற்றொடரே பெயராகத் தரப்பட்டுள்ளது. அப் பெயர்களில் உள்ள கவிதையழகு, அவற்றின் கற்பனை வளத்தையும் எண்ணிப் பார்க்குமாறு நம்மைத் தூண்டுகிறது. ஓர் எடுத்துக்காட்டால் இதனை விளக்கலாம். பாலை பாடிய கௌதமனார் இயற்றிய 3-ஆம் பத்தின் இரண்டாம் பாடலின் பெயர், **'கயிறு குறு முகவை'** என்பது. இச் சொற்றொடர் அப் பாடலிலேயே வருகிறது. நிலமட்டத்திற்குப் பலபல அடிகள் கீழே தோண்டினால் கையளவு தண்ணீரே ஊறும் தன்மை வாய்ந்த பாறைகள் நிறைந்த கொங்கு நாட்டைப் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் என்ற சேரமன்னன் வென்று கைக்கொண்டமையைப் பாடும் பாடல் அது. கொங்கு நாடு, வறண்டதாக இருப்பினும் ஆடுமாடுகளுக்கு அங்குக் குறைவில்லை. அந் நாட்டு மக்கள், தங்கள் ஆடு மாடுகளின் பாதுகாப்புக்காக எதுவும் செய்யக்கூடிய ஆற்றல் வாய்ந்த வீரர்களாயிருந்தனர். அவர்கள், தரையில் மிகமிக ஆழமான கிணறு தோண்டி, அங்கு ஊறும் மிகச் சிறிதளவான தண்ணீரை, நீண்ட கயிறுகளில் கட்டிய சிறு கலங்களால் முகந்து எடுக்கவேண்டியிருந்தது. வலிமை மிக்க இந்த வீரமக்கள் கருணையில்லாத இயற்கையோடு இடைவிடாது போரிட்டுக் கல்தரையிலும் வளமுண்டாக்கும் இந் நாட்டின்மீதுதான் சேரமன்னன் படையெடுத்து

வெற்றி பெற்றான். **கயிறு குறு முகவை** (முகவை சிறிது; அதைக் கட்டி வலிக்கும் கயிறோ மிகமிக நீண்டது.) என்ற சொற்றொடர் இக் காட்சியனைத்தையும் நம் அகக்கண்முன் நிறுத்துகிறது. பாடலின் கருத்தை அழகுற விளக்கும் இத்தகைய கவிதையழகு வாய்ந்த அருமையான சொற்றொடர்கள் பதிற்றுப்பத்தின் எல்லாப் பாடலிலும் அமைந்து அவற்றின் பெயராகவும் உள்ளன. எனவே, இம் முடிவுரையின் தொடக்கத்தில் சொல்லிய கருத்து, எட்டுத்தொகையுள் ஒன்றான பதிற்றுப்பத்தின் எல்லாப் பாடல்களுக்கும் பொருந்துவதே.

எட்டுத்தொகை நூல்களுள் தலையாயது அகநானூறு என்பது பல அறிஞரும் ஒப்ப முடிந்த ஒன்று. அந் நூலில், **களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை** என்ற மூன்று பகுதிகள் உள்ளன. யானைக் கூட்டங்களுக்குத் தலைமையாக உள்ள பல களிறுகள் வரிசையாக நடந்து செல்வதுபோல், மனத்தைக் கவரும் பெருமிதமான நடையும் ஆற்றலும் உடைய பாடல்கள் 120 கொண்டது முதல் பகுதியாகிய **களிற்றியானை நிரை** எனவும், செம்மை நலம் வாய்ந்த மணியும் பவளங்களும் விரவியுள்ள மாலை போல ஒலிநயமும் பொருள் வளமும் ஒருங்கே யமையப்பெற்ற 180 பாடல்கள் கொண்டது **மணிமிடை பவளம்** என்ற இரண்டாம் பகுதி எனவும், இறுதியில் உள்ள 100 பாடல்கள் கொண்ட **நித்திலக் கோவை** என்னும் தொகுதி, தூய்மையான முத்தாற் செய்யப்பட்ட மாலைபோல், ஒன்று போல அமைந்த ஒலிநயமும், தெள்ளிய நடையோட்டமும் உடையது எனவும், இவ்வாற்றால் இம் மூன்று பகுதிகளும் பெயர் பெற்றன என, அவை பெயர் பெற்றமைக்குக் காரணமாக இங்ஙனம் இன்று வரையில் அறிஞர் அனைவரும் கூறிவந்துள்ளனர்.

சங்க இலக்கியத்தில் நன்கு பழகியவர்கள் இம் மூன்று சொற்றொடர்களும் அகநானூற்றுப் பாடல்களில் வருகின்

றனவா என்று ஆராய்தல் வேண்டும். ஆராய்ந்த ஆராய்ச்சியின் பயனாக அவ்வாறு 99-ஆம் பாடலில்* **'பிடிமிடை களிறு'** என்ற சொற்றொடர் வருதலையும், 357-ஆம் பாடலில்† **பெருங்களிற்றின நிரை** என்னும் சொற்றொடர் வருதலையும் காண்கிறோம். **களிற்றின நிரை** என்பதன் மற்றொரு வடிவமே **'களிற்றியானை நிரை'** என்று கொள்ளலாம் அன்றோ? ஆயின் இப் பாடல்‡ இறுதிப் பகுதியான நித்திலக் கோவையுள் தவறாகச் சேர்க்கப்பட்டுள்ளது; இது, முதல் பகுதியிலேயே சேர்க்கப்பெற்றிருத்தல் வேண்டும். அல்லது, ஒருவேளை **'களிற்றியானை நிரை'**, **'நித்திலக் கோவை'** என்ற தொடர்கள் வருகின்ற வரிகள் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை எனக் கொள்ளலாம். மணியையும் செம்பவளத்தையும் சேர்த்துக் காணுகின்ற காட்சி 14-ஆம் பாடலில்§ உள்ளது.

"பவளமொடு மணி மிடைந்தன்ன."

**'மணிமிடை பவளம்'** என்ற சொற்றொடரே 304-ஆம் பாடலில்$ வருகிறது. எனவே, இப் பெயர் தாங்கிய இரண்டாம் பகுதி 300-ஆம் பாடலோடு முடிந்துவிடாமல் 304-ஆம் பாடல் முடிய மேலும் நான்கு பாடல்களைத் தன்னகத்தே கொண்டதாதல் வேண்டும் என நாம் எண்ண வேண்டியிருக்கிறது. அல்லது படியெழுதுவோர் **'மணிமிடை பவளத்துள்'** இடம் பெறவேண்டிய பாடலைத் தவறாக நித்திலக் கோவையினுள் சேர்த்துவிட்டிருக்கலாம். தொகை நூல்கள் இன்று நமக்குக் கிடைத்துள்ள நிலையில் அவை மாறுபாடுகள் நிறைந்தனவாக உள்ளன. எடுத்துக்காட்டாகப் புறநானூறு 42-ஆம்பாடல், வளவனை(சோழனை) விளித்துப் பாடப்பெற்றிருப்பவும், அதன் அடிக் குறிப்பு

---

*வரி, 13. †வரி, 8. ‡357. §வரி, 3-4. $வரி, 13.

அது பாண்டியனை விளித்துப் பாடியதெனக் கூறுவதைக் காணலாம்.*

பத்துப் பாட்டுள் ஒரு பாடலின் பெயர் 'மலைபடு கடாம்' என்பது. அச் சொற்றொடர் அப் பாடலிலேயே† வருவதைக் காணலாம். "இதனைப் பாடிய புலவர், மலையினை யானையொன்றனுக்கு உவமித்து, அதன் பல்வேறு திறப்பட்ட ஒலிகளைக் **கடாம்** என்று சிறப்பித்துக் கூறுகிறார் ஆதலின் இது **மலைபடு கடாம்** எனப் பெயர் பெற்றது" என்று நச்சினார்க்கினியர் தமது உரையிற் கூறுகிறார்.

தொகை நூல்கள், பத்துப்பாடல்கள் இவற்றின் பெயர்களே, பாடலின் கருத்தைச் சுருக்கமாக விளக்கும் உயிர்நிலையான தொடரொன்றை அப் பாடலில் அமைக்கும் பண்புதான் சங்ககாலத்தின் சிறந்த பண்பு என்ற நம் ஆராய்ச்சியை மெய்ப்பிக்கின்றன. வெறும் அடியளவை அடிப்படையாகக் கொண்டே சங்க நூல்கள் வெவ்வேறு தொகை நூல்களாகப் பிரிக்கப்பட்டன என்று கொண்டால், அவற்றை நாம் நன்கு புரிந்துகொள்ளமுடியாது. தொகை நூல்கள் இவ்வாறு அமைந்து நிற்பதற்கு அடியளவு மட்டுமன்றி வேறு சிறந்த காரணமும் இருத்தல் வேண்டும். நான்கிலிருந்து எட்டு அடிகள் வரையுடைய அகவற் பாக்கள் குறுந்தொகையாகத் தொகுக்கப்பட்டன. ஒன்பதிலிருந்து பன்னிரண்டு அடிகள் வரையுடைய அகவற்பாக்கள் நற்றிணையாகத் தொகுக்கப்பட்டன. பதின்மூன்று முதல் முப்பத்தோரடிகள் வரையுடைய பாடல்கள் நெடுந்தொகையில் இடம் பெற்றன. மிகச்சிறிய ஐந்நூறு பாடல்கள் கொண்டது ஐங்குறுநூறு எனத் தனிநூலாயிற்று. இவையனைத்தும் அகப்பொருள் பற்றிய தனிப்பாடல்கள்.

---

*டாக்டர் சாமிநாதையரவர்களின் புறநானூற்றுரை, இரண்டாம் பதிப்பு.

†வரி, 348.

புறப்பொருள் பற்றிய அகவற்பாக்களும் வஞ்சிப்பாக்களும் புறநானூற்றில் தொகுக்கப்பெற்றன. சேர மன்னர்களைப் புகழ்வனவாக அமைந்த பாடல்கள் 'பதிற்றுப் பத்து' என்ற தனிநூலாகத் தொகுக்கப்பெற்றன. அகப்பொருள் பற்றிய கலிப்பாக்கள் 'கலித் தொகை' என்ற பெயருடன் வேருகத் தொகுக்கப்பெற்றன. இது போலவே பரி பாடல்கள் அடங்கிய நூல் 'பரிபாடல்' என்றே தனியே அழைக்கப்படுகிறது. அகப் பொருள் பற்றிய ஆசிரியப் பாக்கள் மட்டும் அடியளவு காரணமாக நான்கு நூல்க ளாக அமைந்தன. இம்மாதிரி அடியளவு கொண்டு தொகுக்கப்பெற்றதன் உட்கருத்தை இன்றுவரை யாரும் விளக்கவில்லை. எந்த வகையான உணர்ச்சிநிலைகளைப் பாட எடுத்துக்கொண்டாலும், அவற்றின் உயிர்நிலையை யறிந்து பாடலில் அமைக்கும் பண்பு சங்ககாலத்தில் தலைசிறந் திருந்தது என்பதை உணர்ந்தால், பாடல்களின் வெவ்வேறு அடியளவுகள் வெறும் அடையாளக் குறிகள் அல்ல; கவிதைப் படைப்பிற்கு இன்றியமையாதனவாகிய அநு பவம், உணர்ச்சி, இயற்கை ஆகியவெல்லாம் அழகுற ஒன்று சேர்ந்த சேர்க்கையின் அளவாக அவை நிற்கின்றன என்பது விளங்கும்.

கவிதைக்கு அடிப்படையான கருத்தின் உயிர்நிலை யைச் சுட்டிக்காட்டவேண்டும் என்ற ஆர்வமும், அவ் வாறு சுட்டிக்காட்டுதற்குத் தகுதியான சொல் அல்லது சொற்றொடரைத் தேடியமைக்கும் பண்புமே சங்க காலத் தில் காப்பியம் தோன்றுதற்குக் காரணமாகும். புதிய கதைகள் (விருந்து), பழங் கதைகள் (தொன்மை) என்பன பற்றித் தொல்காப்பியச் செய்யுளியல் பேசுகிறது. ஆயின், கவிதைகளில் அமையவேண்டும் துறைகளைப் பற்றி விளக்க மாக எடுத்துக் கூறும் அந் நூலின் அகத்திணையியல், புறத் திணையியல், களவியல், கற்பியல் என்ற நான்கு இயல்களும் ஒருவனுடைய வாழ்க்கையின் தொடக்கத்திலிருந்து முடிவு

வரை நிகழ்ந்த நிகழ்ச்சிகளை விரித்துரைக்கும் காப்பியத்தைப் பற்றிச் சிறிதளவேனும் கருதவில்லை ; ஆனால், மனித வாழ்க்கையில் ஆங்காங்கு அவரவர் மனநிலைகளால் விளைந்த சிறுசிறு அரிய உணர்ச்சிகளுக்குக் கலைவடிவம் கொடுப்பனவாகவே அவை அமைந்துள்ளன. நொடிப்பொழுதில் தோன்றி மறையும் அல்லது சில மணி நேரமே வாழும் உணர்ச்சி நிலைகளுக்குச் சாகா வடிவம் கொடுப்பதே பாட்டு என்ற சங்கப் புலவர்களின் கொள்கையைத் தொகை நூல்களில் உள்ள ஒவ்வோர் அமைப்பும் நமக்கு நினைவூட்டுகிறது. மனித வாழ்க்கையில் அவ்வப்போது திடுமெனத் தோன்றி மனித மனத்தை நிரப்பி அடிமை கொள்ளுகின்ற உணர்ச்சியை அது தன்னகத்தாயினும் பிறரகத்தாயினும் தோன்றும்போதே உணர்ந்து, அதற்குச் சொல்வடிவில் சாகாத வாழ்வு தருவதே புலவனின் தொண்டு. நிலையற்றனவாய்த் தோன்றி மறையும் நொடிப் பொழுதளவு உணர்ச்சிகளுக்கு நிலையான கலைவாழ்வு தருவதே புலவனின் நோக்கம். சொற்களெல்லாம் அவனுடைய கருவிகள். சொற்கள் தனியாக நிற்கும்போது அவற்றிற்கு ஒலி நயமோ கருத்தாழமோ இல்லை. அவற்றை அழகுறச் சேர்த்துச் சிந்தனையைத் தூண்டும் குறிப்பையும் அவற்றினிடையே புலவன் பெய்த பிறகுதான் சொற்களுக்குக் கலைவடிவமும் படிப்போர் மனத்தை அள்ளிக்கொள்ளும் அற்புத ஆற்றலும் உண்டாகின்றன. படிக்குந்தோறும் படிக்குந்தோறும் புதுப் புதுக் கருத்துக்களைத் தோற்றுவிக்கின்ற ஆற்றல் சொற்களுக்கு இயற்கையாக இல்லை. அவற்றிற்குக் கலைவடிவமும் உணர்ச்சி உயிரும் நல்கிய புலவனின் கவிதையுள்ளமே அந்த ஆற்றலைக் கவிதைக்கு நல்குகிறது. பலவகைச் சொற்களும் புலவனது கவிதையாற்றலால் ஒரு புதுமுறையில் ஒன்றுசேர்க்கப்படுகின்றன ; அல்லது, சிலர் கருதுவது போல் புலவனது கருத்திற்கேற்பத் தகுதியான இடத்தில்

அமைந்து கவிதைக்கு அணி செய்கின்றன. இவ் வமைப்பே சொற்களின் பரு ஒலிகட்கு நுண்பொருளைத் தந்து, படிப் போரை உணர்வுலகிற்கே அழைத்துச் சென்று, புலவன் கண்ட தெய்வீகக் காட்சியைக் காட்டுகிறது. எனவே, சொற்களுக்குப் புலவன் தரும் 'அமைப்பே'—'கலை வடிவமே' அற்புத ஆற்றல் புரிகிறது. தொல்காப்பியர், கவிதையில் பொருளுடன் ஒன்றுபட்டுத் தோன்றும் உள்ளுறை (உடனுறை), பொருளின் புறத்தே மிக ஆழ்ந்து எண்ணிப் பார்க்குங்கால் தோன்றும் இறைச்சி (குறிப்பு) முதலியவை பற்றித் தமது தொல்காப்பிய நூலிற் குறிப்பிடுகிறார். புலவனின் கற்பனைத் தீயில் அவை எல்லாம் உருகி ஒன்றிலிருந்து ஒன்று பிரித்தெடுக்க முடியாதபடி ஒன்று கலந்து கவிதை என்ற வடிவம் பெற்றுத் திகழ்கின்றன. தொல்காப்பியர், கவிதையின் முடிவான பயனுக்கு 'நோக்கு' எனப் பெயரிடுகிறார். எழுத்து, அசை, தளை, அடி முதலாய யாப்பின் உறுப்புக்களை யெல்லாம் கொண்டு உருக்கிப் புலவன் தன் மனத்தகத்தே எழுந்த அழகுணர்ச்சிக்கு ஒப்புயர்வற்ற தனி வடிவம் கொடுத்து அதை மற்றவர்கள் ஆழ்ந்து உற்று நோக்குங்கால் தன் உளத்தெழுந்த அழகுணர்ச்சியைத் தான் கண்டவாறு காணச் செய்வதே நோக்காகும்.

இவ்வாற்றால் சங்கப் பாடல்கள் தற்காலப் பாடல்களை நமக்கு நினைப்பூட்டுகின்றன. சங்கப் பாடல்கள், மிகப் பழங்காலத்தில் ஓர் இனமோ சமூகமோ சேர்ந்து பாடி வந்ததைத் தழுவிய பாடல்களோ நாடோடிப் பாடல்களோ அல்ல. தனித் தனியே ஒவ்வொருவரே பாடின பாடல்களே சங்கப் பாடல்கள். பாமர மக்கள் மிக்க மகிழ்ச்சியின் காரணமாகத் தங்களுக்கு இயல்பாகவுள்ள ஆற்றலினால் பாடும் எளிய பாடல்கள் தமிழ் நாட்டில் மிகப் பழங்காலத்தில் இருந்தன. சங்க இலக்கியப் பாடல்கள் அந்த வகையைச் சேர்ந்தனவல்ல. எளிய பாடல்களில் இல்லாத இலக்கிய அமைப்பும் இலக்கிய மரபும் அவற்றிற்கு உண்டு.

மக்களிடையே நெடுங்காலமாக வளர்ந்தமைந்த பண்பாட்டின் விளைவே சங்க இலக்கியம். இதனுற்ருன் சங்க காலத்தில் காப்பியம் தோன்றவில்லை. மனித உள்ளத்தின் வெவ்வேறு நிலைகளை ஆராய்ந்து கண்டு, அதனுல் முதிர்ந்த மெய்யுணர்வு நிரம்பியிருந்த காலம் சங்க காலம். தற்காலக் கவிதைகளில் காணப்படாத மெய்யுணர்வும், தற்காலப் புலவர் கனவிலும் காணுத கவிதையுணர்வும், கற்பனைக் களஞ்சியமும் சங்கப் புலவர்களின் உள்ளத்தில் மிகுந்திருந்தமையால், சங்க இலக்கியம் சுவை குன்ருமல் நிலை பெறுவதாயிற்று. சங்க காலத்தில் தோன்றிய தனிப்பட்டவரின் பாடல்கள் நல்ல வேளையாகச் சமூகத்தைப் புறக்கணிக்கவு மில்லை. சமூகத்தினின்று முற்றிலும் தனியாகப் பிரிந்து நின்று பாடிய பாடல்கள் அல்ல அவை. அக் காலத்தில் சமூகம் எவ்வளவு பரந்திருந்ததோ அவ்வளவு பரந்திருந்தது தங்கள் பண்பாடு என்று எண்ணிறந்த சங்கப் புலவர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள். ஆனுல், அவர்கள் வேண்டுமென்றே கழிந்த காலத்தினின்றும் பிரிந்து நின்ருர்களோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. புலவர்கள் அனைவரும் நிகழ்கால வாழ்க்கையிலேயே கருத்துச் செலுத்துகிருர்கள். சங்க இலக்கியத்தில் புராணக் கதை பற்றிய குறிப்புக்கள் மிகக் குறைவு. அவையும் கலித்தொகையில் உள்ளனபோல், நாட்டுப் பாடல்களோடு தொடர்புகொள்ளும் சமயங்களில்தான் கையாளப்படுகின்றன. சில இடங்களில், வரலாற்று நிகழ்ச்சிகள் புராணக் கதை நிகழ்ச்சிகளைப்போல் சிறப்புடையனவாகக் கருதிப் போற்றப்படுகின்றன. இதற்குக் காரணமான தமிழ் நாட்டின் சங்ககால வரலாறு இன்னும் நன்கு ஆராய்ந்து விளக்கப்படல்வேண்டும். பௌத்தர்களும் பிற தத்துவ நூலறிஞர்களும் மேற்கொண்ட சிந்தனைச் செல்வங்கள் இந்த வகையான இலக்கிய நிலையை விளக்குவனவாகலாம். சங்ககாலத்தில் இலக்கிய மரபு வழி யமைந்த இலக்கியப்

பாடல்களோடு நாட்டுப் பாடல்களும் ஒருபுறம் வழக்கி லிருந்திருக்கவேண்டும். கலித்தொகையிலும் பரிபாடலிலும் சிலப்பதிகாரத்திலும் நாட்டுப் பாடல்களின் எதிரொலிகளைச் சில பாடல்களில் நாம் காண்கின்றோம். சங்க இலக்கியத்தில், மற்றொரு போக்கிற் செல்லவேண்டும் என்ற புதுக் கருத் தும் ஏற்பட்டதாகக் காணப்படுகிறது. நீண்ட பாடல்களைப் பாடவேண்டும் என்ற ஆர்வம்தான் அது. பத்துப் பாட்டில் உள்ள நீண்ட பாடல்கள் இதைத் தெளிவாக்குகின்றன. சிறந்த தமிழ்க் காப்பியம் என்று பல்லோராலும் போற்றிப் புகழப்படும் சிலப்பதிகாரம் 30 நீண்ட பாடல்கள்—காதை கள்—கொண்ட நூலே. தனிப்பட்டவரின் பாடலாய்ச் சிறிய அளவில் அமைந்த சங்கப் பாடல்களிலிருந்து காப் பியம் வளர்ந்து தோன்றியமையைச் சிலப்பதிகாரம் காட்டு கிறது.

# குடிபற்றிய சிறப்புப் பெயர்கள்

## [இரண்டாம் பகுதி]

## 1. முன்னுரை

சங்க காலத்தில் இருந்த குறுநில மன்னர்கள், அரசர்கள் இவர்களின் பெயர்களை ஆராய்வோமாயின், வேள் ஆய், கொங்கர்கோ இளஞ்சேரல் இரும்பொறை என்பன போல அவை பெரும்பான்மையாக அவர்களின் குடிப் பெயர்களாகவோ, குடும்பம் அல்லது இனப்பெயர்களாகவோ இருத்தலை நாம் காணலாம். எனவே, அவர்களின் பெயர்களைப்பற்றி ஆராய்ச்சி செய்யும்போது, சங்க காலத்தில் இருந்த குடிப் பெயர்களை ஆராய்வதும் நமக்கு இன்றியமையாத தாகின்றது.

## 2. தமிழரும் தமிழகமும்

"மண் செறிந்த உலகத்தின்கண் குளிர்ந்த தமிழ் நாட்டிற்கு உரியவராகிய, முரசு முழங்கு படையினையுடைய மூவர்"* என்றும், "தமிழ் கெழுவிய மூவர்"† என்றும், "பரந்த இடத்தையுடைய இவ்வுலகில் வாழும் நிலைபெற்ற உயிர்களைக் காக்கின்ற, முரசு முழங்கு சேனைகளையுடைய மூவர்,"‡ என்றும் வருவனவற்றில் தமிழகத்தின் பேரரச-

*புறம், 35 : 3-4; பிற்சேர்க்கை 4 : 8.

†அகம், 31 : 14; பிற்சேர்க்கை 4 : 9.

‡பெரும்பாணாற்றுப் படை, 32-33; பிற்சேர்க்கை 4 : 10.

ராய் விளங்கிய மூவர் குறிப்பிடப்பெற்றிருத்தலை நாம் காண்கிறோம். தமிழகத்தில் இருந்த மூன்று பெரிய அரச குடும்பங்களைச் சேர்ந்தவரே மூவர் என அழைக்கப் பெற்றனர்.

தமிழகம் என்ற சொல் சங்க இலக்கியத்தில் உள்ளது. தமிழகத்தின் எல்லைகள் கீழ்க் கண்டவாறு கூறப்பட்டுள்ளன :

“ வடவேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம் ”* “ வையக வரைப்பின் தமிழகம்.”†

வடக்கில் வேங்கடமலையும் தெற்கில் குமரியும் கிழக்கிலும் மேற்கிலும் கடல்களும் எல்லைகளாக உள்ள நிலப் பரப்பே தமிழகம் ஆகும். ஈண்டுள்ள மக்கள் தமிழ் மொழியைத் தங்கள் தாய்மொழியாகக் கொண்டவர்கள்.

மொழியின் பெயராகிய ‘ தமிழ் ’ என்ற சொல் சில சமயங்களில் தமிழகத்தில் ஆண்ட மூவரையும் குறிப்பதுண்டு. எடுத்துக்காட்டாகத் “ தமிழ் தலைமயங்கிய தலையாலங்கானம் ”‡ என்பதைக் காண்க.

‘ முடியுடை மூவேந்தரும் தலையாலங்கானத்தில் வந்து குழுமினர்கள். அப்பொழுது பாண்டியன் நெடுஞ்செழியன் தனியொருவனாய் நின்று மற்ற இரு பெருவேந்தரையும், ஐந்து குறுநில மன்னரையும் எதிர்த்து வென்றான் ’ என்பது ஈண்டு நினைவுகூர்தற்கு உரியது.

தமிழர்கள் தமிழ்மொழியைப் பேசி வந்தமையாலேயே தமிழர்கள் என்ற அப் பெயரைப் பெற்றனர் என்பதை இது குறிக்கும். தமிழகம்§ என்ற பெயர் நாட்டிற்கு அமைந்ததும் இதுபற்றியேயாகும்.

“ தமிழ் கூறு நல் உலகம் ”$: ‘ தமிழ்மொழி பேசும் நல்ல உலகத்தவர் ’ என்பது பொருள்.

---

*தொல், எழுத்து : பாயிரம். †புறம், 168 : 18.
‡புறம், 19 : 2. §புறம், 168 : 18.
$தொல். எழுத்து. பாயிரம்.

தமிழர் என்பது மக்களில் ஓர் இனத்தவரின் பெயராகும். தமிழ் என்ற சொல் முதலில் மொழியையே குறித்தது. காலஞ் செல்லச் செல்ல தமிழ் பேசும் பகுதி முழுதும் தமிழ்நாடு என்னும் கருத்து மக்களிடையே வளரத் தொடங்கியது. உடன்பிறப்பினரான தமிழ் மன்னர் மூவரும் அடிக்கடி தம்முள் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டன ரெனினும் இக் கருத்து மாருது நிலைபெற்றிருந்தது. கிரேக்க ஆசிரியர்கள் குறிப்பில் தமிழகம் என்ற பெயர் தமரிகா* எனச் சிதைந்த வடிவில் இருத்தலைக் காணலாம். தமிழ் நாட்டில் அப்போது அரசு புரிந்த மன்னர்களின் பன்மையை எண்ணும்போது இந்த ஒற்றுமைக் கொள்கையைப்பற்றிச் சிறிது திகைப்புற வேண்டியே உள்ளது. தமிழ் என்ற உடனே, அரசர் மூவரும் அதனேடு ஒருங்கு சேர்த்தே எண்ணப்பெற்று வந்தமையால், மக்கள் அவரிடையே இருந்த முரண்பாட்டைப் பொருட்படுத்தா தொழிந்தனர். பண்டைய உலகைக் குறித்து இப்போது வழக்கிலிருக்கும் சொல்லை ஆளுவது தவறில்லை என்ருல், 'தமிழுலகில் உள்ளவர் தமிழர்' என்ற தேசீயக்கொள்கை வளர்ச்சியுற்று, நாளடைவில் இப்போது நாம் ஆராய முன்நிற்கும் தமிழர் என்ற சொல்லாட்சி நிலைபெறுவதாயிற்று எனலாம்.

ஒரு சேர மன்னன், தன்னுடைய முரசு கட்டிலில் அறியாது ஏறிப் படுத்து உறங்கித் தன் முரசினுக்கு அவமதிப்பு உண்டாக்கிய ஒரு புலவரைக் கொல்வதற்கு மாருக, அவரை 'ஒரு தமிழர்' என்பதற்காக அவன் கவரி வீசி அவருக்கு மதிப்பளித்த நிகழ்ச்சியை அப் புலவரே ஒரு புறநானூற்றுப் பாடலில் கூறியுள்ளார்.† புறநானூற்று உரையாசிரியர் இப் பாடற் பகுதிக்கு மற்ருெரு பொருளையும் தந்துள்ளார். சேர மன்னன், அப் புலவர் ஒரு சிறந்த தமிழறிஞர் என்பதை உணர்ந்துகொண்டான் என்பதே

*(Damarica) †புறம், 50.

அப்பொருள். இக்கவிதையில் வரும் நிகழ்ச்சி, அரசன் அப் புலவரைத் தன் நாட்டவர் என்பதால், அவரிடம் அன்பு காட்டத் தொடங்கினன் என்பதை உணர்த்துகிறது எனின், தேசிய உணர்ச்சி தலையெடுக்கத் தொடங்கியதை அது குறிக்கின்றது எனலாம்.

தமிழகம் முழுதும் தமிழ்மொழி வழங்கிவந்த இடமாக இருந்த தென்றாலும், மதுரை நகரே 'தமிழ் கெழு கூடல்'- தமிழ் மொழி நன்கு தழைத்தோங்கி யிருந்த கூடல்—என அழைக்கப்பட்டது. "கூடல்" என்பதற்கு "அறிஞர்கள் அல்லது வணிகர்கள் ஒன்று கூடுதல்—ஒன்றுகூடும் இடம்" என்பது பொருளாகும். இப் பெயர் மதுரைக்கு அமைந் துள்ளமையால், பழங்காலத்தில் மதுரையில் ஒரு தமிழ்ச் சங்கம் இருந்திருத்தல் வேண்டும் என்றும், தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளினின்றும் பல புலவர்கள் அங்கு வந்து கூடுவர் என்றும், அவர்கள் புதியனவாகப் புலவர்களால் எழுதப்பட்ட நூல்களை ஆராய்ந்து, மதிப்பிட்டு ஏற்றுக் கொள்ளுதலோ தள்ளுதலோ செய்வர் என்றும் கருத இடம் ஏற்படுகிறது. இந்தக் கருத்து ஏற்புடையதாயின் 'தமிழ் கெழு கூடல்' என்னும் தொடரில் உள்ள **தமிழ்** என்ற சொல், தமிழ்ப் புலவர்கள் எல்லோரையும் ஒருங்கே உணர்த்துவதாகும். ஆகவே, மக்கள் பேசிவந்த தமிழ் மொழியைக்கொண்டே தமிழர், தமிழகம் என்ற பெயர்கள் முறையே மக்களுக்கும் நாட்டிற்கும் அமைந்தன என்னும் நமது கருத்து வலியுறுவதாகும்.

இதனால், பாண்டிய நாடு மட்டுமே தமிழ்நாடு எனப் படும் என்று கூறுவதாக நினைத்தலாகாது. தமிழ் நாட்டில் ஏதாவது ஓரிடத்தில்தான் தமிழ்ச் சங்கம் இருத்தல் இயலும். ஏதோ ஒரு காரணம் பற்றித்தான் அது மதுரை யில் இடம் பெற்றிருக்கவேண்டும். ஆனல், அது மதுரை யில் நிறுவப்பெற்றமைக்குச் சிறப்பான காரணம் இன்ன தென இப்போது நம்மால் அறியக்கூடவில்லை. தமிழ்

நாட்டில் இடைவிடாது தம்மில் ஒருவருக்கொருவர் பூசல் விளைத்துக்கொண்டிருந்த முடி மன்னர்கள், குறுநில மன்னர்கள்—இவர்கள் ஆட்சியில் இருந்த எல்லாத் தமிழ் மக்களும், பழங்காலந் தொட்டு வழி வழியாகத் தமிழ் மொழிக்குத் தொண்டு செய்துவரும் தமிழ்ச் சங்கம், தமிழ் நாடு முழுவதற்கும் பொதுவுடைமையாகும் என்ற தேசீய உணர்ச்சியோடு அதைப் போற்றிப் பெருமைப்படுத்தி வந்தனர். இத்தகைய உணர்ச்சியின் விளைவாக மதுரையும் அதிலுள்ள வையை நதியும் தெய்வீகத் தமிழ் வடிவமாகவே புலவர்கட்குக் காட்சியளித்தன.

"தமிழ் வையைத் தண்ணம் புனல்" — "தமிழ் வையையின் தண்ணிய அழகிய நீர்"—என்பது பரிபாடல். (6 : 60).

தமிழ் நாட்டின் தொன்றுதொட்டுவரும் குடிகள் என மூவேந்தர் குடிகளும் தமிழ் இலக்கியத்தில் அடிக்கடி குறிக்கப்படுகின்றன. குடிமையைப் பற்றிக் கூறப்புகுந்த திருவள்ளுவர், தமது திருக்குறளில் குடிமை என்னும் அதிகாரத்தின் ஐந்தாம் குறளில் 'பழங்குடி' என்ற ஒரு தொடரை ஆளுகிறார். உரையாசிரியர் பரிமேலழகர் 'தொன்று தொட்டு வருகின்ற குடி' என அதற்கு விளக்கம் தருகின்றார். 'தொன்று தொட்டு வருதல்' எனின் 'சேர சோழ பாண்டியர் என்றாற்போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டுவருதல்' என்றும் அவர் மேலும் விளக்கம் எழுதுகிறார். அஃதாவது உலகம் தோன்றிய நாள் முதற்கொண்டே சேர சோழ பாண்டியர் மேம்பட்டிருந்தனர் என்பதாகும். எஃது எவ்வாறாயினும் இந்த முப்பெருங் குடிகளும் என்று தோன்றின என்பதே நம்மால் உறுதியாக அறிய முடியவில்லை. இம் மூவர் அரசரும், 'வேந்தர்' என்றும், 'முடியுடை வேந்தர்' என்றும், 'முரசு முழங்கு தானை மூவர்' என்றும் தமிழிலக்கியங்களில் குறிப்பிடப்பெறுகின்றனர்.

சங்க இலக்கியத்தில் 'வேந்தரும் வேளிரும்' என்ற தொடர் அடிக்கடி வரக் காண்கிறோம். இங்கு வேந்தர் என்பார் தமிழகத்தின் முப்பெரு மன்னர் குடியைச் சேர்ந்தவரும், வேளிர் என்பார் குறுநில மன்னர்களும் ஆவர். சங்க இலக்கிய உரையாசிரியர்களின் கருத்துப்படி குறுநில மன்னர்கள் மூவேந்தர்களைப்போல் முரசும் முடியும் உடையவர்கள் அல்லர்; சில சமயங்களில் மூவேந்தர் ஆட்சியின்கீழ் எதாவது ஒரு பகுதியை ஆளும் உரிமை பூண்டவர். கீழ்க்காணும் மேற்கோள்கள், உரையாசிரியர்களின் கருத்தைத் தெளிய விளக்குவனவாகும்:

சீவக சிந்தாமணி 2914-ஆம் பாடலுக்கு உரைகூறப் புகுந்த நச்சினார்க்கினியர், 'படையுங் கொடியும்' என்னும் சூத்திரத்தால்,* 'அரசர்க்கே முடி கூறினமையானும்', 'வில்லும் வேலும்' என்னும் சூத்திரத்தால்,† 'மன்பெரு மரபின் ஏனோர்க்கு முடி கூறாமையானும்' என்று குறிப்பிடுகிறார்.

"தானை, கொடி, குடை, முரசு, குதிரை, களிறு, தேர், முடி, தார்—இவையெல்லாம் முடியுடை மன்னர்கட்கே உரியன.‡ வில், வேல், கழல், மாலை, தேர், வாள் முதலியனவெல்லாம் குறுநில மன்னர்களுக்கும் உரியன.§ எனவே, முடியும் முரசும் பேரரசர்களுக்கே உரியன என்பது தெளிவாகிறது. வேளிரைப் பற்றித் தனியாக இன்னும் ஆராய்தல் வேண்டும். எனவே, ஈண்டுத் தமிழர்களைப் பற்றியும் தமிழ் மூவேந்தர்களைப் பற்றியும் ஊன்றி நோக்குவோம்.

*தொல், பொருள்: 626. †தொல், பொருள்: 638.
‡தொல், பொருள்: 626. §தொல், பொருள்: 638.

# 3. பாண்டியர், சேரர், சோழர்

மேற் குறிப்பிட்டவாறு நமது இலக்கியம், "தமிழர் அனைவரும் ஒரே குடியினர் அல்லர்; சேரர், சோழர், பாண்டியர் என்ற மூன்று வகையினரான குடியினர்; ஒவ்வொரு குடியினரும் ஒவ்வொரு மன்னனைத் தமக்குத் தலைவனாகப் பெற்றிருந்தனர்; ஆனால், அனைவரும் பொதுமையாகத் தமிழ் மொழியே பேசி வந்தனர்" என்று உணர்த்துகின்றது.

> "மண்திணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்
> முரசு முழங்கு தானை மூவர்"*

எனவும்,

> "தமிழ் கெழு மூவர்"†

எனவும் வருதலை நோக்குக.

நாட்டு மக்களுள் ஒவ்வொரு பகுதியினரைத் தம் குடி மக்களாகக் கொண்டு அவர்கட்குத் தலைவராய் இருந்து மூவேந்தர்களும் தமிழகத்தை ஆண்டுவந்தனர் என்பதை மேலே குறித்த வரிகள் நமக்கு உணர்த்துகின்றன. ஒரே ஒரு தமிழகத்தின் மூன்று குழுவினரின் பெயர்களே பாண்டியர், சேரர், சோழர் என்பதில் எவர்க்கும் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால், பாண்டியரென்றும், சேரரென்றும், சோழரென்றும் அவர்கள் அழைக்கப்பெற்றதற்குக் காரணம் யாதாய் இருக்கலாம் என்பதை ஆராயப் பலர் பல வகையாக முயன்றுவந்திருக்கின்றனர்.

தமிழகத்தில் தொன்று தொட்டு வரும் வழக்காற்றைப் பற்றி டாக்டர் கால்டுவெல் கூறும்போது, "தமிழர்கள் எக்குடிப் பிறந்தவராயினும் சரி, எவ்விடத்தைச் சேர்ந்தவராயினும் சரி அவர்கள் சேர சோழ பாண்டியர்களா

---

*புறம், 35 : 3-4. †அகம், 31 : 14.

யிருப்பினும் சரி, அவர்கள் எல்லோரும் திராவிடர் என்றே பொதுவாக அழைக்கப்பெற்றனர்; அவர்கள் பேசிய மொழி திராவிட மொழி அல்லது தமிழ் மொழி என்றே பொதுவாக எங்கும் அழைக்கப்பட்டது" என்கிறார்.

"சேரர் அல்லது கேரளர், சோழர், பாண்டியர் எல்லோரும் ஓரினத்தவரே என்ற கருத்து, இந் நாட்டில் பரம்பரையாக (மரபாக) வழங்கும் மரபுரைகளோடு இயைந்ததாகவே உள்ளது. தமிழில் வழங்கும் உள்நாட்டு மரபுரை (பழங்கதை) ஒன்று சேரன், சோழன், பாண்டியன் என்ற மூவரும் அரச குடும்பம் ஒன்றிற் றோன்றிய உடன்பிறந்தவர்கள் என்றும், தென்னிந்தியாவில் திருநெல்வேலிச் சீமையில் முதன்முதலில் நாகரிகம் தோன்றி வளர்ந்த பெருமையுடைய இடம் எனப்படும் தாமிரவருணி ஆற்றின் கரையில் உள்ள கொற்கையில் அவர்கள் மூவரும் ஒன்றாக இருந்து ஆட்சிபுரிந்தனர் என்றும், பின்னொரு காலத்தில் அவர்களுக்கிடையே பிளவு ஏற்படப் பாண்டியன் அங்கேயே தங்க, மற்ற இருவரும் பிரிந்து சென்று வடக்கேயும் மேற்கேயும் தனித்தனியே அரசுகளை அமைத்துக்கொண்டனர் என்றும் கூறுகிறது."*

பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியாரும் 'சோழர்' என்ற தமது சிறந்த நூலில் இம் முறைமையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

இந்த உள்நாட்டு மரபுரையை (கதையை) அடிப்படையாகக் கொண்டு சில அறிஞர்கள் சேரன், சோழன், பாண்டியன் என்ற பெயர்க் காரணங்களைவிளக்க முற்பட்டு, அவர்கள் தமிழர்களாய் முதலில் ஒன்றாய் இயைந்து வாழ்ந்துவந்தனர் என்றும் பிறகு தம்முள் பிளவுபட்டு வேற்றிடங்களுக்குச் சென்று குடியேறி வளர்ந்தோங்கினர் என்றும் கூறுகின்றனர்.

---

*கால்டுவெல் - திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம், பக்கம் 18.

சில அறிஞர்கள் கருதுவது போலச் சேரலன், சேரன் என்ற இரு சொற்களையும் எதிர்மறைப் பொருளில் அமைந்த பெயர்களாகக் கொண்டு, தம் குடியைச் சேர்ந்த பிறரோடு சேர விரும்பாமல் தனியே பிரிந்து சென்று புத்தம் புதிய அரசை நிறுவ முயன்றவர் சேரர் என்று சிலர் பொருள் கூறுவர். அப்படியாயின் சேரன் என்பது சேரான் என்னும் எதிர்மறைச் சொல்லின் திரிபாகக் கொள்ளுதல் வேண்டும். (புதிய நாட்டில் சென்று சேர்ந்தவர் சேரர் எனின் எதிர் மறைப் பொருள் தேவையில்லை). "சூழ்" என்பதன் அடியாகச் சோழர் என்ற சொல் தோன்றியிருக்கலாம் எனக்கொண்டு தங்கள் பழைய நாட்டிலும் தங்காமல் தொலைவில் உள்ள வேற்றிடத்திற்குச் சென்று புது அரசும் நிறுவாமல் தங்கள் பழைய நாட்டைச் சுற்றிச் சூழ்ந்து அலைந்துகொண்டிருந்தவர்களைச் சோழர் என்னும் சொல் குறிப்பதாகும் என்பர். அப்பொழுது, பாண்டியர் என்பது பண்டையர் என்ற சொல்லின் திரிபாய் நிற்க, வேறு எங்கும் செல்லாமல் தங்கள் தாய்நாட்டிலேயே தொன்று தொட்டு இருந்துவந்தவரைப் பாண்டியர் என்ற சொல் குறிப்பதாகும். இக் கருத்துக்கட்கு எல்லாம் டாக்டர் கால்டுவெல் எடுத்துக்காட்டும் பழங்கதை தவிர வேறு ஆதாரம் ஒன்றும் இல்லையாதலால் இவையெல்லாம் நிலை பெற்ற கொள்கைகள் என ஏற்றல் இயையாது.

## 4. பாண்டியர்

டாக்டர் கால்டுவெல், தமது 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்தின்' முன்னுரையிலும், திரு. மு. இராகவை யங்கார் அவர்கள் 1910-ஆம் ஆண்டில் செந்தமிழ்ப் பத்திரி கையில் வெளியிட்ட ஒரு கட்டுரையிலும்* மகாபாரதக் காவியத்தில் வரும் பாண்டவர்களின் தந்தையைக் குறிப்ப

*செந்தமிழ், தொகுதி - 8, பக்கம் 10.

தாகிய 'பாண்டு' என்னும் சொல்லிலிருந்து பாண்டியர் என்ற பெயர் தோன்றியிருக்கலாம் என்று எழுதியுள்ளார்கள். இவர்கள் கூறும் கருத்தானது பாணினி வாழ்ந்த காலத்தை அடுத்துவாழ்ந்த இலக்கணப் புலவர் 'வரருசி' என்பாரது காலத்திலிருந்தே வழங்கி வருவதாகும்.

"தொன்மை என்னும் பொருள் உடைய பண்டு என்ற சொல் - தமிழிலும் மலையாளத்திலும் வழங்குகிறது. அச் சொல்லிலிருந்துதான் பாண்டியர் என்ற பெயர் தோன்றியது எனச் சொல்லுவது பொருத்தமுடையதுபோலக் கருத்தை ஈர்ப்பதாகத் தோன்றினும், நான் அக்கருத்தை ஆதரிக்கவில்லை" என்று டாக்டர் கால்டுவெல் கூறுகிறார்.* 'பாண்டு' என்ற வடமொழியிலிருந்து பாண்டியர் என்ற சொல் பிறந்ததென்பதற்கு மாறாக அவர் இதை ஆதரிக்க விரும்பவில்லை என்று கூறினாலும், 'பண்டு என்ற சொல்லிலிருந்து பாண்டியர் என்ற பெயர் தோன்றியது எனச் சொல்லுவது பொருத்தமுடையதுபோல் கருத்தை ஈர்ப்பதாகத்தோன்றுகிறது' என்று அவர் சொல்வதை நாம் சீர் தூக்கிப் பார்ப்போமானால் எல்லாவகையாலும் பண்டு என்ற சொல்லிலிருந்து அது தோன்றியது எனக் கொள்வதே தக்கதெனப் புலப்படுகிறது.

டாக்டர் கால்டுவெல் மேலும் கூறியிருப்பதாவது: "பாண்டியர் என்ற பெயர், முதலில், ஆளும் குடும்பத்தினர்க்கே வழங்கியிருத்தல் வேண்டும். உலகின் பிற பாகங்களில் அரச குடும்பத்தினரின் பெயர் குடிகளுக்கும் வழங்கி வருவதுபோலப் பாண்டியரின் கீழ் வாழ்ந்த மக்களும் நாளாவட்டத்தில் அப் பெயராலேயே அழைக்கப்பட்டனர்" என்பது.†

---

*திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம் - பக்கம் 16.

†திரா. மொழி. ஒப். - பக்கம், 16.

## (i) பஞ்சவர், கவுரியர் :

பஞ்சவர்* கவுரியர்† என்னும் பெயர்கள் பாண்டியர் களைக் குறிப்பனவாகச் சங்க நூல்களில் காணப்படுகின் றன. பஞ்சவர் என்பதற்குப் பாண்டவர் ஐவர் எனப் பொருள்கொண்டு, பாண்டவர்களின் வழிவந்தவர்களே பாண்டியர் என்பர் பேராசிரியர் மு. இராகவையங்கார். கவுரியர் என்னும் சொல்லைப் பாண்டவரும் துரியோதனாதி யரும் பிறந்த கௌரவர் குடி என்பதன் திரிபாக அவர் கொள்வர். குரு என்னும் நாட்டு மக்கள் கௌரவர் ஆவர். 'அருச்சுனனும் பாண்டிய மரபும்' என்னும் கட்டுரை.‡

பாரதப் போரில் பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் உணவளித்த சேரனைப் பற்றிப் புறநானூற்றில் ஒரு குறிப் புக் காணப்படுகிறது. உணவளித்த அச் சிறப்புப்பற்றிப் 'பெருஞ் சோற்று உதியன் சேரலாதன்' என்றே அம் மன் னன் அழைக்கப்படுகிறான்.

> 'அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
> நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
> ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
> பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்'§

என்ற புறநானூற்று வரிகளால் குருக்ஷேத்திரத்தில் நிகழ்ந்த மாபாரதப் போரில் பாண்டவர் ஐவர்க்கும், துரியோதனாதியர் நூற்றுவர்க்கும் சேரன் உணவிட்டமை குறிக்கப்படுகிறது என்ற கருத்தும் உண்டு. ஆனால் 'ஐவர்', 'ஈரைம்பதின்மர்' என்ற எண்ணுப் பெயர்கள் யாரைக் குறிக்கின்றன என்பது இன்னும் புதிராகவே இருக்கின் றது. ஈண்டு அவற்றிற்குக் கொடுக்கப்பட்ட விளக்கங் களையே முடிந்த முடிபாகக் கொள்ளுவதற்கில்லை.

---

*புறம், 58 : 8.  †புறம், 3 : 5.

‡செந்தமிழ் - தொகுதி, 8, பக்கம் 10/1910.  §புறம், 2.

பேராசிரியர் மு. இராகவையங்கார் முற்கூறிய தமது 'அருச்சுனனும் பாண்டிய மரபும்' என்ற கட்டுரையில் வியாசபாரதம், ஆதிபர்வம் ஹம்சாவதரண பர்வம் அத்தியாயம் 64-இலிருந்து கீழ்க்கண்ட மேற்கோளைத் தருகிறார் :

" அவன் (அருச்சுனன்) ஒரு வருஷ முழுதும், மேலே ஒரு மாசமும் வனத்தில் வசித்துத் தீர்த்த யாத்திரையும் செய்து நாக கன்னிகையையும் பாண்டியன் பெண்ணையும் அடைந்து அவர்களுடன் ஆங்கே வாசம் செய்தான்."

இம் மேற்கோளில் அருச்சுனன் பாண்டியன் ஒருவனின் பெண்ணை மணம் புரிந்தான் என்பது குறிக்கப்படுகிறது. இத் திருமணத்தின்போதே பாண்டியன் ஒருவனுக்குப் பாண்டியன் என்ற பெயர் வழங்கியிருந்ததெனின், அருச்சுனன் அவன் பெண்ணை மணந்த பிறகே அவனுக்குப் பாண்டியன் என்னும் பெயர் உண்டாயிற்று என்று சொல்வது பொருளற்றதாகும். வியாசபாரதம், அஸ்வமேத பர்வம் - அத்தியாயம் 81-இல் யுதிஷ்டிராது அஸ்வமேத யாகத்தில், பப்புருவாகனன் என்பான் விருந்தினர்களை உண்பிக்கும் பணிசெய்தான் என்பது கூறப்பட்டுள்ளதே தவிர எந்தச் சேரனும் மாபாரதப் போரில், வீரர்களுக்கு உணவிட்டான் என்பது பற்றி ஒரு குறிப்பும் இல்லை.

தென்னிந்தியாவில் பலர் இடைச் செருகல்களைச் சேர்த்துமகாபாரதத்தைப் பெரிதாக்கிவிட்டார்கள் என்பது பந்தார்க்கர் கழகத்தார் வெளியிட்ட மகாபாரதப் பதிப்பிலிருந்து தெளிவாகிறது. எனவே, பாண்டியரோடு அருச்சுனன் திருமணத் தொடர்பு வைத்துக்கொண்டதைப் பற்றிக் கூறும் பாரதப் பகுதியின் காலத்தைக் கண்ட பிறகுதான் அதை நம் ஆராய்ச்சிக்கு ஆதாரமாகக் கொள்ளமுடியும். பாண்டவர்களையும் பாண்டியர்களையும் பிணைக்கின்ற பல கதைகள் வழக்கில் இருந்தன என்பதை நாம் மறுக்கத் தேவையில்லை. ஆனால், மக்களிடையே பெருவாரியான வழக்

கில் மகாபாரதக் கதை இருந்தது என்பதைத் தவிர வேறு ஒன்றையும் இஃது உணர்த்தாது. இல்லையாயின், மகாபலி புரத்தில் உள்ள சிற்பங்கள், ஜைனருடைய குகைக் கோயில் களும் இவற்றோடு பாண்டவர்களைப் பிணைத்துக்கூறும் கதை களை நாம் எப்படி விளக்க முடியும்?

திரு. இராகவையங்கார் அவர்கள் சிலப்பதிகாரத்தி னின்றும்,* மேற்கோள் காட்டி, மகாபாரதப் போரில் வீரர்களுக்கு உணவிட்டவன் ஒரு சோழன் எனப்பொருள் படும்படி அதற்கு விளக்கம் தருகிறார். அவ் வரிகளுக்கு அப்பொருள் கூறுவது பொருந்தாது. முன்னமேயே குறிப் பிட்டவாறு சேரன் உணவிட்டமையைத்தான் அவ் வரிகள் குறிக்கின்றன.

பாண்டியர் 'ஐவர்'களின் பெயர்கள் பாண்டவர்களின் பெயர்களே என்னும் முடிபுடைய திரு. ஐயங்காரவர் களின் ஆராய்ச்சியைப் பற்றி ஈண்டுக் கூர்ந்து நோக்கு வோம். பஞ்சவர், கவுரியர் என்ற இரண்டு சொற்களை மட்டுமே அவர் தமது முடிவிற்கு ஆதாரமாகக் கொள்ளு கிறார். சங்க காலத்தில் இச் சொற்கள் வரும் இடங்கள் அவரது ஆராய்ச்சிக்குத் துணைசெய்கின்றனவா என்று நாம் பார்க்கவேண்டும். பாண்டியர் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் இருந்த சில குடிகளின் பெயரே பஞ்சவர், கவுரியர் என்பனவாகக் காணப்படுகின்றன. பஞ்சவர் என்பாரைப் பற்றி முதலில் நோக்குவோம்.

### அ. பஞ்சவர்

"இளைய தாயினும் கிளையரா எறியும்
அருநரை உருமின் பொருநரைப் பொருஅச்
செருமாண் பஞ்சவர் ஏறே"†

---

*23-ஆம் காதை, 55–56-ஆம் வரிகள்.

†புறம், 58 : 6-8.

"பணிவி லுயர்சிறப்பிற் பஞ்சவன் கூடல்"*

"பழியொடு படராப் பஞ்சவ"†

"வானவர்கோ னாரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்
மீனக் கொடிபாடும் பாடலே பாடல்"‡

இம் மேற்கோள்களில் 'பஞ்சவர்' என்னும் சொல் பன்மைப் பொருளிலும் 'பஞ்சவன்' என்னும் சொல் ஒருமைப் பொருளிலும் வழங்கியிருத்தலைக் காண்கிறோம். பஞ்சவர் என்பது பஞ்ச பாண்டவரைக் குறிப்பதாயிருந்தால் இருவர், மூவர், நால்வர், ஐவர் என்ற எண்ணுப் பெயர்களைப்போல அஃது எப்பொழுதும் பன்மைப் பொருளிலேயே வருதல்வேண்டும். பஞ்சவர் என்பதில் ஐந்து எனப் பொருள்படும் 'பஞ்ச' என்பது அடிச்சொல். ஒவ்வொரு பன்மை எண்ணுப் பெயரிலும் இருப்பது போல 'அர்' என்பது இச் சொல்லோடு பன்மை குறிப்பதற்காகச் சேர்க்கப் பட்டுள்ளது. இப் பஞ்சவர் என்ற சொல்லில் 'பஞ்ச' என்ற அடிச்சொல் வடசொல்லாகும்.

"ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
ஒருமைக் கல்லது எண்ணுமுறை நில்லாது"§

என்ற விதிக்கு முரணாக நம் முன்னோர்கள் எந்த எண்ணுப் பெயரையும் குறிக்கவில்லை. எனவே, பஞ்சவன் என்பது பஞ்ச என்னும் வடமொழியாகப் பிறந்த எண்ணுப் பெயரன்று என நாம் துணிந்து கூறலாம். அடிச்சொல், ஒன்று என ஒருமையாயிருப்பின் அதிலிருந்து பிறக்கும் எண்ணுப் பெயரும் 'அன்' அல்லது 'இ' விகுதியோடு சேர்ந்து ஒருவன் அல்லது ஒருத்தி என நிற்கும். இரண்டு, ஐந்து, பஞ்ச என்பனபோல அடிச்சொற்கள் பன்மையா

---

*பரிபாடல், திரட்டு, 2 : 46.

†சிலப், 20 : 33. ‡சிலப், 29 : வள்ளைப்பாட்டு, 8-9.

§தொல், சொல் : 44.

யிருப்பின், அவற்றிலிருந்து தோன்றும் எண்ணுப் பெயர்களும் 'அர்' என்பதை மட்டும் விகுதியாகக் கொண்டு இருவர், ஐவர், பஞ்சவர் என நிற்குமே அல்லாமல் 'அன்', அல்லது 'இ' என்ற ஒருமை விகுதியோடு சேர்ந்து நில்லா. எனவே, பஞ்சவன் என்ற சொல் ஐந்து என்னும் பொருளுடைய பஞ்ச என்ற வடமொழிச் சொல்லடியாகப் பிறந்த எண்ணுப் பெயராக இருத்தல் இயலாது.

பஞ்சவன் என்பது, குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் ஐந்து நிலப் பகுதிகளுக்குத் தலைவன் என்று பொருள் கொள்ள நிற்பது என்பதா? அல்லது, பாண்டிய மரபின் ஐந்து கிளைக் குடிகளான பாண்டியர், கவுரியர், மாறர், வழுதியர், செழியர் என்பனவற்றிக்குத் தலைவன் என்று பொருள் கொள்ள நிற்பது என்பதா? அவ்வாறயின் ஐந்து கிளைக் குடியினருக்கும் பஞ்சவர் என்பது பொதுப் பெயராகலாம். அதியர் கோன் அதியன் என்றும், உதியர் கோன் உதியன் என்றும் அழைக்கப்படுதல் போலப் பஞ்சவர் கோன் பஞ்சவன் எனப்படுவது பொருத்தம் ஆகும் என நாம் கூறலாம்.

பஞ்சவர் என்னும் சொல் உலக வழக்கில் பாண்டவர்கள் ஐவரைக் குறித்திருக்கலாம். ஆனால், அவர்களுடைய சந்ததியார்களையும் பஞ்சவர் என்னும் சொல்லால் குறிப்பது எவ்வாறு பொருந்தும்? அதைவிடப் பெரு வழக்குப் பெற்றுள்ள பாண்டவர் என்னும் சொல் பாண்டியரைக் குறிக்க ஏன் கையாளப் பெறவில்லை? பஞ்சவர் என்பது வடமொழிப் பகுதி அடியாகப் பிறந்தது என்று மேற்கொண்டதாலேயே இத்தகைய கருத்துக்களுக்கு இடமுண்டாயிற்று. வடமொழிச் சொல்லடியாகப் பிறந்ததாகத்தான் இச்சொல்லைக் கொள்ளவேண்டுமா? அவ்வாறு பிறந்ததாயிருப்பின் அது வழக்கத்திற்கும் இலக்கண விதிக்கும் மாறுபட்டதாகும். பஞ்சு என்ற தமிழ்ச் சொல்லுக்கும் பஞ்சவர் என்ற சொல்லுக்கும் ஏதாவது தொடர்பு

இருக்கலாம் அன்றோ? "கௌடில்யர் தமது அர்த்த சாஸ்திரத்தில் (இரண்டாம் அத்தியாய முடிவில்) 'மாதுரம்' என்ற ஒரு வகைப் பருத்தி நெசவைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இது மதுரையின் பருத்தி ஆடை நெசவுத் தொழிலின் பழமையைக் காட்டுவதாம்."* பஞ்சவர் என்பார், நூல் நூற்றல் தொழிலை முதன்முதலில் தொடங்கி வைத்து, அதனால் புகழ் பெற்றவர்கள் என்பதா? இவ்வாறு மனம் போனபடி கூறிக்கொண்டு செல்லாமல் இதனோடு நிறுத்தி மேற்செல்வோம்.

உதியன் சேரலாதனைப் பற்றி மீண்டும் நினைவு கூர்வோம். அவன் மகாபாரதப் போர் நடந்தபோது இருந்தவனா? கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்தவனாகக் கருதப்படும் சேரன் செங்குட்டுவனின் பாட்டனே உதியன் சேரலாதன். தமிழ் நாட்டின் பழைய வரலாற்றை எழுதுவதற்குச் செங்குட்டுவனது ஆட்சிக்காலம் உறுதுணையாயிருக்கிறது என்பது பலரும் ஒப்புக்கொண்டது ஒன்று. அவ்வாறாயின் உதியன் சேரலாதன், மகாபாரதப் போரில் கலந்துகொண்ட வீரர்கள் காலத்தவனாய் இருந்திருத்தல் இயலாது.

பழைய மன்னன் ஒருவன் பெற்ற வெற்றியையும் புகழையும் அவனுக்குப்பின் அவன் வழிவந்த மன்னன் மீது ஏற்றிச் சொல்வது தமிழ்ப் புலவர்களின் வழக்கம் என்பது கல்வெட்டுக்களினின்றும் இலக்கியங்களினின்றும் தெரிகிறது. இதன்படி மகாபாரதப் போர்வீரர்களுக்குச் சோறிட்ட நிகழ்ச்சி கி. பி. முதல் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே வழிவழியாகத் தமிழ் நாட்டில் நிலைபெறத் தொடங்கிவிட்டிருக்கவேண்டும்.

---

*பேராசிரியர், நீலகண்ட சாஸ்திரியாரின் 'பாண்டிய அரசு'—பக்கம், 14, 3-ஆம் அடிக்குறிப்பு.

ஓர் அறிஞர் கருதுவதுபோலப் புறநானூற்றில் மகா பாரதப் போரைப் பற்றி வரும் குறிப்பு, உண்மைப் போரைக் குறிக்காமல் ஊர் ஊராகத் திரியும் ஒரு நாடகக் குழுவினரால் நடிக்கப்பட்ட மகாபாரத நாடகத்தைக் குறிக்கிறது* எனக் கொள்வதா? அல்லது, திரு. சேஷையர் அவர்கள் கருதுவதுபோலத் தான் பிறந்த குலமுன்னோராய் மாபாரதப்போரில் இறந்த வீரர்களுக்கு ஆண்டு தோறும் செய்யும் நினைவுநாட்கடனுகச் சேரமன்னன் உணவிட்டான் என்று கொள்வதா?† இக் கருத்திற்குக் கீழ்க் காணும் அகநானூற்று வரிகள் அரண் செய்வன என்பதா?

" மறப்படைக் குதிரை மாரு மைந்தின்
துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை."‡

வட இந்தியாவில் லிச்சாவி வம்சத்தினர் முதலியோர் எனவும், சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படும் நூற்றுவர் கன்னர் எனவும் வருவனபோல ஐவர் கூடிய ஓர் இனத்தையும், ஈரைம்பதின்மர் கூடிய மற்ருேர் இனத்தையும் அவை குறிக்கும் என்று கூறலாகாதா? இவற்றையெல்லாம் நோக்குமிடத்துப் பஞ்சவர், ஐவர் என்ற சொற்கள், பாண்டியர், மாறர், கவுரியர், வழுதியர், செழியர் என்னும் ஐம்பெரும் கிளைக் குடிகளைத் தன்னகத்தே கொண்ட பாண்டிய மரபைக் குறிப்பனவாக இருத்தலாகாதா? இத்தகைய முரண்பட்ட கருத்துக்களால் நாம் தெளிவாக ஒன்றும் கூறமுடியாமல் இருப்பது வருந்தத்தக்கதேயாகும்.

---

*பக்கம், 104 : The Chronology of the Early Tamils—சிவராச பிள்ளை.

†பக்கம், 7 : சங்க காலத்துச் சேர மன்னர்கள்.

‡அகம், 233 : 6-9.

### ஆ. கவுரியர்

இனி, நமது இலக்கியத்தில் ‘கவுரியர்’ என்னும் சொல் வருமிடங்களை ஆராய்வோம்.

> “ ................................ தெனுஅது
> வெல்போர்க் கவுரியர் நன்னாட்டு ”*
>
> “ நேள நெஞ்சின் தவிரா ஈகைக் கவுரியர் ” †
>
> “ வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
> முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்துறை
> வெல்போர் இராமன் அருமறைக் கவிந்த
> பல்விழ் ஆலம் ”‡

இவ் வரிகளால், கவுரியர், போர்க்கலையில் வல்ல குடியினர் என்றும், கையில் வேலேந்தி வீரத்துடன் போர் புரிந்து வெற்றிபெறும் ஆற்றலுடையவர் என்றும், இரக்கம் மிகுந்திருந்த காரணத்தால் பாவலர்க்கும் இரவலர்க்கும் இல்லையென்னது எந்நேரமும் வாரி வழங்கும் பண்பினர் என்றும் அறிகிறோம். எளியவர்களுக்குக் கொடுக்க விரும்பிய பொருள்களையெல்லாம் அவர்களால் எளிதாக ஈட்ட முடிந்தது. ஆகவே கவுரியர் என்ற சொல் ஒரு குடியினரைக் குறிக்கிறது என்பதில் ஐயமில்லை. பாண்டவர் என்ற சொல்லுக்கும் பாண்டியர் என்ற சொல்லுக்கும் ஒருவாறு தொடர்பு கூறுவதை ஏற்கலாம் என்றாலும் கௌரவர் என்ற சொல்லுக்குப் பதிலாகக் கவுரியர் என்னும் சொல்லைத் தென்னாட்டு மக்கள் வழங்கியது என்? பாண்டவர் வழி வந்தவரைச் சிறப்புப் பெயரால் குறிக்காமல் குரு வம்சத்தைச் சேர்ந்தவர் கௌரவர் என்ற பொதுச் சொல்லைக்கொண்டு பின் அதைக் கவுரியர் எனத் திரித்து வழங்கவேண்டிய அவசியம் யாது?

---

*அகம், 342 : 3-4. †புறம், 3 : 4-5.
‡அகம், 70, 13-16.

கவுரியர் என்பதைக் கவவு, உரியர் என்ற இரு சொற்கள் சேர்ந்தமைந்த ஒரு சொற்றொடராகக் கொள்ளலாம். ஆதரவு பெறவேண்டும் என்று தேடிச்செல்லும் புலவரும் இரவலரும் தழுவிக்கொள்வதற்கு உரியவர்களாகிய வள்ளல்கள் என்று கவுரியர்க்குப் பொருள் செய்யலாம். "கவவு அகத்திடுமே" என்பது தொல்காப்பியம்.* கவவு என்பதற்குத் தழுவுதல் என்று பொருள். இவ்வாறு கற்பனையான பல கருத்துக்களைக் கூறிக்கொண்டே செல்லலாம். ஆனால், இதனோடு அமைதலே முறை. இப்போது கிடைக்கும் சான்றுகளைக் கொண்டு பார்க்குமளவில், பாண்டியர், பஞ்சவர், கவுரியர் என்ற பெயர்களுக்கும் பாண்டவர் என்ற பெயர்க்கும் தொடர்புண்டு என்று கூறுவது மேற்போக்கான கற்பனைக் கருத்தேயாகும் என்பதற்குமேல் வேறொன்றும் முடிவாகக் கூறல் இயலாது. கவுரி (கவடி) என்ற சொல்லுக்கும், மிகப் பழங்காலத் தமிழகத்து ஆதி மக்களிடையே நாணயமாகவும் அணிகலனாகவும் பெருவாரியாக வழங்கிய சோழி(பலகறை)க்கும் ஏதாவது தொடர்புண்டா என்பதை மொழிநூலறிஞர்கள் ஆராய்தல் வேண்டும். தொடர்புண்மை நிறுவப்படுமாயின், கடலிற் சென்று மீன் வேட்டையாடுதலில் பெயர்பெற்ற பாண்டியர்கள் கவுரிக்கும் பெயர் வாய்ந்தவர்களாவர் என்பதில் வியப்பொன்றுமில்லை.

## (ii) பாண்டியரின் பட்டப்பெயர்கள் :

கீழ்க்காணும் பெயர்களைப் பாண்டியர்களின் பலவகைப்பட்ட பட்டப்பெயர்களென நிகண்டு உணர்த்துகின்றது :

**செழியன், கூடற்கோமான், தென்னவன், வேம்பின் தாரோன், வழுதி, குமரிச் சேர்ப்பன், வைகையந்துறைவன்,**

---

*சொல், 357.

மாறன், பொதிய வெற்பன், மீனவன், கைதவன், பஞ்சவன், கவுரியன் என்பன.*

இவற்றுள் செழியன் என்ற பெயர் செழுமை என்பதன் அடியாகப் பிறந்தது. செழுமை என்பது வளம் அல்லது செல்வம் எனப்படும். இயற்கையாலும் ஈட்டுதலாலும் செல்வம்மிக்க அரசன் செழியன் ஆவான்: கூடற் கோமான் என்பது கூடல் அல்லது மதுரையின் தலைவன் என்று பொருள்படும். தமிழகத்தின் தென்கோடிப் பகுதியின் ஆட்சி பாண்டியரிடம் இருந்தபடியால் தென்னவன் என்பது தென்னாட்டின் தலைவன் என்று பொருள்படும். வேப்பமாலையே பாண்டியரின் அடையாள மாலை (தார்) ஆதலால் வேம்பின் தாரோன் என்பது பாண்டியன் எனப் பொருள்படும். வழுத்து என்ற சொல்லுக்கும் வழுதி என்ற சொல்லுக்கும் தொடர்பு இருத்தல்வேண்டும். வழுத்து என்பது புகழ் என்று பொருள்படும். எனவே, வழுத்தத் தக்கவன் வழுதி எனப்பட்டான். குமரித் துறைக்கு உரியவனாதலின் குமரிச் சேர்ப்பன் என்பது பாண்டியனைக் குறிப்பதாகும். பல துறைகளைக்கொண்ட வைகை நதி பாயும் நாட்டை ஆள்பவன் என்பதைக் குறிப்பது வைகையந்துறைவன் என்பது. பொதுமக்களிலிருந்து வேறுபட்டவன் அல்லது மாறுபட்டவன் என்ற காரணத்தாலோ, அரசன் என்ற முறையில் குற்றம் செய்தவரை ஒறுப்பவன் என்ற காரணத்தாலோ மாறன் என்ற பெயர் பாண்டிய மன்னனைக் குறிப்பதாயிற்று. பொதிய வெற்பன் என்றால் பொதிய மலைக்குத் தலைவன் என்பது பொருள். மீன் கொடியை உடைய தலைவன் என்ற பொருளுடையது மீனவன் என்பது. கைதவன் என்ற பெயரின் பொருள் தெளிவாக விளங்கவில்லை. இது கைதபன் என்ற சொல்லின் திரிபாக இருக்குமாயின், அழித்தல் என்னும் பொரு

---

*சூடாமணி நிகண்டு, மக்கட் பெயர்த் தொகுதி-20-ஆம் செய்யுள்.

ளுடைய தபு என்ற சொல்லோடு இதை இயைபுபடுத்த லாம். பாண்டியன் ஒருவன் தன் கையால் தான் செய்த தப்பிற்காகக் கையை வெட்டிக்கொண்ட கதை ஒன்று வழங்குகிறது. எனவே கைதபுத்தவன் கைதபன் எனக் கொள்ளலாம். பஞ்சவன், கவுரியன் என்னும் பெயர்கள் முன்னமேயே ஆராயப்பெற்றன. வழுதி, மாறன், செழியன் என்னும் சொற்கள் பாண்டிய மன்னர் பெயர்களின் பின் அடையாகச் சேர்க்கப்பெறுவன ; பாண்டியன் என்ற சொல் அவற்றின் முன்னடையாக நிற்கும். மாறன் என்ற மன்னனின் மகன் மாறன் வழுதி என வழங்கப்பட்டான். ஒருவர் மாறி ஒருவராக முறையே தொடர்ந்து அரசு கட்டி லில் அமர்ந்த பாண்டிய மன்னர்கள் மாறன் எனவும் சடையன் எனவும் வழங்கப்பெற்றிருந்தமையைக் கல் வெட்டுக்களிலிருந்து நாம் அறிகிறோம். மாறன், வழுதி, செழியன் என்ற பெயர்கள் பாண்டியருடைய வெவ்வேறு கிளைக்குடிகளை உணர்த்துவனவா ? செழியரும் வழுதியரும் செழியன் என்ற பட்டப் பெயர் பெற்றிருந்தனரா ? செழியன் என்பது நாளடைவில் சடையன் எனத் திரிந்து நின்றதா ? இதனுற்றான் சடையன், மாறன் என்ற பட்டப் பெயர்கள் ஒருவர் மாறி ஒருவராக வந்த அரசர்களால் கொள்ளப்பட்டனவா ? ஒன்றுமே நமக்குத் தெரியவில்லை.

## 5. சோழர்

சோழரது பெயர் பற்றிய செய்தி ஒன்று சிலப்பதி காரத்திற் காணப்படுகிறது:

"அது கேட்டுச் சோழன் பெருநற்கிள்ளி கோழி யகத்து;"*

"கோழி என்பது உறையூர்:" "கோழி என்றது ஒரு கோழி நில முக்கியத்தால் யானையொடு பொருது அதனைப்

*உரைபெறு கட்டுரை : 4.

போர் தொலேத்சல் கண்டு அந் நிலத்திற்செய்த நகர்க்கும் பெயராயிற்று."*

"முறஞ்செவி வாரணம் முன்சமம் முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்."†

இவ்வடிகளுக்கு அரும்பதவுரையாசிரியர் கூறும் உரை வருமாறு: "யானையைக் கோழி முருக்கலாற் கோழி யென்று பெயராயிற்று. யானையைச் சயித்த கோழி தோன்றின இடம் வலியுடைத்தென்று கருதி அவ்விடத்து அதன் பெயராலே சோழன் ஊர் காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கியதனுல் புறம்பே சிறையை யுடைய கோழியென்ருயிற்று."

அடியார்க்கு நல்லார், "முறம்போலும் செவியை யுடைய யானையைச் சமரிடத்துக் கெடுத்த சிறையை யுடைய கோழி யென்னும் நகரின்கண்ணே விருப்பத்தோடு புக்கார் என்க" என்று கூறுகிருர்.

புறஞ்சிறை வாரணம் என்பதற்குப் பொருள் கொள்ளுதலில் அடியார்க்கு நல்லார் அரும்பத வுரை யாசிரியரோடு மாறுபடுகிருர். "புறஞ்சிறை வாரணம் என்பது சிலேடை": "புறத்தே சிறையையுடைய கோழி யும், புறஞ்சேரியையுடைய உறையூரும்" என்று அவர் விளக்கம் தருகிருர்.

தங்களுக்குள் உரை கூறுவதில் கருத்து வேறுபாடு என்னவாயிருந்தாலும் அடியார்க்கு நல்லாரும் அரும்பத உரையாசிரியரும் ஆகிய அவ் விருவரும் கீழேகாணும் கதையைக் குறிப்பதில் ஒன்றுபட்ட கருத்துடையவராகின் றனர்:

"சோழர்களின் அரசன் யானைமேல் ஏறித் தலைநகர் அமைத்தற்கான நல்லதோர் இடத்தைத் தேடிப் புறப்பட் டான். வழியில் அவனுடைய வலிமை மிகுந்த யானையைக்

*அடியார்க்கு நல்லார் உரை. †சிலப், 10 : 247, 248.

கோழியொன்று அஞ்சா நெஞ்சுடன் தாக்கியது. யானை புறங்காட்டி நின்றது. அதுகண்ட அரசன் அந்த இடத்திற்கு இருந்த தெய்வீக சக்திதான் கோழிக்கு யானையையும் வெல்லும் ஆற்றலைக் கொடுத்தது என்று எண்ணி, அவ்விடத்திலேயே தன் தலைநகரை அமைத்துக்கொண்டான். அன்றிலிருந்து, வெற்றிகண்ட கோழியின் நினைவாக அவ்வூருக்குக் கோழியூர் அல்லது கோழி என்ற பெயர் வழங்கத் தொடங்கியது.''

அந் நகரில் வாழ்ந்த மக்கள் கோழியர் என்று அழைக்கப்பெற்றனர். சில சமயங்களில் அரசன் 'கோழி' என்றே விளிக்கப்பட்டான்.* ஆனால், புறநானூற்றுரைகாரர் கோழி என்பதற்கு உறையூர் என்று உரையெழுதுகிறார். கோழியர் என்ற சொல்லில் உள்ள பின்னண்ண ஒலியாகிய ககர ஒலி இடையண்ண ஒலியாகிய சகரமாக மாறும் இயல்புடையது. எனவே சோழியர், சோழர் என்ற சொற்கள் பிறந்தன எனலாம். மக்களது பேச்சு வழக்கில் மொழிநூல் நுட்பம் காணும் மரபிற்கு இஃதோர் எடுத்துக்காட்டாம் என்று கூறினால் அதைக் குற்றமாகக் கொள்ளுதல் ஆகாது.

சோழி என்பது கோழி என்பதன் திரிபாகும். சோழி என்ற சொல்லுக்குப் பலகறை என்னும் பொருள் இப்போது வழங்குகிறது. இப் பொருளைச் சோழி என்னும் இச்சொல் அக் காலத்திற் குறித்திருக்குமா ? அன்றிக் கோழியைச் சோழர் தங்களது சின்னமாகக் கொண்டிருந்தார்களா ? அல்லது அவர்களது தலைநகரில் மிகுதியாக இருந்த ஆலமரத்தினால் கோளி என்ற பெயர் அவர்களுக்கு அமைந்ததா ? அன்றிச் சோறன் என்னும் சொல் சோழன் எனத் திரிந்திருக்குமா ? தொல்காப்பியத்தின்படி† றகரமும் ழகரமும் அண்ணத்தில் ஒரே இடத்தில்தான் ஒலிக்கப்படுகின்

*புறம், 67 : 8. †எழுத்து, 94, 95.

றன என்ற காரணத்தால் சோறன் என்பது சோழன் என மாறுவது இயல்பே எனக் கொள்ளலாம். சோழநாடு சோற்றுக்குப் பேர்போனதன்றோ? இத்தகைய தடுமாற்றங்களிலிருந்து தேறுவதற்கு நமக்கொன்றும் வழி கிடைக்கவில்லை என்றுதான் மீண்டும் சொல்லவேண்டியிருக்கிறது.

சோழர் என்ற பெயரைப்பற்றி டாக்டர் கால்டுவெல், "தமிழ்மக்களில் இரண்டாம் பிரிவினரின் பெயரான சோழர் என்ற சொல் எப்படிப் பிறந்தது எனத் தெரியவில்லை" என்று கூறுகிறார்.*

**சோழர் கொண்டிருந்த பட்டப்பெயர்கள் :**

சோழர்கள் பல பட்டப்பெயர்களுடையவர்களாக இருந்தார்கள். நிகண்டில் அப் பெயர்கள் கீழ்க்கண்டவாறு உள்ளன :

**"நேரியன், சென்னி, பொன்னித்துறைவன், நேரிவெற்பன், ஆரின் மாலையன், கிள்ளி, அபயன், கோழி வேந்தன், வளவன், செம்பியன், புலியுயர்த்தோன், சூரியன், புனல் நாடன், மால்."**†

'அபயன்' என்ற பட்டப்பெயர், பிற்காலத்தில் ஆண்ட சோழப் பேரரசர்க்கு வடமொழியாளர் வழங்கிய பெயர். நேரிமலைக்குத் தலைவனாதலின் சோழன், நேரியன் என அழைக்கப்பெற்றான். பதிற்றுப்பத்தில்‡ நேரிமலை பற்றிய குறிப்பு வருகிறது. நேரிவெற்பன் என்ற பெயரும் இதே காரணத்தால் உண்டானதே. சில அறிஞர்கள் நேரிவெற்பு என்பது விந்திய மலைதான் என்று கூறியுள்ளார்கள். ஆனால், நேரிமலை தமிழகத்தில்தான் இருத்தல் வேண்டும். ஆதலால், அதனை இதுதான் என்று கண்டறிந்து கூறுவது

---

*திரா. மொழி. ஒப்., பக்கம் - 17.

†சூடாமணி நிகண்டு - மக்கட் பெயர்த் தொகுதி, 19-ஆம் செய்யுள்.

‡40 - 20.

அறிஞர் கடனாகும். சோழர் தங்கள் அடையாள மாலையாக ஆத்திப் பூமாலையை அணிந்தவர் ஆதலின் ஆரின் மாலையன் என்ற பட்டப்பெயர் சோழர்க்கு உண்டாயிற்று. காவிரி யாற்றின் துறைகளுக்கு உரியவன் என்பதைக் குறிப்பது பொன்னித் துறைவன் என்னும் பெயர். கோழிவேந்தன் என்பதற்கு உறையூரைத் தலைநகராகக் கொண்டு அரசு புரிந்த மன்னன் என்று பொருள். இதுபற்றி முன்னரே ஆராயப்பட்டது.

செம்பியன் என்னும் மன்னன், சோழர் குடியில் சிபிச் சக்கரவர்த்தியின் வழித்தோன்றலாய் வந்து ஆட்சி புரிந்தவன் என்று கூறுகின்றனர்.* சிபியின் வழித்தோன் றல் செம்பியன் என்று விளக்கம் கூறும் இம் முறையே நெடுங்காலத்திலிருந்து வழிவழியாக வந்துள்ளது. அப்படி யானால், செம்பியன் என்ற சொல் ஒரு வடமொழிச் சொல் லின் திரிபு என்று ஆகிவிடுகிறது. எனவே அதைப்பற்றிச் சில கருத்துக்களை ஈண்டுக் கூறலாம். பழங்காலத்தில் தமிழ் நாட்டில் இருந்து அரசாண்ட சோழ மன்னனின் பெய ரான செம்பி என்பதும், வடமொழிப் புராணங்களில் வரும் பெயரான சிபி என்பதும் ஒன்றே எனப் பிற்காலத்தவர் கருதிவிட்டனர் போலும்! செம்பி என்னும் பெயருக்கும் செம்பு அல்லது கெம்பு என்னும் சொற்களுக்கும் தொடர்பு உண்டா? தமிழ் நாட்டில் "செம்புக் காலம்"† தொடங்குவ தற்குச் செம்பியன் என்ற இச் சோழன் ஒரு வகையில் காரணமாயிருந்தான் எனக் கருதலாமா? வரலாற்றுச் சான்றுகள் இல்லாமையால் ஒன்றையும் துணிந்து கூற முடியவில்லை. புலிக்கொடி சோழர்களின் சின்னமாதலின் புலியுயர்த்தோன் என்ற பெயர் உண்டாயிற்று. சோழநாடு நீர்வளம் மிக்கது. அந் நாட்டிற்குப் புனல் நாடென்றும்

---

* தமிழ்ப் பேரகராதி. பக்கம், 1594.

†Copper age.

ஒரு பெயர் உண்டு. அந் நாட்டின் மன்னன் **புனல்நாடன்** எனவும் அழைக்கப்பட்டான்.

சோழர்கள் சூரிய குலத்தவராக - சூரியனை முதல்வனுக உடைய குலத்தில் தோன்றியவராகக் கருதப்படுதலின் **சூரியன்** என்ற பெயர் சோழனுக்கு வழங்கியது. **மால்** என்பதற்குப் பெரியவன் அல்லது வியத்தற்குரியவன் என்ற பொருள்கள் உண்டு. காத்தற்கடவுளான விஷ்ணுவை அச் சொல் குறிக்கும். மன்னர்களும் நிலத்தையும் உயிர்களையும் காப்பவராதலின் அவர்கள் நிலவுலகில் விஷ்ணுவின் பிரதிநிதிகளாகக் கருதப்பெறுபவர். 'ஓர் இடத்திற்குத் தலைவன்' என்ற பொருளில் 'மால்' என்ற சொல் தமிழில் வழங்கிவந்திருக்கிறது. நற்றிணை 81-ஆம் பாடலில் அகம் பன்மால் எனவருதல் காண்க.

**சென்னி** என்ற பெயர் சென்னியர் எனப் பன்மையிலே வழங்குவதைக் காண்கிறோம்.* அது சோழர் குடியையோ, அல்லது அக் குடியின் ஒரு கிளையையோ குறிப்பதாகும். எத்தனையோ சோழ மன்னர்கள் சென்னி என்ற பெயரைத் தங்களது சிறந்த பட்டப்பெயராகக் கொண்டுள்ளார்கள் :

" சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி "†

" சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி‡

" சோழன் நெய்தலங் கானல் இளஞ்சேட் சென்னி§

'இயல்தேர்ச் சென்னி'§ என்ற தொடரிலும் 'ஒன்னுப் பூட்கைச் சென்னியர் பெருமான்'¶ என்ற தொடரிலும் 'சேண்' என்ற அடைமொழி இல்லாது 'சென்னி' என்னும் சொல், சோழர் குடி அல்லது அவர்தம் கிளைக்குடியை உணர்த்தும் பொதுப்பெயராக வருகிறதெனினும், ஈண்

---

*பதிற்றுப் பத்து. 85 : 3.

†புறம், 4 : 266. ‡புறம், 370, 378. §புறம், 10.

§புறம், 61 : 13. ¶பதிற்றுப், 85 : 3.

டுக் காட்டிய இயற்பெயர்களில் வரும் பட்டப்பெயர்கள் 'சேட் சென்னி' எனச் சேண் என்னும் அடைமொழி பெற்றே வருகின்றன. சேரர்களுக்கு உயர்வு குறிக்க வழங்கும் 'வானவன்' என்ற பட்டப் பெயரைப்போலச் 'சேட் சென்னி' என்பதும் ஏதேனும் உயர்வு குறிக்கும் சொல்லாய் இருக்கலாம். 'சேண்' என்ற சொல் மிகத் தொலைவு, மிக உயரம் என்ற பொருள்களில் வரும். சென்னி என்பதற்கும் தலை அல்லது முடி என்று பொருள். எனவே, சேட் சென்னி என்ற தொடர், 'மற்றவர்களுக்கு வணங்காமல் நிமிர்ந்து நிற்கும் தலை அல்லது முடியையுடைய மன்னன்' என்று பொருள்படும். அல்லது, 'செல்' என்பதிலிருந்து 'சென்னி' என்னும் சொல் பிறந்ததாகக் கொண்டு, சோழர்கள் தங்கள் பழைய இடத்தை விட்டுப் புது இடங்களைத் தேடிச் சென்றபோதும், புது இடங்களை வென்றபோதும், அங்குத் தங்கள் அரசை அமைத்துக் கொண்டபோதும் அவர்கட்கு முன்னணிப் படைஞராக நெடுந்தூரம் சென்றவர்களை அச் சொல் குறிக்கும் என்றும் கொள்ளலாம். சென்னி என்பதற்குப் பெருந்தகைமை என்னும் பொருளும் உண்டு. காலஞ்சென்ற திரு. சிவராச பிள்ளையவர்கள், 'நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி' என்பதற்குத் தன் நாடு விரிதல் வேண்டும் எனக் கருதித் தலைநகரிலிருந்து புறப்பட்டுக் கிழக்குக் கடற்கரையை அடையும் வரையில் வென்றுகொண்டே சென்ற பெருந்தகை மன்னன்' என்று பொருள் கொண்டார்.* பல சோழ மன்னர்கள் சென்னி என்ற பட்டப்பெயரைக் கொண்டிருப்பதால், அது சோழ குலத்தின் முக்கியமான ஒரு கிளைக் குடியின் பெயராக இருத்தல் வேண்டும் என்று கருதலாம்.

*The Chronology of the Early Tamils, pp. 119, 120.

கிள்ளி என்ற பட்டப்பெயரும் பல சோழமன்னர் களால் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இவர்கள் சோழப் பெருங்குடியின் மற்ருெரு கிளைக் குடியினர் எனக் கருத லாமா? இப் பெயருக்கும், பகைவர்களைத் தொடக்கத் திலேயே கிள்ளியெறியும் வீரச் செயலுக்கும் தொடர்பு இருக்குமா? கிளை அல்லது கிளி (கிள்ளை) இக் கிளைக் குடி யினரது சின்னமாக இருந்ததால் இப்பெயர் ஏற்பட்டிருக்க லாமா?

சேட்சென்னி நலங்கிள்ளி என்பானின் ஆட்சியில் கிள்ளி மரபினரும் சென்னி மரபினரும் ஒன்ருயினர் என் பது திரு. சிவராசப் பிள்ளையவர்களின் கருத்து.* 'சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னி'† என்ற பெயருடைய மன்னன் ஒருவன் இருந் தான் எனவும் அறிகிறேம். சேட்சென்னி நலங்கிள்ளி என்பவனைப் பற்றிய உண்மை வரலாறு யாது? சேட் சென்னி என்ற மன்னன், நலங்கிள்ளி என்ற பெயரைத் தன் குடிப்பெயரோடு சேர்த்துக்கொண்டானு? அல்லது, நலங்கிள்ளி என்பதே இவனது இயற்பெயராக இருக்கத் தந்தையின் பெயரை மகன் தனக்கு அடைமொழியாகக் கொள்ளும் வழக்கிற்கு ஏற்பச் சேட்சென்னி என்ற பெயரை இவன் தன் பெயருக்கு முன்னுல் சேர்த்துக் கொண்டானு? அல்லது சேட்சென்னி என்பான் நலங் கிள்ளி மரபினரை வென்றபின், அவரை மகிழ்விப்பதற் காக, அவரது பெயரான நலங்கிள்ளி என்பதைப் பூண்டு கொண்டானு? பிறகு சோழர் பரம்பரையில் அடுத்தடுத்து வந்த அரசர்களுக்குச் சேட்சென்னி நலங்கிள்ளி, நலங் கிள்ளி சேட்சென்னி என்ற இப் பெயர்கள் மாறி மாறி வழங்கினவா? சோழர் பெயர் வரிசையில் நலங்கிள்ளி சேட்சென்னி என்ற பெயரும் சேட்சென்னி நலங்கிள்ளி

*C.E.T., பக்கம் 142, 143. †புறம், 61.

என்ற பெயரும் அடுத்தடுத்துக் காணப்படுவதால் இவ்வாறு நாம் கருதும் கருத்துச் சிறிது வலியுடையதாகின்றது. இவற்றைப்போல், பல பெயர்கள் காணப்படவில்லை என்பது உண்மைதான். ஒருவேளை இப் பெயர்களை மாறி மாறிக் கொள்ளும் வழக்கம் இரண்டொரு தலைமுறைகள் வரையில் கையாளப்பெற்றது எனக் கருதலாம்.

சேர மன்னன் ஒருவன், 'சேரமான் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ் செட் சென்னி' என்று குறிப்பிடப்படுகிறான்.* இப் புறப்பாடலைப் பாடிய ஊன் பொதி பசுங்குடையாரே, சோழன் நெய்தலங்கானல் இளஞ் சேட் சென்னியைப் புறம் 10-இல் பாடியுள்ளார். சென்னி என்ற பட்டப்பெயர் சோழர் மரபினர்க்கே உரியது; அது சேரமான் என்ற பெயரோடு சேர்ந்து காணப்படுவதை நோக்குமிடத்து அது படியெடுத்தோர் செய்த பிழை என்றே கருதவேண்டியிருக்கிறது. அல்லது சோழரும் சேரரும் ஒன்றுபட்டதால் சேரனுக்கும் சென்னியென்ற பெயர் வழங்கியிருக்கலாம் என்று கொள்ளலாமா?

வளவன் என்ற பட்டப்பெயர் சோழரின் மற்றொரு கிளைஞரால் கொள்ளப்பட்டுள்ளது. வளநாட்டின் தலைவன் என்பது வளவன் என்ற சொல்லின் பொருளாகும். காவிரியாற்றின் கழிமுகத் துறையிலுள்ள வளமுடைய நெல்வயல்களுக்குத் தலைவன் என்ற பொருளில் வளவன் என்ற சிறப்புப் பெயர் சோழனுக்கு மிகவும் பொருத்தமாகும். மாவளத்தான்† திருமாவளவன்‡ கரிகால் வளவன்§ என்ற பெயர்களும் உள்ளன. கிள்ளிவளவன்$ என்பது சோழ

---

*புறம், 203. †புறம், 43, 44.

‡பட்டினப்பாலை, 299; பொருநராற்றுப்படையின் ஈற்றில் உள்ள இரண்டாம் வெண்பா.

§அகம், 55 : 10; பொருநா, 148; புறம், 66 : 3.

$புறம், 70 : 10; 346 : 22; 399 : 13.

மன்னன் ஒருவனுடைய பெயர். 'வளவன் குடியினரும் கிள்ளி குடியினரும் ஒன்றுசேர்ந்தமையை இப் பெயர் குறிக்கிறது என்பதா?

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட கால நிகழ்ச்சியை அறிய முற்படும்போது, ஒளியே இல்லாத இருண்ட காட்டில் நாம் தடுமாற வேண்டியிருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளவே வேண்டும். குடிகளும், ஆட்சிமுறைகளும் தோன்றி வளர்ந்த காலம் சங்க இலக்கியக் காலமன்று. அக் காலம் அதற்கும் பல நூற்றாண்டுகள் முற்பட்டது. எனவே, சங்க இலக்கியத்தில் காணப்படும் பெயர்களில் நாம் பழங்கால மரபுகள் சிலவற்றின் நினைவுக் குறிப்புக்களைப் பெறுகிறோம் என்ற அளவில் அமைதியுற வேண்டுபவர்களாக இருக்கிறோம். இப் பெயர்களில் வரும் வேறுபாடுகளைக் கொண்டு பழங்காலக் குடிகளின் அமைப்புமுறை எவ்வாறு இருந்தது என்பதை ஒருவாறு நாம் நினைவுகூரலாம். இவற்றைக்கொண்டு இதற்குமேல் எதையும் நாம் துணிந்து கூறிவிட முடியாது.

## 6. சேரர்

சேரன் என்பதைப் பற்றி முன்னரே சில கருத்துக்கள் கூறினோம். கடற்கரை என்னும் பொருளுடைய சேர்ப்பு என்ற சொல்லிலிருந்து சேரன், சேரல், சேரலன் என்ற சொற்கள் பிறந்திருத்தலாகாதா என்பதை ஆராய்வது ஒப்பியல் மொழிநூலார் கடன். 'சேர்' என்பது ஒன்றுசேர்வது எனப் பொருள்படும்; எனவே, மணற் பொற்றைகள் அல்லது மணல் சேர்ந்த கடற்கரை என்பதைச் 'சேர்' என்பது குறிக்கும் எனலாம். ககர வொலி சகரவொலியாக மாறுதலும் உண்டு. ஆதலின், கரை என்பது சேர் என மாறியது எனக் கொள்ளலாமா என்பதும், அரபிக் கடலில் ஆதிக்கம் செலுத்தியும், கடம்பர் என அழைக்கப் பெற்ற

கடற் கொள்ளைக்காரரை அடக்கியும் புகழ் பெற்றவர் கடற் கரையோரமாக ஆட்சி செலுத்தினபடியால் கரையர் எனப் பெயர் பெற்றுப் பின் சேரர் என அழைக்கப்பெற்றார் என லாமா என்பதும் ஆராய்தற்குரியன.

சேரன் என்ற சொல்லின் தோற்றத்தைப் பற்றி ஆராயப் புகுந்த டாக்டர் கால்டுவெல் என்பார் தமிழிலும் மலையாளத்திலும் வழங்கும் **கேரளம், சேரளம், கேரம், சேரம்** என்பன போன்ற சொற்களை* எடுத்துக் கூறிக் ககர வொலி, ஸ, ச, ச்ச ஒலியாக ஆகும் முறை கொண்டு, '**கேரம்**' என்ற சொல்தான் **சேரன்** என்றாயிற்று என முடிவு செய் கிறார். மேலும் அவர், "**கேரம்** என்ற சொல்லின் பொருளை நிச்சயிக்க முடியவில்லை. மலையாள மொழியில் இச் சொல் லுக்குத் **தென்னை** என்ற ஒரு பொருள் உண்டு. தென்னை மரம் மிகுதியாக உள்ளமையால் மலையாள நாட்டுக்குத் தென்னையை உணர்த்தும் **கேரம்** என்ற பெயர் ஏற்பட் டிருக்கவேண்டும் எனலாம். ஆனால் **கேரம்** என்ற சொல் லுக்குத் தென்னை என்பது, நேர் பொருளன்றிச் சார்பு பொருள் என்பதாகவே தெரிகின்றது. **கேரம்** என்பது முதலில் நாட்டைக் குறிப்பதாய்ப் பின் அந் நாட்டில் மலிந் திலங்கிய தென்னையைக் குறித்திருக்கலாம்" என்கிறார்.†

மேலும், தெற்கிலிருந்து, பெரும்பான்மையாக இலங் கையிலிருந்துதான், மலையாள நாட்டிற்குத் தென்னை கொண்டுவரப்பட்டதெனத் தெரிகிறது. தெற்கிலிருந்து வந்ததால்தான் அதற்குத் தென்கு, தெங்கு (தென் - தெற்கு; கு - பொருட் சிறப்புணர்த்தும் உருப்பு.) தென்னை எனப் பெயர் ஏற்பட்டிருக்கவேண்டும். கடற்கரையில் தாழை போல் மிகுதியாய்ப் பயிராகும் காரணத்தால் தென்னைக்

---

* திரா. மொழி ஒப், : பக்கம் 22.

† திரா. மொழி ஒப், : பக்கம் 22, 23.

குத் தாழை என்ற பெயரும் கடற்கரையில் தழைத்து வளர்வதென்னும் பொருள்பட ஏற்பட்டிருக்கலாம்.*

சேரர் குடியோடு பல்வேறு குடிகள் உறவுமுறை கொண்டாடுவன. அக் குடிகளின் பெயர்களைப்பற்றி ஆராய்வதற்கு முன்பு, சேரர்களுக்கு அவர்கள் குடியையும் நாட்டையும் பற்றி ஏற்பட்டிருக்கலாம் என்று கருதப்பெறும் அவர்களுடைய பட்டப்பெயர்களைப் பற்றி நினைவுகூர்தல் வேண்டும்.

**சேரர் பூண்டிருந்த பட்டப்பெயர்கள் :**

சேரர்கள் பூண்டிருந்த பலவகைப்பட்ட பட்டப்பெயர்களைக் கீழ்க்கண்டவாறு நிகண்டு உணர்த்துகின்றது :

**கொங்கன், வஞ்சி வேந்தன், போந்தின் தாரோன், வில்லவன், கொல்லி வெற்பன், குடக்கோ, குட்டுவன், குடகன், கோதை, உதியன், வானவரம்பன், மலையமான், பொருநையாற்றுறைவன், சேரலன்.**†

**வில்லவன்** என்பது வில்லுக்கு அரசன் என்று பொருள்படும். சேரர்களுடைய கொடியில் வில்லுருவம் பொறிக்கப்பட்டிருக்கும். **கொங்கு நாட்டின் மக்களுக்குத் தலைவன்** என்பதைக் **கொங்கன்** என்ற பெயர் குறிக்கும். சேரநாட்டின் தலைநகர் கரூர் அல்லது வஞ்சியாகும். எனவே, **வஞ்சியைத் தலைநகராக உடைய வேந்தன்** என்பது **வஞ்சி வேந்தன்** என்பதற்குப் பொருளாகும். **பனந்தோட்டுமாலை,** சேரர்களின் அடையாள மாலையாகும். **போந்து** என்பது பனை. எனவே **போந்தின் தாரோன்** என்பது **பனந் தோட்டு மாலையை அணிந்தவன்** என்று பொருள்படும். **கொல்லி மலைக்குத் தலைவன்** என்பது **கொல்லி வெற்பன்** என்பதற்குப் பொருளாகும். **குடக்கோ, குட்டுவன், குடகன்** என்ற பெயர்கள் முறையே **குடநாடு, குட்டநாடு, குடகுநாடு**

---

*தாழை : புறம், 17, 24 ; தெங்கு : புறம், 29, 61.

†சூடாமணி நிகண்டு : மக்கட் பெயர்த் தொகுதி - பாட்டு 18.

இவற்றிற்குத் தலைவன் அல்லது இவற்றில் வாழும் மக்களுக்குத் தலைவன் என்று பொருள்படும். கோதை என்ற பெயருக்குப் பொருள் இன்னதென்று திட்டமாக விளங்கவில்லை. அதியன் என்ற சொல்லைப்பற்றிப் பின்னர் ஆராயும்பொழுது உதியன் என்னும் பட்டப்பெயரைப் பற்றிக் கூறுவோம். வான வரம்பன் என்ற பெயர் தன்னாட்டுக்கு எல்லையாக வானத்தைக்கொண்ட சேரமன்னன் என்று பொருள்படும். உலகம் முழுதும் வென்று, தரைப் பரப்பில் இனி வெல்வதற்கு இடமில்லையென்று கண்டவுடன் வானவுலகத்தையும் வெல்ல முயன்றவன் வான வரம்பன் எனலாம். இது மறுபிறப்பிலன்றி அடையமுடியாத ஒன்றாதலால் வானத்தை எல்லையாகக் கொள்ள முயன்றவன் என்பதுபோல் பொருள் கொள்ளலாம். சேரநாடு, மலைகள் நிறைந்த நாடாகும். எனவே, அவற்றிற்கெல்லாம் தலைவன் என்ற பொருளில் சேரன் மலையமான் எனப்பெற்றான். பொருநையாற்றோன் என்னும் பெயரிற் குறிக்கப்பெறும் ஆறு ஆன் பொருநை ஆறாகும். சேரநாட்டுத் தலைநகரான கரூரின் அருகே இஃது ஓடிக்கொண்டிருப்பதென்பர். எனவே, அந்த ஆற்றிற்குத் தலைவன் என்ற பொருளில் பொருநையாற்றோன் எனச் சேரன் அழைக்கப்பெற்றான். சேரன் என்ற பட்டப்பெயரைப் பற்றி முன்னரே ஆராயப் பட்டது.

சேர மன்னர் குடியில், பொறையர் என்றும் சேரல் என்றும் இருபெரும் பிரிவினர் இருந்து தனித்தனியே ஆட்சி புரிந்தனர் என்பது சங்க இலக்கியங்களால் தெளிவாக அறியப்படுகின்றது. இவருள் முன்னவர் தம்மைப் பொறை என அழைத்துக் கொண்டனர். எடுத்துக்காட்டாகப் பெருஞ்சேரலிரும்பொறை என்னும் பெயரைக் கூறலாம். பின்னவர்கள் 'சேரல்கள்' என அழைக்கப்பெற்றனர். பொறையன் என்பதைச் சேரர்குடி அல்லது குடும்பத்தின் ஒரு பகுதிக்கு அரசனாயிருந்தவனின் பெயராகக்

கொள்ளலாம். பொறை என்பது பாறை அல்லது பொற்றை அல்லது குன்று என்று பொருள்படும். எனவே, பொறையர் என்ற சொல் மலையும் குன்றும் நிறைந்த மலைநாட்டில் வாழும் மக்களையும் மன்னர்களையும் குறிக்கும்.

இந்த மன்னர்கள் ஆண்ட மலைநாட்டைப் பற்றி இலக்கியம் உணர்த்துவதைக் காண்போமானால் பொறையர் என்ற சொல்லுக்கு நாம் உரைத்த பொருளின் பொருத்தம் நன்கு விளங்கும் :

> "எருமை யன்ன கருங்கல் லிடைதோறு
> ஆனிற் பரக்கும் யானைய முன்பிற்
> கானக நாடனை நீயோ பெரும !*

"எருமையைப் போலும் வடிவையுடைய கருங்கற்கள் நிறைந்திருக்கின்ற இடங்களில் எல்லாம் யானைகள் ஆன் கூட்டம் போல நிறைந்திருக்கும் காட்டகத்து நாட்டையுடையவன் நீதானா?" என்பது இப் பாடல் வரிகளின் கருத்து. சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப் பெருஞ் சேரலிரும் பொறையைப் பார்த்து நரிவெரூஉத்தலையார் பாடியது இப் பாடல். சேரர் குடிப்பெயர்களுள் ஏனையவற்றைப் போல் அல்லாமல் பொறையர் என்ற இப் பெயர், சேரர்கள் நிலையாக ஓர் இடத்தில் குடியேறிய பிறகுதான் ஏற்பட்டிருக்கவேண்டும். பொறையர் கிளையின் மன்னர்கள் இரும்பொறை என்று அழைக்கப்பெற்றனர். 'இரு' என்ற சொல் பெருமையைக் குறிக்கும் ; எனவே இரும்பொறை என்பது பொறையர்களின் தலைவன் எனப் பொருள்படும். பொறையர் குடியின் தலைநகர் மாந்தை ஆகும். 'சேரல்கள்' என்ற மற்றொரு குடியினரின் தலைநகர் கருவூர் ஆகும். சேர சாம்ராஜ்யம் என்பது எப்போதும் மறக்கப்படவில்லை. சேரநாட்டுக்குப் பரம்பரையான தலைநகராம் கருவூரே

---

*புறம், 5 : 1-3.

யாகும். சேரநாடு முழுமைக்கும் தாமே தலைவர் என்பதை நிலைநாட்டும்பொருட்டுக் கருவூரைக் கைப்பற்றிக் கொள்வதற்காக இந்த இரு குடியினரும் அடிக்கடி தம்முள் போர் விளைத்துக்கொண்டிருந்தார்கள். **கருவூர் ஏறிய ஒள்வாள் கோப் பெருஞ் சேரல் இரும்பொறை*** என்ற பெயரில் உள்ள '**கருவூர் ஏறிய**' என்ற அடைமொழியை நோக்க, இம் மன்னன் சேரல் குடிக்கு உரிய நகராகிய கருவூரை வென்று அரசுகட்டில் ஏறினன் என்ற உண்மை தெளிவாகிறது. சேர அரசின் தலைமை இவ்விரு குடியினருக்கும் இடையில் ஊசலாடிக்கொண்டிருந்திருத்தல் வேண்டும். பொறையர்குடி மன்னர்கள் சேரநாடு முழுமையும் தம் அடிப்படுத்தபோது, தம்மைச் சேரமான் என்றும், கோப் பெருஞ் சேரல் என்றும் அழைத்துக்கொண்டனர் என்பதிலிருந்து சேரல் குடியினர்தாம் அக் குடிக்கு உண்மையான உரிமையுடையவர் என்பதும், பொறையர் என்பார் அக் குடிக்குப் பின்தோன்றல்கள் என்பதும், இவர்கள் ஒரோரு கால் சேரலரை வென்று அவருடைய ஆட்சியைக் கைப்பற்றினர் என்பதும் தெளிவாகின்றன.

**மாந்தையர்**† என்பதும், **மாந்தரன்**‡ என்பதும் சேரர்களுக்கு உரிய மற்றப் பட்டப்பெயர்கள் ஆகும். **மாந்தை** என்ற பெருநகரின் தலைவர் **மாந்தையர்** ஆவர்.§ சில பாடல்களில் **மாந்தை** என்பது **மரந்தை** எனத் தவருகக் காணப்படுகிறது.$ **மாந்தரன்**¶ என்ற சொல்லிற்குப் பொருள் தெளிவாக விளங்கவில்லை. ஒரு வேளை, அதுவும் **மாந்தை**

---

*புறம், 5.

†பதிற், 90 : 28. ‡பதிற், 90 : 13.

§அகம், 127 : 6 ; 376, 18 ; நற், 35 : 7 ; 395 : 9 ; குறுந், 34 : 6; 166 : 3.

$அகம், 376 : 18 ; பதிற், 90, 28.

¶பதிற், 90, 13.

என்ற சொல்லிலிருந்து பிறந்ததுதானே? விட்டிசையைத் தடுப்பதற்காக, ரகர வொலி இடையில் வருவது இயல்பே. எடுத்துக் காட்டாகக் கா+உம்=காவும், காரும் எனத் தமிழில் வருதலையும், சொகுசு+ஆலு=சொகுசுராலு எனத் தெலுங்கில் வருதலையும் காண்க. அவற்றைப் போலவே, மாந்தை+அன்=மாந்தரன் எனலாம். இவ்வாறு கொள்ளுங்கால் மாந்தரன் என்பது மாந்தையன் என்பதன் மற்ருெரு வடிவமேயாகும்.

## 7. சேரநாட்டில் இருந்த பிற குடிகள்

1. (அ) குடவர், (ஆ) குட்டுவர்: (குடவர் கோமான் நெடுஞ் சேரலாதன், குட்டுவன் இரும்பொறை, குட்டுவன் கண்ணனர், குட்டுவன் கீரனர், செங்குட்டுவன்).

குடவர், குட்டுவர் என்ற இப் பெயர்கள், பழந்தமிழ் நாட்டின் பன்னிரண்டு பிரிவுகளுள் குடநாடு, குட்டநாடு என்ற இரு பிரிவுகளை நமக்கு நினைவூட்டுகின்றன. மேற்கில் உள்ள நாடு குடநாடு ஆகும்; மலைகளின் தாழ்வான இடத்தில் உள்ள நாடு குட்டநாடு ஆகும்.

'குடவர்' என்ற சொல் பட்டினப்பாலையிலும்* பதிற்றுப் பத்து 5-ஆம் பத்தின் பதிகத்திலும் வருகிறது. (குடவர் கோமான் நெடுஞ் சேரலாதன்). குடக்கோ என்பது பட்டப் பெயராக இளஞ் சேரல் இரும்பொறைக்கும்† நெடுஞ்சேரலாதனுக்கும்‡ வருகின்றது. குட்டுவன் என்பான் குட்டநாட்டின் தலைவன். இவ்வாறு பரணரும்§ அம்மூவனரும்$ நக்கீரரும்¶ மாமூல

*276-ஆம் வரி.

†பதிற், 9-ம் பத்துப்பதிகம் - உரை இறுதி.

‡பதிற், 7-ஆம் பத்துப் பதிகம்.

§புறம், 343 : 9. $ஐங், 178 : 3. ¶அகம், 290 : 12.

னும்* குறிப்பிட்டுள்ளார்கள். குட்டுவர் என்பார் குட்ட நாட்டு மக்கள். மதுரைக்காஞ்சியும்† பதிற்றுப் பத்துப்‡ சேரரைக் குட்டுவர் என்று கூறுகின்றன. குட்டுவன் இரும்பொறை என்பது ஒரு சேரமன்னனின் பெயர்.§ குறுந் தொகை 179-ஆம் பாடலைப் பாடிய புலவரின் பெயர் குட்டுவன் கண்ணனார் என்பது. குட்டுவன் கீரனார் என்பது புறநானூறு 240 - ஆம் பாடலைப் பாடிய புலவரின் பெயர். இளங்கோ அடிகளின் தமையனாராய்ச் சேரநாட்டை ஆண்ட சேர மன்னனின் பெயர் செங்குட்டுவன் என்பது.$ குடவர், குட்டுவர் என்ற பெயர்கள் முறையே மேற்கு நாடுகளிலும் மலைநாடுகள் அல்லது பள்ளத்தாக்குக்களிலும் உள்ள மக்களையோ மன்னர்களையோ குறிப்பனவாகும். தமிழ் நாட்டின் இந்தப் பகுதிகளில் நிலையாகக் குடியேறி அரசமைத்துக்கொண்ட பின்னரே சேரர்கள் இப் பெயர்களைப் பூண்டாராதல் வேண்டும். எனவே, இப் பெயர்கள் இயல்பான குடிப் பெயர்கள் அல்ல. எது எவ்வாறுபினும் சேரநாட்டில் இருந்த பல நாட்டுப் பிரிவுகளுள் இந்த இரண்டு பகுதிகளின் இன்றியமையாமையைக் குடவர் குட்டுவர் என்ற இந்த இரண்டு பெயர்களும் தெளிவுபடுத்துகின்றன.

டாக்டர் கால்டுவெல் அவர்கள், "சேரநாட்டில் கிழக்கு மேற்கு என்ற சொல்லாட்சிகள், அந் நாட்டு மக்கள் கிழக்கிலிருந்து மேற்கே குடியேறினவர்கள் என்பதைக் காட்டுகின்றன என்றும், கிழக்கு என்பது கீழ் எனவும் மேற்கு என்பது மேல் எனவும் பொருள்படுமாதலால், மேற்கு மலைத் தொடர்ச்சியின் கிழக்கில் இருந்தபோதுதான் மக்களால் இவ் வழக்கு ஏற்பட்டிருக்கவேண்டுமென்றும், பிறகு

*அகம், 91 : 13. †வரி, 105. ‡90-ஆம் பாடல்.
§பதிற்றுப்பத்து, 9-ஆம் பத்துப் பதிகம்.
$பதிற், 5-ஆம் பத்தின் பதிகம்.

அவர்கள் கிழக்குப் பக்கத்திலிருந்து மேற்குப் பக்கத்திற்குக் குடியேறியிருக்கவேண்டு மென்றும் கூறுகிறார்.* கிழக்கிலிருந்து மேற்கில் குடியேறுவதற்கு அவர்கள் தரை வழியாகவும் கடல்வழியாகவும் போயிருத்தல் வேண்டும். தரைவழியாகச் சென்றபோது, தமிழகத்தின் மேற்குப் பக்கத்தில் உள்ள பல்வேறு பகுதிகளில் சிறிது சிறிதாகக் குடியேறி அவற்றைச் சீர்திருத்தித் தங்களுக்கு உரிய முறையில் அவற்றிற்குப் பெயர் வழங்கியிருக்கவேண்டும். குடநாட்டில் அவர்கள் குடியேறிய நிகழ்ச்சி அதன் மன்னரோடு அதை என்றும் நினைவுகூர்தற்குரிய இன்றியமையாத ஒன்றாக இருந்திருக்கவேண்டும். அல்லது, இந்த மேலைப் பகுதிகளைச் சேரர்கள் வென்று தமக்கு அடிப்படுத்திய போது, மலைகளும் பள்ளத்தாக்குக்களும் உள்ள குடநாட்டிற்குத் தாங்கள் தலைவர்கள் ஆனது குறித்துத் தங்களைப் பெருமைப்படுத்திக்கொண்டிருக்கவேண்டும்.

பட்டினப்பாலையில், அதன் ஆசிரியர் வடவரோடும் தென்னவரோடும் குடவரைச் சேர்த்துப் பாடும்போது, "வடவர் வாடக் குடவர் கூம்பத் தென்னவன் திறல் கெட"† என்று கூறுகிறார். குடவர் என்னும் சொல் சேரரைக் குறிப்பதுதான் எனினும் இவ் விடத்தில் இச் சொல் குட நாட்டைக் குறிப்பதன்று; மேற்குப் பக்கத்தில் உள்ள நாட்டைப் பொதுவகையில் குறிப்பதாகும்.

**2. (அ) அதியர், (ஆ) உதியர்: (அதியர் கோமான் அஞ்சி, அதியன் விண்ணத்தனார், உதிய வேந்து, நன்னன் உதியன்).**

சேரர் குடியோடு உறவு கொண்டாடும் வேறு குடிகளும் உண்டு. அவற்றுள் ஒன்று அதியர் குடி. அதியமான் என்றும் அதிகமான் என்றும் வழங்கும் பெயர்கள் அதியர்

---

* திரா. மொழி. ஒப்.: முன்னுரை பக்கம் 24.

† வரிகள், 276-277.

மகன் என்பதன் திரிபாயிருக்கலாம். ஔவையாரை ஆதரித்த பெருவள்ளல் அதியமானே என்று பிற்கால இலக்கியங்கள் குறிக்கின்றன. அவ் வள்ளலின் பெரும் புகழாகிய ஞாயிற்றின் முன்னால், அதியர் குடியில் தோன்றிய பிற அரசர்களின் புகழாகிய சிறுசிறு விளக்குக்கள் எல்லாம் ஒளி மங்கி நின்றன.

எனவே, **அதியமான்** என்பது இயற்பெய ரன்று இது பற்றி ஏதேனும் ஐயம் இருப்பின் அதியர் கோமான் அஞ்சி† என்ற தெளிவான தொடர் அவ் வையத்தைப் போக்கும். ஔவையைப் பேணிய அன்புருவமான வள்ளலின் பெயர் **அஞ்சி** என்பதே. அதியன் என்பதோடு பிற பட்டப் பெயர்களும் அவனுக்கு உண்டு. அவை **நெடுமான்**,‡ **பெருமான்**,§ **நெடுமிடல்**$ முதலியன. இப் பெயர்கள் எல்லாம் புலவர்கள் இட்ட புனைந்துரைப் பெயர்கள் அல்ல என்பது, இவற்றுள் ஒன்றான **நெடுமிடல்** என்ற பட்டப் பெயரைப் பற்றிப் பதிற்றுப்பத்து உரையாசிரியர் கூறும் விளக்கத்தால் அறியலாம். அவ் விளக்கத்தில் அவர் அஞ்சி என்னும் இயற்பெயரினின்றும் நெடுமிடல் என்னும் பட்டப்பெயர் வேறுபட்டது எனத் தெளிவாகக் கூறுகிறார்.¶ இங்ஙனம் உரையாசிரியர், 'அஞ்சியென்பதுதான் இயற் பெயர், நெடுமிடல் என்பது அவனது பட்டப்பெயர்' எனத் தெளிவாகக் கூறியிருப்பவும், டாக்டர் சாமிநாதையரவர்கள், நெடுமிடல் என்பது அவனது இயற் பெயர் என்று கூறி நம்மைத் தவறான கருத்துக் கொள்ளும்படி செய்திருக்கிறார்.டி **அதியர்** என்பது குடிப்பெயரேயாகும் என்று நாம் கூறும்போது

---

†புறம், 91 : 3-4. ‡புறம், 92 : 6. §புறம், 88 : 3.
$பதிற், 32 : 10. ¶பதிற், 32, உரை.

டிஅரும்பத உரையகாதி — பதிற்றுப்பத்து — ஐயரவர்கள் பதிப்பு—"நெடுமிடல் - அஞ்சியின் இயற் பெயராம்"—இஃது ஐயரவர்கள் கூற்று.

அதியன் அல்லது அதிகன் என்ற பெயர் இயற்பெயராக வும் இருத்தல் ஆகாது என்று யாம் கூற முன்வரவில்லை. அகநானூறு 142-ஆம் பாடலும்*, குறுந்தொகை 393-ஆம் பாடலும்†, அதிகன் என்பதை இயற் பெயராகக் குறிக் கின்றன.

அகநானூறு 301-ஆம் பாடலைப் பாடிய புலவரின் பெயர் அதியன் விண்ணத்தனார் என்பது. விண்ணத்தனார் என்பார்,விண்ணன் என்பாரின் தந்தையாராதல்வேண்டும்: (விண்ணன் + அத்தனார்). விண்ணன் என்பது வானுலகின் தலைவன் என்று பொருள்படும். விண்ணன் என்னும் சொல் சாதாரணமாக இயற்கைக்கு அப்பாற்பட்ட தெய் வத்தைக் குறிக்கும். அதியன் என்பது இப்புலவரின் தந்தை யின் பெயராகவோ அல்லது குடியின் பெயராகவோ இருக்கலாம். விண்ணத்தனார் என்ற பெயரில் விண்ணன் என்பது மகனின் பெயரையும், விண்ணத்தனார் என்பது தந்தையின் பெயரையும் குறிக்கும். இஃது உண்மை யானால், அதியன் என்ற சொல் நிச்சயமாகக் குடியைத் தான் குறிக்கிறது என்பது தெளிவு. 'ஆர்' என்ற விகுதி ஒரு பெயரோடு சேர்க்கப்படவில்லையாயின், அப் பெயர் சிற்றரசனையோ அல்லது அரசனையோ குறிப்பதாகும் என்று முன்னரே கூறினோம். அதியன் என்ற பெயரோடு ஈண்டு ஆர் விகுதி சேர்க்கப்படவில்லை யாதலின் அதைச் சிற்றரசன் அல்லது அரசன் பெயரைக் குறிப்பது என்றே நாம் கொள்ளவேண்டும்.

இனி இந்த அதியர் குடிக்கும் சேரர் குடும்பத்திற்கும் உள்ள உறவைப்பற்றி நாம் ஆய்தல்வேண்டும். புறநானூறு 99-ஆம் பாடலின் ஐந்தாம் வரி, பனந்தோட்டுமாலை யணிந்துகொண்டு பொலிவோடு வீற்றிருக்கும் நிலையில் உள்ள அஞ்சியைப் புனைந்துரைக்கிறது. தொல்காப்பியர்

*13-ஆம் வரி. †வரி, 4.

காலத்திலிருந்து பனந்தோட்டுமாலைதான் சேரரின் அடையாள மாலையாக இருந்துவந்துளது.* அஞ்சியும் சேரரும் ஒரே வகையான தார் அணிந்திருந்தனர் என்பது தெளிவாக அறியப்படுதலால், அஞ்சியின் குடிக்கும் சேரர் குடிக்கும் உறவுமுறை உண்டு என்பது உத்தேசமாகக் கூறும் பொருளெனல் ஆகாது. 14-ஆம் நூற்றாண்டினரான நச்சினார்க்கினியர்க்கு முந்தியவராகப் பல ஆதாரங்கள் கொண்டு கருதப்பெறும் புறநானூற்று உரையாசிரியர், இப் புறப்பாடலுக்கு விளக்கவுரை எழுதும்பொழுது, "இவனுக்குப் பனந்தார் கூறியது, சேரமாற்கு உறவாதலின்" என்று அருமையாக, இணையற்ற முறையில் குறிப்பிட்டுள்ளார். இவன் என்று, அஞ்சியைத்தான் அவர் குறிப்பிடுகிறார். அவரது கூற்றுக்கு அரணாகச் "சேரமாற்கு உறவாதலின்" என்பதற்குப் பதிலாக, மற்றொரு பாடபேதம் ஐயரவர்கள் பதிப்பிற் காணப்படுகிறது. அதனால் சேரர் - அதியர் உறவு பற்றி இன்னும் சில கருத்துக்கள் தெளிவாகின்றன. அந்தப் பாடபேதம் 'உதியவேந்தாதலின்' என்பது. அந்தப் பாடபேதத்தின்படி, அஞ்சி, உதிய வேந்து ஆதலின், அவனுக்குப் பனந்தார் கூறப்பட்டது என்பது உரையாசியரின் கருத்தாகிறது. உதியன் என்ற பெயரோடு சங்க இலக்கியத்தால் அறியப்பெறுபவர்கள் இரு மன்னர்களே. அவர்களுள் ஒருவன் போர்க்களத்தில் ஐவர்க்கும் நூற்றுவர்க்கும் சோறளித்தவன் எனப் புறநானூற்றிலும்,† அகநானூற்றிலும்,‡ பதிற்றுப் பத்திலும்,§ கூறப்பெறும் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன்; மற்றொருவன் பெருஞ் சிறப்புவாய்ந்த கொண்கானங்கிழான் நன்னனாக ஒருவேளை இருக்கலாம் எனற்குரிய நன்னன் உதியன். புறநானூற்று உரையாசிரியர் கருத்துப்படி உதியன் என்பதே ஒரு குடிப்பெயரடி

---

*தொல், பொருள், 60. †பாடல், 2.

‡பாடல், 233. §இரண்டாம் பத்தின் பதிகம்.

யாகப் பிறந்த பெயர் என்பதுபோல் தெரிகிறது. ஏன் எனில் உதியவேந்து என்பது சேர அரசனைக் குறிப்பதாக விளக்க முடியுமேயன்றி, வேறு வகையாக விளக்கவே முடியாது. சேரர் பெருங்குடியுள் பொறையர், மாந்தரர், உதியர், அதியர் என்ற பல கிளைக்குடிகள் இருந்திருக்கலாம் என்பது தோன்றுகிறது. இவைகள் தம்முள் ஒன்றோடொன்று உறவுபூண்டிருந்தமையால், புறநானூற்று உரைகாரர், அதியர் குலத்தோன்றல் ஒருவனை உதியர் குலத்திற்கும் உரியவன் என்று கருதலானர். எனினும், உரையில் வரும் 'உதியன்' என்ற சொல், குறிப்பிட்ட ஒரு கிளைக் குடியைச் சுட்டுகிறது என்பதைக் காட்டிலும் பொதுவாகச் சேரர் குடிக்கே உரியது என்று கொள்வதே பொருத்தமாகும். உதியன் என்பது சேர அரசமரபின் பட்டப் பெயர்களுள் ஒன்று எனத் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.* திவாகரமும் இதே கருத்தையுடையதாகும்.

அதியன், உதியன் என்ற இரு சொற்களும் ஓரே ஒரு சொல்லின் இருவேறு வடிவங்களே என முடிவுசெய்ய முடியுமானல் நம் கருத்து விளக்கம் எளிதாய்விடும். ஆனல், சொல்லின் முதலில் அகரமும் உகரமும் ஒன்றற்கொன்று போலியாக வரும் என்று நிறுவுதல் மிகவும் இக்கட்டான செயலாகும். அதி, உதி என்ற இரு சொற்களும் தமிழில் இருவேறு மரங்களைக் குறிப்பன. அதி என்ற சொல்லைத் தற்காலத்தில் அத்தி என ஒற்றிரட்டித்து வழங்குகின்றனர். "அதி என்ற சொல்லில் 'அத்' என்பது பகுதி; 'இ' என்பது ஒலித்துணை பற்றிவரும் உயிர்" என மொழி நூலார் வழங்குவர். சில சமயங்களில் இந்த ஒலித்துணை பற்றிவரும் இகர உயிர் கெட அவ்விடத்தில் உகரம் அல்லது அகரம் வரும். சிறு என்ற சொல்லில் இறுதி உகரம் கெட அவ்விடத்தில் இகரம் வந்து சிறு என்பது சிறி என்ருகும்.

*415-ஆம் பக்கம்.

சிறியிலை என்பது இதற்கு எடுத்துக்காட்டாகும். **அதவம்** என்ற சொல்லுக்கும் **அத்தி** என்றுதான் பொருள். **அதி** என்ற சொல் அம் என்ற சாரியை பெற்றுத் தன் ஒலித் துணை உயிர் இகரம் கெட அகரம் பெற்று **அதவம்** என்றாயிற்று.* தொல்காப்பியப் பாயிர நூற்பாவில் **அதங்கோடு** என்ற சொல், ஓரிடத்தின் பெயராகக் காணப்படுகிறது. இப்போதுள்ள திருவாங்கூரே அதங்கோடு எனப்பட்டது என்பது அறிஞர் கருத்து. இச் சொல்லில் இகரத்திற்கு மாறாக உகரம் வருவதை விட்டு, மலையாள மொழி அமைதியின்படி அகர ஒலி வந்துள்ளதைக் காண்கிறோம். அத்தி மரம் நிறைந்துள்ள மலைப்பகுதி என்ற பொருளில் **அதங்கோடு** என்ற பெயர் உண்டாயிற்று எனலாம். இப் பகுதி, மேலைக் கடற்கரையில், அதாவது, சேர நாட்டில் இருப்பதால், அதியர் குடியோடு அதங்கோட்டைத் தொடர்பு படுத்தலாம். தொடக்கத்தில், அதியர், அதங்கோட்டில் இருந்து ஆட்சி புரிந்துவந்தனர் எனலாம். ஆனால், சேரர் குடியினர், தங்களையன்றி வேறுயாரும் சேர நாட்டுப் பகுதிகளை ஆள்வதைப் பொறுக்க முடியாதவரான போது, அதியர் அங்கிருந்து கிழக்கு நோக்கி வந்து தகடூரைத் தலைநகராகக்கொண்டு ஆளத் தொடங்கியிருத்தல் வேண்டும். இத் தகடூரே ஔவையை ஆதரித்த அஞ்சியின் புகழ்பெற்ற தலைநகரம் ஆகும். **அதங்கோடு** அல்லது **அதங்கோடூர்** என்ற பெயர்களின் திரிபாகத் தகடூர் என்ற பெயர் இருத்தலை நாம் காணலாம். சேரமான் இரும் பொறை என்ற சேர மன்னன் இத் தகடூரை முற்றுகையிட்டு அதிகமானை வென்றான். விடுகாதழகிய பெருமாள் என்பாரது கல்வெட்டுக்களினால் 13-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகும் அதியர் குடியினர் இருந்தனர் என்பது தெரிகின்றது.

*குறு., 24.

இந்த **அதிகமான்**, **ஆவி** அல்லது ஆய்குடியைச் சேர்ந்தவன் என்று திரு. சிவராச பிள்ளை கூறுவது* தவறு. தமது கருத்தை நிறுவுவதற்குத் தகுந்த சான்றுகளை அவர் காட்டவில்லை.

(Pseudostomos) பெரியாற்றின் முகத்துவாரத்திற்கும் (Baris) பாலாயி ஆற்றுக்கும் இடையே உள்ள பெரு நகரங்களை வரிசையாகக் கூறும்போது தாலமி, '**அதரிமா கோரியூர்**' (Adarima Koreour) என்னும் நகரைப் பற்றியும் குறித்துள்ளார். அதிகமான், அதியன் என வழங்கப்பட்டவனின் தலை நகரான, 'அதியமான் கோளியூர்' அல்லது 'கோளியூரை'யே தாலமி இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் என நாம் கருதுகிறோம். **அதியர் மகன்** என்பதன் சுருங்கிய வடிவமே **அதியமான்** என்பது ஆகும். தென் கோயம்புத்தூர் மாவட்டமாக இருந்த பகுதியை ஆண்டு வந்த ஓர் **அதியன்** வடபகுதியில் ஆண்ட நன்னனோடு போர்புரிந்த செய்தியைப் பற்றி நாம் முன்னரே அறிந்தோம். அந்த அதியன், ஆய்குடியையோ அதன் கிளைக் குடியையோ சேர்ந்தவன் என்றும், கோளியூரில் இருந்து அரசாண்டவன் என்றும் நாம் கருதுகிறோம். "கோளியூர் என்பது எது என இன்னும் அறியப்படவில்லை"† என்று திரு. சிவராச பிள்ளையவர்கள் கூறுகிறார். அதியமானைப் பற்றித் தாலமி குறிப்பிட்டிருப்பதில் உள்ள பாடத்தைக் கொண்டு 'அதியமான் கோளியூரே', அவ்வூர் என்று கூறுவது ஏற்புடையதாகலாம். திருவாங்கூரிலிருந்து வெளியேறிய அதியர்கள், தகடூருக்கு வருவதற்குமுன் அவ்வூரில் தங்கியிருக்கலாம். கொண்கானத்தை யாண்ட நன்னனின் படைத்தலைவன் மிஞிலி என்பான் பசும்பூண் பாண்டியனின் நாட்டின்மேல் படையெடுத்தான். அப் போரில்

*The Chronology of the Early Tamils—p. 170.
†The Chronology of the Early Tamils—p. 106.

பாண்டியனின் படைத்தலைவனான அதிகன் என்பான் மிஞிலியாற் கொல்லப்பட்டான். இந் நிகழ்ச்சி அகநானூறு 142-ஆம் பாடலிலும், குறுந்தொகை 393-ஆம் பாடலிலும் குறிப்பிடப்படுகிறது. அதே மிஞிலி, ஆஅய் எயினனை எதிர்த்துப் பொருது கொன்றான். இந் நிகழ்ச்சி அகநானூறு 148, 181 எண்ணுள்ள பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விரண்டு நிகழ்ச்சிகளிலும் மிஞிலியாற் கொல்லப்பட்ட அதிகனையும், ஆஅய் எயினனையும் ஒருவர் என நினைத்துத் திரு. சிவராச பிள்ளையவர்கள் தடுமாற்றம் கொண்டுள்ளார் என்று எண்ணுகிறோம். அதிகன், ஆய் குடியைச் சேர்ந்தவனாக இருக்கமுடியாது என்று காட்டுவதற்குத் தக்க சான்று உள்ளது. அதிகமான், மழவர் வழிவந்த மழவர் பெருமகன் என அடிக்கடி புகழப்பெறுகிறான்.* இம் மழவர் குடி மிகப் பழைய பெருங்குடி யென்றும், இதிலிருந்தே சேரர் குடியும் அதியர் குடியும் கிளைத்தன என்றும் தோன்றுகின்றன. சேரமன்னனைப் பற்றிப் பதிற்றுப் பத்துப் பாடல்கள்† "மழவர் மெய்ம்மறை"—(மழவரின் கவசம்) என்று புனைந்துரைப்பதிலிருந்து இது தெளிவாகிறது. பெருவீரனும் வள்ளலுமான ஓரி என்பானும் இம் மழவர் குடியைச் சேர்ந்தவனே. "மழவர் பெருமகன் மாவள்ளோரி"—என்ற அடியால்‡ இஃது அறியப்படுகிறது. ஆய் அல்லது ஆவி குடியும் இம் மழவர் குடியும் ஒன்றற்கொன்று பகைகொண்ட குடிகள். ஓரி யென்னும் குதிரையை வைத்திருந்தமையால், ஓரி புகழ் பெற்றிருந்தான். அவரவர் சிறப்பை அவரவர்க் குரிமையாக்கிப் புகழ்ந்துரைப்பதில் தவறில்லை. மழவர்கள் எப்பொழுதும் சிறந்த குதிரைகளையுடையவரெனப் புகழப்பெறுவர். "உருவக் குதிரை மழவர்"§ என்ற அடியைக் காண்க. அகநானூற்றின் முதற் பாடலின்படி, ஆவி குடியைச் சேர்ந்த மன்னன் ஒருவன்

---

*புறம், 88, 90. †21, 55. ‡நற், 52. §அகம், 1.

இம் மழவர் குடியினரைப் போரில் வென்ருன். "உருவக் குதிரை மழவர் ஓட்டிய நெடுவேள் ஆவி"* என்று அவன் குறிப்பிடப்படுகின்ருன். இது தனிப்பட்டவரின் போர் ஆயின், ஓர் ஆய் வேந்தன் மற்ருேர் ஆய் வேந்தனேடு சண்டையிட்டான் என்று கூறுவதில் தவறில்லை. ஆனல், அவ் வகநானூற்றுப் பாடல், தனி மனிதரின் போரைக் குறிக்காமல், இரு குடிகளுக்கும் இடையே பகைமைபற்றி நிகழ்ந்த போரையே குறிக்கிறது. எனவே, அதியர் குடியும் ஆவியர் குடியும் ஒன்றெனக் கூறல் இயலாத தாகின்றது.

3. மலையர் (மலையமான் திருமுடிக்காரி, மலையமான் சோழிய ஏனதி, திருக்கண்ணன் மலையன்) :

மலையர் குடியில் தோன்றியவன் என்று பொருள் படும் 'மலையர் மகன்' என்ற சொல்லின் திரிபே மலையமான் என்பது. மலையன் என்பது மலைகளின் தலைவன் - சேர நாட்டின் தலைவன் - என்று பொருள்படும். நிகண்டுகளி லும் அகராதிகளிலும் மலையமான் என்பது சேரர்களின் பட்டப்பெயர்களுள் ஒன்ருகக் காணப்படுகிறதென முன் னர்க் கூறப்பட்டுள்ளது. தமிழ் இலக்கண நூல்களுக்கு உரை வகுத்த உரையாசிரியர்கள்† இயல்பு வழக்குப்பெற்ற மரூஉ மொழிகளுக்கு எடுத்துக்காட்டாகப் பல சொற் ருெடர்களைக் காட்டியுள்ளார்கள். அவற்றுள்ளே தமிழ் நாட்டு மூவேந்தரைப் பற்றியனவும் உள்ளன. 'பாண்டியன் நாடு – பாண்டி நாடு என்றும், சோழன் நாடு – சோணடு என்றும் மருவின' என்று காட்டப்பட்ட வற்றிற்கு முன்னர் 'மலையமான் நாடு என்பது மலாடு என மருவியதாகக் காட்டப்பட்டுள்ளது. இங்கு மலையமான், மலாடு என்ற சொற்கள் முறையே சேரன், சேரநாடு என்பனவற்றைக் குறிக்கின்றன என்பதில் சிறிதும் ஐய மில்லை. எனவே, மலையமான்கள் என இலக்கியத்தில் கூறப்

*அகம், 1. †நன்னூல் : சூத்திரம்-267.

பெறுகின்றவர்கள் எல்லாம் சேரர் குடியைச் சேர்ந்தவர்களாகக் கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை. சேரர் குடியின் கிளைக் குடியைச் சேர்ந்தவர்களுள் சிலர் மேற்குப் பக்கத்தில், தங்கள் நாட்டை விரிவாக்க இயலாமையால், கிழக்கில் திரும்பி, வட ஆர்க்காடு - தென்னார்க்காடு மாவட்டங்களாக இப்போதுள்ள பகுதிகளை வென்று, அங்குக் குடியேறினார்கள். பெண்ணையாற்றங் கரையில் உள்ள திருக்கோவலூரை ஆண்டவன் மலையமான் என்று குறிப்பிடப்பெறுகிறான். இந்தப் பகுதியும் மலைகள் உள்ள பகுதியாதலின் மலைநாடு என்ற பெயரால் இஃது அழைக்கப்பட்டது. இதனால் **மலாடர்** என்ற பெயர் புதிய நாட்டிற் குடியேறிய பின்னும் மலையமான்களுக்குப் பொருந்தியது. **மலாடர் கோமான் மெய்ப்பொருள் நாயனாரைப்** பற்றி நாம் பெரிய புராணத்திற் படிக்கின்றோம்.

மலையர் குடியில், மலையமான் திருமுடிக்காரி என்பான் சிறந்து விளங்கினான். அவனுடைய புகழை மாறோக்கத்து நப்பசலையார் என்னும் புலவர், புறநானூறு - 126ஆம் பாடலில் பாடுகிறார். 'புலனழுக்கற்ற அந்தணாளன்' என்று புகழப்பெற்ற கபிலன், திருமுடிக்காரியின் புகழ் எங்கும் பரவுமாறு பாடியுள்ளான்' என அவர் அப் பாடலிற் குறிப்பிட்டுள்ளார்.*

தமிழ் நாட்டு மூவேந்தரிடத்திலும் திருமுடிக்காரிக்கிருந்த செல்வாக்கைப் பற்றிக் கபிலர் பாடுகிறார். அவனுடைய சிறப்புக்களில் எல்லாம் தலைமையானது, அவனது ஏகபத்தினி விரதமே. அவன் தன் மனைவியினிடம் தெய்வக்காதல் கொண்டிருந்ததால் அவள் தோள்களைத் தவிர வேறெதையும் தனது என அவன் கொள்ளவில்லை; அவன் அவளுடைய தோள்களைத் தவிர மற்றெல்லாப் பொருள்களையும் இரவலர்க்கு ஈந்துவிட்டான்.

---

*புறம், 126 : 11-13.

"வியாத் திருவின் விறல்கெழு தானை
மூவருள் ஒருவன் துப்பா கியரென
ஏத்தினர் தரூஉம் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வரூஉம் இரவல ரதுவே
....................................
அரிவை தோள்அளவு அல்லதை
நினதென இலைநீ பெருமிதத் தையே"*

என்று பாடுகிறார் கபிலர். அவனது நாட்டின்மீது படையெடுத்த ஆரியர் அவனால் வென்று துரத்தப்பட்டனர்.†

அதியமான், திருக்கோவலூரின்மீது படையெடுத்துச் சென்று திருமுடிக்காரியை வென்று, அவனை நாட்டை விட்டுத் துரத்தினான்.‡ இவனது இயற்பெயர் காரி என்பதாகும். இது கருமை என்ற சொல்லடியாகப் பிறந்த பெயர். மஹாவிஷ்ணு என்னும் திருமாலுக்கு இப் பெயர் மிகவும் பொருத்தமுடையது. இம் மன்னனின் குதிரையும் கருமை நிறமுடையதா யிருந்தமையாற்றான் போலும் அதுவும் காரி எனப் பெயர்பெற்றது. அதியமானால் நாடிழந்த காரி தலையிறக்கத்துடன் சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையின் துணையை நாடினான். பல தலைமுறைகளாகச் சேரர் கைவசமிருந்த, அப்போது ஓரி என்ற ஒரு குறுநில மன்னனின் ஆட்சிபீடமாயிருந்த கொல்லி மலையைத் திரும்பக் கைப்பற்றவேண்டும் என்ற விருப்பம் சேரனுக்கு இருந்தது. அவனுடைய கருத்தையறிந்து அவன் ஆதரவைப் பெறுவதற்காகக் காரி, ஓரியைச் சண்டைக்கு இழுத்து அவனைக் கொன்றான்.§ கொல்லிமலை அவனால் சேரனிடம் ஒப்புவிக்கப்பட்டது.$ காரியின் செயலால் அவனிடம் விருப்பங்கொண்ட இரும்பொறை, அதியமானை அடக்குவதற்கு ஏற்றகாலம் அதுதான் என்று முடிவு செய்து தகடூரின்மீது படையெடுத்துச் சென்று அதை

*புறம், 122. †நற், 170.
‡புறம், 99. §நற், 320. $அகம், 209.

முற்றுகைவிட்டான். பாண்டியரிடமிருந்தும் சோழரிடமிருந்தும் அதியமானுக்கு உதவி கிடைத்தது. கிடைத்தும் அவன் போரில் உயிரிழந்தான்.* கோவலூர், காரிக்கு முன்போல் உரிமையாக்கப்பட்டது. சோழன் கிள்ளிவளவன், அதியமானைக் காப்பாற்றச் சென்ற தனது படை அடைந்த தோல்வியை மறக்க முடியவில்லை. எனவே, அவன் மலையமானின் மக்களைக் கொன்று பழிவாங்க நினைத்தான். ஆனால், புலவர் கோவூர் கிழார் அவனை இடித்துக் கூறி அப் பழிச்செயலைச் செய்யாதவாறு தடுத்தார்.† காரியைப் புகழ்ந்து பாடியுள்ள மாறோக்கத்து நப்பசலையார்,‡ மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன் என்பானையும் பாடியுள்ளார்.§ எனவே, இவன் (திருக்கண்ணன்) திருமுடிக்காரியின் மகனாயிருக்கலாம் எனக் கருத இடமுண்டு. திருமுடிக்காரியின் மக்கள், மிக்க இளையராயிருந்தபோதே தங்கள் தந்தையை இழந்திருத்தல் வேண்டும். கோவூர் கிழாரின் நன் முயற்சியால் உயிர் பிழைத்த அக் குழந்தைகளுள் ஒன்று பிற்காலத்தில் சோழ மன்னனின் ஆணைக்கடங்கிய குறுநில மன்னனாகி, ஏனாதி என்ற சிறப்புப் பெயரையும் (பட்டத்தையும்) பெற்றிருக்கலாம்.

4. (அ) மழவர், (ஆ) மறவர், இளையர் (மழவர் பெருமகன் அதியமான் நெடுமானஞ்சி, மழவர் மெய்ம்மறை பல்யானைச் செல்கெழு குட்டுவன் முதலியவர்):

மழவர் குடியைப்பற்றி இனி ஆராய்வோம்: இந்த மழவர் குடியைச் சேர்ந்த சில குழுவினர், சேரர்க்கும் அதியர்க்கும் பிற மன்னர்க்கும் மெய்காப்பாளர் ஆயினர். சேர மன்னன் 'மழவர் மெய்ம்மறை' என அழைக்கப்படு

---

*பதிற், 78, எட்டாம் பத்தின் பதிகம்.

†புறம், 46. ‡புறம், 126. §புறம், 174.

கிறன்.* அதியமான் 'மழவர் பெருமகன்' என அழைக்கப் படுகிறன்.† எந்த அரசனின் ஆணைக்கும் அடங்கி நடக்க முடியாத மழவர் குடியைச் சார்ந்த மற்றவர் தமிழ் நாட்டில் வடக்கே திருவேங்கட மலைவரையில் சுற்றித் திரியலாயினர்.‡ பிறகு, அவர்கள் சோழ நாட்டில் நிலையாகத் தங்கி வாழத் தலைப்பட்டனர். அவர்கள் வாழ்ந்த பகுதி மழநாடு எனப்பட்டது. மழவர்கள் அங்குப் பெருஞ் சிறப்போடு வாழ்ந்தனர். மழபாடி (மழவர்கள் பாடியமைத்துத் தங்கிய இடம்) என்ற பெயரும், இன்னும் அது போன்ற சில இடங்களின் பெயரும் அவர்களுடைய பெருமைக்கும் இன்றியமையாமைக்கும் சான்று பகர்வனவாகும்.

மழவர்கள் எல்லோரும் வீரத்திற் சிறந்தவர்களாக இருந்தனர். இதனல், மழவர் என்ற சொல் பொதுவில் வீரர் என்னும் பொருள் குறிப்பதாயிற்று.§ மழவர் என்பார் 'சிலவீரர்' என்பது நச்சினர்க்கினியர் உரை. இதை நோக்கும்போது 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றி மூத்த குடியினரான'$ தமிழ் வீரரைக் குறிக்கும் மறவர் என்ற சொல்லின் திரிந்த வடிவமே மழவர் என்பதோ என்ற ஐயம் நமக்கு எழுகிறது. சங்கப் பாடல்கள் மறக் குடியைத் தமிழ்நாட்டின் மிக்க பழங்குடி என்ற பொருளில் 'மூதில்' என வழங்குகின்றன. 'மூதிற் பெண்டிர்' எனப் புறப்பாட்டில் வரும் சொற்றெடருக்கு அதன் உரையாசிரியர் 'மூதிய மறக் குடியிற் பிறந்த பெண்டிர்' என்று உரையெழுதுகிறர்.¶ 'மூதில் மகளிர்-மறக்குடி மகளிர்'◁ என வருவதும் காண்க.

---

*பதிற், 21, 55. †புறம், 88, 90. ‡அகம், 61.
§மதுரைக் காஞ்சி - 395, 687-ஆம் வரிகள்-நச்சி, உரை.
$புறப்பொருள் வெண்பா மாலை, 2 : 14.
¶புறம், 19.
◁புறம், 297.

தமிழ்நாட்டின் தெற்குப் பகுதியில், மழவர்கள் என்பார் தொடர்ந்து ஆற்றல் மிக்கவர்களாகவே வாழ்ந்திருந்தனர். ஆனால், மழவர், மறவர் என்ற இரு சொற்களால் குறிக்கப்படுபவர்களை வேறுவேறானவர்கள் எனத் தமிழ் இலக்கியம் உணர்த்துகின்றது. அகநானூறு 35-ஆம் பாடலில் இந்த வேறுபாட்டை விளக்கும் குறிப்பொன்று வருகிறது. " நீண்ட கூரிய வேலை ஏந்திய குறும்படை மழவர்கள், தங்கள் நாட்டகத்தே புகுந்து ஆனிரைகளைக் கவர்ந்து சென்ற வெட்சி மறவர்களைத் தாக்கிச் சென்று போரில் வென்று, ஆனிரைகளை மீட்குங்கால் போரில் மிக்க வீரம் காட்டி இறந்த மறவர்கட்கு அவர்களை மறைத்த பதுக்கையில் நடுகல் இட்டுப் பீலி சூட்டித் துடிப்படுத்துத் தோப்பிக் கள்ளொடு ஆட்டுக் குட்டியையும் பலியாகக் கொடுத்துப் பதுக்கைக் கடவுளைப் பேணுதற்கு இடமாகிய கவர்த்த வழி "* என்பது அது.

இங்கு மழவரும் மறவரும் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டதாகக் கூறப்படுகிறது. இவ்வாறு சண்டையிட்டுக் கொண்டனர் என்று இருப்பினும், இவ் விரு சொற்களும், வீரத்தைக் குறிக்கும் 'மறம்' என்ற சொல்லிலிருந்து பிறந்தவை எனக் கொள்ளுவதற்குத் தடையொன்றும் இராது. தொல்காப்பியத்தின்படி ழகரமும் றகரமும் ஒரே வகை முயற்சியால் பிறக்கும் மெய்களே ; நாநுனி அண்ணம் ஒற்ற றகரமும், நாநுனி அணரி அண்ணம் வருட ழகரமும் பிறக்கும் என்ற இவ்வளவே வேறுபாடு.

மழவர் என்ற சொல்லுக்கு மற்றொருவகைப் பிறப்பு முறையும் கொள்ளலாம். இளமையென்ற பொருளில் 'மழ' என்னும் சொல் வரும் எனத் தொல்காப்பியர் கூறுகிறார்.† தமிழ்நாட்டு வீரர்கள் முதுமையில் இறத்தலைவிட

*அகம், 35 : 4-10.

†" மழவும் குழவும் இளமைப் பொருள "—சொல், 311.

இளமையிலேயே போர்க்களத்தில் மடிவதைச் சிறப்பாகக் கருதினர்கள். ஒருவன் போரில் அன்றி நோயால் இறந்து விட்டாலும், அவனுடலை வாளால் போழ்ந்து வீரமரணம் அளிப்பது வழக்கம் ஆகும்.* இளமை நீங்கி முதுமை வந்தவுடன் சாதாரண மனிதனே, அல்லது அரசனே தன் ஆற்றலிழந்துவிடுவான் என்ற கொள்கை ஆதிகாலத்தில் மக்களிடையே பரவியிருந்தது. அதனல், அவர்கள் குறிப்பிட்ட சில ஆண்டுகள் மன்னன் ஆட்சிசெய்த பின்பு, அம் மன்னனைக் கொன்றுவிடும் வழக்கமுடையவராயிருந்தனர். பிற்காலச் சேர மன்னர்களான சேரமான் பெருமாள்கள் இவ்விதமான கொலையிலிருந்து தப்புவதற்காகப் பன்னிரண்டு ஆண்டுகளே ஆட்சிபுரிந்து பின்பு அமைதியான முறையில் முடி துறந்துவிடுவது வழக்கம் என்று கூறப்படுகிறது. இவ் வுண்மைகளால், வீரர்கள்,—இளையர்—மழவர்—என அழைக்கப்பட்டதன் காரணம் இனிது விளங்குகிறது.

இளையர் என்ற பெயரும் சங்க இலக்கியத்தில் வருகிறது. திரு. சிவராச பிள்ளையவர்கள், இளையர் என்பாரைத் தனிவகைப்பட்ட ஒரு குடியினர் என்று கூறுகிருர்.† போர்ப் பயிற்சிபெறும் இள வீரர்களைக் குறிக்கவே இளையர் என்ற பெயர் எப்பொழுதும் வழங்கப்பட்டுவந்திருக்கிறது. உரம் மிக்க இளவீரர்கள் அளவற்றவர்களாகத் தமிழ் நாட்டில் இருந்தனர். வரலாற்று முறையாகவோ இலக்கிய முறையாகவோ குறிக்கப்பட்ட ஒவ்வொரு தலைவனிடமும் இவ் விளையர்கள் மெய்காப்பாளராக இலங்கினர். பெருந் தலைவர்களிடம் இவ் விளையர்கள் வேலை செய்துவந்தபடியால் அவர்கள் ஏவலாளர் அல்லது பணி செய்வோர் எனச் சில இடங்களில் குறிக்கப்பட்டுள்ளார்கள்.

---

*புறம், 93.

†The Chronology of the Early Tamils, p. 64.

ஆனால், மழவர்கள், கட்டுப்பாடு ஒன்றும் இல்லாத வர்கள்; ஆன் நிரைகளைக் கவர்தல், வழிப்போக்கர்களை மறித்து, இரக்கமின்றிக் கொன்று, அவர்களிடமுள்ள பொருள்களைக் கொள்ளையடித்தல்—இவற்றைத் தம் வாழ்க்கைத் தொழில்களாகக் கொண்டிருந்தவர்கள். "முனை யாத் தந்து முரம்பின் வீழ்த்த வில்லேர் வாழ்க்கை விழுத் தொடை மறவர்" (மழவர்)* என்பது காண்க. இவர்கள் அடிக்கடி போர் நிகழ்த்தி வெற்றியும் தோல்வியும் மாறி மாறி எய்திவந்தனர். ஆவியென்பான், உருவக் குதிரை மழவர்களாகிய இவர்களைப் போரில் வென்று துரத்தினன்.† இவர்கள் திருவேங்கட மலைப்பகுதி வரையிலும் திரிந்து தங்கள் கொள்ளைத் தொழிலை நடத்திவந்தனர். அம் மலையை ஆண்டுவந்த கள்வர் தலைவன் புல்லியென்பான் அவர்களை அடக்கினன்.‡

மழவர்கள் எல்லோருமே ஆறலைகள்வர்கள் என்பதற் கில்லை. அவர்களில் பெரும்பாலோர் அரசரிடம் தலைமை சால் வீரராய் அமர்ந்திருந்தனர். அதியன், 'மழவர் பெரு மகன்' என் றழைக்கப்படுதலினின்றும் இது தெரிகிறது.§ சேரர்களிடமும்,$ ஓரியினிடமும்¶ இவர்கள் வீரர்களா யிருந்தனர். இம் மழவர்களிடமுள்ள குதிரைகளைப்பற்றி முன்னரே கூறப்பட்டது.ꟷ

ஊர் ஊராகத் திரிந்துகொண்டும், பிற அரசரிடம் ஊதி யம் பெற்றுப் பணிசெய்துகொண்டு மிருந்த மழவர்கள் தமக்கென ஒரு சிறு நாடு உடையராயிருந்தனர் என்ற குறிப்பும் சங்க இலக்கியத்திற் காணப்படுகிறது. மழவர் களை யடக்கிய புல்லி, மழவர் புலத்தையே வணங்கச் செய் தவனாகப் புகழப்படுகிறான்.‖ எனவே, மழவர்களின் ஆட்சி

---

*அகம், 35. †அகம், 1. ‡அகம், 61.
§புறம், 88. $பதிற், 21, 55. ¶நற், 52.
ꟷஅகம், 1. ‖அகம், 61.

யில் ஒரு நாடு இருந்தமை புலனாகிறது. எனவே, சேரநாட்டிலும், தமிழகத்தின் வடக்கெல்லை வரையுள்ள பிற பகுதிகளிலும் சுற்றித் திரிந்துகொண்டிருந்த மழவர்கள் இறுதியில் அமைதியுற்றுச் சோழ நாட்டின் ஒரு பகுதியில் நிலைத்து வாழத் தலைப்பட்டார்கள் எனலாம்.

**5. பூழியர் (பூழியர் கோ இளஞ்சேரல் இரும்பொறை):**

"பூழியர்களுடைய சிறிய வெண்மை நிறம் உள்ள தலைகளையுடைய ஆடுகளின் மந்தை பரவி நிற்பதுபோல், மீன்களை யுண்ணும் குருகுகள் நிறைந்து நிற்கின்ற, தாழைப் புதர்கள் அடர்ந்த பெருந்துறை.*

"முல்லைப் பூவால் தொடுத்த கண்ணியை யணிந்த கோவலர்கள், தங்களுடைய ஏராளமான பசுக்களைப் புல் நிறைந்த அகன்ற இடத்தில் மேயவிட்டுக் கற்கள் நிறைந்த காட்டிடைச் சென்று கதிர் பொருந்திய மணிகளைப் பெறுதற்கு இடமான செருப்பு மலைக்குரிய பூழியர்தலைவன்.†

'பூழியர் மெய்ம்மறை (கவசம்).‡

'பூழியரின் அழகிய ஆட்டு மந்தையைப்போல, மாரிக் காலத்தின் காலை நேரத்தில் கரடிக் கூட்டங்கள் மேய்கின்ற மலை வழியாகச் செல்லும் நீண்ட பாதை'§

இவை, **பூழியரைப்** பற்றிச் சங்க இலக்கியத்தில் வரும் குறிப்புக்கள். 'பூழியர்' என்னும் சொல் யாண்டும் பன்மையிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆகவே, இவர்களை ஒரு தனிக் குடியினர் என்று சொல்ல முடியாவிட்டாலும் ஒரு குழுவினர் என்று கூறலாம். தமிழ் நாட்டின் பன்னிரு பகுதிகளுள் பூழிநாடும்$ ஒன்றாகும். 'பூழி நாடு' என்ற நாட்டின் பெயர் மக்களுக்கு அமைந்ததா, அன்றிப் 'பூழியர்' என்ற மக்கட்குழுவின் பெயர் நாட்டிற்குப்

*குறுந், 163 : 2-3. †பதிற், 21 : 20-23.
‡பதிற், 90 : 27. §நற், 192 : 3-5.
$பதிற்று, நாலாம் பத்தின் பதிகம் 6-ஆம் வரி.

பெயராக அமைந்ததா என்பதைத் திட்டமாகக் கூறமுடிய வில்லை. மேலே காட்டிய பாடல்களால், பூழியர் ஒரு குறிப் பிட்ட நாட்டில் நிலையாக வாழ்ந்தவர் என்றும், சேர மன்ன ரோடு தொடர்பு கொண்டவர் என்றும் அறிகின்றோம்.

பசுக் கூட்டங்கள், ஆட்டு மந்தைகள் ஆகியவற்றை மேய்த்து வளர்த்து அவர்கள் தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தார்கள். அவர்களுடைய ஆட்டு மந்தை மிக்க புகழ் பெற்றதாகும். அவர்கள் வாழ்ந்த முல்லை நிலத்தில் சிறு குன்றுகளும், ஆங்காங்கு வளமற்ற பாலைப் பகுதிகளும் இருந்தன. குன்றுகளுக்குப் பக்கத்தில் பல விலையுயர்ந்த மணிகள் கிடைத்தன. செருப்பு மலை என்பது அவர்களுக் குரிய பாதுகாவலான அரணாகும். சேரர் படையில் தொண்டாற்றிய பல குழுவினருள், மழவரைப்போல இவர்களும் சிறப்புடைய ஒரு குழுவினராவர்.* இவர் களில் பலர், பல்யானைச் செல்கெழுகுட்டுவன் காலத்தில், சேரர் சேனையில் இருந்தனர்.

களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் சிறுவனாயிருந்த போது, நன்னன் என்பான், பூழியர் நாட்டை வென்று தன்னடிப்படுத்தான். அகநானூறு 199-ஆம் பாடல், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் நன்னனோடு பொருது பெற்ற வெற்றியைப் புகழ்கிறது. அதில், "இழந்த நாடு தந்தன்ன" என்று வருதலால்,† பூழியர் நாட்டை நன்னன் கைப்பற்றியிருந்த செய்தி அறியப்படுகிறது. பதிற்றுப்பத்து நான்காம் பத்தின் பதிகம், நன்னனுக்கு உரிய வாகை மரத்தொடு‡ கடம்ப மரத்தையுப்§ சேரன் வெட்டி வீழ்த்தினான் என்று தெளிவாய்க் கூறுகிறது. கடம்ப மரம் இருந்த இடம் கடம்பின் பெருவாயில் எனப் பட்டது. வாகை மரம் இருந்த இடம் வாகையென்றே

*பதிற், 21 : 24.

†அகம், 199 : 23. ‡வரி, 7. §வரி, 9.

அழைக்கப்பட்டது. கடற்கரையி லிருந்தமையால், அவ் விடம் 'வாகைப் பெருந்துறை' என்றழைக்கப்பட்டது.* இந்த நன்னன், 'பொன்படு கொண்கான நன்னன்' எனக் கூறப்படுதலால், பூழிநாடே கொண்கானம் ஆகும் என நாம் கூறிவிடலாம்.† செல்வக் கடுங்கோ வாழியாதன் என்ற சேரமன்னன் பூழியரோடு நெருங்கிய உறவு கொண்டு வாழ்ந்தமையால் 'பூழியர் பெருமகன்' என்றே அழைக்கப்பெற்றுள்ளான்.‡ பதிற்றுப் பத்தின் எட்டாம் பத்தைக்கொண்ட பெருஞ்சேரல் இரும்பொறை 'பூழியர் மெய்ம்மறை'§ என்று விளிக்கப்படுகிருன். பூழியரைப் பாதுகாப்பவன் என்பது இத் தொடரின் பொருளாகும். பதிற்றுப் பத்தின் ஒன்பதாம் பத்தில்§ இளஞ்சேரல் இரும்பொறை 'பூழியர்கோ' (பூழியரின் தலைவன்) என விளிக்கப்பெற்றுள்ளான். திவாகர காலம் வரையில் சேரர் களைப் பூழியர் எனக் கருதிவந்துள்ளனர். ஆனல், பிற் காலத்தில் பாண்டியர்க்கும் பூழியர் என்னும் பெயர் வழங்கலாயிற்று என்பதைச் சேக்கிழாரின் பெரிய புரா ணத்தால் அறிகிறோம்.

6. வில்லோர், வில்லோர் பெருமகன் கொற்றன், (பிட்டன், பிட்டங் கொற்றன்):

வில்லோர் என்ற சொல் பொதுவாக வில்லேந்திய வீரர்களைக் குறிக்குமாயினும் தங்கள் கொடியில் வில்லுரு வம் பொறித்துக்கொண்ட சேரரையே அது சிறப்பாகக் குறிக்கின்றது. பெருமகன் என்ற சொல், வில்லோர் என் னும் சொல்லோடு இணைக்கப்பட்டிருத்தலால், வில்லோர் என்பது ஒரு குடியினரைக் குறிக்கிறது என்பதில் ஐய மில்லை. இது சேரர் குடியின் ஒரு கிளைக்குடி எனலாம்.

---

*அகம், 199 : 19. †வேளிர் வரலாறு-பக்கம், 65.
‡புறம், 387 : 28. §பதிற், 73 : 13
§84 : 6.

இக் குடியினர் தங்களது பெயருக்கேற்பத் தலைமுறை தலைமுறையாகச் சிறந்த வில் வீரர்களாக விளங்கினர். 'வில்லோர் பெரும' எனப் பிட்டங்கொற்றன் விளிக்கப்படுகிறான்.* இவன் அரணமைந்த குதிரை மலைக்குத் தலைவன். இங்கே வாழ்ந்துவந்த குறவர்கள் தினை விளைத்து, விருந்தினரை எதிர்கொண்டழைத்துச் சென்று, மரை ஆனினின்று கறந்த நுரைகொள் பாலில் இட்டுச் சமைத்த தினைச் சோறும், மான் இறைச்சியும், அகன்ற வாழையிலையில் இட்டு உபசரிப்பர் என்பதால் அவர்களின் அரசன் ஈகைப் பண்பு நிறைந்தவன் என்பது இனிதின் விளங்கும்.

“ஊராக் குதிரை(குதிரைமலை)க் கிழவ! நறை நாரினால் தொடுத்த வேங்கைமலர்க் கண்ணியை அணிந்த, வடித்த அம்பொடு வில் ஏந்திய வில்லோர்க்குத் தலைவ! உன் கைகளால் பலர்க்கும் ஈயும் வண்மைக் குணமும், கடிதிற் செல்லும் குதிரையும் உடைய கொற்றவ! ஈயாத மன்னரைத் தலை குனியச்செய்யும் உன்னுடைய குற்றமற்ற நிலையான புகழைப் பொய்யாத செந் நாவுடைய புலவர்கள், இத் தமிழக முழுதும் கேட்குமாறு அன்புகொண்டு பாடுகின்றார்கள் என்று மக்கள் சொல்கிறார்கள்” எனப் பிட்டங்கொற்றன் புகழப்படுகின்றான்.†

இப் பாடலில், கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் என்ற புலவர் பிட்டங்கொற்றனது எளிய வாழ்வையும், அவனைச் சார்ந்தோர்களின் வீரத்தையும், அவனுடைய வள்ளன்மையையும் நன்கு வெளிப்படுத்தியுள்ளார்.

இப் பாடலில் இவன் 'கொற்றன்' என விளிக்கப்பெற்றுள்ளான். அகநானூறு 143-ஆம் பாடலில்‡ 'பிட்டன்' என இவன் குறிக்கப்பெற்றுள்ளான்.

“பிறரால் பழிக்கப்படாத, விரும்பத்தக்க, போரை நடத்துபவனும், வானவனின் (சேரனின்) படைத் தலை

*புறம், 168 : 16. †புறம், 168 : 14-22. ‡வரி, 12.

வனும், தன்னை விரும்பி வரும் புலவர்க்கும் இரவலர்க்கும் நல்ல அணிகளை வாரி வழங்கும் பண்புடையவனும் ஆகிய, தப்பாத வாளும் புனைந்த கழலும் உடைய பிட்டன் " என்பது அகநானூறு.*

சேரர் குடியைச் சார்ந்தவனாகையால் இவன் அவரது சேனைக்குத் தலைமை தாங்கியதில் வியப்பில்லை. பின்வருவனவற்றால், பெருஞ்சேரல் இரும்பொறையின் சேனைக்கு இவன் தலைவனாயிருந்தமை தெளிவாகும். மேலேகண்ட இரு பாடல்களின் கீழும், புறம், 168, 170-ஆம் எண் உள்ள பாடல்களின் கீழும் இவனது பெயர் பிட்டங்கொற்றன் எனவே குறிக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தின்படி பிட்டங்கொற்றன் என்பது பிட்டனின் மகனான கொற்றன் என்றே பொருள்படும். இப் பாடல்களின் கொளுக்கள், இவையெல்லாம் ஒருவனைப் பற்றியனவே என நாம் கொள்ளவேண்டும் என்று கூறினாலும், நாம் அங்ஙனம் கொள்ளுவதற்கு இல்லை. அகநானூறு 143-ஆம் பாடலில் கொற்றனின் தந்தையான பிட்டன் குறிக்கப்பெற்றுள்ளான் எனக் கொள்ளுதல் வேண்டும். புறம், 168-ஆம் பாடலில் கொற்றன் என்ற விளி உள்ளமையால், அது—பிட்டனின் மகனான கொற்றன்—பிட்டங்கொற்றனைக் குறிப்பிடுவதாதல் வேண்டும். அப் பாடல்களின் கொளுக்கள் இம்முறையில் மாற்றி எழுதப்படல் வேண்டும்.

பிட்டங் கொற்றனுக்கு உரிய குதிரைமலை, சேரல் குடியோடு உறவுடைய அதியனின் மகன் எழினிக்குரிய இடமாகவும் இருந்தது என்பதை நாம் கவனித்தல் வேண்டும்.

" கூவிளம் பூவால் தொடுத்த கண்ணியையும், வளைந்த பூண்களையும் அணிந்தவனும், கூர்மையான வேலை ஏந்தி நிற்பவனும், குதிரைமலைக் குரியவனுமாகிய எழினி " என எழினி புகழப்பட்டுள்ளான்.† பிட்டனுக்குரிய கண்ணி

*அகம், 143 : 10-12. †புறம், 158 : 8-9.

வேங்கை. எழினியின் கண்ணி கூவிளம். இதிலிருந்து, அக் காலத்துப் பெரிய வீரர்களுள் ஒவ்வொருவரும் ஒரு சிறப்பான கண்ணியை அணிந்திருந்தனர் என்பது தெரிகிறது.

பிட்டனும் எழினியும் இக் குதிரைமலையைத் தத் தமக்கே உரியதாகக் கூறுவது எங்ஙனம்? போர்களில் வென்று பெறும் பொருள்களும் ஊர்களும் நிலையாக ஒருவரிடம் இருப்பதில்லை என்பது இங்குத் தெளிவாகிறது. குதிரைமலை சேர நாட்டில் உள்ளது. அஃது அதியனின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. பெருஞ்சேரல் இரும்பொறை தகடூரை முற்றுகையிட்டு அதியமானைக் கொன்று குதிரை மலையைக் கைப்பற்றித் தன் படைத்தலைவனை பிட்டனுக்கு அதை வழங்கினான்.* பிட்டனுக்குப் பின், அவன் மகன் கொற்றன் அம் மலையை ஆண்டான். அதியனின் மகன் எழினி அம் மலையைத் திரும்பக் கைப்பற்றினனுதல் வேண்டும். தகடூரையும், அதியனது ஆட்சிக் குட்பட்டிருந்த பிற பகுதிகளையும் பற்றி அவன் முதலில் கவலை கொள்ளவில்லை எனல் வேண்டும். ஆனால், பின் ஒருகால் அவனது ஆசை, தகடூரையும் வெல்லத் தூண்டியிருக்கலாம்; எனவே, அதனையும் வென்று கைப்பற்றி யிருக்கலாம். அவனுடைய நாடு வளம் உடையதாகியது. அவன் தன்னுடைய நீதி முறையான ஆட்சியினால் புகழ்பெற்றான். ஆனால், இந்த வாழ்வு நெடுநாள் நீடித்திருக்கவில்லை. தகடூர், பகை மன்னர்களால் தாக்குண்டது. எழினி போர்க்களத்தில் இறந்தான். அவன் இறந்தமை குறித்து வருந்திய பலரில் அரிசில் கிழாரும் ஒருவர்.† குதிரைமலை பிட்டங் கொற்றனுக்கும் எழினிக்கும் உரியதாகக் கூறப்படுகின்றமைக்கு இவ்வாறு விளக்கங் காணலாம். இவ்வாறு கொள்ளாமல், பெருஞ்சேரல் இரும்பொறை அதியனோடு நிகழ்த்

*பதிற்று, எட்டாம் பத்தின் கொளுவைக் காண்க. †புறம், 230.

த்திய போரிலேயே தன் தந்தையோடு எழினியும் இறந்து பட்டான் என்று கொண்டால், அதியன் இருந்தபோதே எழினி அவனது பிரதிநிதியாகக் குதிரைமலையை ஆண்டு வந்தானுதல் வேண்டும்.

**7. கொங்கர் (கொங்கர் கோ இளஞ்சேரல் இரும்பொறை) :**

இளஞ்சேரல் இரும்பொறை என்ற சேர மன்னன் பதிற்றுப்பத்து 88-ஆம் பாடலிலும்,* 90-ஆம் பாடலிலும்† 'கொங்கர்கோ' என விளிக்கப்பெறுகின்றுன். இதை நோக்கும்போது கொங்கர் என்னும் குடியினர்க்கு இவன் தலைவனுக விளங்கினுன் என்பது தெரிகிறது. கொங்கன் என்பது சேரனின் பட்டப் பெயராகத் திவாகரத்திற் கூறப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்து 22-ஆம் பாடலில் பல் யானைச் செல்கெழு குட்டுவன் பின்வருமாறு புனைந் துரைக்கப்பெற்றுள்ளான் :

" கொங்கர் குடியைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்த நாட்டிற்குக் கொங்கர் நாடு என்று பெயர். அஃது அவர்களுக்கே உரிய நாடு. அங்குத் தண்ணீர்ப் பஞ்சம் மிகுதியாகும். அந் நாட்டு மக்கள் இரும்புக் கணிச்சியால் பாறைகளை உடைத்து, நீர் ஊற்றுக் காணும் வரையில் நிலத்தை மிக ஆழமாகத் தோண்டுவர் ; சிறிதளவு நீர் ஊற்றெடுத்தவுடன் மிக நீண்ட கயிற்றின் ஒரு நுனியில் நீர் முகக்கும் சிறு கலத்தைக் கட்டி மொள்ளுவர். மொள்ளும் நீரைப் பருகுவதற்குப் பசுக்கள் ஆவலொடு சூழ்ந்து மொய்த்திருக்கும். கொங்கர்களின் முக்கியமான தொழில் ஆக்களை வளர்த்தலே. ஆக்களுக்குச் சிறந்த இக் கொங்கர் நாட்டை வேலேந்திய சேனையையுடைய அஞ்சத்தக்க தோற்றமுள்ள சேரமன்னன் குட்டுவன் கைப்பற்றினுன்."‡

பதிற்றுப்பத்து 77-ஆம் பாடல், கொங்கர்களிடம் ஏராளமான ஆக்கள் இருந்தனபோல் பெருஞ்சேரலிரும்

---

*வரி, 19. †வரி, 25. ‡பதிற், 22 : 12-16.

பொறையின் தானையிலும் ஏராளமான யானைகள் இருந்தன என்று கூறுகிறது.

> "சேண்பரல் முரம்பின் ஈர்ம்படைக் கொங்கர்
> ஆபரந் தன்ன செலவிற்பல்
> யானை காண்பல்அவன் தானை யானே"

என்பது பதிற்றுப்பத்து, 77-ஆம் பாடல்.*

ஆய் என்ற மன்னன் கொங்கர் நாட்டின்மீது படையெடுத்துக் கொங்கரைத் தோற்கடித்து மேலைக் கடற் பக்கம் துரத்தினன் எனப் புறம், 130-ஆம் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

"ஆய் மன்னனே, உன்னையும் உன் மலையையும் பாடி வரும் புலவோர்க்கு நீ அளிக்கும் யானைகளை எண்ணினல், நீ கொங்கரைக் குடகடற் பக்கம் ஓட்டிய ஞான்று அவர்கள் போர்க்களத்தில் போட்டுவிட்டுச் சென்ற வேல்களை விட மிகப் பலவாகும்."†

கொங்கர்கள் ஆய் மன்னனுக்குத் தோற்ருேடிய போது தங்கள் வேல்களையும் போட்டுவிட்டு ஓடினர் என்பது இப் பாடலின்மூலம் தெரிகிறது. இதனல் கொங்கர்கள் போர்செய்யும் ஆற்றலும் உடையவர்கள் என அறிகிருேம்.

'உள்ளி விழவு' என்றதொரு விழா அவர்களாற் கொண்டாடப்பட்டுவந்தது என்றும், அவ் விழாவின் போது அவர்கள் தங்கள் இடுப்பில் மணிகளைக் கட்டிக் கொண்டு தெருவில் கூத்துக்களை யாடுவர் என்றும், அதனல் அங்குப் பேரொலி எழும் என்றும் மருதன் இளநாகனர் தெரிவிக்கிருர். அகநானூறு 368-ஆம் பாடல் இவ் வுள்ளி விழாவைப் பற்றிக் கூறுகிறது.

"உள்ளி விழாவில், கொங்கர்கள், தங்கள் இடுப்பில் மணிகளைக் கட்டிக்கொண்டு தெருக்களில் ஆடுதலால் உண்டாகும் ஆரவாரம்போலத் தலைவியின் களவுபற்றிய செய்தி

---

*வரி, 10-12. †புறம், 130 : 5-7.

பலர் வாய்ப்பட்டு அலராகிவிட்டது" என்று தோழி கூறுகிருள்.*

நக்கீரரின் இறையனுர் அகப்பொருள் 16-ஆம் சூத்திர உரையின்படி, "அவை மதுரை ஆவணி அவிட்டமே, உறையூர்ப் பங்குனி உத்திரமே, கருவூர் உள்ளிவிழாவே என இவையும், இவை போல்வன பிறவும்" என்பதால் மதுரையில் ஆவணி அவிட்டத் திருவிழாவும், உறையூரில் பங்குனி உத்திரத் திருநாளும்போல், உள்ளி விழா என்பது சேரரால் அவர்களது தலைநகரான கருவூரில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டதாகும். கொங்கர் இவ் விழாவைக் கொண்டாடினர் எனின், அவர்களும் சேரநாட்டைச் சேர்ந்தவர்கள் என்றே நாம் கொள்ளவேண்டும். கொங்கர் என்பதைச் சேரரின் பெயர்களுள் ஒன்ருகத் திவாகரம் கூறுகிறது என்பது முன்பே குறிக்கப்பட்டது.

பசும்பூண் பாண்டியன் கொங்கர் நாட்டைக் கைப் பற்றத் தன் படைத்தலைவன் அதிகனை அனுப்பியதாகத் தெரிகின்றது. அப்போது நிகழ்ந்த போரில் அதிகன் தனது யானையோடு இறந்துபட்டான். அதுகண்டு மகிழ்ந்த கொங்கர் பேராரவாரம் செய்தனர்.†

அகநானூறு 162-ஆம் பாடல், இவ் வதிகனும் வண்மை யுடையவன் எனக் குறிப்பிடுகிறது. அவன் பசும்பூண் பாண்டியனின் படைத் தலைவன் என்பதும் அதில் குறிப் பிடப்பட்டுள்ளது. தகடூரை யாண்ட அதிகமான் அஞ்சி இவன் அல்லன். ஏனெனில் அதிகமான் அஞ்சி, சேரமான் பெருஞ்சேர லிரும்பொறையால் தோற்கடிக்கப்பட்டு மாண்டவன்.

"வாய்மொழி யுடையனுய்த் தன்னுடைய புகழை நாடெங்கும் பரப்பித் தன்னிடம் பரிசில் பெறவந்தோரின் ஆவல்களைத் தீர்ப்பதினின்றும் தவறியறியாத கழல்தொடி

---

* அகம், 368 : 16-19. † குறுந், 393 : 4-6.

அதிகன், பழங்கள் மிகுந்த பலாமரங்கள் நிறைந்ததும், வேங்கை மரங்கள் அடர்ந்ததும் ஆகிய தன் மலை அழகு பெறுமாறு, வில்லேந்திய சேனையையுடைய பசும்பூண் பாண்டியனுடைய களிறுகளின் வரிசைக்கு நடுவே நிறுத்திய வெற்றிக் கொடியைப்போல......"* என்பது காண்க.

ஆயினும், அகநானூறு 253-ஆம் பாடலில் பசும்பூண் பாண்டியன் கொங்கரைப் போரில் வென்று துரத்தி, நாடுகள் பலவற்றைக் கைப்பற்றினன் என்று கூறப்பட்டுள்ளது.

" வாடாத மலர்மாலைகளையணிந்த கொங்கரை வென்று நாடு பலவற்றையும் கைப்பற்றிய பசும்பூண் பாண்டியன், தனது வெற்றியைப் பொன்மலிந்த பெரிய நகராகிய மதுரையில் கொண்டாடியபோது எழுந்த இனிய இசையையுடைய ஆரவாரத்தைவிட அலர் பெரிதாகிவிட்டது ".† என்பதை நோக்குக.

கொங்கு நாட்டில் வாழ்ந்துவந்தமையால் கொங்கர் என்று பெயர் பெற்ற அவர்கள் தங்களைச் சேர மன்னர் வென்று அடக்குவதற்குமுன், தங்களுக்கென ஒரு தலைவன் இல்லாமல், ஒருவருக் கொருவர் அடிமையாகாமல் இருந்து வந்தனர். பொதினிமலைத் தலைவன் ஆயும், கூடலின் தலைவன் பசும்பூண் பாண்டியனும் பன்முறை முயன்றும் அவர்களை அடக்கித் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவர முடியவில்லை. இறுதியில், பல் யானைச் செல்கெழு குட்டுவன் அவர்களுடைய நாட்டின் சில பகுதிகளைக் கைப்பற்றினன்.‡ இளஞ்சேரல் இரும்பொறை, அவர்கள் நாடு முழுதையும் கைப்பற்றித் தன்னாட்சியின்கீழ் அவர்களை வாழச் செய்தான். அதனால்தான் அவன் 'கொங்கர்கோ' என அழைக்கப்பட்டான்.§

---

*அகம், 162 : 17-22. †அகம், 253 : 3-7.

‡பதிற், 22 : 15. §பதிற், 88 : 19 ; 90 : 25.

கோசர் என்பார் கொங்கு நாட்டில் குடியேறி வாழ்ந்தவராதல் வேண்டும்: சிலப்பதிகாரம் இவர்களைக் 'கொங்கிளங் கோசர்' எனக் குறிக்கிறது.* தேன், அல்லது கள் எனப் பொருள்படும் கொங்கு என்பதன் அடியாகக் கொங்கர் என்ற பெயர் ஏற்பட்டது எனலாமா?† அல்லது மாமரம் என்ற பொருளையுடைய கொக்கு என்ற சொல் கொங்கு என மெலித்தல் விகாரம் பெற்று, இந் நாட்டின் பெயராகியிருக்குமோ?‡ கொங்கு நாட்டில் கிடைக்கும் மாம்பழங்களின் சிறப்பால் அந் நாட்டிற்கு அப் பெயர் ஏற்பட்டதா? இவற்றை நன்கு ஆராய்தல்வேண்டும்.

கொங்கர் என்ற பெயர் நம் நாட்டு மிகப் பழங் குடிகளின் இயல்பான வரலாற்றின் ஒரு காட்சியை நம் கண் முன் நிறுத்துகிறது. முதன்முதலில் இப் பெயர் ஒரு குடியின் பெயராகத் தொடங்குவது காணலாம். இக் குடியினர் ஓரிடத்திலும் நிலையாய்த் தங்காமல் ஊர் ஊராகச் சுற்றித் திரிகின்றவர். இவர்கள் ஒரு சமயம் குட கடற்கரைப் பக்கம் துரத்தப்பட்டனர் என்றபோது அவர்கள் சென்றடைந்த இடம் இப்போது கொங்கு நாடு எனக் குறிக்கப்படும் அவ் விடமாகாது. இப்போதைய கொங்கு நாடு, உள் பகுதியில் உள்ளது.§ இப் பகுதியில் அவர்கள் குடியேறிய போது, கொங்கு என்ற பெயர் குடியைக் குறிப்பதை விட்டு, அந் நாட்டில் வாழும் எல்லா மக்களையும் குறிப்பதாயிற்று.

---

*உரைபெறு கட்டுரை : 2.

†'கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி' - மலர்களில் தேனைத் தேடியுண்ணும் வாழ்க்கையையுடைய, அழகிய சிறகுகளைப் பெற்ற வண்டே! (குறுந்), 2.

‡கொக்கின் தீம்பழம் - மாமரத்தின் தீஞ்சுவையுடைய பழம் (குறுந்), 164 : 2.

§கோயம்புத்தூர், சேலம், மைசூரின் ஒரு பகுதி.

8. குறவர் (குறவர் பெருமகன் ஏறை) :

"தனக்குச் சிறந்தோர் தனக்குத் தவறிழைத்தால் அதைப் பொறுத்தலும், மற்றவர்கள் வறுமையால் வாடுவது கண்டு தான் நாணுதலும், படையிடத்துப் பிறர் பழிக்கப் படாத வலியுடையனாதலும், அரசுடைத்தாகிய அவைக் களத்தில் மற்றவரைவிட மேம்பட்டு நடத்தலும் ஆகிய உயர்ந்த பண்புகள், காந்தட்பூக் கண்ணியையும், கொல்லும் வேலினையும், வில்லைப் பூரணமாக வலித்தலால் அகன்ற மார் பினையும், வானத்தில் ஊர்கின்ற மேகக் கூட்டங்களைத் தனது உயரத்தால் தடுத்து நிறுத்துகின்ற வளமிக்க மலை யையும் உடைய குறவர் தலைமகன் ஏறைக்கே பொருந்து வன."*—குறவர் பெருமகன் ஏறை இவ்வாறு புறநானூற் றில் புகழப்படுகின்றான்.

குறவர் என்ற பெயர் பொதுவாக மலைப் பகுதிகளில் வாழும் மக்களைக் குறிக்குமாயினும், ஏறை என்பான் 'குறவர் பெருமகன்' என அழைக்கப்படுதலால் குறவர் என்பது ஒரு குடியைக் குறிக்கும் பெயராகப் பயன்படுத் தப்பட்டிருக்கிறது என்பது தெளிவு. பிற்காலத்துக் குற வர்கள், இக் குடியினரின் வழிவந்தவர்கள்தாமோ என்ற ஐயம் எழுகின்றது. பிற்காலத்துக் குறவர்கள் மதிப்பும் சிறப்பும் இல்லாத வாழ்வையுடையவர்கள். முதலில் சிறப் பும் வீரமும் உடையதாய் இருந்த குடி காலப்போக்கில் தாழ்வுற்று மங்குதல் புதுமையன்று. நாட்டு வரலாறு களும் மக்கள் வரலாறுகளும் இவ்வகையான தாழ்வுக்குப் பல சான்றுகள் தருகின்றன. குறவர் குடியின் தலைவனாகச் சங்க இலக்கியத்திற் குறிக்கப்படுபவன் 'ஏறைக்கோன்' என்பவனாவான். இப் பெயரின் பொருள் யாது? ஏறை என்பது குறவர் குடியின் கிளைக்குடியைக் குறிக்கும் பெயரோ? இத் தலைவன் 'ஏறை' எனக் கூறப்படுகின்றான்.

*புறம், 157 : 1-8 ; 13.

ஏறை யென்பது மலை அல்லது குன்றின் பெயரோ? அவ்வாறாயின், அவன் ஏறை எனக் குறிக்கப்பெற்றிருக்க மாட்டான். ஏறு என்பது எருதையும் குறிக்குமாதலின் இக் கிளைக்குடி எருதை அடையாளக் குறியாகப் பெற்றிருக்குமோ?

குறவர் என்னும் சொல் குன்று என்பதிலிருந்தே தோன்றியிருத்தல் வேண்டும். மலைப் பகுதிகளை யாண்டு வந்த சேரர்களோடு குறவர்க்குத் தொடர்பு உண்டு எனலாம். **ஏறைக்கோன்** என்ற தலைவன், மற்றவர்க்கில்லாத பல சிறந்த பண்புகளைப் பெற்றிருந்தான் எனக் கூறப்பட்டுள்ளான். "அவன் தனக்குச் சிறந்தார் செய்த பிழைகளைப் பொறுத்துக்கொள்வான்; ஏழைகள் எவ் வினத்தாராயினும் எச் சாதியாராயினும் அவர்தம் செயலறவு கண்டு நாணம் கொண்டு அவர்கட்கு உதவி செய்வான்; போர்களில் கூட அறந்தவறி ஒழுகமாட்டான். அரசரின் அவையில் மிக்க மதிப்புடையவனாயிருப்பான்."* காந்தள் கண்ணி அவனது தனிப்பட்ட கண்ணி என்று அறிகிறோம். பெரிய மன்னர்களாலும், மன்னர்களாதற்குத் தகுதியுடையோராலுமே தனிப்பட்ட சிறப்புக் கண்ணிகள் அணியப்படும்.

## 8. சோழ பாண்டிய நாடுகளில் இருந்த, சோழ பாண்டியரல்லாத பிற குடிகள்

### 1. பரதவர் (பரதவர் கோமான் மத்தி):

*பரதவர்களில்* இரு வகுப்பினர் சங்க இலக்கியத்தால் அறியப்படுகின்றனர். மீன் பிடிப்பதைத் தம் தொழிலாகக்கொண்டு கடற்கரையில் வாழ்ந்தவர்கள் ஒரு வகுப்பினர்; அவர்கள் 'நெய்தல் நிலமாக்கள்' எனப்பெற்றனர்.†

---

*புறம், 157. †நச்சினார்க்கினியர் உரை-தொல்-பொருள்: 20.

"நீல மணிபோல மலரும் நீல நிறப் பூக்களையுடைய முள்ளிச் செடிகள் நிறைந்த மணல்பரந்த கானல் நிலத்தில் வாழும் பரதவர்" என மதுரைக் காஞ்சி ஒரு வகைப் பரதவரைப் பற்றிக் கூறுகிறது.* அவர்கள் தங்களுக்கென ஒரு தலைவனைக் கொண்டு அவனுக்கு அடங்கி வாழ்ந்தவர்களாகக் காணப்படாமையின் அவர்களைப் பற்றி நாம் ஈண்டு ஆராயவேண்டுவதில்லை.

ஊன் பொதி பசுங்குடையார் என்னும் புலவர், சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னியின் வெற்றிகளைப் பற்றிக் கூறும்போது, 'தென் பரதவர் மிடல் சாய, வடவடுகர் வாளோட்டிய.........திருந்து வேல் தடக்கை.........சோழன்" எனத் தென்றிசையில் வாழ்ந்த பரதவரையும் வடதிசையில் வாழ்ந்த வடுகரையும் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.†

"பகைவர்கள் உளங்கலங்கும் வண்ணம் அவர்கள் மேற்சென்று அவர்களை அஞ்சும்படி தாக்கும் பெருவலிமையும், புலவு நாறுகின்ற வில்லும், கொழுத்த ஊனொடு கலந்து சமைத்த சோறும், கூவை யென்னும் கிழங்கும் ஆகிய உணவும் உடையராய் ஒன்று மொழியோடு ஒலியிருப்பினையுடைய தென் பரதவரின் போர் ஏறே" என மாங்குடி மருதனார், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக் காஞ்சியில் புகழ்கிறார்.‡ இந்தப் பரதவர்கள் ஒரு தனி இனத்தவர் ஆவர். இவர்கள் வில் வலிமைக்கும் வாய்மொழி காக்கும் பண்புக்கும் பேர் போனவர்கள். இவர்கள் எப்பொழுதும் சுறுசுறுப்பாகச் செயலாற்றியவண்ணம் இருந்தவர்கள். இவ்வாற்றால் இவர்கள் பாண்டிய நாட்டில் வாழ்ந்தவர்கள் என்பது அறியப்படுகிறது.

---

*மதுரைக், 96-97.

†புறம், 378 : 1-3 ; 5. ‡மதுரைக், 139-144.

பரதவர் வாழ்ந்த பல்வேறு தெருக்களைப் பற்றிப் பெரும்பாணாற்றுப்படை பேசுகிறது: "பரதர் மலிந்த பல் வேறு தெரு"* (இங்குப் பரதர் என்பதற்குப் பரதவர் என்றே நச்சினார்க்கினியர் உரையெழுதி யுள்ளார்). அவர்கள் பழங்களின் சாற்றிலிருந்து பக்குவப்படுத்தப் பட்ட கள்ளின்மீது விருப்பமுடையவர்கள் என்பதைச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது: "பழம்படு தேறல் பரதவர் மடுப்ப",† "தென்பரதவர் போர் ஏறே"‡ என்ற மதுரைக் காஞ்சி வரிக்கு உரை யெழுதும்போது, நச்சினார்க் கினியர், பரதவர்கள் தெற்குப் பக்கத்தில் வாழ்ந்த சிற் றரசர்கள் எனக் குறிப்பிடுகிறார்.§ இப் பரதவர்களைச் சோழன் இளஞ்சேட் சென்னி வென்று அவர்களைத் தனக் கடங்கியவ ராக்கினன்.$ தலையாலங் கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் என்ற பாண்டிய மன்னனின் ஆணைக்கீழும் அவர்கள் இருந்தனர் என்பது மதுரைக் காஞ்சியால் அறியப்படுகிறது.¶

பரதவர்கள் தலைவனாக மத்தி யென்பான் ஒருவன் குறிப்பிடப்படுவதைக் காண்கிறோம்: "பரதவர் கோமான் மத்தி"ரீ

பரணர் என்னும் புலவர், பரதவரின் குறுநாடு, கழாஅர் என்றும், அது காவிரி கடலொடு கலக்குமிடத்தில் உள்ளது என்றும் அகம், 226-ஆம் பாடலில் கூறுகிறார்: "வல்வில் எறுழ்த்தோள் பரதவர் கோமான், பல்வேல் மத்தி கழாஅர் முன்றுறை."ந இவரே அகம், 6-ஆம் பாடலில் மத்தியின் நாடு கழாஅர் என்று கூறுகிறார்: "பல்வேல் மத்தி கழாஅர்."** ஓரம்போகியார் இதனையே "கைவண்

*பெரும், 323. †சிறுபாண், 159. ‡மதுரைக், 144.
§பரதவர் - தென்திசைக்கட் குறுநில மன்னர். $புறம், 388.
¶மதுரைக், 144. ரீஅகம், 226 : 7-8.
நஅகம், 226 : 7-8. **அகம், 6 : 20.

மத்தி கழாஅர் "* என்று குறிப்பிடுகிருர். மத்தியென்னும் இம் மன்னன் எழினியென்பானை வென்று, அவன் பற்களைத் தன் வாயிற் கதவிற் பதித்தான் எனக் கூறப்படுகிருன். பரந்த சோழநாட்டில் தனது வலிமையை அறியாது வந்து முன்னணிப் படையில் அகப்பட்டுக்கொண்ட எழினி யென்பானை யெதிர்த்து வென்று, அவனுடைய பற்களைப் பிடுங்கி வெண்மணி யென்னுமிடத்தில் பாறைகள் நிறைந்த கடற்கரையில் வாயில் அமைத்து, அதன் பெரிய கதவுகளில் அப் பற்களையழுத்திய மத்தி உண்டாக்கிய குளிர்ந்த துறை"† என்பது காண்க.

மத்தியின் நாடு கடற்கரையில் இருந்தது என்பதனுலும் அவன் வெண்மணி யென்னுமிடத்தின் கடற்கரையில் புதிய துறையமைத்தான் என்பதனுலும் பரதவர்கள் மீன் பிடிப்பவர்களாகவோ அல்லது கடல்கடந்து செல்வதில் வல்லவர்களாகவோ இருந்திருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது. பிற்காலத்தில் போர்ச்சுகீசியர் இந்தியாவிற்கு வந்தபோது, தங்கள் கப்பற்படையைப் பலப்படுத்துவதற்காக இங்கிருந்த பல கப்பலோட்டிகளையும் செம்படவர்களையும் கிறித்தவர்களாக்கித் தமது படையிற் சேர்த்துக்கொண்டனர். இந்தியாவில் ஆண்டுவந்த சாமொரின் முதலிய அரசர்களின் படைத் தலைவர்களாகவும் கப்பலோட்டிகளாகவும் இருந்த 'மூர்' சாதியினர் கிழக்கு மேற்குக் கடற்கரையில் குடியேறித் தமக்குப் பெருந்தொல்லை விளைத்தமையாலேயே இவ்வாறு அவர்கள் தமது கப்பற்படையை வலிவுபடுத்திக் கொண்டனர். இவ்வாறு கிறித்தவரான பரதவர்கள், முன் சொன்ன பரதவக் குடியினரின் வழி வந்தவர்களோ? இஃது உண்மையாயின், இப் பரதவக் குடியினர் பழங்காலத்தில் சோழர்களுக்கும் பாண்டியர்களுக்கும் கப்பலோட்டிகளாக இருந்தனர் என்று கருதலாம்.

---

*ஐங்குறுநூறு, 61 : 3. †அகம், 211 : 12-15.

மேலைக் கடற்கரையில் வசித்து, அடிக்கடி கடற் கொள்ளைக்காரராக மாறிக் கொள்ளையடித்து வந்த கடம்பர் களைப் போலப் பரதவர்கள் கீழைக் கடற்கரையிலும், தென் கடற்கரையிலும் ஆற்றல் மிக்கவர்களாய்க் கப்பலோட்டி களாய் இருந்தனர்.

இளஞ்சேட் சென்னியின் வெற்றிகளைப் புனைந்துரைக் கும்போது, ஊன் பொதி பசுங்குடையார், "தென் பரதவர் மிடல் சாய வடவடுகர் வாள் ஓட்டிய"* எனப் பாடுகிறார்; பரதவரை வென்ற வெற்றிக்கும், வடுகரை வென்ற வெற் றிக்கும் இடையே ஒரு வேறுபாடு காட்டுகிறார். வடுக ரோடு வாளாற் பொருதான் என்று இவர் கூறுவதால் அப் போர், நிலத்தில் நிகழ்ந்ததாகும். ஆனால் 'தென் பரத வர் மிடல் சாய' வென்றான் என்றே பாடலில் கூறப்படு கிறான். வாட் போர் இங்கு இல்லை. இங்கு, வாட் போர் அல்லாத மற்றொருவகைப் போரை மனத்துட்கொண்டு புலவர் பாடுகிறார் என்றும், அப் போர் கடற் போர் என்றும் ஏன் கருதுதல் கூடாது? இளஞ்சேட் சென்னி பரதவரை வென்றான். சோழ அரசியலை முறையாக அமைத்து உறை யூரில் ஆண்ட தித்தன் காலத்தில் மத்தியைத் தலைவனாகக் கொண்ட பரதவர் அவன் ஆட்சிக்குள் ஒடுங்கினர்.† தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் மதுரை யில் ஆண்டபோது தெற்கிலிருந்த பரதவர் அவன் ஆட்சிக் குள் ஒடுங்கினர்.

பரதவர் அல்லது பரதர் என்ற சொல் பிங்கலந்தையி லும், கம்பராமாயணத்திலும் காணப்படுகிறது. பரதவர் என்பது கடல் வாழ் மக்களைக் குறிக்கும் என்பது நச்சி னார்க்கினியர் கருத்தாகும். பரதவர் என்ற சொல் 'பர' என்ற பகுதி அடியாகப் பிறந்த பரவை (கடல்) என்ற சொல்லோடு தொடர்புடையது. பரவை, பரப்பு என்ற

*புறம், 378 : 1-2. †அகம், 6.

சொற்கள் விரிதல் என்று பொருள்படும். பொருட் சிறப்புக் குறிக்கும் 'து' என்ற உறுப்புப் 'பர' என்னும் அடிச் சொல்லோடு சேரப் 'பரது' என்ற சொல் பிறக்கும். இதனோடு 'அர்' விகுதி சேர்ந்தமையால் 'பரதர்' என்னும் சொல் பிறந்திருக்கலாம்.

**2. கோசர் (கருவூர்க் கோசனர்):**

கோசர் என்னும் குடியினரைப் பற்றிச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது:

"பழைய ஆலமரத்தடியிலுள்ள மன்றத்தில் (பொதியில்) நாலூர்க் கோசர்";*

"இளந்தேன் கொப்புளிக்கும் நெய்தல் மலர்கள் செறிந்த வளமிக்க வயல்களையுடைய, கோசர்களின் நன்னாடு";†

"படைக்கலங் கற்கும் இளங்கோசர்கள் பலர் தம்முள் வேலெறிவதில் சிறந்தார் யாரெனக் காணல்வேண்டி, ஒளி பொருந்திய வேல்களை எறிகின்ற, அகன்ற இலைகளையுடைய முருக்கமரத்தாற் செய்யப்பட்ட கம்பங்கள்";‡

"வாய்மை காப்பவர் என உலகமெங்கும் போற்றப் படுகின்ற, புகழையும் வளமிக்க செல்வத்தையும் உடைய கோசர்";§

"ஒன்றுமொழிக் கோசர்";$

"என்றும் புதியனவாய் ஒளிர்கின்ற இரும்பாயுதங்களால் உண்டாக்கப்பட்ட வடுக்கள் முகத்தில் நிறையப் பெற்றவரும் கரிய கண்களையுடையவருமான கோசரின், கடலொலிபோல் பேரொலி நிறைந்த நியமம் என்னும் நகர், செல்லூர்க்குக் கிழக்கே யுள்ளது";¶

"காற்றுப்போல் விரைவாகச் செல்லும் அழகிய தேர்களையுடைய கோசரின் பழைய முதிய ஆலமரத்தின் பெரிய கிளைகளின் நிழலி லமைந்த மன்றம் (பொதியில்)";ழ

---

*குறுந், 15 : 2-3. †அகம், 113 : 5-7. ‡புறம், 169 : 9-11.
§அகம், 205 : 8-9. $அகம், 196 : 10. ¶அகம், 90 : 9-12.
ழஅகம், 251 : 7-8.

"மோகூர் நகரில், பழையன் என்னும் அரசனது அவை யகம் சிறப்புற்று விளங்குமாறு நான்கு மொழிகளில் வல்ல கோசர் தோன்றினாற்போல், மேம்பட்டுத் தோன்றிய நான்கு பெருங் குழுக்கள்" ;*

"பெரும் புகழையுடைய மாறனைத் தலைவனாகக் கொண்டு, போரில் அஞ்சாது மேற்சென்று பகைவரைக் கொல்லும், தப்பாத வாளையுடைய இளையராகிய பல கோசர்" ;†

"தம்முடல் அழகு பெறும்படி பொன் அணிகளை யணிந்த கோசரின் துளுநாடு."‡

மேற்காட்டிய சான்றுகளிலிருந்தும் பிறவற்றிலிருந்தும் கோசர் என்பார் விற்றொழில் வல்ல வீரக் குடியினர் என்று தெரிகிறது.§ முருக்கமரத்தால் ஆகிய தூண்களை நிறுத்தி, அவற்றை நோக்கிக் குறிவைத்து அம்பு எய்வதன் மூலம் அவர்கள் வில்வித்தையிற் பழகினார்கள்.$ அவர்கள் துளுநாட்டைச் சேர்ந்தவர்கள்.¶ அவர்களுடைய நியமம் (குறுநாடு) செல்லூர்க்குக் கிழக்கில், கடற்கரைக்குப் பக்கத்தில் இருந்தது ; கடலின் ஒலி அங்கு இடைவிடாது கேட்கப்பட்டது.ıı அவர்கள் வாய்மைக்குப் பேர் போனவர்கள்; தங்கள் உறுதி மொழியை நிறைவேற்றுவதில் அவர்கள் தவறியதே யில்லை.‖ "The Journal of the Royal Asiatic Society" என்ற ஆங்கில இதழுக்குச் செய்தியனுப்பும் அறிஞர் ஒருவர், 'ஒன்று மொழிக் கோசர்' என அவர்கள் குறிப்பிடப்படுவது கண்டு அசோகர் கட்டளைகளிற் காணப்படும் 'சத்திய புத்திரரே' அவர்கள் என்று கருதுகிறார். அம்புகளால் தமது முகத்திற் பட்ட விழுப்புண்களின் வடுக்களைப் போற்றிவைத்திருப்பதில் அவர்கள் பெருமை பாராட்டினார்கள்.** பொது நலன்களைப் பற்றி ஆராய்வதற்

---

*மதுரைக், 508-510. †மதுரைக், 772-773. ‡அகம், 15 : 2-5.
§அகம், 90, 113. $புறம், 169. ¶அகம், 15.
ııஅகம், 90. ‖அகம், 196 : 205. **அகம், 90.

கும் நீதி வழங்குவதற்கும், ஆலமர நிழலில் அமைந்த மன்றத்தில் அவர்கள் கூடினார்கள்.* 'நாலூர்க் கோசர்' என்ற பாடத்திற்கு மாறாகச் சிலஏடுகளில் 'நல்லூர்க் கோசர்' என்ற பாடம் காணப்படுதலால், அவர்கள் 'நல்லூர்' என்னும் ஊரைச் சேர்ந்தவர்கள் எனக் கருதலாம். இவ்வூர் செல்லூர்க்குக் கிழக்கே உள்ளது. ஆனால், 'நாலூர்' என்பதே சிறந்த பாடம். அவர்களுடைய தேர்கள் காற்றைப் போல் விரைவாகச் செல்பவை. மோகூர்ப் பழையனிடம் கொண்ட நட்பால் அவனுடைய அவையில் அவர்கள் வீற்றிருந்து அவனைச் சிறப்பித்தார்கள். அவர்கள் நான்கு பிரிவினராக இருந்தனர். ஒரு வேளை நான்கு ஊர்களில் அவர்கள் வாழ்ந்தனர் போலும்! ஒரு சமயம் அவர்கள் தங்கள் பகைவர்களை வாட் போரில் வென்று அடக்கிய போது, மாறன் என்பவனைத் தலைவனாகக் கொண்டிருந்தனர். மாறன் என்பவன் பாண்டிய மன்னனின் படைத்தலைவனாதலின், கோசர்களின் குறுநாடு, பாண்டிய நாட்டில் இருந்தது எனக் கருதலாம். அன்னி மிஞிலி என்பாளின் தந்தை வரகு அறுவடை செய்யும் காலம் வந்தும், அதைப் பொருட்படுத்தாமல் இருந்ததால், அவனைக் கோசரின் முன்னர்க் கொண்டுபோய் நிறுத்தினர். அவன் செய்தது பெருந் தவறாதலின் அவனுடைய கண்கள் பிடுங்கப்படல்வேண்டு மென்று நீதி வழங்கினர் கோசர்.† "கொடுமையான நீதி வழங்கிய கோசரின்மீது அடங்காத கோபம் கொண்ட அன்னி மிஞிலி, நல் ஊணும் நல் உடையும் மறந்து, பலநாள் துன்பத்தி லாழ்ந்துகிடந்தாள்; பின்னர்க் கோசரைப் பழிவாங்குவதற்காகத் திதியன் என்பானது உதவியை நாடினாள். திதியன், கோசரைக் கொன்று அன்னி மிஞிலிக்கு ஆறுதல் அளித்தான்" என அகநானூறு 262-ஆம் பாடல் கூறுகிறது. தன்

---

*குறுந், 15; அகம், 251. †அகம், 196 : 262.

தந்தையின் கண்களுக்காக அவர்களைப் பழிவாங்கிவிட்டதை நினைத்து அன்னி மிஞிலி மகிழ்ந்தாள்.

பொலம்பூட் கிள்ளி என்பான் கோசர்மீது போர் தொடுத்துப் படையை யழித்து அவரது நாட்டைக் கைப் பற்றினன் என்றும் அறிகிறோம்.*

இம் மக்கள், துளு நாடு, கொண்கானம், பாண்டியநாடு ஆகிய மூன்று நாடுகளிலும் வாழ்ந்தனராகக் காணப்படு கின்றனர். 'நான் மொழிக் கோசர்' என்னும் சொற் றொடரின் கருத்துச் சரியாக விளங்கவில்லை. நான்கு மொழி களைப் பேசிய கோசர் என்பது இதன் பொருள். நான்கு திசைகளிலும் வழங்கிய மொழிகளை அவர்கள் பேசிவந்தார் கள் என்பது இதன் கருத்தாகலாம். கோசர் என்பார் பல மொழிகளைப் பேசும் பல சாதி மக்களைக் கொண்ட ஒரு பெரிய வீரர் குழுவினர் என்றும், அவர்கள் திறமான போர்ப் பயிற்சி பெற்று, நிறைந்த பொருள் தரும் மன் னருக்காகவேனும், யாதானுமொரு நல்ல காரணத்திற்காக வேனும் கூலிப் படையினராய்ப் போர் புரியச் சித்தமாக இருந்தனர் என்றும் கருதலாம். தமிழ் நாட்டில் இவ் வகை யான படைகளை வைத்திருந்த பல குழுவினரும், கூட்டத் தாரும் இருந்தனர். கோசத்தார் என்னும் குழுவினரைப் பற்றிப் பலரும் அறிவர். 'குழுவினர்' எனப் பொருள்படும் கோசர் என்ற சொல்லும், கோசத்தார் என்ற சொல்லும் ஒரு குழுவினரையே குறிக்கிறது எனவும் கொள்வர். இக் குழுவினரின் அமைப்பைப்பற்றி ஒன்றும் தெரிந்திலது. இவ் வாறாயின், "ஒன்றுமொழிக் கோசர்" என்ற தொடர், பல மொழிகளையும் ஒன்று கலந்து வழங்கிய குழுவினர் எனப் பொருள்படும். மதுரைக் காஞ்சியில் வரும் நாற்கோசர் என்ற தொடருக்கு நச்சினார்க்கினியர் 'நால் வகைக் கோசர்' என்று மட்டுமே உரையெழுதுகிறார்.†

---

*அகம், 205 : 8-11 †மதுரைக், 508-9.

இதேபோல, நாலூர்க் கோசர் என்ற சொற்றொடர்க்கு நான்கு திசைகளிலிருந்தும் வந்த மக்கள் எனப் பொருள் கொள்ளலாம். எல்லா ஊர்களிலிருந்தும் வந்த கோசர்கள் ஆலமரத்தடியில் அமைந்த பொது விடத்தில் கூடியிருக்க லாம். அவர்களுடைய உறைவிடங்களாக நான்கு பெயர் களைச் சங்க இலக்கியத்தால் அறிகின்றோம். அவை, துளுநாடு, செல்லூர், பொதியில், நாலூர் என்பன. நாலூர் என்பது எண்ணுப் பெயராயின் அது நான்கு ஊர்களைக் குறிக்கவேண்டும். இந்த நான்கு ஊர்களும் இவையெனக் கூறுவது கடினம். நாலூர் என்பது தவிர மூன்று பிற இடங்களை முன் குறிப்பிட்டோம். அவை மூன்றும் ஊர் களைக் குறிப்பிடுப்பனவா என்பதே ஐயத்திற்கிடமானது. பொதியில் என்பது ஆலமரத்தடியில் உள்ள பொது விடத்தை (மன்றத்தை)க் குறிப்பதாதலின், அஃது ஓர் ஊரி னைக் குறிப்பதாகக் கொள்ள வியலாது. செல்லூர் என்பது துளுநாட்டில் உள்ள ஓர் ஊர். எனவே, அது துளுநாட்டி னின்றும் வேறுபட்டதன்று. துளுநாடு மட்டுமே கோசர் வாழ்ந்த இடமெனக் கருதத் தக்கதாக எஞ்சுகிறது. அங்கிருந்து அவர்கள் தேவைப்பட்டபோது பல ஊர்களில் உள்ள ஆலமரத்தடியில் மன்றங்களிலிருந்து நீதி வழங்கு தற்காகச் சென்றார்கள் எனக் கருதலாம். நல்லூர் என் னும் பாடம் சரியானதென்று ஒப்புக்கொண்டாலும், தெளி வான விளக்கம் ஏற்படவில்லை. எனவே, 'நாலூர்' என்பது பொதுவாகப் பல ஊர்களைக் குறிப்பதெனக் கொள்வதே பொருத்தமாகும்.

கோசர் என்பார் துளுநாட்டிற்கு உரியவர்கள்.* அவர்கள் வாழ்ந்த தலைமையான ஊர் செல்லூர்.† அவர்கள் செல்வம் மிக்கவர்கள்;‡ வாய்மைக்கும் நாணயத்திற்கும்

---

*அகம், 15. †அகம், 90.

‡அகம், 113, 205, 216.

புகழ்பெற்றவர்கள்;* வீரம் மிக்கவர்கள் ; அஞ்சாத போர் வீரர்கள்.† ஆய் எயினன், மிஞிலியோடு செய்த போரில் இறந்துபட்டனனாக, அவனுடைய பல்வேண் மகளிர் பெரு நடுக்குற்றுக் கலங்கினர். அகுதை என்பான் அவர் நடுக் கத்தைப் போக்க முனைந்தான். கோசர் அவனுக் குதவி புரிந்தனர். அவர் தந்த படையின் உதவியால் அவன் மிஞிலியை வென்று அம் மகளிரின் நடுக்கத்தைத் தீர்த் தான்.‡ ஒன்று மறியாத பெண்ணைக் கொலைசெய்த நன்ன னைப் போரில் வென்று துரத்தியவர் கோசரே.§ மோரிய ரோடு சேர்த்துக் குறிப்பிடப்பெறுவதால் கோசரும் வடுகரும் ஓரினத்தவர் என்பதா?$ கோசர் வெளிநாட்டுக் குடியினர் என்றும், மௌரியர் தமிழ்நாட்டின்மீது படை யெடுத்தபோது இங்கு வந்து குடியேறினர் என்றும் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் கருது கிறார்கள்.¶ அவர்கள் ஓர் அரச குடியைச் சேர்ந்தவர்கள் என்பது, "பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப் பெரும் பெயர் மாறன் தலைவனாகக் கடந்தடு வாய்வாள் இளம்பல் கோசர்"ɰ என்ற மதுரைக்காஞ்சி யடிகளால் தெளிவா கிறது. முருக்கமரத் தூண்களை இலக்காகக் கொண்டு அவர்கள் வில்வித்தை பயின்றனர் என்பது முன்னமேயே குறிப்பிடப்பட்டது.ʖ அவர்கள் நிறையக் கள் அருந்து பவர்.** கோசர் என்பார் போரில் அரசர்க் குதவும் ஒரு வகைக் கூலிப்படையினர் என்ற நமது கருத்தோடு மேற் காட்டிய இலக்கியச் சான்றுகள் எல்லாம் ஒன்றிவரு கின்றன எனலாம்.

---

*அகம், 205; குறுந், 15. †அகம், 90, 113.

‡அகம், 113, 208. §குறுந், 73, 292. $அகம், 251, 281.

¶Ancient India and South Indian History and Culture—Vol. I, p. 87.

ɰ771-774. ʖபுறம், 169. **புறம், 396.

கோசர் என்னும் சொல்லின் பொருள் யாது? 'கோசம்' எனின் கவசம் என்பது பொருள். இவ்வாறு பொருள்கொள்ளின் கோசம் என்பது வடமொழிச் சொல் லாய்விடும். தமிழ் நாட்டிலோ, தாய் மொழியிலோ சான்று கள் கிடைக்காமல்போனல்தான், மற்ருெரு நாடு, அல்லது மொழியின் உதவியை நாடவேண்டும். தமிழகத்தில், அதுவும் துளு நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் வாழ்ந்த ஒரு குடியின் பெயர், எந்த அடிச்சொல்லிலிருந்து பிறந்தது என்பதை ஆராய வடமொழியின் உதவியை நாடவேண் டுவதில்லை. பாண்டியநாடு, துளுநாடு ஆகியவற்றைத் தவிரக் கொங்கு நாட்டிலும் கோசர் வாழ்ந்தனர் எனக் கொங்கிளங் கோசர் என்னும் சொற்ருெடரால் சிலப்பதி காரம் குறிப்பிடுகிறது. எனவே, கோசர் என்பார் ஒரு வகைக் கூலிப் படையாளரா யிருந்தமையால், எந்த நாட்டி லும் அவர்கள் காணப்படுதல் இயற்கையே என முடிவு செய்யலாம்.

கள் குடிக்கும் கலன் என்ற பொருளில் 'கோய்' என் னும் சொல் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது.* எனவே, கோய் என்பதன் அடியாகக் கோயர் என்ற சொல் பிறந்தது எனலாம். கோயர் என்ற சொல்லின் மற்ருெரு வடிவமே கோசர் என்பது. கோசர்கள் குடி வெறியர்களா, அன்றிக் கள்ளைப் பக்குவப்படுத்துதலில் கைதேர்ந்தவர்களா? கோசர்களின் குறுநாடு கீழ்வருமாறு புனைந்துரைக்கப்படுகிறது:

"இளங்கள்ளின் மணம் வீசுகின்ற நெய்தல் நிலம் சார்ந்த வயல்களையுடைய வளமிக்க நன்ஞடு."†

"அரும்புகளினின்றும் எடுக்கப்பட்ட கள்ளைத் தங்கள் மனையகத்தே நிரம்ப வைத்திருக்கும் கோசர், அக் கள்ளை யுண்டு இனிமையான குரவைப் பாடலுக் கேற்பக் கைகோத்துக் குரவை யாடுகின்றனர்.‡"

---

*புறம், 300 : 6. †அகம், 113 : 6-7. ‡புறம், 396 : 7-9.

இப் புனைந்துரைகளால், கோசர்கள் தங்கள் மனைகளிலே கள்ளுண்டு களிப்பவர்கள் என்று தெரிகிறது. பல நாடுகளில் உள்ள மன்னர்களுக்காகவும், தலைவர்களுக்காகவும் பொருள்பெற்றுப் போர்புரியச் செல்லும் வீரக் குழுவினரான கோசருக்கு இது மிகவும் பொருந்துவதே. இப்போது தமிழ் நாட்டு நகரங்களுள் ஒன்றன் பெயரான கோயம்புத்தூர் என்பது **கோயன் புத்தூர்** என்பதன் திரிபாகலாம். கோயன் என்ற தலைவனது புத்தூர் என்பது இதன் பொருள். கோசன் என்பதே கோயன் எனத் திரிந்தது என்றோ, கோயன் என்ற இலக்கணமுடைய சொல்லின் திரிபே கோசன் என்ற சொல் என்றோ கொள்ளலாம். கோய் என்பதனடியாகக் கோயன் என்ற பெயர் பிறந்திருக்கலாமன்றோ? திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள், கோவன் என்னும் தலைவனது பெயரினடியாகக் கோயம்புத்தூர் என்ற சொல் பிறந்தது என்பர்.* நாம் இங்குக் கூறியவாற்றால் கோயன் என்பதனடியாக அச் சொல் பிறந்தது எனக் கொள்வதே பொருத்த முடையதாகத் தெரிகிறது.

தமிழில், 'பெயர்' என்ற சொல் கன்னடத்தில் 'ஹெசரு' என வரும். பயிர் என்பது கன்னடத்தில் 'பசிர்' என வரும். தமிழிலேயே உயிர் உசிர், அரயர் அரசர் என்பனவாக யகர சகரப் போலி மொழிகளை நாம் காணலாம்.

கோசன் என்பது ஒரு புலவரின் பெயராகச் சங்க இலக்கியத்தில் வருகிறது. நற்றிணை 214-ஆம் பாடலின் ஆசிரியர், கருவூர்க் கோசனார் என்பார். அவர் சேரரின் தலைநகரான கருவூரைச் சேர்ந்தவரென அவரது பெயரே கூறுகிறது.

---

* தமிழகம்-ஊரும் பேரும்-பக்கம், 32-33.

# 9. மூவேந்தரின் ஆட்சியில் அடங்காத குடிகள்

1. ஆவியர் (ஆவியர் பெருமகன் பெருங்கல் நாடன் பேகன், ஆவியர் கோ):

ஆவியர் பெருமகன் பெருங்கல் நாடன்,* ஆவியர்கோ† என்ற பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. எனவே, ஆவியர் என்பார் ஒரு தனிக் குடும்பத்தினர் அல்லது கிளைக் குடியினர் எனக் கொள்ளலாம். 'ஆவியர் கோ' என அழைக்கப்படுபவன் பேகன் என்பான். அக நானூறு முதற் பாட்டில் 'நெடுவேள் ஆவி' என்பது ஒரு குறுநில மன்னனின் பெயராகக் குறிக்கப்படுகிறது.‡ பலர் கருதுவதுபோல, நெடுவேள் ஆவி என்பான், பேகன் தானா என்பது உறுதியாகத் தெரியவில்லை. ஆவி என்னும் அடைமொழியை உடைய பல குறுநில மன்னர்கள் சங்க காலத்தில் இருந்தார்கள். அவர்களுடைய பெயர்கள் எல்லாம் 'வேளிர்' என்னும் தலைப்பின்கீழ்த் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. அவன் நாடு, 'பெருங்கல் நாடு' எனப் படும். தொல்காப்பிய உரைகளில் வரும் கற்காநாடும், இப் பெருங்கல் நாடும் ஒன்றாயிருக்க முடியுமா? அக நானூற்றின் முதற் பாடலில்§ இந் நாடு 'பொதினி' என அழைக்கப்படுகிறது. புளிப்படைதலைத் தடுப்பதற்காகச் சுண்ணும்பு தடவிய மொந்தையில் அல்லது குடுவையில் இறக்கப்பட்ட தென்னஞ் சாற்றிற்குப் பதனி என்று பெயர். அஃது இனிப்புச் சுவையுடையது. பதநீர் என் பதன் மரூஉவே அது எனத் தமிழ்ப்பேரகராதி கூறுகிறது.$ அதுபோலப் பொதிநீர் என்னும் சொல்லே பொதினி என

---

*சிறுபாண், 86-87. †புறம், 147 : 9. ‡அகம், 1 : 3.
§4-ஆம் வரி. $பக்கம், 2471.

மருவியிருக்கவேண்டும். பொதினி என்பது பழனிமலை யைக் குறிப்பதாயின், பொதினி—பழனி என்ற இரு சொற் களும் ஒரே பொருளைக் குறிப்பன எனலாம். பொதிநீர் என்பது பொதினி எனவும், பழநீர் என்பது பழனி எனவும் மரூஉமொழியாயின எனலாம். பொதிநீர் எனின் பழத்தி னுள் பொதிந்த சாறு என்றும், பழநீர் எனின் பழச்சாறு என்றும் பொருள். சாறுநிறைந்த பழங்களும், கள் வகை களும் நிறையக் கிடைத்தமையால், அம் மலைக்கு அப் பெயர் கள் ஏற்பட்டனவாகக் கொள்ளல்வேண்டும். வேளிர் வாழ்ந்த இடம் கள் வகைக்கும், கள் குடிக்கும் மொந்தை களுக்கும் புகழ்பெற்றது என மற்றோரிடத்தில் புனைந் துரைக்கப்பட்டிருத்தலின் நமது கருத்துப் பொருத்த மானதே.

"நல்ல மரங்களில் நிறைந்திருக்கும் மலர் அரும்புகளை ஒன்றுசேர்த்துச் சாடியில் பலநாள் பக்குவப்படுத்தப் பட்ட கள், பல நாட்கள் தங்கி முதிர்தலால் புளித்துப் பொங்க, அதனால் அக் கள் நிறைந்த சாடியைக் கள் முகக் கும் கலமாகிய கோய் உடைத்துவிட்டால், விரவிய மழைத் துளிபோலத் தெருவெல்லாம் துளிக்கும் ஊராகிய பழைய பல நெற் களஞ்சியங்களையுடைய வேளூர்"* என வருதல் காண்க.

பழனி நகரம், வையாவிக்கோ என்பான் பெயரொடு தொடர்புடையதான வையாபுரி என்னும் பெயரால் இன் றும் அழைக்கப்படுகிறது. அப் பெயர் வையாவிபுரி அல் லது வையாவிப் பேரூர் என்பதன் திரிபாக இருக்கலாம். செங்கற்பட்டு மாவட்டத்தில், படாளம் இரெயில் நிலையத் திற்கருகில் வையாவூர் என்னும் ஊர் உள்ளது. வையாவி என்ற பட்டப் பெயர் பேகனுக்கு அடைமொழியாகப் புறம், 141, 146-ஆம் பாடல்களில் வருகிறது. அஃது அவ

*அகம், 166 : 1-4.

னுடைய தந்தையாரின் பெயர். அக் காலத்தில் இருந்த ஒரு தனியான வழக்கப்படி அவனுடைய பெயருக்கு அடையாக அஃது இணைக்கப்பட்டது எனக் கொள்ள முடியுமானால், அவ்வாறு கொள்ளலாம். ஆனால், அதை அவனுடைய பட்டப் பெயரென்று கொள்வதே நேர். அல்லது, மையூர் என்பதைப்போல வையூர் என்பதை ஓர் ஊர்ப் பெயராகக் கொள்ள முடியுமானால், வை என்பது வையூரைக் குறிப்ப தாகலாம் அன்றோ? அல்லது, ஆவியர் குடி என்ற பெருங் குடியின் ஒரு கிளைக்குடிக்கு 'வையாவி' என்ற பெயர் இருந்திருக்கலாம். 'வை' என்பதன் பொருள் என்னவா யிருக்கும்? வை என்பது **வையம்** என்ற சொல்லின் முதல்நிலையாகும். **வையம்** என்பதற்கு **ஆதாரம்** என்பது பொருள்; எல்லாப்பொருள்களும் வைப்பதற்கு இடமாவது என்பது பொருள். இதனால்தான் **வையம்** என்பது உலகு என்ற பொருளை உணர்த்துகிறது. 'பைம்பொழில்' என்பது போன்ற சொற்றொடர்களில் உள்ள 'பை' என்பது 'பசுமை, 'பசி' என்ற சொற்களோடு தொடர்புபடுத்தப்படுதல்போல, 'வை' என்பதையும் மழை என்னும் பொருளுடைய 'வசி' என்ற சொல்லோடு தொடர்புபடுத்தலாம்.* பிங்கலந்தையில் 'வை' என்ற சொல்லுக்கு மூன்று பொருள்கள் காணப்படுகின்றன. அவை, 'வைக்கோல், கூர்மை, பகுதி' என்பன. பேராசிரியர் ரா. ராகவையங்கார் அவர்கள் தமது 'ஆவி நன் குடி' என்னும் கட்டுரையில்,† "ஆவியர் குடியிற் பிறந்து சிறத்தலான் அக் குடிமுதல்வன் ஆன ஆவியின் பகுதிப்பட்டானைச் சிறப்பித்து வையாவி என வழங்கினர் போலும்!" எனக் கூறும்போது வை என்பதற்குப் பகுதி

---

*'வசியும் வளனும் சுரக்க'—சிலப், 5 : 73; மணிமேகலை, 1 : 71.

†செந்தமிழ்ப் பத்திரிகை, தொகுதி 2, பக்கம் 3

என்ற பொருளை ஆதாரமாகக் கொண்டே அவ்வாறு கூறு கிறார். பழனியின் மற்றொரு பெயரே ஆவிநன்குடி என்பது. இப் பெயர் திருமுருகாற்றுப்படையில் வருகிறது.* இப் பெயர் ஆவியர்குடித் தலைவனுக்குப் பழனி தலைநகர மாக இருந்தது என்பதை உணர்த்துகிறது. அத் தலைவன் ஒருவேளை பேகனாக இருக்கலாம்.

கல்நாடு அல்லது கற்காநாடு எனப்படுவது பழனி மலையே எனக் காட்டுவதற்காகப் பேகன் என்ற பெயர் பற்றி இவ்வளவு விரிவாக ஆராயப்பட்டது. பேகன் என்பான் தமிழ்நாட்டு வள்ளல்களில் ஒருவன்; குளிரால் நடுங்கிய மயிலைக் கண்டு மனம் தாளாத பரந்த அருள் உள்ளம் வாய்ந்தவன்.† ஆனால், யாது காரணத்தாலோ அவனுடைய அன்பிற் சிறந்த மனைவி கண்ணகி அவனால் துறக்கப்பட, அவளை அவனுடன் மீண்டும் சேர்ப்பதற் காகப் புலவர்கள் அரும்பாடுபட்டனர் என அறிகிறோம்.‡ ஆவியர் குடித்தலைவர்களுள் வேறு சிலர் சேரர்களுக்கு மணம்புரிந்துகொள்ளப் பெண் கொடுக்கும் உரிமை பூண்டிருந்தனர்.§

ஆய் என்பதன் மற்றொரு வடிவமே 'ஆவி' என முன்னர்க் குறிக்கப்பட்டது. எனவே, ஆய் என்னும் அடைமொழி பெற்ற குறுநில மன்னர்கள் எல்லாம் ஆவியர் குடியைச் சேர்ந்தவர்கள் எனலாம். இஃது உண்மை யாயின், 'ஆய்கள்' எல்லாம் ஆயர் குடியைச் சேர்ந்தவர் என்ற திரு. சிவராச பிள்ளை, திரு எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்களுடைய முடிபு பொருத்தமற்றதாகும்.

ஆய் அண்டிரன் இந்த ஆய் குடியைச் சேர்ந்தவனே. சங்க இலக்கியத்தில் ஈடுபட்டுள்ளவர்க்கு அவனைப் பற்றி நன்கு தெரியும். மேற்போக்காக நோக்குவோருக்கு

---

*வரி, 176. †புறம், 145 : 1-3. ‡புறம், 143, 147.
§பதிற், 4, 6, 8-ஆம் பத்துக்களின் பதிகங்கள்.

அண்டிரன் என்பது தமிழ்ச் சொல் அன்று எனத் தோன்றும். இச் சொல் 'ஆந்திரன்' என்னும் சொல்லின் திரிபாகக் கருதப்படுகிறது.* டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள், "ஆந்திரர்களை 'அண்டரே'† எனத் தாலமி குறிப்பிடுகிறார். ஆகவே ஆய் அண்டிரன் என்னும் பெயர், ஆந்திரர்களுள் ஒரு குறுநில மன்னனைக் குறிப்பது என்பது பெரும்பாலும் உறுதி..............." என்று கூறுகிறார்.‡

அவரது கருத்துச் சரியானதாயின், எச் சொல் அண்டிரன் எனத் திரிந்து நின்றதோ அச் சொல்லின் திரிந்த வடிவமே வடமொழியில் 'ஆந்த்ர' என்று வழங்கும் சொல் என நாம் கருதலாம். அந்த மூலச் சொல் இன்னது என்று தெரியவில்லை. அவ்வாறாயின் ஆந்திரர்கள் தமிழகத்திலிருந்து வடக்கே பரவியவர்கள் எனலாம். தமிழ் நாட்டின் பெருவள்ளலாகிய அண்டிரன் என்பான் பெயரில் அந்தப் பழைய மூலச் சொல்லின் வடிவம் பிழைத்துநின்றது. ரகாரமும் லகாரமும் ஒன்றற்கொன்று போலியாக வரும் என்ற உண்மைகொண்டு, 'ஒருவரும் தன்னை நெருங்குதற்கு அரியவன்' எனப் பொருள்படும் 'அண்டிலன்' என்பதே, அந்த மூலச் சொல் எனலாம். டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் 'அண்டர்' என்னும் சொல்லையும் ஆந்திரர் என்னும் சொல்லிலிருந்து பிறந்ததாகவே கொள்ளுகிறார்.§ அப்பொழுது அண்டர் என்பதன் குறில் நெடிலான வடிவமாகிய அண்டார் என்பதே 'நெருங்க முடி

---

* தமிழ்ப்பேரகராதி, பக்கம் : 59. †Andarae.

‡Ancient India and South Indian History and Culture, Vol. I, p. 46.

§Ancient India and South Indian History and Culture, Vol. I, p. 46.

யாதவர்' என்னும் பொருள் தரும் மூலச் சொல் ஆதல் வேண்டும். அல்லது, களஞ்சியத்தில் வைத்துள்ள நெல்லை யும் அரிசியையும் அரிக்கும் பூச்சியைக் குறிக்கும் **'அந்து'** என்னும் சொல்லிலிருந்து, அழிப்பவர் என்னும் பொருளில் ஆந்திரர் என்னும் சொல் பிறந்தது எனலாமா?

ஆய் எயினன் என்பான் இந்த ஆய் குடியைச் சேர்ந்த மற்றொருவன். அகநானூறு 148, 181, 208, 396—எண் ணுள்ள பாடல்களில் அவன் குறிப்பிடப்பட்டிருக்கிறான். அவனுடைய குடியினர் வில்வலிமையுள்ளவர் என்று தெரி கின்றனர்.* புறநானூறு 351-ஆம் பாடலும் அகம், 208-ஆம் பாடலும் அவனது ஈகைப் பண்பைப் புகழ்கின் றன. அவன் நன்னனின் படைத் தலைவன்.†

நன்னன் - ஆய் எயினன் தொடர்புபற்றிக் கூறும் பாட்டுக்கள் தெளிவாக இல்லை யென்றாலும், கீழ்க்கண்ட நிகழ்ச்சியைத்தான் புலவர்கள் மனத்துட்கொண்டு பாடி யிருப்பார்கள் என்று கொள்ளலாம். மிஞிலி என்ற படைத்தலைவன் நன்னனுக் குரிய பாழி என்னும் ஊரில் உள்ள தெய்வத்திற்குக் கடனிறுப்பதாக உறுதி யெடுத்துக் கொண்டு, அவனோடு போர் தொடுத்தான். நன்னனுக் குரிய பாழி என்னுமிடத்தில் போர் நடந்தது. ஆய் எயினன் மிஞிலியை எதிர்த்துப் பொருது போர்க்களத்தில் மாண் டான். இதைக் கேட்ட நன்னன், போர்க்களத்திற்கு வர அஞ்சிப் பகலில் வெளிவர அஞ்சும் ஆந்தைபோலத் தன் நகரிலேயே மறைந்துகொண்டான். ஆய் எயினனின் உரிமை மகளிர் மிகுந்த துன்புற்று நடுநடுங்கினர்கள். அகுதை என்பான் அவர்களுக்கு உதவியாக வந்து மிஞிலி யைத் தோற்கடித்தான்.‡

---

* 'கோடுவில் எயினர்' - அகம், 319-ஆம் பாடல், 3-ஆம் வரி.

† அகம், 208, 396.

‡ அகம், 208.

தமிழர்கள் இன்றும் செய்துவரும் இறுதிக் கடன்களில் ஒன்று நீரில் கல் இடுதல். இதன் கருத்து என்னவெனில், இறந்த மனிதனைப்போல் கல்லில் உருவம் செதுக்கி நீரில் எறிந்தால், அவனுடைய உயிரும் விண்ணுலகமாகிய நீரில் புகும் என்னும் பாவனைக் கொள்கையே யாகும். கல்லில் வடிவம் செய்து நீரில் இடுவதற்குப் பதிலாக வெறும் கல்லை இக் காலத்தில் இடுகிறார்கள். இச் சடங்கு, வழக்குக்கு வருமுன்னர், இறந்தவனுக்கு நடுகல் நடுதலோ அல்லது சிறு கோயில் எழுப்புதலோ வழக்கிலிருந்தது. ஆய் எயினன் இறந்தவுடன், அவனுடைய மனைவியர், அவனது உருவத்தைக் கல்லில் செதுக்கி நீரில் இடமாட்டாமையால், கையால் பாவை செய்து காவிரியாற்றில் எறிந்தனர் என்று, அகம், 181-ஆம் பாடல் கூறுகிறது. இச் சடங்கின் பயனாக, ஆய் எயினனின் ஆன்மா, சாந்தியுடன் வானுலகை அடைந்தது என்று உறுதியாக நம்பி அம் மகளிர் மனநிறைவுற்றனர். இவ் வெயினன், வாகை நகரின் தலைவனாகப் புறநானூறு 351-ஆம் பாடலில்* கூறப்படுகிறான். அதுவும் நன்னனுக்குரிய நகரமே. எயினனுக்கு நன்னன் அந் நகரைப் பரிசாக அளித்திருக்கலாம். அல்லது நன்னனின் பிரதிநிதியாக எயினன் அந் நகரில் ஆட்சி புரிந்திருக்கலாம்.

நன்னன்ஆய் என்பான் அழகிய பிரம்பு நகரின் தலைவன் என அகநானூறு 356-ஆம் பாடல் கூறுகிறது.† பிற பெயர்களில் குடும்பத்தைக் குறிக்க அடைமொழியாக வருவதாகிய 'ஆய்' என்பது இங்கு முன் அடைமொழியாக வரவில்லை. இரண்டு இயற் பெயர்கள் ஒன்றாகச் சேர்ந்து ஒருவனைக் குறிக்க வரும்போது, முன்னதைத் தந்தையின் பெயரென்றும், பின்னதை அவனது இயற் பெயரென்றும் கொள்வது வழக்கம். இவ் வழக்கத்தின்படி பார்த்தால் நன்னன் ஆய் என்ற பெயர், நன்னனின் மக

*வரி, 6. †வரி, 19.

ஞன ஆயைக் குறிப்பிடுகிறது எனக் கொள்ளல் வேண்டும். இந் நன்னனைக் கொண்கானம் கிழான் நன்னன் எனலாமா? இல்லையென்றுதான் கூறவேண்டும். ஆய் என்பது இயற் பெயர்ப் பொருளில் ஆதியில் யாருடைய இயற்பெயராக வேனும் இருந்திருக்கலாம். அல்லது, இங்குக் குறிப்பிடப் பெற்றவன் வேள் ஆய் ஆக இருக்கலாம். அவனை மட்டுமே வேறு எந்த அடையுமின்றி 'ஆய்' என்று புலவர்கள் குறித்துள்ளனர். இஃது உண்மையாயின், ஆயின் தந்தையே நன்னன் என்ற ஒரு புதுச் செய்தியும் நமக்குக் கிடைக் கிறது. அகநானூறு 258-ஆம் பாடலில் நன்னன் உதியன், அதாவது, நன்னனின் மகன் உதியன் என்பான் குறிப்பிடப் படுகிறான். 'நன்னன் உதியன் அருங்கடிப் பாழி' என வருதலால், பாழி நகர் அவனுக் குரியது எனத் தெரிகிறது. முன்னர், ஆய் எயினன் போர்க்களத்தில் மாண்டானாக, ஆங்கு வர அஞ்சிய, புகழ்பெற்ற, நன்னனுக்கு உரியது தான் பாழி நகரம். எனவே, இந்த நன்னனின் மகனே உதியன் என நாம் கருதலாம். அல்லது, இந்த 'நன்னன்' என்னும் அடைமொழி குடும்பத்தைக் குறித்தது என்றும் கொள்ளலாம். இதனாற்றான், 'நன்னன் நன்னன்' என வழங்கப்படவேண்டியவன், 'நன்னன் சேய் நன்னன்' என வழங்கப்படுகிறான் போலும்.*

'ஆய்' என்ற பெயர் இணைந்துள்ளதாகக் கூறக்கூடிய ஒரு பெயர் புறநானூற்றிற் காணப்படுகிறது. அது 'முரஞ்சியூர் முடிநாகர் ஆயர்',† என்பது. இப் பெயரை 'முரஞ்சியூர் முடிநாக ராயர்' எனக் கொண்டு, ராஜர் என்ற வடமொழிச் சொல்லின் திரிபே 'ராயர்' எனக் கூறப்படும் கருத்தை மறுப்பதில் யாருக்கும் கருத்துவேறுபாடு இராது என்று எண்ணுகிறோம். இப் பெயரின் இறுதிப் பகுதி 'ராயர்' அன்று எனக் கொண்டால், மேலே கூறப்பட்டபடி

---

*மலைபடுகடாம், 64. †புறம், 2.

புலவரின் பெயர் 'முரஞ்சியூர் முடிநாகர் ஆயர்' என்று கொள்வதுதான் பொருத்தமானதாகும். புலவர்கள் 'அர்' என்னும் விகுதியாற் சிறப்பிக்கப்பட்டார்கள். ஆதலால், 'அர்' விகுதியை நீக்கினால்தான் இயற் பெயரை அறிய முடியும். இவ்வாறு விகுதியை நீக்கிப் பார்க்கும்போது 'ராய்' என்பது பொருளற்றதாய்ப் போகிறது. ஆய் என் பது சிறந்த பொருள் தருவதாகின்றது. ஆனால், குடும்பம் அல்லது குடியின் பெயரான 'ஆய்' என்பது பெயரின் முன்னால் அடைமொழியாக வாராமல் பின்னால் அமைந்தது ஏன்? முடி நாகர் என்ற பெயரே ஆராய வேண்டிய ஒரு சுவையுடைய பெயராகும். நாகர் என்பது குடிப் பெயரா? அவ்வாறாயின் அக்கால இயற்கை வழக்கப்படி அஃது இயற் பெயரின் முன்னால் அமையாமல் பின்னால் அமைந்தது ஏன்? சில நாகர் குடிகள் தென்னிந்திய மக்களோடு உறவு பூண்டனராகக் கூறப்படுகின்றனர். ஆய் குடியின ருக்கும் நாகர்களுக்கும் உள்ள தொடர்பு யாது? அருவர் என்ற தலைப்பின்கீழ் இதுபற்றி மேலும் ஆராய்வோம்.

**2.** ஓவியர் (ஓவியர் பெருமகன்.........நல்லியக்கோடன்):

ஓவியர் பெருமகன் என்பது சங்க இலக்கியத்தில் வரு கின்ற ஒரு பெயர். சிறுபாணாற்றுப் படை, இவ் வள்ளலின் மேற் பாடப்பட்டதே. அந் நூலில் **'உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்'**—'தாக்குவதற்குச் சித்தமாக இருக்கும் புலியைப் போலும் வலிமையுடைய, ஓவியர் குடியில் தோன்றிய பெருமகன்'—என இவன் விளிக்கப்படுகிறான்.* **'ஆவி'** என்ற குடிப் பெயருக்கு ஆய் என்னும் மறுவடிவம் இருத்தல் போல, இங்கும் **'ஓவி'**யின் மறுவடிவமாக **'ஓய்'** என்னும் பெயர் இலக்கியத்திற் காணப்படுகிறது. ஓவியர் பெருமகன், **'ஓய் - மான்'** எனவும் அழைக்கப்பட்டான். இஃது **'ஓய் மகன்'** என்பதன் திரிபு. 'ஓய் குடியில் தோன்றி

*சிறுபாண், 122-126.

ஞன ஆயைக் குறிப்பிடுகிறது எனக் கொள்ளல் வேண்டும். இந் நன்னனைக் கொண்கானம் கிழான் நன்னன் எனலாமா? இல்லையென்றுதான் கூறவேண்டும். ஆய் என்பது இயற் பெயர்ப் பொருளில் ஆதியில் யாருடைய இயற் பெயராக வேனும் இருந்திருக்கலாம். அல்லது, இங்குக் குறிப்பிடப் பெற்றவன் வேள் ஆய் ஆக இருக்கலாம். அவனை மட்டுமே வேறு எந்த அடையு மின்றி 'ஆய்' என்று புலவர்கள் குறித்துள்ளனர். இஃது உண்மையாயின், ஆயின் தந்தையே நன்னன் என்ற ஒரு புதுச் செய்தியும் நமக்குக் கிடைக் கிறது. அகநானூறு 258-ஆம் பாடலில் நன்னன் உதியன், அதாவது, நன்னனின் மகன் உதியன் என்பான் குறிப்பிடப் படுகிறான். 'நன்னன் உதியன் அருங்கடிப் பாழி' என வருதலால், பாழி நகர் அவனுக் குரியது எனத் தெரிகிறது. முன்னர், ஆய் எயினன் போர்க்களத்தில் மாண்டானாக, ஆங்கு வர அஞ்சிய, புகழ்பெற்ற, நன்னனுக்கு உரியது தான் பாழி நகரம். எனவே, இந்த நன்னனின் மகனே உதியன் என நாம் கருதலாம். அல்லது, இந்த 'நன்னன்' என்னும் அடைமொழி குடும்பத்தைக் குறித்தது என்றும் கொள்ளலாம். இதனாற்றான், 'நன்னன் நன்னன்' என வழங்கப்படவேண்டியவன், 'நன்னன் சேய் நன்னன்' என வழங்கப்படுகிறான் போலும்.*

'ஆய்' என்ற பெயர் இணைந்துள்ளதாகக் கூறக்கூடிய ஒரு பெயர் புறநானூற்றிற் காணப்படுகிறது. அது 'முரஞ்சியூர் முடிநாகர் ஆயர்',† என்பது. இப் பெயரை 'முரஞ்சியூர் முடிநாக ராயர்' எனக் கொண்டு, ராஜர் என்ற வடமொழிச் சொல்லின் திரிபே 'ராயர்' எனக் கூறப்படும் கருத்தை மறுப்பதில் யாருக்கும் கருத்துவேறுபாடு இராது என்று எண்ணுகிறோம். இப் பெயரின் இறுதிப் பகுதி 'ராயர்' அன்று எனக் கொண்டால், மேலே கூறப்பட்டபடி

*மலைபடுகடாம், 64. †புறம், 2.

புலவரின் பெயர் 'முரஞ்சியூர் முடிநாகர் ஆயர்' என்று கொள்வதுதான் பொருத்தமானதாகும். புலவர்கள் 'அர்' என்னும் விகுதியாற் சிறப்பிக்கப்பட்டார்கள். ஆதலால், 'அர்' விகுதியை நீக்கினுல்தான் இயற் பெயரை அறிய முடியும். இவ்வாறு விகுதியை நீக்கிப் பார்க்கும்போது 'ராய்' என்பது பொருளற்றதாய்ப் போகிறது. ஆய் என்பது சிறந்த பொருள் தருவதாகின்றது. ஆனல், குடும்பம் அல்லது குடியின் பெயரான 'ஆய்' என்பது பெயரின் முன்னுல் அடைமொழியாக வாராமல் பின்னுல் அமைந்தது ஏன்? முடி நாகர் என்ற பெயரே ஆராய வேண்டிய ஒரு சுவையுடைய பெயராகும். நாகர் என்பது குடிப் பெயரா? அவ்வாருயின் அக்கால இயற்கை வழக்கப்படி அஃது இயற் பெயரின் முன்னுல் அமையாமல் பின்னுல் அமைந்தது ஏன்? சில நாகர் குடிகள் தென்னிந்திய மக்களோடு உறவு பூண்டனராகக் கூறப்படுகின்றனர். ஆய் குடியினருக்கும் நாகர்களுக்கும் உள்ள தொடர்பு யாது? அருவர் என்ற தலைப்பின்கீழ் இதுபற்றி மேலும் ஆராய்வோம்.

**2.** ஓவியர் (ஓவியர் பெருமகன்.........நல்லியக்கோடன்):

ஓவியர் பெருமகன் என்பது சங்க இலக்கியத்தில் வருகின்ற ஒரு பெயர். சிறுபாணாற்றுப் படை, இவ் வள்ளலின் மேற் பாடப்பட்டதே. அந் நூலில் **'உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்'**—'தாக்குவதற்குச் சித்தமாக இருக்கும் புலியைப் போலும் வலிமையுடைய, ஓவியர் குடியில் தோன்றிய பெருமகன்'—என இவன் விளிக்கப்படுகிருன்.* **'ஆவி'** என்ற குடிப் பெயருக்கு ஆய் என்னும் மறுவடிவம் இருத்தல் போல, இங்கும் **'ஓவி'**யின் மறுவடிவமாக **'ஓய்'** என்னும் பெயர் இலக்கியத்திற் காணப்படுகிறது. ஓவியர் பெருமகன், **'ஓய் - மான்'** எனவும் அழைக்கப்பட்டான். இஃது **'ஓய் மகன்'** என்பதன் திரிபு. 'ஓய் குடியில் தோன்றி

*சிறுபாண், 122-126.

அக் குடியின் தலைவனாக விளங்கியவன்' என்பது இதன் பொருள். ஆய், ஆவி என்ற சொற்களின் படைப்பில் உள்ள இலக்கணமே ஓவியர் மகன், ஓய்மான்; ஓவி, ஓய் என்ற சொற்களின் படைப்பிலும் அமைந்துள்ளது. ஓவி, ஓய் என்ற இரு சொற்களும் ஒரே சொல்லின் இரு வடிவங்களே என்பதில் ஐயமில்லை. இஃது உறுதியாயிருப்பதால்தான், ஆய், ஆவி என்பன ஒரே சொல்லின் இரு வடிவங்கள் என்ற நமது கருத்தும் வலியுறுகிறது.

ஓவியர் பெருமகன் எனச் சிறப்பித்துக் கூறப்படுபவன் நல்லியக்கோடன் என்பான்.* அவனுடைய கொடைப் பண்பு, வீரம், நாடு, தலைநகரம் ஆகியன சிறுபாணாற்றுப் படையில் புகழப்படுகின்றன. இசைக்கருவிகள் சிலவற்றைக் கொண்டு இசை யெழுப்பும் கோடியர் என்னும் கூட்டத்தாரை,† அவன் ஆதரித்தவன். அந்த இசைக் கருவிகளிலிருந்தே பிற்காலத்தில் நாகசுரமும் இன்னும் சில இசைக் கருவிகளும் தோன்றி வளர்ந்தன என்பர். இயங்களினின்றும் தோன்றும் இசையில் அவனுக்கு மிக்க ஈடுபாடும், அவற்றை இயக்குவதில் மிக்க பயிற்சியும் இருந்தமையால், நல்லியக்கோடன் என்றே அவன் அழைக்கப்பெற்றான். இலங்கையை ஆண்டவனும் யாழ்க்கொடியை உடையவனுமான இராவணன், இசையில் வல்லோனாக இருந்தது போல மாவிலங்கை யென்னும் ஊரிலிருந்து ஆண்ட நல்லியக் கோடனும் இசையில் வல்லோனாக இருந்தது வியத்தற்குரியதாகும். தென் ஆர்க்காட்டு மாவட்டத்தில் இப்போது திண்டிவனம் தாலூகா இருக்கும் பகுதியில்தான் மாவிலங்கை யென்னும் நகரம் இருந்தது. இதைச் சுற்றி இருந்த நாட்டிற்கு ஓய்மான்நாடு என்பது பெயர். இசை பாடுவோர், நல்லியக்கோடனைப் புகழ்வதோடு, அவனுடைய தந்தையையும் புகழ்ந்து பாடுவதாகச் சிறுபாணாற்றுப்படை

*சிறுபாண், 126, 269. †பல் இயக்கோடியர், சிறுபாண், 125.

யின் ஆசிரியர் கூறுகிறார். ஆயின் தந்தையின் பெயர் அப் பாடலில் யாண்டும் கூறப்படவில்லை; வேறு எந்தப் பாடலிலும் இல்லை. நன்னாகனார் என்னும் புலவர் நல்லியக் கோடனைப் புறம், 176-இல் பாடியிருக்கிறார். இவரே நல்லியாதன் என்பானைப் புறம், 376-ஆம் பாடலிலும், வில்லியாதன் என்பானைப் புறம், 379-ஆம் பாடலிலும் பாடுகிறார். இவ்விருவரும் - ஓய்மான்கள் - ஓவியர் குடியைச் சேர்ந்தவர்கள் எனக் கூறப்பெறுகிறார்கள். புறம், 376-ஆம் பாடலகத்துள் ஓய்மான் நல்லியாதன் பெயரைப் பற்றித் திட்டமான குறிப்பொன்றும் இல்லை.

அப் பாடலில் வரும் வள்ளலின் பெரிய வீட்டில் உள்ள நெற் கூட்டிற்கு அருகில் நிற்கும் பாணனைப் பற்றிப் புலவர் பாடுகிறார். இதிலிருந்தே, அவ் வள்ளல், அரசனாகவோ, குறுநில மன்னனாகவோ இருத்தல் முடியா தென்பது தெரிகிறது. எனவே, இவனையும் சிறுபாணாற்றுப்படையின் தலைவனாகிய நல்லியக்கோடனையும் ஒருவரெனக் கொள்வதற்கு இடமில்லை. இவன் ஓவியர் குடியைச் சேர்ந்தவனாக இருக்கலாம்; ஆனால், அரசனுடைய அதிகாரிகளில் ஒருவனாக இருந்திருக்கவேண்டும். இப் பாடலின் கொளு இப் பாடலை ஓய்மான் நல்லியாதனுக் குரியதெனக் கூறுவது தவறாகும் எனத் தோன்றுகிறது.

நன்னாகனாரே ஓய்மான் வில்லியாதனைப் பற்றிப் புறம், 379-இல் பாடுகிறார். அப் பாடலிலேயே ஓய்மான் வில்லியாதனுடைய பெயர் வருகிறது. நல்லியாதன் என்னும் பெயர் வேறு எங்கும் காணப்படவில்லை. எனவே, நல்லியக்கோடன், வில்லியாதன் என்ற இரு பெயர்களையும் கலந்து குழப்பியதனால் வந்தவினையே நல்லியாதன் என்னும் பெயர் எனலாம். மேற்சொன்ன புறம், 376-ஆம் பாடலின் கொளு தவறானது என்ற கருத்தை இது மேலும் வலியுறுத்துகிறது.

புறம், 379-ஆம் பாடலையும் அதன் கொளுவையும் சேர்த்துப் படிக்கும்போது சிறிது திகைப்பு ஏற்படுகிறது. இப் பாடல் வில்லியாதனை விளித்துப் பாடப்பெற்றதன்று. 'பெரும' என்று வேறு யாரையோ புலவர் விளிக்கின்றார்.* ஆனால், அப்பெருமானுடைய பெயர் இப்பாடலில் காணப் படவில்லை. அஃது இருந்துதான் ஆகவேண்டும். உயர்ந்த மதிலாலும் ஆழமான அகழியாலும் சூழப்பட்டதும், செல்வம் நிறைந்த அரண்மனையிலிருந்து எழும் புகை கடைவீதியைச் சூழ்ந்து முகில் கூட்டத்தைப்போல மணக்கும் காட்சியுடையதும் ஆகிய ஒரு நகருக்குக் கிணைவன் வந்துள்ளதாகப் புலவர் பாடுகிறார். இப் பாடலின் 6-ஆம் அடியில் 'இலங்கைகிழவோன்' என்ற பெயரை விளியாகக் கொள்ள வேண்டும். விளியாகும்போது சேய்மை விளியாயின் ஈற்றயல் ஓகாரம் மூன்று மாத்திரையாக ஒலிக்கும். இஃது அண்மையிலுள்ளவரை விளிக்கும் விளியாயின் இந்த மாத்திரை நீட்டம் பெறத் தேவையில்லை. இங்குப் படர்க்கைப் பெயர், முன்னிலைப் பெயராக மாற்றப்படவேண்டும். எனவே, அத் தொடரின் சரியான வடிவம், 'இலங்கை கிழவோய்' என்று இருத்தல் வேண்டும். கிணைவனின் பேச்சுத் தொடர்கிறது: "எங்கள் துன்பங்களை நீ களைவாய் என்று உன்னுடைய கிணைவன் உறுதி கூறினமையால் நான் உன்பால் வந்திருக்கிறேன்" என்கிறான் அவன்.† கிணைவர்களை அதுவரை ஆதரித்த வள்ளல் இறந்துவிட்டான் எனத் தோன்றுகிறது. இவ் விளக்கம் சரியாயின், இப் பாடலில் வரும் பேச்சைப் பேசுகின்றவன் விற்றொழிலில் வல்ல வில்லியாதனின் கிணைவன் ஆவன். வில்லியாதன் யார்? புறம், 153-ஆம் பாடல் வல் வில் ஓரி என்பானைப் புகழ்ந்து பாடுகிறது. இப் பாடலில் இவன் 'ஆதன் ஓரி' எனப் பேசப்படுகின்றான். இப் பெயருக்கு, ஆதனின்

*7-ஆம் வரி. †வரிகள் : 10-14.

மகன் ஓரி என்று விளக்கம் கொள்ளவேண்டும். அல்லது ஓரி நிறம் (தேனின் நிறம்) உடைய ஆதன் என்றும் கொள்ளலாம்.* வல்வில் ஓரியின் இயற்பெயர் ஆதன் என்பதானல், அவனே இங்கும் குறிக்கப்பெறும் வில்லியாதன் எனலாம். அல்லது, ஆதன் என்பது வல்வில் ஓரியின் தந்தை பெயராயின், அத் தந்தையே இங்கு வில்லியாதன் எனக் குறிக்கப்படுகிருன் எனக் கருதுதல் பொருந்தும். எவ்வாருயினும், புறம், 379-ஆம் பாடலின் கொளுவும் தவருனது என்றே கொள்ளவேண்டியிருக்கிறது. இப் பாடலின் 14-ஆம் அடியின் முன்பாதியைக் கறையான் அரித்ததுபோல, இப் பாடல் யார்மேற் பாடப்பட்டதோ அவ் வள்ளலைப்பற்றிப் புனைந்துரைக்கும் வரிகள் சிலவற்றையும் அஃது அரித்திருக்கவேண்டும். இஃதுண்மையாயின் ஓய்மான் நல்லியக் கோடனே, அல்லது ஓய்மான் நல்லியக் கோடனுக்குப்பின் அரசேற்றவனே, அல்லது அவனுக்கு முன்னர் அரசு புரிந்தவனே வில்லியாதன் என்ற பெயரால் அழைக்கப்பெற்றிருக்கவேண்டும். ஏனெனில், புறம், 379-இல் வில்லியாதனைப் பாடிய நன்னகனர் புறம், 176-இல் நல்லியக் கோடனையும் பாடியுள்ளார். ஆயின், வில்லியாதன், நல்லியாதன் என்பவை நல்லியக் கோடனின் பட்டப் பெயர்களாகும் எனக் கொண்டால், இப் பெயர்களுக்கு நல்-இய-ஆதன் (இசைக் கருவிகளில் வல்ல சிறந்த ஆதன்) என்றும், வில்-இய-ஆதன் (வில்லிலும் இசைக் கருவிகளிலும் வல்ல ஆதன்) என்றும் பொருள் கொள்ளவேண்டும். ஆனல், இவ்வாறு பொருள் கொள்ளும்படி பிரிக்கப்பட்டவை இலக்கணப்படி வில்லியவாதன் என்றும் நல்லியவாதன் என்றுமே அமையவேண்டும். எனவே, இவற்றை விகாரம் பெற்றுப் புணர்ந்த பெயர்கள் என்று கொள்ளவேண்டி வரும். புறம், 379-ஆம் பாட

---

*4-ஆம் வரி.

லின் இசைப்போக்கு வில்லியாதன் என்ற தொடரை வில்லி ஆதன் என்று பிரிப்பதற்கே ஏற்றதாக அமைந்துளது. 'தன் ஒழி மெய்ம்முன் யவ்வரின் இகரம் துன்னும்' என்ற பிற்கால இலக்கண வழக்கப்படி வில்லியாதன் நல்லியாதன் என்பனவற்றை வில், யாதன்; நல், யாதன் என்ற சொற்கள் சேர்ந்து அமைந்தனவாகக் கொள்ளலாமா? அவ்வாறு கொள்ளலாம் என்ருலும், சங்க இலக்கியத்தில் **ஆதன்** என்ற இயற்பெயர்வழக்கு அறியப்படுகிறதேயன்றி, **'யாதன்'** என்னும் பெயர்வழக்கு அறியப்படவில்லை. உண்மையில், **யாதன்** என்பதுதான் இயல்பான வடிவம் என்றும் ஆதன் என்பது அதன் திரிந்த வடிவம் என்றும் கொள்வதில் தடை யொன்றும் இல்லை. ஆனல், ஐயத்திற்கிடமான இந்த இடத்தில்மட்டும்தான் **யாதன்** என்ற வடிவம் காணப்படுகிறது. வேறு எங்கும் காணப்படவில்லை. [வாழியாதன் என்பதில் யகரம் உடம்படுமெய் என்பர்.] **ஆ** என்னும் அடிச் சொல்லும் ஒருத்தன் என்பது போன்ற சொற்களில் காணப்படும் பொருட் சிறப்புக் குறிக்கும் **'து'** என்ற உறுப்பும், **அன்** விகுதியோடு சேர்ந்து **ஆதன்** என்று ஆகும். படைப்பவன் அல்லது பொருள்களை வளமாக்குகின்றவன் என்பதை **ஆதன்** என்ற இச் சொல்லுக்குப் பொருளாகக் கொள்ளலாம். இதற்கு மாருக, 'அழிசி', 'அவினி' என்ற சொற்கள் அழிப்பவன் என்ற பொருளைத் தருவன. யாதன் என்பதே (யா, து, அன்) இயல்பான வடிவம் எனக் கொண்டால், 'யா மரத்தமர் கடவுள்',* என அதற்குப் பொருள் கொள்ளலாம். சங்க காலத்தில் பரந்த வழக்கினதா யிருந்த மரத்துறை கடவுள் வழிபாட்டுமுறையின்படி இப் பொருள் பொருந்துவதே யாகும்.

மேலே கண்ட புறப் பாடல்களின் கொளுக்கள் உண்மையான வடிவில் காலப்போக்கினல் அப்படியே

*குறு, 232 : 4-5.

நமக்குக் கிடைக்காமையினாற்றான் இவ்வாறெல்லாம் பொருட் குழப்பம் செய்து நாம் அல்லலுற வேண்டியிருக்கிறது. இவைபோன்ற தவறான கொளுக்களைத் துணையாகக் கொண்டு பழந் தமிழ்நாட்டின் வரலாற்றை எழுத முற்படும் வரலாற்றாசிரியனின் நிலை உண்மையிலேயே வருந்தத்தக்கதுதான்.

ஓய்மான் வில்லியாதனும் நல்லியக் கோடனும் வேறு வேறானவர் ஆயின், 'ஓய்' குடியில் ஒருவருக்கு மேற்பட்ட மன்னர்கள் புகழ் பெற்றவர்களாய்ச் சங்க காலத்தில் இருந்தனர் எனல் வேண்டும். ஓய்மான் நாடு சங்க காலத்திற் சிறந்திருந்தது போலப் பிற்காலத்திலும் சிறந்திருந்தது. **ஓமாம் புலியூர்** என்ற ஓரூரின் பெயர்க்கு வேள்வித் தீயை (ஓமம்) யுடைய புலியூர் என விளக்கந் தரப் பிற்காலத்தார் முயன்றிருக்கின்றனர். உண்மையில் அஃது ஓய்மான் நாட்டில் இருந்தமையால், சோழ நாடு முதலிய பிற நாடுகளில் உள்ள புலியூர்களினின்றும் வேறுபடுத் தறிவதற்தாக ஓய்மான் புலியூர் எனப் பெயர்பெற்று, காளாவட்டத்தில் ஓமாம் புலியூர் என மருவியது. ஓமத்திற்கும் (ஹோமத்திற்கும்) அவ்வூர்க்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

### 3. வேளிர் (வேள் ஆய், வேள் எவ்வி, வேள் பாரி முதலியோர்):

ஆவி முதலிய குறுநில மன்னர்கள் வேள் என்னும் அடைமொழியைப் பெற்றிருக்கிறார்கள். மகள் என்பது பன்மையில் மகளிர் என்று ஆதல்போல, வேள் என்பது பன்மையில் வேளிர் என ஆதலைச் சங்க காலத்திற் பலவிடங்களில் காணலாம்.* எனவே, சங்க காலத்தில் தமது இயற் பெயரோடு வேள் என்னும் அடைமொழியைப் பெற்ற மக்கள் எல்லோரும் 'வேளிர்' குடி அல்லது வேளிர்

*புறம், 24, 201; அகம், 135, 206, 246; நற், 280; பதிற், 30, 49,75, 88.

குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கொள்ளலாம். வேளி ருடைய பெருங்குடியில் பல்வேறு கிளைக்குடிகள் இருந்தன என்பது ஆராய்வார்க்குப் புலனாகும்.

மேலே குறிப்பிட்ட பதிற்றுப்பத்துப் பாடல்கள் நான் கிலும் 'வேந்தரும் வேளிரும்' என வேந்தரோடு வேளிர்கள் ஒருங்குசேர்த்தே கூறப்பட்டிருத்தலை நாம் காண்கிறோம். "பணிகெழு வேந்தரும் வேளிரும் ஒன்று மொழிந்து கடல வும் காட்டவும் அரண் வலியார் நடுங்க" எனப் பதிற்றுப் பத்தில் பல்யானைச் செல்கெழு குட்டுவன் பாராட்டப் படுகிறான்.* "வெற்றி பொருந்திய போரைச் செய்யும் வேந்தரும் வேளிரும் ஒன்று மொழிந்து உன்னுடைய ஆணைகளை ஏற்றார்கள்" எனச் செங்குட்டுவன் அந் நூலிற் புகழப்படுகிறான்.† "வேந்தரும் வேளிரும் பிறரும் உனக் குக் கீழ்ப்படிந்து உன் வழியில் வாராராயின்" என்று, அரிசில் கிழார் பெருஞ்சேர லிரும்பொறையைப் புனைந் துரைக்குங்கால் கூறுகிறார்.‡ "வேந்தரும் வேளிரும் பின் வந்து பணியக் கொற்றம் எய்திய பெரியோர் மருக" என இரும்பொறை ஏத்தப்படுகின்றான்.§

இவ்வடிகளில் வேந்தர் எனக் குறிப்பிடப்பெறுபவர் முடியுடை மன்னர்களே. தொல்காப்பியர் காலந் தொட் டுப் பாண்டிய சோழ சேரர்களை மட்டுமே தமிழ் நாட்டு மூவேந்தராகத் தமிழகம் போற்றிவந்துளது; மற்ற அரசர் கள் எவ்வளவு மேம்பட்டவராயினும் அவர்களை 'வேந்தர்' என அழைப்பதில்லை. தமிழகத்திற்கு வெளியே ஆட்சி செலுத்திவந்த மற்ற மன்னர்கள் வேண்டுமானால் வேந்தர் கள் என அழைக்கப்பெற்றார்களே தவிரத் தமிழகத்தில் மற்றவர்கள் அவ்வாறு அழைக்கப்பெறவில்லை. இவர், ஒன்றுபட்ட தமிழகத்தைப் பண்டை மூவேந்தர் ஆட்சியி லிருந்து குலைப்பது பெருங்கேடாகக் கருதப்பட்டது.

*பதிற், 30 : 30-31. †பதிற், 49 : 7-8.
‡பதிற், 75 : 4-5. §பதிற், 88 : 13-14.

மூவேந்தர்களுக்கு மேல் வேந்தர்கள் என மற்றவர்களை ஏற்பதென்றால் தமிழகத்தில் ஒற்றுமையை வேரழிப்பதாகும் எனக் கருதப்பட்டது. தமிழகத்தில் இருந்த பிற குறுநில மன்னர்களுக்குத் தமிழகத்திற்கு வெளியே உள்ள நாடுகளைக் கைப்பற்றவேண்டும் என்ற வேட்கை எப்போதும் இருந்தே வந்தது. பட்டினப்பாலை 274-ஆம் வரியான "பல் ஒளியர் பணிபு ஒடுங்க" என்பதற்கு உரை எழுதுங்கால், நச்சினார்க்கினியர், தமிழகம் தவிர வேறு நாடுகளை ஆள்வதற்கு வேளிர்கள் உரிமை யுடையவர் என்று குறிப்பிடுகிறார். வேந்தர்களினின்றும் வேளிர்கள் வேறுபட்டவர் என இங்குக் காட்டப்பட்டது, நச்சினார்க்கினியர் கருத்திற்கு அரண் செய்வதாயுள்ளது. இவ் வேற்றுமையைப் பற்றி டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"ஆள்வதற்கு உரிமை உடையவை என அங்கீகரிக்கப்பட்ட இனங்கள் இரண்டேயாகும். அவற்றுள் முதல் இனம் அரசுரிமையுடைய நாடுகளையும் எல்லை வரையறுக்கப்பட்ட மண்டலங்களையும் ஆண்டுவந்தது. இரண்டாம் இனம் எல்லை வரையறுக்கப்படாத இடங்களில் அரசாட்சி நடத்திவந்தது. இடைவிடாத போர்களில் ஒருவர் கையை விட்டு மற்றொருவர் கைக்கு மாறிக்கொண்டே இருப்பனவாய் அந்த இடங்கள் அமைந்தன. அடிக்கடி போரிடுவது அல்லது போர் செய்யச் சித்தமாயிருப்பது இவருடைய தனிப் பண்பாய் அமைந்தது. இவர்கள் அர்த்தசாஸ்திரத்தில் வரும் எல்லைப்புற அதிகாரிகள் அல்லது பிற்கால வரலாற்றில் வரும் 'அடவிக' சாமந்தர்கள் (காடுகளில் உள்ள குடிகளுக்குத் தலைவர்கள்) போன்றவர்கள்."* எனவே, இடைக்காலத்தில் பேரரசர்களுக்குக்

---

*Ancient India and South Indian History and Culture, p. 445.

கப்பம் கட்டி ஆண்டுவந்த சிற்றரசர்களைப் போன்றவர்களே வேளிர்கள் என்று கூறுவது ஒருவாறு பொருத்தமுடையதாகும்.

அசோகருடைய கட்டளைகளில் சேர, பாண்டிய, சோழரோடு சாதிய புத்திரர்களையும் சேர்த்துக் கூறியிருப்பது வரலாற்றுசிரியர்கள் பலர் உள்ளத்திலும் தடுமாற்றத்தை உண்டாக்கியிருக்கிறது. வேந்தரும் வேளிரும் என்ற இச் சொற்றொடர் அத் தடுமாற்றத்தைப் போக்குவதற்குச் சிறிது வழிகோலுவதுபோல் காணப்படுகிறது. வேளிர்கள் வாய்மைக்குப் பேர்போனவர்கள்; தமிழ் நாட்டு வீரர்களும் தலைவர்களும் தாங்கள் போருக்குப் போகுமுன், கொற்றவையைத் தமக்கு வெற்றி தருமாறு வேண்டிக்கொள்வர்; அவ்வாறு தங்களுக்கு வெற்றி கிடைத்தால் தங்கள் தலையையே பலியாகத் தருவதாகச் சூள் உரைப்பர்; வெற்றி பெற்றுத் திரும்பி வந்ததும் தாங்கள் வஞ்சினம் கூறியவாறே தங்கள் தலையைக் கொற்றவைக்குப் பலியிடுவர். இவ்வாறு 'வெல்வது அல்லது விழுப்புண் பட்டு மடிவது' என்ற உறுதியுடனேயே அவர்கள் அடிக்கடி போர்க் களத்துக்குச் செல்வது வழக்கம்.*

சங்க கால வீர மன்னர்கள் போர் குறித்து மொழிந்த வஞ்சின மொழிகளைப் புறநானூறு 71, 72, 73-ஆம் எண்ணுள்ள பாடல்களிற் காணலாம். இப் பாடல்களில் அரசர்களின் வஞ்சின மொழிகளே காணப்படுகின்றன எனினும், இவற்றிலிருந்து அக் காலத் தமிழ் வீரர்களின் பொதுவான உளப்பாங்கை நாம் உணர்ந்துகொள்ளலாம். வேள் என்ற சொல்லுக்கு விருப்பம் அல்லது ஆவல் என்பது பொருள். தாம் கூறிய உறுதிமொழியைக் காப்பதைத் தம் கடமையாகக் கொண்டவரே வேளிர் என்ற அச் சொல் குறிப்பிடுவதாக நாம் கொள்ளலாம்.

---

*தொல், பொருள், சூத்திரம், 58-உரை; புறப்பொருள் வெண்பாமாலை, உழிஞை, 12.

திரு. சிவராச பிள்ளையவர்கள், வேளிர்களுள் ஒருவருக்கு உரிமையானதும், பிற்காலத்தில் வேணாடு என அழைக்கப்பட்டதுமான ஆய்நாடு, இந்திய தீபகற்பத்தின் தெற்குக் கோடியின் நடுவே தென் வடலாக அமைந்து, கிழக்கே சோழ பாண்டிய நாடுகளும் மேற்கே சேர நாடும் இருக்குமாறு தமிழகத்தைப் பிரித்தது என்று கூறுகிறார்.* ஆயரும், அசோகருடைய பாறைக்கட்டளை XIII-இல் ஹிடராஜாக்கள் என்று குறிப்பிடப்பெறுபவர்களும் இந்த ஆய்களே ஆவர் என்று அவர் கூறுகிறார். மூவேந்தரின் நாடுகளோடு, ஆய்க்கெனத் தனி நாடு ஒன்று தமிழகத்தில் இருந்தது என்ற தம் கொள்கைக்கு அரணாகத் தாலமியின் கூற்றை அவர் ஆதாரமாகக் கொள்ளுகிறார். பழைய வரலாற்றுச் சான்றான அசோகர் கட்டளைகள் கூறும் செய்தியை வைத்துக்கொண்டு நோக்கும்போது ஆய் நாட்டைப்பற்றித் தாலமி குறிப்பிடுவதன் கருத்தைப் பொருட்படுத்தாமலிருப்பது முற்றிலும் நெறி தவறியதும், பிறழ உணர்ந்ததும் ஆன செயலாகும் என அவர் கூறி முடிக்கிறார்.†

"அசோகருடைய கல்வெட்டுக்களில் காணப்படும் சாதிய புத்திரர் என்ற நான்காம் அரச குடியினரைப்பற்றி அதே பெயராகச் சங்க இலக்கியத்தில் யாண்டும் காணப்படவில்லை. அவர்களுடையதென நாம் இயல்பாகக் கருதக் கூடிய நாட்டுப் பகுதி, பெண் கொலை புரிந்தவன் எனப் பிற்காலத்தவரும் நன்குணர்ந்த நன்னனிடம் இருந்திருக்கிறது. அவன் துளு நாட்டிற்கும் இக் காலத்தில் கொண்கான் எனக் குறுகி வழங்கும் கொண்கானத்திற்கும் மன்னன் எனச் சங்க இலக்கியம் கூறுகிறது" என

*The Chronology of the Early Tamils, p. 106.

†The Chronology of the Early Tamils, p. 169.

டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் எழுதுகிறார்.*

இந்தப் பகுதி வேளிர்கள் நாடாகிய வேணாடு என்பதற்கு முழுதும் பொருத்தமாக இருப்பதால் வேளிர்களே சாதிய புத்திரர் எனப்பட்டவர் எனக் கொள்ளலாம்.

அசோகரின் கல்வெட்டுச் சேரர் அல்லது கேரள புத்திரரையும், சாதிய புத்திரரையும், புத்திரர் என்ற பின் அடைசேர்த்தே வழங்குகின்றது. இங்ஙனம் கூறியிருப்பதில், இக் காலத்தில் மலையாளத்தில் உள்ள மருமக்கட்டாயமும், தென் கன்னடத்தில் உள்ள அப்பயசந்தான முறைமையும் போன்றதொரு தாய்வழி உரிமை அமைப்பு இருந்ததெனச் சிலர் கொள்கின்றனர். பதிற்றுப் பத்தில் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் உள்ள பதிகத்திற்கு இக் கருத்துக்கு அரண் செய்கிறவகையில் பொருள்கூறும் முயற்சிகளும் ஏற்பட்டன. மருமக்கட்டாய முறைப்படி பொருள் கூறுவது பொருத்தமாகும் என நாம் ஒப்புக்கொண்டால் ஏறத்தாழ எல்லாப் பதிகங்களிலும் குறிக்கப்பெறும் இளவரசர்களும் வேளிர்களுடைய மைந்தர்களாகவே அமைவார்கள். வேளிர்களைச் சாதிய புத்திரர்களே எனக் கொள்வதற்கு இஃதொரு சான்றாக அமைந்துவிடும். ஆனால், மருமக்கட்டாய முறையாகப் பொருள் கூறுவதைச் சிறிதளவும் ஐயமின்றிச் சரி என ஏற்கலாம் என்று நிறுவுவது அருமையாகும்.

வேளிர்கள், வேந்தர் பரம்பரையினர் அல்லராயினும் வேந்தர்கள் மணந்துகொள்ள அவர்களுக்குப் பெண் கொடுக்கும் தனி உரிமை பூண்டவர் என நச்சினார்க்கினியர் கூறும் குறிப்பு ஈண்டு நினைவுகூர்தற் குரியதாகும்.

"உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி அழுந்தூர் வேளிடை மகட் கோடலும், அவன் மகனாகிய கரிகாற்

---

*Ancient India and South Indian History and Culture, p. 43.

பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட் கோடலும்."* என்பது காண்க. ஈண்டுவரும் 'மகட் கோடல் என்பது' மகளை மணந்துகொள்ளுதல் எனப் பொருள்படும்.

இவ்வாற்ருல், தமிழக முடிமன்னர் மூவருடனும், வேளிர்கள், குடும்பத் தொடர்புள்ளவர்களாகத் திகழ்ந்தனர் என்பது தெரிகிறது. நன்னன் என்பான் நன்னன் உதியன் என அழைக்கப்படுதலால் அவன் சேரரோடு உறவு கொண்டவன் என்பது தெளிவாகும். நல்லடி வல்லங்கிழான் என்பான் சோழர் குடியில் தோன்றியவன் எனத் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளான். "சோழர் மருகன்.........வல்லங்கிழவோன் நல்லடி"† என்பது காண்க. எனவே, வேளிர் என்பார் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றும், அவரினின்றும் வேறுபட்டவ ரல்லர் என்றும் துணிந்து கூறலாம். மன்னர் குடும்பங்களில் இளையர்களாகப் பிறந்த அவர்கள், தங்களுக்கெனத் தனியரசு அமைத்துக்கொள்ளுவதற்காகத் தமிழகத்தை விட்டு வெளிநாடுகளுக்குச் செல்லுபவர்கள் என்று கொள்ளலாம் போல் தோன்றுகிறது.

ஐரோப்பாவில், இடைக்காலத்தில், பேரரசர்களுக்குக் கப்பம் கட்டி ஆண்டுவந்த சிற்றரசர்கள் அல்லது கீழ்க்குடித் தலைவர்களைப்‡ போன்றவர் வேளிர் என முன்பே குறிப்பிட்டோம். ஆயின், வேளிர் என்பார் சாதிய புத்திரரே என்ருல், தன்னுரிமையுடன் ஆட்சி புரிந்துவந்த இவர்களுக்கு அரசியல் ஒற்றுமையைத் தமிழகத்தில் நிறுவமுற்பட்ட பிற்காலத்தில், கீழ்க்குடித் தலைவர்களாகும் நிலைமை ஏற்பட்டது எனலாம். சங்க காலத்தில் முடியுடை வேந்தர்களுக்கு வேருக எழுபெருவள்ளல்கள் குறுநில மன்னர்களாகத் தமிழகத்தில் இருந்தார்கள் என்பது

*தொல், அகத்திணை, 30. நச்சி, உரை, பக்கம், 97.

†அகம், 356 : 12-14. ‡Feudal Chiefs.

தெரிகிறது. இந்த வேறுபாட்டைக் கண்டே போலும், வேளிர்கள் முடியுடை வேந்தராக என்றுமே இருந்ததில்லை என்று நச்சினார்க்கினியர் கருதலானார். ஆனால், பண்டைய முடியுடை மூவேந்தரோடு முடிமன்னர்கள் எழுவரைப் பற்றிச் சங்க இலக்கியம் குறிக்கின்றது. இவ்வெழுவரும் மூவேந்தராலோ, அவருள் ஒருவராலோ தோற்கடிக்கப் பட்டனர். அவர்களைத் தான் ஒருவனே ஒருகால் வென்ற தற்கு அறிகுறியாக எழுவருடைய முடிகளையும் சேரன் மாலையாக அணிந்து கொண்டான். "எழுமுடி கெழீஇய திருஞெமர் அகலத்து நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை"* என இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் விளிக்கப்படுவது இம் முறை பற்றியேயாகும்.

"விழுமியோர் துவன்றிய அகன்கண் நாட்பின் எழுமுடி மார்பின் எய்திய சேரல்"† எனச் செங்குட்டுவன் பாராட்டப்பெற்றிருத்தலும் காண்க.

எனவே, வேளிரும் ஒரு காலத்தில் முடிமன்னராயிருந் தனர் எனக் கருதுவது பொருத்தமேயாகும்.

தமிழ் நாட்டில் மூவேந்தர் என்ற மரபு உறுதியாக நிலைபெற்றுவிட்ட காலத்திலும் வேளிர்கள் தம் விதியை எண்ணி அடங்கி ஒடுங்கிவிட்டார்கள் என்று கூறுவதற் கில்லை. வாய்ப்பு ஏற்பட்டபோதெல்லாம் அவர்கள் தங்கள் முன்னைய உரிமையான தலைமையை மீண்டும் எய்த முயன்றுகொண்டிருந்தனர். தங்களை அடியோடு ஒழித்து விடும் அளவிற்கு முடிவேந்தர்கள் ஆற்றலில் ஓங்கி உயர்ந்து நிற்க அவர்கள் என்றும் இடம் கொடுக்கவே யில்லை. ஒரு முடிவேந்தன் தானே தமிழகம் முழுமைக்கும் தனித் தலைவனாகவேண்டும் என்று முற்படும்போதெல்லாம் இந்த வேளிர்கள் அனைவரும் ஒருங்கு சேர்ந்து அவனை

*பதிற், 14 : 11-12. †பதிற், 45 : 5-6.

எதிர்ப்பது வழக்கம். மற்ற இரண்டு முடிமன்னர்களுட னும் இவர்கள் கூடிநின்று மூன்றும் முடிமன்னனை எதிர்த்து அவனைத் தனித்தலைவன் ஆகாதபடி ஒடுக்கிவிடு வதும் வழக்கம்.

"சூட்டப்படாத வாகையாகிய போர்க்களத்தில், (வாகைப் பறந்தலையில்) கரிகாற் பெருவளத்தானின் முன் னால் வர அஞ்சிய பெருமையில்லாத மன்னர்கள், தங்கள் ஒன்பது குடைகளையும் பட்டப்பகலில் போட்டுவிட்டுப் புறங்காட்டி ஓடினர். அவர்களைப்போல, வாடையே, நீயும் எம்முன் நில்லாமல் ஓடப்போகிறாய்"* என வாடையை நோக்கித் தலைவி கூறுவதாக இங்குக் குறிக்கப்பட்ட கூற் றில், ஒன்பது மன்னர்கள் கரிகாலனை எதிர்த்துப் போரிட் டனர் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. இவருள் இருவர், சேரரும் பாண்டியரும் ஆகலாம். மற்ற எழுவரும் வேளிர் குடியைச் சேர்ந்த மன்னர்கள். 'ஐம்பெரு வேளிர்' என்ற வழக்குக்கொண்டு மற்ற எழுவரில் ஐவர் வேளிர் என்றும், எஞ்சிய இருவர் வேறு மன்னர் என்றும் கொள்வாரும் உளர்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், அப் போர்க்களத்தில் சேரன், சோழன் என்ற முடிவேந்தர்கள் இருவர், திதியன், எழினி, எருமை யூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்ற வேளிர் கள் ஐவர், ஆக எழுவரோடு பொருதான் என்று அக நானூறு கூறுகிறது.† பெரும்பூட்சென்னி யென்ற சோழ மன்னன், கழுமலப் போர்க்களத்தில் நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை, கணையன் என்ற எழு வரையும் முறியடித்தான் என்று அகம், 44-ஆம் பாடல் குறிக்கிறது. வெண்ணிப் போர்க்களத்தில் இருபெரு வேந் தரும் பதினொரு வேளிரும் கரிகாலனை எதிர்த்தனர் என அகநானூறு 246-ஆம் பாடல் கூறுகிறது.

---

*அகம், 125 : 18-22 †அகம், 36.

கரிகாலன், "வெண்ணி வாயில்" என்னும் இடத்தில் முரசங்கள் போர்க்களத்தில் ஒழியப் பதினொரு வேளிர் களோடு வேந்தர்கள் சாய அவர்களுடைய மொய்வலி யறுத்தான் என்ற செய்தி அகநானூறு 246-ஆம் பாட லால்* தெரிகிறது.

வேளிர்களின் தொகை ஏழு எனப்படுவது, சில விடங் களில் ஐந்தாகக் குறைகிறது; சில இடங்களில் பதினொன் ருகவும் பதினான்காகவும் பெருகுகிறது. கழுவுள் என்பா னைத் தாக்கி அவனது நகரான காமூரை வேளிர் கைப்பற் றினர் எனக் கூறும் அகம் 135-ஆம் பாடலில்† 'ஈரெழு வேளிர்' எனவரும் தொடரால் பதினான்கு என்ற தொகை பெறப்படுகிறது. "அடுபோர், வீயா விழுப்புகழ் விண் தோய் வியன்குடை ஈரெழுவேளிர் இயைந்தொருங்கு எறிந்த கழுவுள் காமூர் போலக் கலங்கின்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே"‡ என வருதல் காண்க.

இவ் வேளிர்கள், சில சமயங்களில் முடிமன்னரையும் வென்றனர் என்பதாகத் தெரிகிறது. அகுதை என்பான் ஒருவன் கூடல்நகரை ஆண்டதாகக் கூறப்பட்டுள்ளான்.§ இக் கூடல்நகர் மதுரையேயாயின் இவன் பாண்டியனைப் போரில் வென்றானதல் வேண்டும். இதுபோன்ற சமயங் களில்தான் பாண்டியர் கொற்கைக்குச் சென்று அங் கிருந்து ஆண்டனர் என்று கருதலாம்.

தித்தன் என்பான் ஒருவன், மதில் சூழ்ந்த உறந்தையம் பதியில் அரசிருக்கப்$ போர்வைக் கோப்பெருநற்கிள்ளி யென்ற சோழ இளவரசன் தன் நாட்டைவிட்டு ஓடி இப் போது வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள ஆமூர்க்குச் சென்று ஆங்கிருந்த மல்லனோடு போர்புரிய வேண்டியவ னானன்.¶ புறநானூற்று உரைழ தித்தனைப் போர்வைக்

*வரி, 8-13. †12-ஆம் வரி. ‡அகம், 135 : 10-13.
§புறம், 347 : 5-6. $அகம், 6 : 4-5; புறம், 395 : 18-19.
¶புறம், 80. ழபுறம், 80.

கோப்பெரு நற்கிள்ளியின் தந்தையெனக் கூறுகிறது. ஆனால், அக் கூற்றுக்கு ஆதார மொன்றுமில்லை. தக்க ஆதாரம் கிடைக்கும் வரையில் தித்தன் என்பான் சோழ இளவரசனை வென்று துரத்திய குறுநில மன்னன் என்று கொள்வதே நேர்மையாகும். தித்தன் என்பான் சோழ மன்னன் என எப்போதும் அழைக்கப்பட்டதில்லை. உண்மையில் திதியனுக்குப்பின், அவன் மகன் வெளியன் என்பான் உறந்தையை ஆண்டான் எனத் தெரியவருவதால், போர்வைக்கோவுக்கும் தித்தனுக்கும் எவ் வகையான உறவுமில்லையென்று நாம் துணிந்து முடிவுசெய்யலாம்.

"தித்தன் வெளியன் உறந்தை நாளவை"* என்பது தித்தனுக்கு மகன் வெளியன் என்பதற்கும், அவ் வெளியன் உறந்தையை ஆண்டான் என்பதற்கும் தக்க சான்றாகும்.

முடிவேந்தரும், தங்கள் நாட்டைக் காவல் புரிவதோடு என்றும் அமைதியாய் இருந்ததே இல்லை. உரிமையோடு ஆட்சி செய்துவந்த குறுநில மன்னர்களையெல்லாம் வென்று அவர்களுடைய நாடுகளையும் கைப்பற்றிக்கொண்டு தமிழகம் முழுதிலும் தங்கள் ஆட்சியை நிலைநிறுத்தவேண்டுமென்ற வேட்கையால் உந்தப்பட்டபடியால், அவர்கள் வேளிர்களின் நகரங்களின்மீது அடிக்கடி படையெடுக்கலாயினர். வேள்பாரியின் பறம்பு மலையை மூவேந்தரும் முற்றுகையிட்டதும், அவனுடைய உயிர் நண்பரான புலவர் கபிலர், தாம் பழக்கிய பறவைகளின் உதவியால் பறம்பின் மதிலுக்கு வெளியேயிருந்து செந்நெற் கதிர்களைப் பெற்று மக்களைக் காத்ததும் தமிழிலக்கியம் பயின்றவர்க்கு நன்கு தெரிந்தனவேயாகும்.† நன்னன் என்ற மற்றொரு வேள், சேரன் இளஞ்சேரலிரும்பொறையால் தோற்கடிக்கப்பட்டான்.‡ வேள் எவ்வி யென்பானைப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன்

---

*அகம், 226 : 14. †அகம், 78 : 15-24. ‡பதிற், 88 : 10.

வென்று அவனுடைய மிழலைக் கூற்றத்தைக் கைப்பற்றிக் கொண்டான்.*

வேளிர்கள் தமிழகத்தின் எல்லைப்புறங்களில் வாழ்ந்து வந்தனர். நன்னனின் கொண்கானத்தையும்† நன்னன் சேய் நன்னனின் பல்குன்றக் கோட்டத்தையும் (மலைபடுகடாம்) இக் கருத்தை விளக்கும் சான்றுகளாகக் கூறலாம்.

அவர்களுள் சிலர் உள் நாட்டிலும் குடியேறி வாழ்ந்து வந்தனர். வேள் ஆவிக் கோப்பெரும் பேகன், பழனி மலையின் தலைவன்.‡ வேள்பாரி, பறம்பு மலையை ஆண்டு வந்தான்.§ அஃது இன்றைய இராமநாதபுர மாவட்டத்தைச் சார்ந்தது. வேள் எவ்வி, மிழலை நாட்டின் தலைவன்.$ அவனது தலைநகரம் நீடூர்.¶ வேளிர்கள் போரில் பெரு வீரர்களாக இருந்ததோடு உழவுத் தொழிலில் சிறந்தவர்களாகவும் இருந்தனர். அவர்கள் தங்கள் வயல்களில் விளைவுசெய்து மலைகள்போல் நெல்லைக் குவிப்பார்கள்.ழ நெல் விளையும் அவர்களுடைய நகரங்களிற் சில, சங்க இலக்கியத்திற் குறிக்கப்பட்டிருக்கின்றன. அவை, முத்தூறு, மிழலை,ꝁ குன்றூர்** கடற்கரையிலுள்ள வீரை†† என்பன.

" பொருள்களைப் பாதுகாவாமல் ஈயும் வண்மையையுடைய பெரிய வேளாகிய எவ்வியது, தண்ணீர் பாயும் வாய்த்தலைகளையுடைய, மிழலைக் கூற்றத்தோடு, வயலில் கயல்மீனை யுண்ணும் நாரை போரில் உறங்கும், பொன் அணிந்த யானையையுடைய பழைய முதிர்ந்த வேளிரது நிறைந்த நெற்குவியல்களையுடைய முத்தூற்றுக் கூற்றத்தைக் கொண்ட, வெற்றி பொருந்திய உயர்ந்த குடையினை

*புறம், 24. †நற், 391 : 6. ‡அகம், 1, 61.

§சிறுபாண், 91; புறம், 158 : 4 ; 201 : 4.

$புறம், 24 : 19. ¶அகம் 266 : 10-11. ழபுறம், 24.

ꝁபுறம், 24. **நற், 280 : 8. ††அகம், 206 : 13.

யும்; கொடியாற் பொலிந்த தேரினையும் உடைய செழிய !" என்பது புறநானூறு.*

நற்றிணை 208-ஆம் பாடலைப் பாடிய புலவர், பழைய குடியினரும், முதிர்ந்த அரசியலறிவு வாய்ந்தவரும் ஆன வேளிரின் நகரமாகிய குன்றூரின் அழகைத் தலைவியினுடைய மனையின் அழகுக்கு உவமிக்கின்றார். இந் நகரம் குன்றின்மேலோ, குன்றுக்கு அண்மையிலோ இருந்ததெனலாம்.† வெற்றி விளக்கும் போரில் வல்ல வேளிருக்குச் சொந்தமான வீரை நகர்க் கடற்கரையில் குவிந்திருந்த வெள்ளை உப்பைப் பற்றி அகநானூறு 206-ஆம் பாடல்‡ சிறப்பிக்கிறது. பழைய நெற்களஞ்சியங்கள் பலவுடைய வேளூர் என்னும் நகரத்தின் சிறப்பை அகம், 166,§ எடுத்துரைக்கின்றது. இந் நகரும் செங்கண்மா,$ பாழி,¶ வாகை,|| வியலூர்‖ என்பனவும் வேளிரின் நகரங்களே.

பின்வரும் பெயர்கள், சங்க இலக்கியத்திற் காணப் படும் வேளிர் குடித் தலைவர்களின் பெயர்கள். (இவை போக, பாடல்களின் கொளுக்களில் வேறு பெயர்கள் குறிக் கப்படுகின்றன):

வேள் ஆவி,** வேள் ஆய்,†† நன்னன் வேள்(மான்),‡‡ வெளியன் வேண்மான்,§§ ஆய் எயினன்,$$ வையாவிக்

*24 : 18-23. †நற். 280 : 8.
‡வரி, 13-14. §வரி, 4.
$மலைபடுகடாம். ¶அகம், 142 : 9.
||அகம், 199 : 19.
‖அகம், 97 : 13.
**பதிற், 8-ஆம் பத்தின் பதிகம் : வரி 2.
††புறம், 133 : 7 ; 135 : 13.
‡‡அகம், 97 : 12.
§§அகம், 208 : 5. $$அகம், 148, 181, 208, 396.

கோப்பெரும் பேகன்,* மாவேள் எவ்வி,† நன்னன் ஆய்,‡ ஆய் அண்டிரன்,§ இருங்கோ வேண்மான்,$ மையூர் கிழான் வேள்,¶ வேள் ஆவிக் கோமான் பதுமன்,|| வேண் மான் பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தான்.**

வேளிர் வழியில் தோன்றியவன் என்னும் பொரு ளுடைய வேள் மகன் என்ற சொல்லின் திரிபே வேண் மான் என்பது; இதன் பெண்பால் வேண்மாள் என்பது. இது வேள் மகள் என்ற சொல்லின் திரிபாகும். ஆவி, ஆய் என்பன இவ் வேளிர் குடியின் ஒரு கிளைக்குடிக் குரிய பெயர்கள். இக் கிளைக் குடியினர் ஆவியர் எனப்பட்டனர். ஆவி, ஆய் என்பன, ஆ இ என்ற ஈரெழுத்துக்களாலான சொல்லின் இருவேறு வடிவங்களே யாகும். ஆதல், அல்லது படைத்தல் என்னும் பொருளுடைய 'ஆ' என்பது வினை யடி; 'இ' என்பது விகுதி. நாளாவட்டத்தில், விட்டிசை யைத் தடுப்பதற்கு வகர உடம்படுமெய், ஆஇ என்பனவற் றிற்கு இடையில் வந்தபடியால், ஆவி என்ற சொல் பிறந் தது: (ஆ+வ்+இ=ஆவி). ஆய் என்ற சொல்லே மிகப் பழையதும் பேச்சு வழக்கிலிருந்ததும் ஆகும் எனலாம். தொல்காப்பியர் 'இகர யகரம் இறுதி விரவும்'†† என்று விதி கூறியுள்ளார். சொல் இறுதியில் இகரமும் யகரமும் ஒன்றற்கொன்று போலியாய் வரும் என்பதே இச் சூத்தி ரத்தின் பொருள். இவ்வாறு போலியாய் வருதல் வெறும் பேச்சு வழக்கே யென்றும், தொல்காப்பியர் இதற்கு விதி கூறியிருக்க முடியாது என்றும் கருதிவந்தார்கள். ஆனால், மேற்கூறிய சூத்திரப், ஆஇ என்ற சொல், இறுதி இகரத்

*புறம், 141-147. †புறம், 24. ‡அகம், 356.
§புறம், 129. $அகம், 36.
¶பதிற், 9-ஆம் பத்தின் பதிகம்.
||பதிற், 8-ஆம் பத்தின் பதிகம். **புறம், 395 : 20.
††தொல், எழுத்து : 58.

திற்குப் பதிலாக யகர மெய் வந்ததால் ஆய் என்ருயிற்று என்று கூறுவதற்கு ஏற்ற விதியாக உள்ளது. இகர யகரம் இறுதி விரவும் என்பதற்கு இது சிறந்த எடுத்துக் காட்டாகும். எனவே, ஆய் அல்லது ஆவி என்னும் அடைமொழியைப் பெற்ற எல்லோரும் ஆவியர் குடியைச் சேர்ந்தவர்கள் எனலாம். அவர்கள், தேவியை (அன்னையை) வழிபட்டு வந்தமையால் அப் பெயரைப் பெற்றிருக்கலாம்; அல்லது, அரசினையோ, சமூகத்தினையோ அமைத்துத் தருபவர் என்ற காரணத்தால் அப் பெயர் பெற்றிருக்கலாம்; அல்லது, நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைபவர் என்ற காரணத்தால் அவர்களுக்கு அப் பெயர் அமைந்திருக்கலாம்.

வேள் என்னும் அடைமொழியின் பொருளை நாம் ஏற்கெனவே அறிவோம்.

இருங்கோ என்பது வேளிர் குடியின் மற்ருெரு கிளையாகும். வெளியன் வேண்மான்* என்பது மற்ருெரு பெயர். வெளியன் தித்தன்† (வெளியனின் மகன் தித்தன்), தித்தன் வெளியன் (தித்தன் மகன் வெளியன்)‡ என்பவை வேறு இரண்டு பெயர்கள். புறம், 162, 207, 237-எண்ணுள்ள பாடல்களில் வரும் வெளிமான் என்னும் பெயர் ஒரு குறுநில மன்னனைக் குறிக்கிறது. இளவெளிமான் என்பது ஒருவன் பெயராக வருகிறது.§ வெளிமான் என்பதற்கு வேளிர் குடித் தோன்றல் என்றே பொருள் கொள்ளவேண்டும். வெளியன், வெளிமான் என அழைக்கப்படுபவர்கள் வேளிர் குடியின் மற்ருெரு கிளைக் குடியினர் எனலாம். ஆய் குடும்பத்தைச் சேர்ந்தவனுகக் கருதுதற்குரிய ஆய் எயினன்$ இக் குடியைச் சேர்ந்தவனுகக் காணப்படுகிருன். இவன் அகம், 208-ஆம்

---

*அகம், 208 : 5. †நற், 58 : 5.
‡அகம், 226 : 14 ; அகம், 152 : 5. §புறம், 162, 207, 237.
$அகம், 148 : 7, 181 ; 7, 208 : 5, 396 : 4.

பாடலில்* வெளியன் வேண்மான் ஆய் எயினன் எனக் குறிப்பிடப்படுதலின், இவனே வெளியன் வேளின் வழித் தோன்றல் எனலாமா? நெடுஞ்செழியன் என்னும் பாண் டியனை ஐந்து பேர்கள் எதிர்த்தனர் என முன்னர்க் கூறப் பட்டது. இவர்களுடைய பெயர்கள் தனிப்பட்டவரைக் குறிப்பனவா? அன்றி அவர்களுடைய குடிகள் அல்லது கிளைக்குடிகளைக் குறிப்பனவா? இருங்கோவேள் என்னும் பெயர் கிளைக்குடி யொன்றைக் குறிப்பிடுகின்றது என்பது உறுதி. அக் குடியினர் ஒவ்வொருவரும் 'இருங்கோ' என அழைக்கப்பெற்றனர். மற்றப் பெயர்களைப் பற்றித் திட்ட மாக ஒன்றும் கூறுவதற்கில்லை. நன்னன் என்ற பெயரும் ஒரு கிளைக் குடியைக் குறிப்பது எனக் கூறல் பொருந்துமா என்பது ஆராய்தற்குரியது.

மேலே குறிப்பிட்ட 'மையூர் கிழான்'† என்னும் பெயரி லுள்ள 'கிழான்' என்னும் இறுதி அடைமொழி பற்றி ஆராய்தல் வேண்டும். கிழான் என்பது வேளிர்களின் பட்டப் பெயரே யாகும் என்பர்.

இதைத் தம் பெயருக்குப் பின்னால் அடைமொழி யாகக் கொண்ட பல புலவர்களும் வள்ளல்களும் சங்க இலக் கியத்திற் காணப்படுகின்றார்கள்.

அரிசில் கிழார்,‡ ஆலத்தூர் கிழார்,§ ஆவூர் கிழார்,$ ஆர்க்காடு கிழார்,¶ இடைக் குன்றூர்கிழார்,þ உகாய்க்குடி கிழார்,♭ உமட்டூர் கிழார்,** கயத்தூர் கிழார்,†† கருவூர் கிழார்,‡‡ காட்டூர்கிழார்,§§ காரி கிழார்,$$ கிள்ளிமங்கலங்

*5-ஆம் வரி. †பதிற்று, 9-ஆம் பத்தின் பதிகம்.

‡குறுந், 193 ; பதிற், 71-80 ; புறம், 146, 230, 281, 285, 300, 304, 342.

§குறுந், 112, 350 ; புறம், 34, 36, 69, 225, 324.

$புறம், 322. ¶அகம், 64. þபுறம், 76, 77, 78, 79.

♭குறுந், 63. **அகம், 69. ††குறுந், 354.

‡‡குறுந், 170. §§அகம், 85. $$புறம், 6.

கிழார்,* குறுங் கோழியூர் கிழார்,† குன்றூர் கிழார்,‡ கூடலூர் கிழார்,§ கோவூர் கிழார்,$ கோழியூர் கிழார்,¶ நல்லாவூர் கிழார்,ψ நொச்சி நியமங் கிழார்,ǁ பெருங் குன்றூர் கிழார்,** பொதும்பில் கிழார்,†† மாடலூர் கிழார்,‡‡ வடமோதங்கிழார்.§§ இவர்களெல்லாம் கிழார் என்பதைப் பின் அடைமொழியாகக் கொண்ட புலவர் ஆவர்.

கிழான் என்னும் பின் அடைமொழி பெற்ற புரவலர்களின் பெயர்கள் வருமாறு:—அம்பர் கிழான் (அருவந்தை),$$ கரும்பனூர் கிழான்,¶¶ கொண்கானங் கிழான்,ψψ சிறு குடி கிழான்,ǁǁ நாலை கிழவன்,*** மல்லி கிழான்,††† மையூர் கிழான்,‡‡‡ வல்லங் கிழவோன் நல்லடி,§§§ வல்லார் கிழான்.$$$

ஈண்டுக் காட்டிய பெயர்கள் எல்லாவற்றிலும் உரிமை பூண்டவர் அல்லது உரிமை பூண்டவன் என்ற பொருளைக் குறிக்கும் 'கிழார்' அல்லது 'கிழான்' என்னும் பின் அடைமொழி, ஊர்களின் பெயருக்குப் பின்னல் அமைந்திருப்பதைக் காணலாம். இப் பெயர்களையுடையவர்கள்

*குறுந், 76, 110, 152, 181. †புறம், 17, 20, 22.

‡நற், 332, 338. §குறுந், 166, 167, 214; புறம், 229.

$குறுந், 65; நற், 393; புறம், 31, 32, 33 முதலியன.

¶நற், 383. ψஅகம், 86; நற், 154.

ǁஅகம், 52; நற், 17, 208, 209; புறம், 293.

**அகம், 8; குறுந், 338; நற், 5, 114, 119, 347; பதிற், 81-90; புறம், 147, 210, 211, 266, 318.

††நற், 57. ‡‡குறுந், 150.

§§அகம், 317; புறம், 260. $$புறம், 385.

¶¶புறம், 381, 384. ψψபுறம், 154, 155, 156.

ǁǁபுறம், 173. ***புறம், 179. †††புறம், 177.

‡‡‡பதிற், 9-ஆம் பத்தின் பதிகம்.

§§§அகம், 356. $$$புறம், 181, 265.

அவ்வவ் வூர்களுக்கு உரிமை பூண்டவர்கள். பல ஊர்களில் குடியேறிய வேளிர்கள் நாளடைவில் ஆங்காங் குள்ள நிலங்களின் பகுதிகளையோ, மொத்த நிலங்களையோ தங் களுக்கு உரிமையாக்கிக்கொண்டனர் எனலாம். இவ் வாற்ருல் நிலவுரிமைகள் பல திறப்பட்டன ஆயின. இதனுல் தான் வெள்ளாளர் என்பார் வேளிரோடு உறவுகொண் டாடுகின்றனர்.

தொல்காப்பிய உரைகாரர்கள், 'குடிபுறந்தருநர் பாரம் ஓம்பி'* என்ற அடியையும், அகத்திணையியல் சூத்திரங்கள் சிலவற்றையும்,† மரபியற் சூத்திரங்கள் சிலவற்றையும்‡ ஆதாரமாகக் கொண்டு, மேல்வாரத்தார், கீழ்வாரத்தார் என்னும் இருவகை வேளாளர்களைப் பற்றிக் குறிப்பிடு கின்ருர்கள்.

தொல்காப்பிய மரபியலின் தொடக்கத்தில் அஃறிணை உயிர்களின் ஆண்பால் பெண்பால் மரபுகள் கூறப்படுகின் றன. அவ் வியலின் பிற்பகுதியில் வரும் சாதிகளைப் பற்றிய சூத்திரங்கள், அதன் தொடக்கத்தில் விளக்கப்படும் பொருளுக்கு எவ்வாறு பொருத்தமானவையா யிருக்கின் றன என்பது விளங்கவில்லை. சங்க இலக்கியத்திற் காணப் படும் மரபிற்கு மாருகச் சாதிகளைக் குறித்த பழக்க வழக் கங்களையும், சமூக நிலைமைகளையும் முறைப்படுத்திக் கூறுவ தைத் தொல்காப்பியர் தம் கடமையாகக் கொள்ளவில்லை. எனவே, சாதி பற்றிய சூத்திரங்கள் எல்லாம் பிற்காலத்தவ ருடைய இடைச் செருகல்களே யாகும் எனக் கருத வேண்டியிருக்கிறது. ஆதலால், வேளிரும் வெள்ளாளரும் ஒருவர் எனக் கூற முயல்வதும், ஸ்மிருதிகளில் வரும் சூத்தி ரர் வெள்ளாளரே எனக் கூற முற்படுவதும் தவருகும். வெள்ளாளர் என்ற சொல் வெள்ளம் என்ற சொல்லடி யாகப் பிறந்தது. வழிதுறையில்லாமல் ஓடும் வெள்ளத்

---

*பதிற், 13 : 24. †24, 29, 30. ‡80, 81, 84.

ளைத் தடுத்து வாய்க்கால்களின் வழியே செலுத்தி அதை ஆளுபவர் என்பது வெள்ளாளர் என்னும் சொல்லுக்குப் பொருள் ஆகும். காராளர்கள் என்ற சொல்லுக்கும் பொருள் இதுவேயாகும். கார் அல்லது மேகத்திலிருந்து வரும் நீர்வெள்ளத்தை ஆளுபவர் என்பது பொருள். இதனால், இவர்கள் வேளிர் வழி வந்தவர்களாக இருத்தலாகாது என்று கூறவில்லை; ஒருவாறு அவர்கள் வழியே வந்தவர்கள் ஆகலாம். ஆனால், வெள்ளாளர், வேளாண்மை, வேளாளர் என்ற சொற்கள், நிலத்தை உழுது நீர் பாய்ச்சிப் பயிரிடும் தொழில் காரணமாகப் பிறந்தவை என்பதை விட்டுக் குறுநில மன்னரா யிருந்தமையைக் குறிக்கும் 'வேளிர்' என்னும் சொல்லிலிருந்து பிறந்தவை என்று கூறுவது அவ்வளவு பொருந்தாது.

டாக்டர் - B. R. அம்பேத்கர், அண்மையில் வெளி வந்த தமது, 'ஷூத்திரர்' என்னும் நூலில், சூத்திரர் முதலில் க்ஷத்திரிய வகுப்பில் ஒரு பகுதியினர் என்றும், அவர்கள் பிராமணர்களை எதிர்த்துக் கொடுஞ் செயல் புரிந்தமையால் ஸ்மிருதி எழுதியவர்கள் அவர்களைப் பழித்துக் கூறி அவர்களுக்குச் சமூகத்தில் தாழ்ந்த இடத்தை ஏற்படுத்தினர் என்றும் குறித்துள்ளார்.

அதுபோலத் தமிழகத்திலும், வேளிர்கள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களே. அவர்களுடைய கொடுந் தொழிலாலும் (குறும்பு), பிளவுபடுத்தப்படாத வலிமை மிக்க அரசை அமைக்கவேண்டும் என்று அவர்கள் எண்ணிச் செய்த செயல்களாலும் அவர்களுக்கு எதிர்ப்பு உண்டாகப் பின்னர் அவர்கள் தங்கள் முன்னர்ப் பெருமையை இழந்து கீழ்நிலைக்கு வந்தனராதல் வேண்டும். பிராமணர்களின் செல்வாக்கால் நால்வருணப் பாகுபாட்டுக்கொள்கை தமிழ் நாட்டில் ஏற்றுக்கொள்ளப்பட்டபோது நான்காம் வருணத்தவராக வேளிர் என்பார் பாகுபடுத்தப்பட்டனர். தொல்காப்பிய மரபியலினின்றும், அக் காலத்தவர்கள் இப் பாகு

பாட்டை ஏற்கத் தயங்கியே அவர்களைச் சூத்திரர் என்னாது வேளாளர் என்றே குறித்துச்சென்றனர், என்று தெரிகின்றது.

வேளிர் என்ற சொல்லினின்றும் வேறு பிரித்தறிதற்குரிய 'வெள்ளாட்டி' என்ற சொல்லைப் பற்றிச் சிறிது கருத்துச் செலுத்துவோம். வேளிர்கள் தங்கள் குடிப் பெண்களை வேந்தர்களுக்கு மணம் செய்து கொடுப்பது வழக்கம் என்று நச்சினார்க்கினியர் குறித்திருப்பதைக் கொண்டு வெள்ளாட்டி என்ற சொல்லை வேளிர் என்ற சொல்லொடு தொடர்புபடுத்தச் சிலர் முற்படுவர் என்றாலும், அதற்கும் இதற்கும் உண்மையில் ஒரு தொடர்பும் இல்லை. வெள்ளாட்டி என்ற சொல் 'வேளம்' என்பதன் அடியாகப் பிறந்தது. போரில் வென்ற அரசன், தோற்றவருடைய மனைவியர், மகளிர் முதலியவர்களைச் சிறைப்பிடித்து வந்து தன் நகரில் ஒரு மனையில் வைத்து வாழச் செய்வான். அம் மனைக்கு வேளம் என்று பெயர். கலிங்கத்துப் பரணி - கடைதிறப்பில் வரும், 40-ஆம் பாடலில் உள்ள "வேளம் புகுமடவீர் கடைதிறமினோ" என்ற தொடர் இதனைத் தெளிவுபடுத்தும். வேளிர்கள் முதலில் அரசர்களாயிருந்து பின்பு குறுநிலமன்னர்களாகத் தம் நிலைகின்று தாழ்ந்தனர்; அவர்கள் வேளாண்மை செய்யும் ஊர்களுக்குத் தலைவர்கள் ஆனார்கள். ஆனால், வேளத்திற்கும் அவர்கள் பொறுப்பாளிகள் ஆனார்கள் என்று கூறுவதற்கு ஒரு காரணமும் இல்லை.

இனி வேள் என்ற சொல்லின் பொருள் யாது? வெளியன், வெளிமான் என்ற சொற்கள், வேளிர் என்ற சொல்லைப் பற்றி ஆராயும்போது குறிக்கப்பட்டன. ஒளியர் என்பார் வேளிர் குடியைச் சேர்ந்தவர்கள் எனலாம். ஒளியரே வெளியர் என்றால், ஒளி, வெளி என்பன ஒரே பொருளைக் குறிப்பனவாகும். (அருவரைப் பற்றிக் கூறுமிடத்து ஒளிநாடும் வேணாடும் ஒன்றே எனக் காட்டியுள்ளோம்). தற்காலத்துப் பேச்சு வழக்கில் 'வெளிச்சம்'

என்னும் சொல் ஒளி என்னும் பொருளிலேயே வழங்கு கிறது. வெள்ளை, வெண்மை, வெள்ளி என்ற சொற்கள் எல்லாம் 'வெண்மை நிறம் அல்லது ஒளியுடைமை' என்ற பொருள் தரும் 'வெள்' என்ற அடிச்சொல்லின் அடியாகப் பிறந்தன எனலாம். வேள் என்ற சொல்லும் இதனடி யாகப் பிறந்தது எனக் கொண்டால், அச் சொல் 'புகழ் பெற்று ஒள்ளியராய் விளங்குவோர்' என்ற பொருளைத் தருவதாகும். அல்லது, பழங்காலத்தில் அரசர்களைப் பற்றிப் பொதுவாக நிலவிய நம்பிக்கையின்படி வேளிரிடத்துள்ள ஒளி அல்லது கடவுட்டன்மை என்ற பொருளைத் தருவ தாகலாம்.

"இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்"*

என்னும் திருக்குறளும் மன்னர்களின் ஒளியைப்பற்றிப் பேசுகிறது. 'அரசரை, இளையர், தமக்கு இன்ன முறையை யுடையவர், என்று அவமதியாது அவரிடத்தில் உள்ள ஒளியோடு பொருந்த ஒழுகவேண்டும்' என்பது ஈண்டுக் காட்டிய குறளின் பொருளாகும். ஈண்டுப் பரிமேலழகர், ஒளியாவது அரசர் உறங்காநிற்கவும், 'தாம் உலகம் காக் கின்ற அவர் கடவுட்டன்மை' என்றும், 'அதனொடு பொருந்த ஒழுகலாவது, அவர் கடவுளரும் தாம் மக்களுமா யொழுகுதல்' என்றும் உணர்த்தியிருத்தலை நோக்குக.

'வெள்' என்ற அடிச்சொல் முதல் நீண்டு 'வேள்' என்றாயிற்று. 'வெள்' என்பதனோடு பொருட்சிறப்பைக் குறிக்கும் 'இ' என்ற உறுப்பைச் சேர்த்தால் வெளி என் றாகும். குறியதன் முன்னர்த் தன்னுருபு இரட்டலும்† —தனிக் குற்றுயிரின் பின்வரும் மெய், உயிர் வரும் வழி

* திருக்குறள், மன்னரைச் சார்ந்தொழுகுதல் : 8.

† தொல் - எழுத்து : 160.

இரட்டலும் - என்ற விதிப்படி, ஒள் + இ என்பது ஒள்ளி என்று ஆதல் வேண்டும். என்றாலும், பண்டைக் காலத்தில், இவ் விரட்டித்தல் விதி எல்லா இடங்களிலும் பிறழாமல் கையாளப்படவில்லை; எனவேதான், ஒளி என்ற சொல் வடிவம் காணப்படுகிறது. நான்காம் ஆறும் உருபு வருமிடத்தில் அகரச் சாரியை வரும் வழி 'என்' என்பது 'என்னக்கு', 'என்னது' என்று வருதல் வேண்டும். ஆனால் மாறாக, 'எனக்கு', 'எனது' என்று வருதலே காணப்படுகிறது. ஆனால், இரண்டாம் வேற்றுமை வருமிடத்தில் 'என்னை' என மெய் இரட்டித்தே வருகிறது. இதனால் இந்த நான்காம் ஆறும் வேற்றுமைகள் இரண்டாம் வேற்றுமையைவிடப் பழமையானவை என்று தெரிகிறது. ஒள் என்பது ஒற்று இரட்டாமல் ஒளி என வருதல் நான்காம் ஆறும் வேற்றுமைகளைப் போலப் பழமையான முறையாகும் எனலாம்.

வேளிர்கள் ஈகையிற் சிறந்தவர்கள். குளிரால் மயில் நடுங்குவதையும்* கொழு கொம்பு இல்லாமல் காற்றில் அலைந்து முல்லைக்கொடி தேர்க்காலில் சிக்குவதையும்† கூடப் பொறாமல் முறையே, அவற்றிற்குப் போர்வையும் தேரும் ஈந்தவர்கள் வேளிர்கள் என்ற வரலாறு தமிழுலகம் அறிந்ததாகும். இயல், இசை, கூத்து இவற்றில் வல்லவர்களை ஆதரித்த வள்ளல்கள் அவர்கள். இந்த வள்ளல் தன்மையால் அவர்கள் 'மாவேள் ஆய்'‡ எனவும், 'ஓம்பா ஈகை மாவேள் எவ்வி'§ எனவும் சிறப்பிக்கப்பட்டார்கள்.

கபிலர்போன்ற பெரும் புலவர்களும், பாணர்களும், பொருநர்களும் தங்கள் வாழ்நாள் முழுதும் இந்த வள்ளல்களை விட்டு நீங்காது சூழ்ந்திருந்தனர் என்பது சங்க இலக்கியத்தால் தெரிகின்றது. "நாங்கள் அவன்பால் ஒருநாள்

---

*புறம், 141, 145; சிறுபாண், 85-86.

†புறம், 200, 201; சிறுபாண், 88-89.

‡புறம், 135 : 13. §புறம், 24.

மட்டும் செல்லவில்லை; இரண்டு நாள்மட்டும் செல்ல வில்லை. பலரோடும் பலநாள் பயின்று செல்லினும் முதலிற் சென்ற நாளிற் காட்டிய விருப்பத்தைப் போன்ற விருப் பத்தை யுடையான்:''* இவ்வாறு அதியமான் பாராட்டப் பெற்றிருக்கிறுன். இஃது அவனுடைய வண்மையைத் தெளிவாக விளக்குகிறது. "வடதிசைக்கண் வானைப் பொருந்தும் இமயமலை இருப்பதுபோலத் தென் திசைக் கண் ஆய்குடி இல்லையாயின் இந்தப் பரந்த இடத்தை யுடைய உலகம் கீழ்மேல தாகிக் கெடும்.''† இக் கூற்று உயர்வு நவிற்சி என்னும் அணியின்பாற் படுவதே எனினும் வேளிர்களிடத்தில் புலவர்களுக்கு இருந்த அன்பை இது நன்கு காட்டுகிறது என்பதில் சிறிதளவும் ஐயமில்லை. வண்மைப் பண்பு அவர்களுடைய நரம்புநாடிகளி லெல் லாம் பரவியிருந்தது எனலாம்.

வேளிர்குல ஆடவர்களே யல்லாமல் மகளிரும் வண் மைப் பண்பில் சிறந்து விளங்கியிருந்தனர். ஆதரவு நாடித் தங்கள் மனைக்கு வரும் புலவர்கட்கும் மற்றவர்கட்கும் வேளிர் குலமகளிர் யானைகளைப் பரிசிலாக வழங்குவார்கள்.

" கிழவன் சேட்புலம் படரின் இழையணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்
பெண்டிரும் தம்பதங் கொடுக்கும்''‡

என்பது இதை விளக்கும் சான்ருகும்.

வேள் என்ற சொல்லுக்கு விருப்பம் என்பது பொருள். (வேட்கை என்ற சொல்லைக் காண்க). எனவே, வேள் என்பான், மக்களால் விரும்பப்படுபவன் ஆவான். மக்கள் விரும்புவதற்குக் காரணமான வண்மைப் பண்பையுடைய வன் வேள் என்றதனல், வேளாண்மை என்ற சொல் "பிறர்க்குதவுதல்'' அல்லது "தொண்டுசெய்தல்'' என்

---

*புறம், 101 : 1-3. †புறம், 132 : 7-9.
‡புறம், 151 : 3-5

னும் பொருள் பயப்பதாயிற்று. இக் கருத்தைத் தற்கால பரிபாஷையில் 'சமூகத் தொண்டு' என்று சொல்லலாம். சங்க இலக்கியம் பயின்றவர்க்கு வேள் என்னும் சொல் வண்மையையே நினைவூட்டும். பிறரால் மிகவும் விரும்பப் படுபவன், பிறர் துன்பத்தைப் போக்குவதற்கு இன்றி யமையாது வேண்டப்படுபவன், பிறர் துன்பத்தைப் போக்குவதையே தன் இயல்பாகக் கொண்டவன் என் றெல்லாம் பொருள்படும் கொடைவள்ளலை 'வேள்' என்ற சொல் குறிக்கும் எனலாமா? வேள் என்பது மாபெருங் கடவுளாகிய முருகனை உணர்த்துவதாம்.* முருகன் மக்க ளுக்கு அருள் செய்வதுபோல இவ் வேளிர்கள் அருள் செய்தபடியால் அவர்களுக்கு இப் பெயர் ஏற்பட்டதென லாமா ? பழங்காலத்தில் அரசர்களைத் தெய்வமாகக் கருதும் வழக்கம் இருந்தது. எழினியாதனை வேலேந்திய முருக வேள் என்றே மாங்குடி கிழார் கூறுகிறார். "கழுமிய வென்வேல் வேளே"† என்பது காண்க. முருகக் கடவுளை வீரர்களுக்கு வீரன் எனவும், தன்னடியார்க்கு வேண்டு வன வெல்லாம் அளிப்பவன் எனவும் கூறுவர். பேரா சிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் தமது 'வேளிர் வரலாற்றில்,' சில குடியினர், தம்மைப் புறந்தருளும் கடவு ளாக முருகனை வழிபட்டனர் என்றும், அவர்களில் வேளிர் குடியினரும் யது குலத்தினரும் சிறப்பானவர்கள் என்றும் கூறியுள்ளார். இவ் வகையாக நோக்கும்போது வேள், வேளிர் என்ற பெயர்கள் வேளென்னும் பெயரிய முருகன் காரணமாகப் பிறந்தன எனலாமா ?

'வேள்வி' என்பது யாகத்தீயாகும். வேள் என்ற சொல்லுக்கும் இப் பொருள் உண்டு. பேரரசர்கள் பல யாகங்கள் செய்வது என்பது ஆரியரின் மரபுகளில் ஒன்று.

---

*ஐங், 250 : 4; பதிற், 11 : 6; பரிபாடல். 18, வரி 26.
†புறம், 396 : 12.

அம் மரபு, தமிழ் நாட்டிலும் பரவியது. பாண்டியன் பல் யாகசாலை முது குடுமிப் பெருவழுதியும்* சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும்† மற்ற அரசர்களை வென்று பேரரசை நிலை நிறுவியதற்கு அறிகுறியாக யாகங்கள் பல செய்தனர் என்பது அவர்களின் பெயர்களிலிருந்தே தெரிகிறது. இதிலிருந்து யாகங்கள் செய்யும் வழக்கம் தமிழ்நாட்டில் நன்கு வேரூன்றிவிட்டமை தெளிவாகிறது. ஆற்றுவார்க்கு அவர் விரும்புவன வெல்லாம் அளிக்கவல்லன யாகங்கள் என்பர். எனவே, விரும்புதல் என்னும் பொருள்தரும் 'வேள்' என்ற அடிச்சொல்லிலிருந்து பிறந்த வேள்வி என்ற சொல்லைத் தமிழ் நாட்டவர் யாகங்களைக் குறிக்கப் பயன்படுத்தினர். யாகங்கள் செய்யும் வழக்கமும் அவற்றின் பொருளும் மக்களிடத்தில் பெரு வழக்காகச் செல்வாக்குப் பெற்றவுடன் வேளிர் என்னும் பெயர்க்கு, 'யாகத்தீ' என்று பொருள்படும் வேள்வியொடு தொடர்பு ஏற்படலாயிற்று. ஆனால், வேள்வியை வேளிரோடு எவ்வாறு தொடர்புபடுத்துவது ?

இந்து மதம் புத்துயிர் பெற்றெழுந்தபோது இந்துக்கள் என்ற ஒரே இனத்தவர் வாழும் ஒன்றுபட்ட நாடு இந்தியா என்ற கருத்து ஓங்கி வளர்ந்தது. அப்போது அரசர்கள் எல்லோரும், புராணங்கள் குறிப்பதுபோன்று, சூரியன் அல்லது சந்திரன் அல்லது மற்றத் தேவர்களின் வழிவந்தவர்கள், என்ற நம்பிக்கை ஏற்பட்டது. அக் காலத்தில் ஆரியாவர்த்தத்தின் எல்லைக்குப் புறம்பாகப் பல குடியினர் வாழ்ந்துவந்தனர். ஆரியாவர்த்தத்திற்கு வெளியே வாழ்ந்தவர்கள் அனைவரும் மிலேச்சர்கள் அல்லது நாகரிகமற்றவர்கள் எனக் கருதப்பெற்றனர். சைவ வைணவ சமயங்களைப்பற்றித் தாம் எழுதிய நூலில் டாக்டர் பந்தார்கர் தெளிவாக எடுத்துரைப்பதுபோல, அம் மிலேச்சர்களின்

---

*புறம், 15. †புறம், 16, 377.

சிவ விஷ்ணு வழிபாடுகள் உட்பட அவர்களுடைய கொள்கைகளும், பழக்க வழக்கங்களும் ஆரியர்களால் தாழ்வாக மதிக்கப்பட்டன. ஆனால், மிலேச்சர்கள், ஆரியர் களைவிட எண்ணிக்கையில் மிகுந்திருந்தனர். அவர்கள் செல்வாக்கிலும் மிக்கனர். அவர்களுடைய வழிபாடுகளும் இனங்களும் ஆரியமாயின. முல்லை நிலத்தில் வாழ்ந்த பல் வேறு குடியினரும் கிருஷ்ணனின் அடியவர்கள், வைண வர்கள், யாதவர்கள் என்று கருதப்பட்டனர். கிருஷ்ண பக்தர்களுக்கு இம் முறைமை களிப்பூட்டுவதா யிருந்தது. வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய திக்குக்களில் வாழ்ந்த பல்வேறு குடியினரும் ஒன்று கலந்து, தாங்கள் அனைவரும் ஒரு குடிப்பிறந்தவரே யெனக் கூறிக்கொண் டனர். மக்களின் இந்தப் போக்கினை உண்மைப்படுத்து வதற்குப் பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் 'வேளிர் வரலாற்'றில் நிறையச் சான்றுகள் தருகிறார். ஆனால், அப் பேராசிரியர் பிற்காலப் புராணக் கதையை, வரலாற்றுண்மையாகக் கொள்ளுகிறார். ஆரியாவர்த்தம் படிப்படியாக விரிவாக்கப்பட்டதும், பிற்கால யாதவர் களின் முன்னோர்கள் பல வகையான இழிசொற்களால் இகழப்பட்டதுமான நிகழ்ச்சிகள் நமக்கு வேறு ஒரு செய் தியைக் கூறுகின்றன. என்றாலும், பல்வேறு வகைப்பட்ட குடியினரையும் இந்தியர் என்ற ஒன்றுபட்ட குடியினராக இணையச்செய்த பெருந்தொண்டு புராணங்களுக்கே உரிய தெனலாம்.

பொதுமக்களின் எண்ணத்தில் எற்பட்ட இந்தப் போக்கிற்கு எற்பத் தமிழ்நாட்டுப் பாண்டியரும் சோழ ரும் ஆரியாவர்த்தத்தினரைப் போலத் தம்மை முறையே சந்திர குலத்தவராகவும், சூரிய குலத்தவராகவும் கூறிக் கொண்டனர். இந் நிலையில் மக்களிடையில் வளர்ந்த நாட் டுப் பாடல்களும் கதைகளும் புராணக் கதைகளும் கிளர்ந் தெழுந்து வேளிரை அக்கினி குலத்தவராகக் கூறத் தலைப்

பட்டன. அதனால், வேளிர்க்கும் வேள்விக்கும் தொடர்பு கற்பிக்கப்பட்டது. தமிழ்நாட்டில் வாழும் வன்னியகுல க்ஷத்திரியர் எனப்படும் நாயகர்கள் தம்மை அக்கினி குலத்தவர் எனக் கூறிக்கொள்வதுபோல, இராஜபுதனத்தில் வாழும் பல்வேறு குடியினரும் தம்மை அக்கினி குலத்தவராகக் கூறிக்கொள்ள முற்பட்டனர். எனவே, அக்கினி குலம் என்ற ஒன்று பொதுவான இந்திய மரபுரிமை ஆயிற்று.

இத்தகைய புராணக்கதை சங்ககாலத்திலேயே தமிழ் நாட்டில் பரவியிருந்த தென்பது, கபிலர் இளங்கோவேளைப் பற்றிப் பாடிய புறநானூற்றுப் பாடலால் தெரிகின்றது:

"வடபக்கத்து முனிவனுடைய தடவின்கண் (ஓம குண்டத்தின்கண்) தோன்றிச் செம்பாற் புனைந்து செய்தாற்போன்ற உயர்ந்த மதிலையுடைய துவராபதி யென்னும் நகரில், என்றும் இனிமை வாய்ந்த கொடைப் பண்புடையவராய், நாற்பத்தொன்பது தலைமுறைகளுக்கு ஆண்ட வேளிருள், சிறப்பமைந்த இருங்கோவேளே!"* இவ்வாறு கபிலர் பாடுகிறார். 'தட' என்னும் சொல்லுக்குப் புறநானூற்று உரைகாரர் 'ஓமகுண்டம்' எனப் பொருள் கூறுகிறார்.

'தட'வென்னும் அடிச்சொல்லுக்கு வளைவு என்று பொருள். எனவே, இச் சொல் ஓம குண்டத்தைக் குறிக்கும். ஹொய்சளர்களின் காலத்தில் துவாரசமுத்திரம் என அழைக்கப்பட்ட 'துவரை' இருங்கோவேளின் தலைநகராக இருந்திருத்தல் வேண்டும். இவனைக் கபிலர், 'புளிகடி மால்' என இப் பாடலிலேயே விளிக்கின்றார். 'புலியைக் கொன்ற பெருவீரன்' என்பது இதன் பொருளாகும். 'யசோதர சரித்திரெ'† என்ற கன்னட இலக்கியமும், கன்னடக் கல்வெட்டுக்கள் சிலவும்‡ இந்த நிகழ்ச்சியை விளக்குகின்றன.

---

*புறம், 201 : 8-12. †1 : 9.

‡Inscriptions : Epigraphia Carnatica, Vol. V, part II—Pelurt Taluka Inscriptions, 71, 112, 124.

ஒரு முனிவர் 'சளன்' என்னும் மன்னனை நோக்கிப் புலியைக் கொல்லுமாறு ஆணையிட்டார். ('சள, பொய்' அல்லது 'சள, ஹொய்' என்ற கன்னட மொழித் தொடருக்குச் 'சள, கொல்' என்று பொருள்). தன்னைத் தாக்க வந்த புலியை, முனிவர் ஆணைப்படி அவன் கொன்றான். அதனால் அவனுக்குப் 'பொய் சளன்' அல்லது 'ஹொய் சளன்' என்று பெயர் உண்டாயிற்று. இதுவே அவை கூறும் விளக்கம். ஹொய் சளனே புலிகடிமால். 'பொய் சளர்', அல்லது 'ஹொய் சளர்' அல்லது 'போசளர்' எனத் தமிழ்நாட்டில் அழைக்கப்படுவோர் இருங்கோவேளின் வழிவந்தவர்கள். தமிழினின்றும் கன்னடமொழி பிரிந்து வளரத் தலைப்பட்டபொழுது போசளர்கள் தமிழகத்திற்கு அயலார்கள் ஆயினர். அதுமுதல் அவர்கள் போசளர் - போசலர் - என்ற பெயருக்குப் புலிகடிமாலைப் பற்றி வழங்கும் புராணக்கதையை யொட்டி விளக்கம் கூறிக்கொண்டார்கள். போசல் என்பது புலிகடிமால் என்ற தொடரின் மரூஉ எனலாம். மலைநாடன் என்ற தொடர் மலாடன் என மரூஉ ஆதலும், கை என்னும் சொல் செய் என ஆம் போது 'க' கர ஒலி 'ச' கர ஒலியாக மாறுதலும் நாமறிந்தனவே யாதலின், புலிகடிமால் என்பது போசல் என மரூஉ ஆயிற்று என்பது வலிந்து கொள்ளப்பட்டது என்று கருதுதல் ஆகாது.

நச்சினார்க்கினியர் தமது தொல்காப்பிய உரையில் வேளிர்களைப் பற்றி இரண்டு இடங்களிற் குறிப்பிட்டுள்ளார். முதலாவதாக அகத்திணையியல் 32-ஆம் சூத்திரவுரையில் அவர், "மலையமாதவன் நிலங்கடந்த நெடுமுடி யண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண் வகைக் குடிப்பிறந்த வேளிர்" என எழுதுகிறார். இரண்டாவதாகத் தொல்காப்பியப் பாயிரத்திற்கு அவர் உரை கூறும் இடம் ஆகும். அப் பாயிரவுரையில், பார்வதி சிவபிரானை மணந்த போது கயிலைக்கு வந்திருந்த தேவர் முதலியோரின் சுமை

யால் இமயம் தாழ்ந்ததாக, இறைவன் அகத்தியரைத் தெற்கு நோக்கிச் சென்று நில உலகத்தின் நிலையைச் சரிப் படுத்துமாறு வேண்டிய புராணக் கதையைக் கூறிய பிறகு, தெற்கு நோக்கி வருகையில் அகத்தியர் செய்த செயல் களைப் பற்றி நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். அஃது "துவராபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளி ருள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டு போந்து............" என்பதாகும்.

இங்குக் காணும் 'துவராபதி' கபிலரால் இளங்கோ வேளின் தலைநகராகக் குறிப்பிடப்பட்ட துவராசமுத் திரமன்றி வேறு அன்று. அரசர்கள் கடவுளின் வழி யில் வந்தவர்களாகவே மதிக்கப்பெற்று வந்திருக்கின்றனர். அரசர்களைக் கடவுளின் பிரதிநிதிகளென்றும் தங்களைக் காப்பவர்கள் என்றும் மக்கள் போற்றி வந்தனர் என்பது முன்னரே கூறப்பட்டது. எனவே, அவர்களைக் கடவுளின் வழியில் வந்தவர்களாகக் கூறுவதில் தவறொன்றும் இல்லை. ஈண்டு நச்சினார்க்கினியர் கூறியிருக்கும் கூற்றில், வேளிர் கள்கூடக் கடவுளின் வழியில் வந்தவர்கள் என்று அவர் கருதுகிறார் என்று கருத இடமில்லை. 'அண்ணல் வழிக்கண் அரசர்' என்பது தெளிவாக உள்ளது. 'அண்ணல் வழிக் கண்' என்பதைப் பின்னால் வரும் வேளிரொடும் சேர்த்துப் பொருள் கொள்ளவேண்டும் என்றால், அதன் பின் வரும் அருவாளரொடும் பிறரொடும் இயைத்து அவர்களையும் கண்ணனின் வழி வந்தவரென்று கொள்ளவேண்டிவரும். மூவேந்தரையும் வேளிரையும் தவிர ஏனைய அரசர்களெல் லாம் பண்டைய துவராபதி வேளிர் மரபில் தோன்றிப் பிற இடங்களில் பரவினர் என்று நாம் கொள்ளவேண்டும் என்பது நச்சினார்க்கினியரின் கருத்துப்போலும்.

இராவ்சாகிப் மு. இராகவையங்கார் அவர்கள் நச்சினார்க் கினியரின் கூற்று, அகத்தியர் கண்ணனுடைய துவரா

கைக்குச் சென்று, அவனுடைய யாதவ குடும்பத்தைச் சேர்ந்த வேளிர்களை அழைத்துக்கொண்டுவந்ததைக் குறிக்கும் என்பதாகக் கருதுகிறார். பிற்காலத்தில், ஹொய்சளரும் பிற அரச குடும்பத்தினரும் தாங்கள் யாதவ குலத்தினர் என்று கூறிக்கொண்டதையும், தமிழகத்தில் வேளிர்களுடைய தோற்றத்தைப் பற்றி வழங்கும் கதையையும் இணைத்து ஒன்றுபடுத்தும் நோக்கத்தோடு அவர் அவ்வாறு கருதுகிறார் எனலாம். துவாரகையில் ஆண்ட கண்ணன் துவாபர யுகத்தில் இருந்தவன். அவனுக்கும் சிவபெருமானுடைய திருமணத்திற்கும் புராணங்கள் தொடர்பு கூறுவது காலமயக்கம் உண்டாக்குவதாகும். காலமயக்கம் உண்டாகப் பல நிகழ்ச்சிகளைக் கூறுவது புராணங்களுக்கு இயற்கை யெனினும் அதே காலமயக்கம் ஏற்பட இத்தகைய நிகழ்ச்சியை எந்தப் புராணமும் கூறுவது பொருந்தவே பொருந்தாது. மேலே குறித்த யாதவ குடும்பத்தோடு மற்ற அரச குடும்பங்கள் உறவு கொண்டாடுவது புராணக் கதையேயன்றி வரலாற்றோடு பொருந்தும் உண்மையாகாது. எனவே, தக்க ஆதாரமில்லாத இப் புராணக் கதைக்குத் துணைசெய்யும் வகையில் நச்சினார்க்கினியரின் கூற்றுக்கு வலிந்து பொருள் கொள்ளுவது அத்துணைப் பொருத்தமாகத் தெரியவில்லை.

மேலும், முற்குறிப்பிட்ட கபிலர் பாடிய புறநானூற்றுப் பாடலில் வரும் 'நாற்பத்தோன்பது வழிமுறை வந்த வேளிர்' என்ற சொற்றொடரை அடிப்படையாகக் கொண்டு, வேளிர் தமிழகத்திற் குடியேறிய காலத்தையும் கணக்கிடப் பேராசிரியர் மு. இராகவ ஐயங்கார் அவர்கள் முற்படுகின்றனர். 'வழி முறை வந்த' என்ற தொடர் 'வேள் (இருங்கோ)' என்பதற்கு அடையாக நில்லாமல், 'வேளிர்' என்பதற்கே அடையாக நிற்கிறது. இங்கு நாற்பத்தோன்பது என்ற தொகை, கழிந்த தலைமுறைகள் இவ்வளவு என்று அறுதியிட்டுக் கூறுவதற்காக வரவில்லை;

அளவற்ற தலைமுறைகள் என்பதைக் குறிக்கவே வந்துளது. ஒரு குடும்பத்தில் அதிகபட்சம் கடந்த எழு தலைமுறைகள் வரையில் நினைவு வைத்துக்கொள்ள முடியும் என்ற முறையில் சாதாரணமாக எழு தலைமுறைகள் என்று கூறுவது வழக்கம். வேளிர் குடும்பம் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து நிலைபெற்றிருந்தது என்பதை வலியுறுத்திக் கூறுவதற்காக 'எழெழு தலைமுறை' அல்லது 'நாற்பத்தொன்பது வழிமுறை வந்த வேளிர்' என்று கபிலர் கூறுகிறார். நம்முடைய நினைவாற்றலையும் கடந்துநின்ற பழங்காலத்திலிருந்து மூத்த குடியாய்த் தொடர்ந்து வந்தது வேளிர்குடி என்பதை வலியுறுத்துவதற்காகவே இவ்வாறு கூறப்பட்டது என நாம் கொள்ளவேண்டும். இக் கருத்தைக் கொண்டே 'தொன்முதிர் வேளிர்'* என்றும், 'தொன்றுமுதிர் வேளிர்'† என்றும் சங்ககாலச் சான்றோர்கள் வேளிர்களைப் பாராட்டினர்கள்.

வேள் புலத்தைச் சேர்ந்த சாளுக்கியரை வேளிருடன் ஒன்றுபடுத்தவேண்டும் என்ற ஆவலுடன் பேராசிரியர் மு. இராகவ ஐயங்காரவர்கள், புறம், 201-ஆம் பாடலில் வரும் 'தடவு' என்பதற்கு உரையாசிரியர் 'ஓமகுண்டம்' என்று கூறியுள்ள பொருளுக்கு மாருக 'ஒரு முனிவருடைய யாக பாத்திரம்' எனப் பொருள் கூறுவதே பொருத்தம் எனகிறுர்.‡ சாளுக்கியர்கள் ஒரு முனிவரின் தீர்த்த பாத்திரத்திலிருந்து தோன்றியவனுடைய வழி வந்தவர்கள் என்று கூறப்படுகிறுர்கள். ஒரு பழைய பெயருக்குப் பிற்கால வழக்கத்தை ஒட்டிப் பொருள் செய்து, மக்கள், கதை கட்டிவிடும் முறைமைக்கு இஃதொரு சான்ருகும். முன்னரே குறிப்பிட்டதுபோல வேளிர்கள் அக்கினி குலத்தவர் என்ற புராணத்தையே இந்தப் புறநானூற்று வரிகள் உணர்த்துகின்றன.

---

*புறம், 24 : 21. †நற், 280 : 8.

‡வேளிர் வாலாறு, பக்கம், 11-12.

ஆனால், சாளுக்கியர்க்கும் வேளிர்க்கும் பிறர்க்கும் உறவு உண்டு என்பது ஐயத்திற் கிடமின்றித் தக்க ஆதாரங்களுடன் நிலைநாட்டப்பட்டிருக்கிறது. சாளுக்கிய நாட்டிற்கு இடப்பட்ட 'வேள்புலம்' என்ற பெயரும், மகாராட்டிர நாட்டில் உள்ள பெல்காம், பெல்ஹத்தி முதலிய ஊர்ப் பெயர்களும், வேளிர்கள் தமிழகத்தின் வடக்கேயும் மேற்கேயும் பரவினர்கள் என்பதை நன்கு மெய்ப்பிக்கின்றன. வடக்கிலும் தெற்கிலும் வாழ்ந்த பல்வேறு குடியினரும், தாங்கள் எல்லாம் ஆதியில் ஒரு குடியில் தோன்றியவர் என்ற செவிவழிக் கட்டுக் கதையை அடிப்படையாகக் கொண்டு தங்களுக்குள் திருமண உறவுகளை ஏற்படுத்திக் கொண்டனராதல் வேண்டும். டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் கூறுவதுபோல, இவ்வாறு "வேளிர்கள் வடக்கிலும் மேற்கிலும் பரவியமையால் அக் காலத்தில் தக்கணத்தில் வாழ்ந்துவந்த ஆரியக் குடியினரோடு இவர்கள் ஒரு வகையான தொடர்பு கொள்ளும்படி நேர்ந்தது."* எனவே, தமிழகத்திலிருந்த வேளிர்கள் பிறநாடுகளில் பரவிக் குடியேறிப் பிறகு தமிழகத்திற்குப் படையெடுப்பாளர்களாய் மீண்டு வந்தனர் என்று கொள்ளுவது சிறப்புடையதே தவிர வேளிர்கள் தமிழகத்திற்குப் புதியவராக வந்தனர் என்று கொள்ளுவது அத்துணைச் சிறப்புடையதன்று.

4. அருவர் (ஆதி அருமன்):

வடமன் என்னும் பெயர், 'வடவர் வழித்தோன்றல்' என்று பொருள்படும் 'வடவர் மகன்' என்பதன் மரூஉவாகும் எனக் கூறப்பட்டது. அவ்வாறே, அருமன் என்பதையும் ' அருவர் மகன்' என்பதன் மரூஉவாகக் கொள்ளலாம். 'அருவர் குடியின் வழித்தோன்றல்' என்பது அருவன்

*Ancient India and South Indian History and Culture, p. 44.

என்பதன் பொருள் ஆகும். அருவந்தை என்பது மற்ருெரு பெயர். அருவனின் தந்தை என்பது அதன் பொருள். அருவன் என்ற பெயர் அருமன் என்பதன் மற்ருெரு வடிவமாயிருக்கலாம். அருவந்தை என்பவன் அம்பர் கிழான் எனக் கூறப்பட்டுள்ளான்.* எனவே, அவன் ஒரு வேள் ஆவான். குடிப் பெயர்கள் சில வேளைகளில் தனிப் பட்டவர்களின் இயற்பெயராக இருத்தலு முண்டு. அண்டர் மகன் குறுவழுதியார்† என்பவர் போன்ற பெயர்களைக் காண்க. அருமன், அருவன் என்ற இரு சொற்களிலும் "அரு" என்பதே அடிச் சொல்லாயும் இன்றியமையாத உறுப்பாயும் இருக்கிறது. அரு என்பதன் மற்ருெரு வடிவம் 'ஆர்' என்பது. ஒரு குடி அல்லது கிளைக் குடியைக் குறிக்கும் இவ் வடிச் சொல்லிலிருந்தே, ஆர்க்காடு, அரண் முதலிய பெயர்களும், முடியுமாளுல் ஆரியர் என்னும் பெயரும், பிறந்தனவாகக் கொள்ளலாம். நாம் முன்பு வேருக ஆராய்ந்த 'கள்ளில் ஆர்த்தியனுர்' என்னும் புலவர்‡ ஆதி அருமன் என்பானின் பண்டைய நகரைப் பற்றிக் குறுந்தொகை 293-ஆம் பாடலில்§ குறிப்பிடுகிருர். நற் றிணை 367-ஆம் பாடலில் நக்கீரர் என்னும் புலவர் சிறுகுடி என்னும் நகரைப் பற்றிக் குறிப்பிட்டு, அதன் தலைவன் 'அருமன்' என்றும் அங்குள்ள மக்கள் இடும் வெண் சோற்றுப் பலியைக் கவர்வதற்காகக் காக்கைகள் கூட்ட மாகக் குழுமியிருக்கும் என்றும் கூறுகிருர். இதன் தொடர் பாகப் பட்டினப்பாலையில் பல குடிகளைப் பற்றிக் குறிப் பிடப்பட்டிருப்பதை ஈண்டு நினைவுகூர்தல் பயனுடைய தாகும்.

---

*புறம், 385.

†அகம், 150, 228; குறுந், 345; புறம், 346-இவற்றின் ஆசிரியர்.

‡குறுந், 293; புறம், 175, 389-இவற்றின் ஆசிரியர்.

§வரி, 4.

இவ் வாராய்ச்சிக் கட்டுரையின் தொடக்கத்தில் ஏற்கெனவே கூறியவாறு, குடிகளைப் பற்றி ஆராய்வது அன்று நமது அடிப்படையான நோக்கம். என்றாலும், இயற்பெயர்களைப் போலவே இக் குடிப்பெயர்களும் இன்றியமையாதனவாகக் காணப்பட்டமையால் அவற்றைப் பற்றி ஆராய்வதும் இன்றியமையாததாயிற்று. சங்க காலத்திலிருந்த 'திரையன்' போன்ற மன்னர்கள் குடிப் பெயர்களால் மட்டுமே தெரிகிறார்கள். வேறு சிலர்க்கு இயற்பெயர்கள் இருந்தும், அதியன், தொண்டைமான் போன்ற குடி அல்லது குடும்பப் பெயராலேயே நன்கு உணரப்படுகிறார்கள். இவ்வாற்றால் குடிகளைப் பற்றி ஆராய்வது நமது அடிப்படையான நோக்கமன்றாயினும், நம் அடிப்படை ஆராய்ச்சிக்கு அது மிகவும் துணை செய்வதாய் அமைந்தது. தமிழகத்தின் குடிகள், கிளைக்குடிகள், குடும்பங்கள் ஆகியவற்றைப் பற்றி இவ்வளவு தூரம் அறிந்து கொண்ட நாம், சங்க இலக்கியத்தில் வரும் ஏனையக் குடிப் பெயர்கள் இயற்பெயர்களுக்கு உறுப்புக்களாக வரவில்லை யென்றாலும், அவற்றைப் பற்றியும் நாம் அறிந்து கொள்வது நலமாகும்.

கரிகாற் பெருவளத்தானின் வெற்றிச் சிறப்புக்களைப் பற்றிப் பட்டினப்பாலை கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறது: " பல் 'ஒளியர்கள்' பணிந்து ஒடுங்கினர். பழமையான 'அருவாளர்கள்' உன் ஏவல் கேட்டுநின்றனர். 'வடவர்' வாடினர். குடவர் (சேரர்) தம் சிறப்புக் குன்றிக் கூம்பினர். 'தென்னவன்' (பாண்டியன்) வலிமை இழந்தான்........புன்மையான பொதுவர் குடிவழி அழிந்தது. இருங்கோவேள் தன் துணைவரோடு தோல்வியுற்றான்."*

ஈண்டுக் குறிப்பிடப்பட்டவருள் குடவர் என்பார் சேரரும், மேற்குப் பகுதியைச் சார்ந்த மற்றவரும் ஆவர்.

*பட்டினப்பாலை : வரிகள், 274-277, 281-282.

பாண்டியரைக் குறிப்பிடும்போது மட்டும் 'தென்னவன்' என ஒருமையாகவும் பிறரையெல்லாம் பன்மையாகவும் புலவர் குறிப்பிட்டுள்ளார். ஒருவேளை பாண்டியனைத் தவிர மற்ற வர்கள் பலபல அரசர்களின் தலைமையில் பலபல குழுக்க ளாகப் பிளவுபட்டிருந்திருக்கலாம். வடவர் என்பார் வட திசையைச் சார்ந்த குழுக்கள் எனலாம். இருங்கோவேள், துவார சமுத்திரத்தில் ஆண்ட ஹொய்சளர்களின் முன் னோர்களுடைய குடும்பத்தைச் சேர்ந்தவன். சோழ நாட் டிற்கு வடக்கே, அதாவது கொள்ளிட நதிக்கு வடக்கே உள்ள நாடு 'அருவா நாடு' எனப்படும். அதற்கும் வடக்கே உள்ள நாடு 'அருவா வடதலை நாடு' எனப்படும். முதலில் காடாக இருந்த இப் பகுதியில் வாழ்ந்த மக்கள் இதைப் படிப்படியாகத் திருத்தி வயல்களையும் நகரங்களையும் உண் டாக்கிக்கொண்டு பல சிற்றரசர்களின் கீழ் வாழ்ந்தனர் எனலாம். இப் பகுதியில் போர் செய்தலில் வல்ல குடி யினர் 'அருவர்' என்றும், 'அருவாளர்' என்றும் வழங்க லாயினர். ஆந்திர நாட்டை யொட்டித் தமிழ்க் குடியின ரான அருவர்கள் வாழ்ந்திருந்தமையால் அருவர் மொழி என்ற பொருளில் தமிழை அரவம் என ஆந்திரர் அழைக்க லாயினர்.

சிவபெருமானது திருமணத்தின்போது மேருமலை தாழ்ந்து, தெற்குத் திசை உயர்ந்ததாக, அதைச் சமநிலைப் படுத்துவதற்குத் தெற்குத் திசை நோக்கி வந்த அகத்தியர், தாம் வரும் வழியில் வேளிரையும் அருவாளரையும் அழைத் துக்கொண்டு வந்தார் என்னும் கதையை நச்சினார்க்கினியர் கூறுகிறார். 'அருவாளர்' என்பதற்கு, 'அரிய வாளையுடைய போர் வீரர்' என்றோ, 'அரிய வீரர்' என்றோ பொருள் கொள்ளலாம். அவர்களுடைய நாடு 'அருவாள் நாடு' என அழைக்கப்பட்டது. அது சோழநாட்டிற்கு வடக்கே அமைந் திருந்தது. அருவாளர் என்ற பெயரின் மற்றொரு வடிவம் அருவர் என்பது. 'அருவர்' என்பார் தம்மை மற்றவர் அறி

யாதபடி கரந்துநின்று திடீரெனத் தாறுமாறாகத் தாக்கு பவர் என்று கொள்ளலாமா? திரு. சிவராசப் பிள்ளையவர் கள், 'அருவரையே, அர்வர்னுய் (Arvarnoi) என்று தாலமி குறிப்பிட்டுள்ளார்' என்றும், ஆர்க்காடு, அரண், அருப்பம் என்பவை 'அருவர்' என்பாரோடு தொடர்புடையவை என்றும் கூறியுள்ளார். அருவர் என்பார் நாகர் குடியைச் சேர்ந்தவர்கள் எனவும் அவர் கருதுகிறார்.* அரையர் என் னும் பட்டப்பெயர் தாங்கிய மன்னர்குடி யொன்றைப் பற்றித் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் எழுதி யுள்ளார்கள்.† அரையர் என்ற சொல்லை, ராஜா என்னும் வடமொழிச் சொல்லின் திரிபென்று கொள்ளுவதைவிட 'அரு' என்பதன் அடியாகப் பிறந்தது என்று கொள்ளு வதே பொருத்தமாகும். நாகரையர்‡ போன்ற பெயர் களையும் இம் முறையில்தான் விளக்குதல் வேண்டும். முரஞ் சியூர் முடிநாகராயர் என்னும் பெயர், 'அரையர்' என்னும் சொல்லை ஈற்றில் கொண்டு, 'முரஞ்சியூர் முடிநாக அரையர்' என்று ஆதியில் வழங்கியிருக்கலாமோ என்னும் கருத்தும் ஆராய்தற்குரியது. இப் பெயரை முடிநாகர் ஆயர் எனப் பிரித்துப் பொருள் கொள்ளவேண்டும் என்று நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.

அருவாளர் நாட்டிற்கு வடக்கே வாழ்ந்த வீரக் குடி மக்கள் வடவர் (வடநாட்டுக் குடியினர்) எனப்பட்டனர்.

பட்டினப்பாலை தரும் குடிப் பெயர்களின் வரிசையில் முதலில் நிற்பது 'ஒளியர்' என்னும் பெயர். அவர்கள் அள வற்றவர்கள் என்று கூறப்பெற்றுள்ளனர். ஒளியர் என் பார் யார்? பட்டினப்பாலையின் உரையாசிரியராகிய நச்சி னார்க்கினியர் பின்வருமாறு எழுதுகிறார்: "ஒளியராவார் மற்றை மண்டலத்திற்கு அரசராதற்குரிய வேளாளர்."§

*The Chronology of the Early Tamils, pp. 227, 228. †கள்ளர் சரித்திரம், பக்கம், 58-75. ‡புறம், 360.

§பத்துப் பாட்டு : பக்கம், 560, டாக்டர் உ. வே. சா. பதிப்பு.

பட்டினப்பாலையிலுள்ள பெயர் வரிசையில் ஒளியர் என்பார் முதற்கண் குறிப்பிடப்பெற்றிருப்பதற்குக் காரணம் அவர்களது இத் தகுதி போலும்!

தமிழ்நாடு பன்னிரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அப் பிரிவுகளைப் பற்றி ஆராயப் புகுவது இங்கு வேண்டற்பால தன்றாயினும், நாம் இதுவரை ஆராய்ந்தனவும் இனி ஆராய வேண்டுவனவும் ஆகிய ஒளியர் குடியையும் பிற குடிகளையும் குறித்து அவ் வாராய்ச்சி சில உண்மைகளை வெளிப்படுத்தலாம். மேற்குறித்த பன்னிரு பிரிவுகளும் கொடுந் தமிழ் வழங்கும் நாடுகளாகப் பேசப்படுகின்றன.

இலக்கண நூல்களின் உரைகளில், கொடுந் தமிழ் பேசப்படுகின்ற நாடுகள் கீழ்க்கண்டவாறு கூறப்பெற்றுள்ளன: "தென் பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேணாடு, பூழி, பன்றி, அருவா, அருவா வடதலை, சீதம், மலாடு, புனல்நாடு."*

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின் உரையாசிரியரான சேனாவரையர், புனல் நாடு, வேணாடு என்பனவற்றை விடுத்து அவற்றிற்குப் பதிலாகப் பொங்கர் நாடு, ஒளி நாடு† என்பனவற்றைக் குறித்துள்ளார். பொங்கர் நாடு என்பது புனல் நாட்டின் மற்றொரு பெயர் எனலாம். அஃது அவ்வாறாயின் வேணாட்டின் மறு பெயரே ஒளிநாடு எனலாம் அன்றோ?

மேற்குறித்த பன்னிரு நாடுகளைப் பற்றியும் சிறிது விளக்குதல் பயனுடையதாகும்.

**தென் பாண்டி நாடு:**

தொல்காப்பியர் காலத்தில் செந்தமிழிலிருந்து சிறிது வேறுபட்டதாகிய தமிழ் பேசப்பட்ட பகுதிகள் பன்னி

---

*நன்னூல் விருத்தி, 273. †சொல், 400.

ரண்டு எனப்பட்டன. பிற்காலத்தில் வந்த இலக்கணக் காரர்களும் அங்ஙனமே கூறியுள்ளார்கள். உரையாசிரியர்கள் தரும் பன்னிரு நாட்டுப் பெயர் வரிசை, தென் பாண்டி நாட்டை முதலாகக்கொண்டு தொடங்குகிறது. தமிழ்ப் பேரகராதி இத் தென்பாண்டி நாட்டை இப்போதைய நாஞ்சில் நாடாகக் கருதுகிறது.*

குட்ட நாடு :

"திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்ததும் கோட்டயம் கொல்லம் என்று வழங்குகின்ற நகரங்களைக் கொண்டதும் ஏரிகளை மிகுதியாக உடையதுமாகிய ஒரு கொடுந் தமிழ் நாடே குட்டநாடாகும்" எனத் தமிழ்ப் பேரகராதி குறித்துள்ளது.† குட்டம் என்பது ஏரி அல்லது உப்பங்கழி அல்லது நீர் நிறைந்த இடம் எனப் பொருள்படும். இந் நாட்டின் மக்களும் அவர்களுக்குத் தலைமை பூண்ட குடியினரும் குட்டுவர் என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். இந் நாட்டின் முடிமன்னனை சேரன், 'குட்டுவன்' என்றே அழைக்கப்பட்டான்.

குடநாடு :

இது தமிழகத்தின் மேற்குப் பகுதியில் உள்ள நாடு. சேரமன்னன் குடநாடன் என்ற பெயரால் வழங்கப்பட்டான். எருமை என்னும் குறுநில மன்னனது நாடு (தற்கால மைசூர், குடநாடு எனக் குறிக்கப்பட்டுள்ளது.‡ இந் நாடு குடபுலம் எனவும் வழங்கும். இந் நாட்டின் மக்கள் அல்லது குடியினரே குடவர் எனப்பட்டனர். குடங்களிலோ அல்லது பானைகளிலோ பாலும் தயிரும் கொண்டு செல்லும் இடையராகிய குடவர் வேறு, இங்குக் குறிக்கப்பட்ட குடவர் வேறு என்று உணர்தல் வேண்டும். இக் காலத்தில் குடகு என வழங்கும் இடம் அக் காலத்துக் குடநாடா யிருக்கலாம் எனலாமா? குடநாடு என்பது தற்கால

*பக்கம், 2045. †பக்கம், 960. ‡அகம், 115 : 5.

மலையாளத்தின் ஒரு பகுதியாக இருக்கலாம் என்று தமிழ்ப் பேரகராதி கருதுகின்றது.*

கற்கா நாடு :

கற்கா என்பது மலைப்பூங்கா எனப் பொருள்படும். தற்போது கோயம்புத்தூர் மாவட்டத்தைச் சார்ந்து மேற்குத் தொடர்ச்சி மலையின் கிழக்குப் புறத்திலுள்ள கற்குன்றுகள் நிறைந்த பகுதியே கற்காநாடு எனத் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.† ஆவியரின் கற்காநாடுதான் இஃது எனலாமா? அவ்வாறாயின் அது மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து பழனிமலை வரையில் பரவியிருந்திருக்க வேண்டும்.

வேணாடு :

வேளிரின் நாடு வேணாடு எனல் வேண்டும். தற்போதுள்ள கோட்டாறு என்னும் பகுதியோடு கூடிய திருவாங்கூர்ப் பகுதியே வேணாடு எனத் திருவாங்கூர்ப் பழம்பொருளாராய்ச்சி வெளியீடு குறிக்கின்றது.‡ திருவிசைப்பாப் பாடிய வேணாட்டடிகள் இங்குத் தோன்றியவரே. குடபுலம் எனக் குடநாடு வழங்கப்பட்டாற்போல, வேள் புலம் என வேணாடு வழங்கப்பட்டது. திவாகரத்தின்படி வேணாடு என்பது சாளுக்கியரின் நாடாகும். தென் இந்தியக் கல்வெட்டுகளின் மூன்றும் பகுதி 60-ஆம் கல்வெட்டும் இவ்வாறே கருதுகின்றது. பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் வேணாடு என்பது கூர்ச்சரம் அல்லது மகாராஷ்டிர பூமி (அல்லது பொதுவாகத் தக்காணம்) என்பர்; மேலும் பஞ்சத் திராவிட நாடுகளுள் அடங்கிய தமிழ், தெலுங்கு, கன்னட நாடுகளோடு மஹாராஷ்டிரமும் கூர்ச்சரமும் அடங்குதல் இக் கொள்கையையே வற்புறுத்துவதும் காண்க என்பர்.§ சேனாவரையர், வேணாட்டிற்குப்

---

*பக்கம், 964. †பக்கம், 818.

‡T. A. S. I., 296. §வேளிர் வரலாறு, பக்கம், 17.

பதிலாக ஒளி நாட்டைக் குறிக்கிறார் என முன்னர்க் கண்டோம். எனவே, ஒளியரே வெளியர் எனலாமா ?

பூழி நாடு :

மலைவழி அல்லது கணவாய் என்று பொருள்படும் புழை என்ற சொல்லுக்கும் பூழி என்ற சொல்லுக்கும் ஏதாவது தொடர்பு உண்டா ? பழங்காலத்தில் இது மேற்கில் சேர நாட்டிற்குள் இருந்திருக்கவேண்டும். பூழிநாடு நன்னனின் நாடாகக் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்திலேயே, கொண்கானம் நன்னனின் நாடாகும் என்பது காணப்படுகிறது. எனவே, கொண்கானத்தின் மற்ருெரு பெயரே பூழி என்பதாம் எனக் கொள்ளலாம். பூழி நாட்டு மக்கள் கிழக்குப் பக்கமாகச் சென்று பாண்டிய நாட்டிற் குடியேறி வாழத் தொடங்கிய பின்னர்ப் பாண்டிய மன்னன் பூழியர்கோன் என வழங்கலானுன்.

பன்றி நாடு :

பழனிமலையைச் சுற்றியுள்ள பகுதியே பன்றி நாடு எனத் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.* தொல்காப்பிய உரையாசிரியரான இளம்பூரணரும் இதே வகையாகக் குறித்துள்ளார்.†

அருவா (அருவாள் நாடு) :

(நன்னூல் சூத்திரம் 272. மயிலைநாதர் உரையைக் காண்க.) கொள்ளிடத்திற்கு வடக்கே தென்னுர்க்காட்டு மாவட்டத்தின் பெரும் பகுதியே அருவா நாடு எனக் கருதப்படுகிறது.‡

அருவா வடதலை நாடு : (அருவாள் வடதலை நாடு:)

(நன்னூல் சூத்திரம் 272 மயிலைநாதர் உரையைக் காண்க). இது தற்போதுள்ள செங்கற்பட்டு மாவட்டமேயாகும் எனத் தமிழ்ப் பேரகராதி§ கூறுகிறது.

---

*பக்கம், 2566. †தொல், சொல், 394.
‡தமிழ்ப் பேரகராதி: பக்கம், 135. §பக்கம், 135.

சீதநாடு :

தற்காலத்துக் கோயம்புத்தூர் நீலகிரி மாவட்டப் பகுதிகளைக் கொண்ட நாடே சீதநாடு எனத் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.*

மலாடு :

மலைநாடு என்பதன் மரூஉவே மலாடு என்பதாம். தற்காலத்துத் திருக்கோயிலூரும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளுமே மலாடு ஆகும் என்றும், மலையமான் நாடு என்பதன் மரூஉவே மலாடு என்றும் தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.† நன்னூல் உரையும் மரூஉ என்பதில் இதே கருத்தை உடையதாகும்.‡

புனல் நாடு :

நீர் நிறைந்து வளம் மிகுந்த நாடு என்பது புனல்நாடு என்பதன் பொருளாகும். புனல்நாடு என்பது சோழ நாடாகும் என்று தமிழ்ப் பேரகராதி கூறுகின்றது.§ புனல் நாட்டிற்குப் பதிலாகச் சேனாவரையர் 'பொங்கர் நாடு' என்ற ஒரு நாட்டைக் குறிக்கிறார். சோலைநாடு என்பது இதற்குப் பொருள். இப் பொருள் சோழ நாட்டிற்குப் பொருத்தமேயாகும். எனவே, வேணாட்டை ஒளிநாடு எனவும் வேளிரை ஒளியர் எனவும் சேனாவரையர் கருதுகிறார் என்று நாம் கொள்வது தவறாகாது.

பட்டினப்பாலை குறிக்கும் பொதுவர் என்ற குடியினரைப் பற்றி இனி நாம் ஆராய்தல் வேண்டும். பட்டினப் பாலையில் தவிரச் சங்கநூலில் வேறெவ்விடத்திலும் பொதுவர் என்ற ஆட்சி உள்ளதாகத் தெரியவில்லை. மணிமேகலையில் இச் சொல் பொது மகளிர் (கணிகையர்)$ என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. அவர்களைப் பற்றி நாம் இப்போது அக்கறை கொள்ளவேண்டுவதில்லை. முல்லை நிலங்

*பக்கம், 1475. †பக்கம், 3104. ‡நன், 273 உரை.
§பக்கம், 2816. $28 : 51.

களில் வாழும் ஆயர்கள் பொதுவர் என வழங்கப்பெறுவர். அவர்கள் இடையர் எனவும் வழங்கப்பெறுவர். இடையர் என்ற சொல்லும் பொதுவர் என்ற சொல்லும் ஒரே பொருளையே குறிக்கும். செல்வம், வாழ்க்கை நிலை ஆகியவற்றில் தலையாயவராய் (முதல்வராய், முதலிகளாய்) உள்ளவர்க்கும், நாள்தோறும் உழைத்து வயிறு வளர்க்கும் கடையருக்கும் இடைப்பட்டவரே இடையர் அல்லது பொதுவர் எனப்படுவர். அல்லது, மிக உயர்ந்த மலைப்பகுதிகளுக்கும் மிகத் தாழ்ந்த வயல் நிலப்பகுதிகளுக்கும் இடையே வாழ்ந்த மக்கள் பொதுவர் அல்லது இடையர் எனப்பெற்றார் எனலாம். தமிழகத்தில் இடையர் குடியின் குறுநில மன்னர்கள் அசோகர் கட்டளைகளில் குறிப்பிடப்பட்டுள்ள ஹிடராஜாக்களே யாவர் என்பது திரு. சிவராசப்பிள்ளையவர்களின் கருத்தாகும்* என்பது மற்றோரிடத்தில் குறிக்கப்பட்டது. ஆய்கள்தாம் இடையர்கள் என்று கூறுவதற்குத் தடை கூறப்பட்டதெனினும் அசோகர் கட்டளைகளில் காணும் ஹிடராஜாக்களே தமிழ் நாட்டு இடையர் குடியின் குறுநில மன்னர்கள் ஆவர் என்ற அவர் கருத்திற்குத் தடையொன்றும் கூறுவதற்கில்லை.

ஈண்டுக் குறித்த பொதுவர் என்பார் ஆடுமாடு மேய்த்தல்மட்டும் செய்யும் சாதாரணமான இடையரல்லர்; முல்லைநில இடையர் குடியினராய் மற்றவர்கள்மீது படையெடுப்பதிலும், பிறர் படையெடுப்பின், அவர்களை எதிர்த்து வென்று தங்களைக் காத்துக்கொள்வதிலும் ஆற்றல் வாய்ந்தவர். பொதுவராவார், "புல்லிய இடையராய் அரசாள்வோர்"† என்று நச்சினார்க்கினியர் கூறுவது கொண்டு, புல்லிய இடையராய்ப் பிறந்தும் அரசாள்பவரே பொதுவர் என்பது தெளிவாகிறது. இவர்கள் முப்பெரு மன்னர்

*The Chronology of the Early Tamils—p. 168, 169.
†பத்துப், பக்கம், 561.

குடும்பங்களையோ, வேளிர், ஒளியர் குடிகளையோ குறுநில மன்னர் குடும்பங்களையோ, போர் வீரர்களான அருவாளர் குடியினரையோ சேர்ந்தவர்க ளல்லர். அதனால்-தான் தாழ்ந்த நிலையிலிருந்து திடீரென உயர்நிலைக்குவரும் இவர்களை உயர்வாக மதிக்காமல் பட்டினப்பாலை ஆசிரியர் அவர்களைப் 'புன் பொதுவர்' என்று குறிப்பிடுகிறார் எனலாம்.

**5. அண்டர் (அண்டர் மகன் குறுவழுதி):**

பதிற்றுப்பத்தில் 'அண்டர்' என்னும் குடியினர் குறிக்கப்படுகின்றனர்.* அவர்களும் முல்லைநிலக் குடியினரே. அவர்களுடைய தலைவன் கழுவுள் என்னும் பெயரினன்.† காமூர் என்பது அவனுடைய தலைநகரம். இந் நகரம் தமிழகத்தின் வட வெல்லைக்கு வடக்கே, வட ஆரிய அரசுகளின் தெற்கெல்லைக்குத் தெற்கே அவற்றின் இடைப்பட்ட பகுதி ஆகும் என டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் கூறுகிறார்கள்.‡ இக் கழுவுள் என்பான் பல குறுநில மன்னர்களைப் போரில் வென்றவன். உயர்ந்து பரந்து விளங்கும் வெண் குடையையும், வெற்றி தரும் போர் வன்மையையும் அழியாத புகழையும் உடைய பதினான்கு வேளிர்களோடு இவன் போர்புரிந்தமையைப் பரணர்,

> "அடுபோர்
> வீயா விழுப்புகழ் விண்தோய் வியன்குடை
> ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த
> கழுவுள் காமூர் போல......"§

என்ற வரிகளால் குறிப்பிடுகிறார்.

---

*88 : 9. †பதிற், 88 : 7.

‡Ancient India and South Indian History and Culture, p. 47. §அகம், 135 : 10-14.

அகநானூறு 365-ஆம் பாடலில்* மருதன் இளநாகனார் என்பவர் இவனுடைய சிறந்த வண்மையைப்பற்றியும் இவனுடைய காமூருக்குப் பூதம் ஒன்று கொணர்ந்த, பொரி அரை வேங்கைமரத்தின் புதுமலர் ஊர்முழுதும் மணம் வீசுவதைப்பற்றியும் பாடுகின்றார். இவ் வேங்கை மரம் கிடைத்தற்கரிய மரமாக இருந்திருக்கலாம். கழுவுள் அதைத் தனது காவல் மரமாகக்கொண்டு அதன் மலர்களால் கண்ணிகட்டித் தன் முடியில் அணிந்துகொண்டானாதல் வேண்டும்.

அரிசில்கிழார், பதிற்றுப்பத்து எட்டாம் பத்தில்† பெருஞ்சேரலிரும்பொறை, கழுவுளை வென்றமையை விவரிக்கின்றார். "கழுவுள் என்பான் எருதுகளும் பசுக்களும்கன்றுகளும் நிரம்ப உடையவன். அவனுடைய வீரர்கள் இடைவிடாமல் படையெடுத்துச்சென்று புலவு நாற்றம் வீசும் தங்கள் வில்லைக்கொண்டு பகைப் புலத்திலிருந்து ஆன்நிரைகளைக் கவர்ந்து வருவார்கள். ஆனால், சேரமான் இவர்களை வென்று ஆனிரைகளைக் கைப்பற்றினான். கழுவுளின் நாட்டில் பாலும் தயிரும், ஆயர் மகளிரால் தயிரினின்றும் எடுக்கப்படும் வெண்ணெயும் நிரம்பியிருக்கும். சேரமானின் வீரர்கள் அந்த வளமான நாட்டையும் காமூர் நகரத்தையும் பாழாக்கினர். ஆவின் பயனாகிய பாலும் தயிரும் கொண்டு செல்வச் செருக்குடன் வாழ்ந்த மக்களின் தலைவனாகிய கழுவுள், தான் சேரமானோடு பொருமுன்பு தன் நாட்டில் கேட்ட தயிர் கடையும் ஒலி, பொருதபின் கேளாமையால் ஒவ்வொரு நாளின் காலையிலும் தன் தோல்வியை நினைத்து வருந்தினான். விருந்தினரை உபசரித்து வளமாக வாழ்ந்த அவனுடைய மக்கள் தங்களது ஏராளமான செல்வத்தை விட்டுவிட்டுப் பிற நாடுகளுக்குத் தப்பியோடினர்."

*வரி, 11-15. †71 : 13-19.

இப் பதிற்றுப் பத்துப் பாடலின் பழைய உரையாசிரியர், "கழுவுளாவான் அவ் விடையர்க்குத் தலைவனாய்க் குறும்பு செய்திருந்தா னொருவன்" என்ற குறிப்பைத் தந்துள்ளார்.

இளஞ்சேர லிரும்பொறையைப் புகழும் ஒன்பதாம் பத்தில், பல மன்னர்களையும் குறுநிலத் தலைவர்களையும் வென்ற சேர பரம்பரையில் இரும்பொறை தோன்றியவன் என்பதும், சேரரிடம் தோற்றவர்களுள் கழுவுளும் ஒருவன் என்பதும் குறிக்கப்பட்டுள்ளன. அப் பத்தின் ஒரு பாடல் கழுவுள் தோற்ற செய்தியைக் கூறுகின்றது. "கடல்மீது படையெடுத்துக் கடம்பரை வென்று, அவரது காவல் மரமாகிய கடம்ப மரத்தை வேரோடு வெட்டியெறிந்தும், காமூரில் இருந்துகொண்டு இடைவிடாது போர் புரியும் கழுவுள் என்பானைப் புறமுதுகு காட்டியோடச்செய்தும், பிற மன்னர்களை யழித்தும், விரைந்து செல்லும் குதிரைகளையுடைய அண்டர்களை வென்று துரத்தியும், நன்னனின் ஒளிபொருந்திய மலர்களையுடைய வாகை மரத்தைத் தடிந்தும், புகழ்பெற்றுப் பகைவரது இரத்தம்கொண்டு பிசைந்த சோற்றுக் குவியலைப் படைத்து அயிரை மலையில் உள்ள கொற்றவையை வழிபட்டும், வேந்தரும் வேளிரும் அடிபணிந்து பின்பற்றி நிற்க வெற்றி எய்திய பெருமக்களின் வழிவந்தோனே!"* என்பதை நோக்குக.

சேரமான் கழுவுளை வென்றதும் அண்டரை வென்றதும் ஒரே படையெடுப்பில் எனக் கொள்ளலாம். பதிற்றுப் பத்து இந்த 88-ஆம் பாடலில் உள்ள அண்டர் என்னும் சொல் பொதுவாக, 'பகைவர்' எனப் பொருள்படும் என்று தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.† அஃது அண்டார் என்பதன் திரிபாக இருக்கலாம் என்றும் கருதுகின்றது. எனவே,

---

*பதிற், 88 : 5-14. †பக்கம், 59.

கழுவுளின் குடி வேறு, அண்டர் குடி வேறு என அது கருதுகிறது எனலாம். அக் கருத்து, டாக்டர் சாமிநாதைய ரவர்கள் பதிற்றுப்பத்து உரையில் எழுதியதை* ஒட்டிய தாகலாம். ஆனல்,

" பொருமுரண் எய்திய கழுவுள் புறம்பெற்று
நாம மன்னர் துணிய நூறிக்
கால்வல் புரவி அண்டர் ஓட்டி "

என்ற மூன்று வரிகளும் கழுவுளையும் அவனுடைய வீரர் களையும் சேரமான் எதிர்த்தமையையே குறிப்பிடுகின்றன. அண்டர் என்னும் சொல், பத்துப்பாட்டுப் பட்டினப்பாலை யில் வரும் பொதுவர் என்ற சொல்லைப்போல ஒரு குடி யைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். இவ் வண்டர்களும் பொதுவர்களும் குறும்பர் எனப்பட்டனர். அண்டிரன், அண்டிரே என்ற சொற்களோடும் அண்டர் என்னும் சொல்லுக்குத் தொடர்புண்டு எனவும் கொள்ளலாம். 'அண்டர் மகன் குறுவழுதி' என்ற புலவர்† பெயரிலும் இவ் வண்டர் எனும் சொல் காணப்படுகிறது. அண்டர் குடியிற் பிறந்த குறுகிய வடிவமுடைய வழுதி என்பது இப் பெயரின் பொருள். இங்கு வழுதி என்ற பெயர் பாண்டியனைக் குறிப்ப தன்று; அஃது இப் புலவரது இயற் பெயரேயாம்.

6. இடையர் (இடையன் சேந்தன் கொற்றனர்; இடையன் நெடுங்கீரனர்; இடைக்காடனர்):

மேலே குறிப்பிட்ட உரையாசிரியர்கள் இருவரும் அண்டரை இடையர் என்றே கொள்ளுகிருர்கள். நற் றிணையில்,

---

*161-ஆம் பக்கம்.

†அகம், 150, 228; குறுந், 345; புறம், 346 இவற்றின் ஆசிரியர்.

" பாணி கொண்ட பல்கால் மெல்லுறி,
ஞெலிகோல் கலப்பை அதனொடு சுருக்கிப்
பறிப்புறத் திட்ட பால்நொடை இடையன் "*

என் ஓர் இடையனைப் பற்றிய விளக்கம் வருகிறதெனினும் சங்க இலக்கியத்தில் இடையர் என்பார் ஒரு குடியினர் என யாண்டும் வந்திருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், இடையன் சேந்தன் கொற்றனார்† இடையன் நெடுங் கீரனார்‡ இருவரும் இடையன் என்னும் குடிப்பெயரைத் தாங்கிநிற்கிறார்கள். அசோகர் கல்வெட்டுக்களில் ஒன்று§ 'ஹிடராஜா'வைப் பற்றிக் குறிக்கிறது.$ இன்னது என்று இன்றுவரையில் அறியப்படாது நிற்கும் 'ஹிட' என்னும் பெயர் **ஆயி** என ஒருமையில் வழங்கும் ஆயர் என்பதனோடு ஒரே பொருளில் வரும் 'இட', இடைய, இடையர் என்னும் தமிழொலி முதலில் வடமொழி ஹகர ஒலிபெற்று வழங்குவதேயாகும் எனக் காலஞ் சென்ற திரு. சிவராசப் பிள்ளையவர்கள் கூறுகின்றார்.¶ மேலும், அவர், ஹிட ராஜாவை ஆயி என்றே கொள்ள முற்படுகிறார். ஆனால், ஒருமையில் குறிக்கப்படும் ஹிடராஜா என்பவன் சோழ பாண்டியருக்குரிய தமிழ் நாட்டிற்கு வேறானதொரு பகுதிக்கு உரியவன்போலக் கூறப்பட்டிருத்தலை அவர் கவனிக்கவில்லை. இடையர் என்பார் சேர சோழ பாண்டியர் மூவர்க்கும் உரிய தமிழகத்திற்கு வேறான நாடுகளுக்கு அரசுரிமை எய்தியவர்களாக இருக்கலாம்.

சங்கப் புலவர்களுள் ஒருவராகிய இடைக்காடனார் இவ் விடையர் குடியைச்சேர்ந்தவராகக் கருதப்பெறுகிறார்.

---

*நற், 142 : 4. †அகம், 375-இன் ஆசிரியர்.

‡அகம், 166-இன் ஆசிரியர். §பாறைக் கட்டளை XIII.

$Epigraphia Indica, Vol. II, p. 471 - Rock Edict XIII - The Shabazgrahi Version.

¶The Chronology of the Early Tamils, p. 169.

அவ்வாருயின் காடன் (காடுறை கடவுள்) என்பது அவரது இயற்பெயர் எனவும், இடை யென்னும் அடை அவருடைய குடியைக் குறிப்பது எனவும் நாம் கொள்ளவேண்டும். இடைக்காடு என்னும் ஊரைச் சார்ந்தவராதலின் அவர் இப் பெயர் பெற்ருர் என்று கூறுவாரும் உளர்.

---

## 10. தமிழக எல்லைப்புறத்தில் வாழ்ந்த குடிகள்

**1. தொண்டையரும், திரையரும் (திரையன்; தொண்டைமான் இளந்திரையன்):**

தொண்டையர் என்னும் சொல் சங்கப் பாடல்கள் பலவற்றில் காணப்படுகிறது.* இச் சொல் பன்மையி லமைந்திருப்பதால், இஃது ஒரு குடும்பத்தையோ குடியையோ குறிப்பதெனக் கொள்ளலாம். "பகைவர் நாட்டு வளங்களை நுகரும் உயர்ந்த தோற்றமுடைய யானைகளையும் பெரிய தேர்களையுமுடைய தொண்டையரின் சுரபுன்னை மரங்கள் நிறைந்த மலைகள் உள்ள இடமே† தொண்டையர் உறைவிடம் என்ற குறிப்பு ஈண்டு உள்ளது. தொண்டையர்கள் சிறந்த போர்வீரர்கள். "தொண்டையர்கள் நன்கு பழகிய யானைகளைக்கொண்டு, வெற்றிதரும் போர்களைச் செய்வார்கள். அவர்களுக்கு உரியது வேங்கடமலை. அது முகிற் கூட்டங்கள் தவழும் ஏறுதற்கரிய உயர்ந்த கோடுகளையும் ஓங்கு வெள்ளருவிகளையும் உடையது. அதற்கு அப்பால் இருப்பது வடுகர் நாடு.‡ இப் பாடற் கருத்திலிருந்து வேங்கடமலையே தொண்டையரின் ஆட்சியிடமா யிருந்தது என அறிகிருேம். இங்கும் அவர்க

*குறுந், 260; அகம், 213; பெரும்பா, 454 முதலியவற்றைக் காண்க.

†குறுந், 260 : 5-6. ‡அகம், 213 : 1-3.

ளுடைய போர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவர்களுக்குப் போரில் வெற்றிதருவன அவர்களுடைய யானைகளே எனவும் அறிகிறோம். தாயங் கண்ணனார் இப் பாடலை இயற்றியபோது தொண்டையர்கள் வேங்கடமலையில் குடியேறி நிலைத்திருந்தாராதல் வேண்டும்.

சங்கநூல்களில் காணும் பிற குறிப்புக்களிலிருந்து, திரையரே தொண்டையர் என்பது தெளிவாகின்றது. காட்டூர்கிழார் மகனார் கண்ணனார் என்பவர் அகம், 85-ஆம் பாடலில், திரையன் என்பான் ஒருவனை வேங்கடமலையின் தலைவனாகக் குறிப்பிடுகிறார். "வென்வேல் திரையனுக்கு உரியது வேங்கட நெடுவரை. அம் மலையின் சாரலில் பைங்கண் யானை, கன்று ஈன்று மெலிந்த தன் பிடிக்கும் கன்றுக்கும் முற்றாத மூங்கில் முளையைக் கொண்டுவந்து ஊட்டும்"* என்பதைக்காண்க.

திரையர் அல்லது தொண்டையர் எங்கிருந்து யானைகளைப் பெற்றார்கள் என்பது இப் பாடலிலிருந்து தெரிகிறது. இப் பாடலிற் குறிப்பிடப்படுபவனின் இயற்பெயர், 'வென்வேல் திரையன்' என்றே கொள்வதா அல்லது திரையன் என்று மட்டும் கொள்வதா என்பது தெளிவாகத் தெரியவில்லை. பெரும்பாணாற்றுப்படை† பல்வேல் திரையன் என்பானைப்பற்றிக் குறிப்பிடுகிறது. இவன் காஞ்சிபுரத்தில் இருந்து அரசாண்டு வந்தவன். இவனது முழுப்பெயர் தொண்டைமான் இளந்திரையன் என்பது. 'தொண்டையர் குடியில் தோன்றிய இளைய திரையன்' என்பது இதன் பொருள். இவனை இளைய திரையன் என்றால், வேங்கட மலைக்குரியவனை மூத்த திரையன் எனலாம். திரையர் அல்லது தொண்டையர், ஒரு தலைமுறைக்குள் வேங்கட மலையிலிருந்து காஞ்சிபுரத்திற்குக் குடியேறினர் என்று கூறவேண்டும்.

---

*அகம், 85, 5-9. †வரி, 37.

அதியமானின் காலத்தவனாகிய ஒரு தொண்டைமானைப் பற்றி ஔவையார் பாடியுள்ளார்.* தமிழக வரலாற்றின் முதற்காலத்தில் முடிமன்னர்கள் ஆற்றலிற் சிறந்து விளங்கியிருந்தனர். அதற்கடுத்த காலத்தில் குறுநில மன்னர்களாகிய வள்ளல்கள் மேலோங்கி மூவேந்தர்களையும் ஒளிமழுங்கச் செய்தனர். இறுதிக் காலத்தைச் சேர்ந்தவன் இளந்திரையன். ஔவையார் பாடிய தொண்டைமான் இளந்திரையனுக்கு, இவன் முற்பட்டவன் எனக் கொள்ளலாம். இந்தத் தொண்டைமானைப் பற்றி ஔவையார் வஞ்சப் புகழ்ச்சியாகப் பாடியதும், அவனுடைய வலிமையைப்பற்றியும் படைக்கலங்களைப் பற்றியுமே ஆகும்.

தொண்டையர் வேங்கட மலையிலிருந்து காஞ்சிபுரம் வரையில் வென்று தம் அடிப்படுத்தினர். அகம், 340-ஆம் பாடலில் நக்கீரர், பொலம்பூண் திரையன் என்பான் கடற்கரையை யடைந்து 'பவத்திரி' என்ற அழகிய நகரை அமைத்துக்கொண்டதாகப் பாடுகிறார். அவர் அந் நகரின் வளத்தையும் சிறப்பையும் தலைவியின் அழகுக்கு உவமிக்கின்றார். 'பவத்திரி' என்பது தூய தமிழ்ச் சொல்லாகத் தெரியவில்லை. அஃது ஆந்திரச் சொல் ஒன்றன் திரிபாகவோ, பிராகிருதச் சொல் லொன்றன் திரிபாகவோ இருக்கலாம். எஃது எவ்வாறேனும், தொண்டையர் என்னும் குடியினர் மற்றத் திசைமொழிகளும் பேசப்பெற்ற தமிழக எல்லைப் புறங்களில் வாழ்ந்தவர் என்பதை இப் பெயர் காட்டுகிறது.

'தொண்டை' என்பது ஒரு முட்கொடி வகையாகும். அதுவே இக் குடியினரைக் குறிக்கும் சின்னமாக இருந்திருக்கலாம். சோழர்களின் பெயர்களுள் ஒன்றான தொண்டியோர்† என்ற சொல்லும் தொண்டையர் என்ற

---

*புறம், 90.

†சிலப், ஊர்காண் காதை : 107; தொண்டியோர்-சோழகுலத்தோர் : அடியார்க்கு நல்லார் உரை.

சொல்லும் தம்முள் மயக்கத்தை விளைவிப்பனவாகும். கீழைக் கடற்கரையிலுள்ள தொண்டி, மேலைக் கடற்கரையில் உள்ள சேரர்களுக்குரிய தொண்டியினும் வேருனது. கீழைக் கடற்கரையிலுள்ள தொண்டி நகரத்திற்குரியவரான சோழர்கள் தொண்டியோர் எனப்பட்டனர். தொண்டியோர், தொண்டையர் என்ற பெயர்க்குழப்பத்தால் தொண்டியோரான சோழர்களோடு தொண்டையருக்கு உறவு உண்டு என்ற மயக்கம் ஏற்பட்டது. இக் குழப்பம் தவிர, துளுநாட்டைச் சேர்ந்த வெள்ளாளரின் உதவிகொண்டு சோழர் தொண்டைமண்டலத்தை வென்று ஆண்டுக் குடியேறினர் என்ற ஒரு கதையும் வழங்குகிறது. இக் குடியேற்றத்தின் காரணமாகத்தான் மேலைக் கடற்கரைப் பகுதிகளைச் சார்ந்த குறுநிலத் தலைவர்கள் கிழக்குக் கடற்கரைப் பக்கமாகக் குடியேறினரோ என்று எண்ண வேண்டியிருக்கிறது.

புதிதான ஒரு நில வாரிய முறை சோழநாட்டில் அக் காலத்தில் ஏற்படுத்தப்பட்டதன் காரணமாக நிலத்தை உழுதுண்ணும் குடியானவர் தமக் குரிமையாகத் 'தொண்டு வாரம்' என்ற பகுதியைப்பெற்று வாழலாயினர் என்பர். இத் தொண்டுவாரமே பிற்காலத்தில் மிராசு உரிமையாக வளர்ந்தது எனலாம். நிலங்களுக் குரிமைபூண்டவர் சோழநாட்டில் தொண்டையர் என அழைக்கப்பட்டனர் என்பர். இச் செய்தி மேற்சொன்ன தொண்டையர்-சோழர் பற்றிய குழப்பத்தை இன்னும் மிகுதிப்படுத்துகிறது.

அலை எனப் பொருள்படும் திரையோடு திரையனுக்குத் தொடர்பு கூறுவதுண்டு. தொண்டையர்க்குத் திரையர் என்ற பெயர் எவ்வாறு வந்தது? அடியார்க்கு நல்லார் 'திரையன்' என்பதன் மற்ருெரு வடிவமான திரையல் என்ற சொல்லைக் குறிப்பிடுகிருர்.

"சேரல் என்பது அண்ணல், தோன்றல், திரையல், இளவல் என்றாற்போல்வதோர் லகார ஈற்றுப் பெயர்ச் சொல்"* என்பது காண்க.

திரையல் என்ற சொல்லுக்கு வெற்றிலை என்றும் வேறு ஒரு பொருள் உண்டு. திரையல் என்னும் வெற்றிலையை இத் திரையர்களே தமிழ் நாட்டிற்கு முதல் முதல் கொண்டுவந்தவர்கள். அதனால் திரையர்கள் என வழங்கப் பெற்றார்கள் எனலாமா? அல்லது, தொண்டையரின் கிளைக்குடி ஒன்று திரைகளைத் தன் மற்றொரு சின்னமாகக் கொண்டதா? அன்றிக் கடல் அல்லது அலைவழி என்னும் கடற்கரை வழியை இவர்கள் பின்பற்றினார்கள் என்பதா? அல்லது முதலசை ஒழியநின்ற 'ஆந்திர' என்ற சொல்லின் திரிபே திரையர் எனலாமா? அன்றிக் கடலில் மீன் பிடித்தும் கொள்ளைத் தொழில் செய்தும் வாழ்ந்தவர் ஆகிய திரையர், தமிழ் நாட்டின்மீது தமக்குள்ள உரிமையை நன்கு உறுதிப்படுத்திக்கொள்வதற்காகத் தொண்டையரோடு உறவு கொண்டாடினரா? இவர்களைப்பற்றி இவ்வாறு பலவகையாகக் கருதவும் இடமுண்டு.

தொண்டையரும் திரையரும் முறையே தொண்டைக் கொடியைத் தம் சின்னமாகக் கொண்டவரென்றும், கடலுக்கு உரியவர் என்றும் இவர்கள் பெயரைக்கொண்டு கட்டிவிடப்பட்ட கதைகள் உண்டு. பெரும்பாணாற்றுப் படைக்கு உரையெழுதியுள்ள நச்சினார்க்கினியர் இக் கதைகளைத் தொகுத்து உணர்த்தியுள்ளார். "பெரும்பாணாற்றுப் படையின் பாட்டுடைத் தலைவனாகிய திரையனைத் திரைகள் கரையிற்கொண்டுவந்து சேர்த்தமையால் அவன் அப் பெயர் பெற்றான். நாகப்பட்டினத்தில் இருந்து அதை ஆண்டு வந்த சோழன் ஒருவன் நாகலோகத்துக்குச் சென்றானாக அந் நாகநாட்டு இளவரசி அவனிடம் காதல்கொண்டு

---

*சிலப், பதிகம் : 1, 2-அடியார்க்கு நல்லார் உரை.

அவனைக் கூடிக் கருத்தரித்தாள். "குழந்தை பிறந்தவுடன் அதன் கழுத்தில் தொண்டைக் கொடியைக் கட்டிக் கடலில் போட்டுவிட்டால், அவனை அலைகள் தள்ளிக் கொண்டு வந்து சோழ நாட்டிற் சேர்க்கும் என்றும், அவ்வாறு சேர்ந்ததும் அந் நாட்டிற்கு அவன் அரசனாக முடிசூட்டப் பெறுவான் என்றும் இளவரசியிடம் சோழன் கூறிவிட்டு விடைபெற்றுக்கொண்டான். அவளும் அவ்வாறே செய்யத் திரைகள் அவனைச் சோழ நாட்டுக் கடற்கரையில் கொண்டு வந்து ஒதுக்கின. அதனால் அவன் திரையன் என அழைக்கப்பெற்றான். அவன் கழுத்தில் தொண்டைக் கொடி ஒன்று சுற்றப்பட்டிருந்தமையால் அவன் தொண்டையன் என்றும் அழைக்கப்பெற்றான்." இந்தக் கதையை ஆதாரமாகக் கொண்டுதான் பெரும்பாணாற்றுப் படையின் இறுதியில் உள்ள வெண்பாப் பாடப்பட்டுள்ளது. அதன் பொருள் வருமாறு : "வெஞ் சினத்தையும் கொல்லும் வேலினையும் காட்டில் மலர்ந்த மலரால் தொடுத்த கண்ணியையும் உடையவனாய் விரைந்து செல்லும் குதிரைமேல் போகும் திரையனை, 'நான் பெற்றெடுத்தேன்' என்ற செருக்கால் அன்றோ, மேகஞ்சூழ்ந்த பெரிய கடல் இரவும் பகலும் உறங்காமல் ஆரவாரம் செய்துகொண்டிருக்கிறது ?" திரைகள் நிறைந்த கடலால் கொண்டுவரப்பெற்றவன் ஈண்டுக் கடலால் பெற்றெடுக்கப்பட்டவனாகக் கூறப் பெற்றான் என்க.

மணிமேகலை 24, 25, 29-ஆகிய காதைகளில் இது போன்ற ஒரு கதை கூறப்படுகிறது: பீலிவளை என்பாள் நாகநாட்டு மன்னனின் மகள். அவளுடைய தந்தையின் பெயர் வளைவணன் என்பது. வாச மயிலை என்பது அவளுடைய தாயின் பெயர். சோழநாட்டுப் பூஞ்சோலையொன்றில் பீலிவளை தனியாக உலாவிக்கொண்டிருந்த போது, சோழன் நெடுமுடிக்கிள்ளி அவளைக்கண்டு அவளிடம் காதல் கொண்டான். ஒரு திங்களுக்கு மேலாக அவர்

கள் நெருங்கிப் பழகியிருந்தும்கூட, அவள் தன்னைப்பற்றிய மந்தணச் செய்திகளைச் சோழனிடம் கூறவேயில்லை. ஒரு நாள் திடீரென அவள் மறைந்துவிட்டாள். ஒரு முனிவர் சோழனிடம் அவளைப்பற்றிய செய்திகளை எடுத்துக் கூறினர்; 'இனிமேல் அவள் வரமாட்டாள்; ஆனால் அவள் பெற்றெடுக்கும் குழந்தைமட்டும் வந்து சேரும்' என்று அவர் உறுதி கூறினர். நாகநாடு சென்ற பீலிவளை தான் பெற்ற மகனைத் தன் தீவுக்கு வந்த தமிழ்நாட்டு வணிகர்களிடம் கொடுத்து அவனைச் சோழனிடம் சேர்க்குமாறு கூறி யனுப்பினள். ஆனால், திரும்பி வந்துகொண்டிருந்த அவர்களுடைய கப்பல் புயலில் அகப்பட்டுச் சிதைந்தது. இச் செய்தி சோழன் காதிற்கு எட்டியது. அதனால், மிக வருந்திய சோழன் இந்திர விழாக் கொண்டாடவும் மறந்து போயினன். குழந்தையைத் தேடிக் கொண்டுவருவதற்காகப் பலர் பல திசைகளில் அனுப்பப்பட்டனர். இதற்கிடையில் சோழனின் தலைநகரம் கடலால் அழிந்தொழிந்தது. "குழந்தை சோழநாட்டிற்கு வரும்" என முனிவர் கூறிய கூற்றாகச் சொல்லிய மணிமேகலைக் காப்பியம், அஃது எவ்வாறு வந்து சேர்ந்தது என்பதைக் கூறவில்லை.

"திரை தரு மரபின் உரவோன் உம்பல்" என்ற பெரும்பாணாற்றுப்படை,* இக் கதையைத்தான் குறிப்பிடுகிறது போலும்! திரையன் ஒரு சோழனின் மகன் எனக் கூறும் இக் கதையை ஆதாரமாகக் கொண்டு, அவன் மூவேந்தர்களில் ஒருவனாக இலக்கியங்களில் குறிக்கப்பெற்றுள்ளான்.

> "முரசு முழங்குதானை மூவருள்ளும்...............
> பல்வேற் றிரையற் படர்குவிர் ஆயின்"†

என்பது காண்க.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடிய கல்லாடனர், வேங்கடமலையானது களவர்

*31-ஆம் வரி. †பெரும்பா, 33, 37.

கோமான் புல்லிக் குரியதெனக் கூறுகிறார்.* இந் நெடுஞ்செழியனைப் பாடியுள்ள நக்கீரர், தொண்டையர் கடற்கரையில் நிறுவிய பவத்திரி என்னும் நகரைப் புனைந்துரைத்திருக்கிறார்.† எனவே, கல்லாடனாரும் நக்கீரரும் சம காலத்தவர் எனக் கொள்ளலாம். வேங்கட மலையைப் புல்லிக் குரியதாகக் கூறும் கல்லாடனார், தொண்டையர் அம் மலையின் அடுக்கத்தில் (சரிவில்) குடியேற வந்தனர் என்று பேசுகிறார். எனவே, அவர்கள் குடியேற வந்தது வேங்கட மலை என்னாது, அதன் தெற்குப் பகுதி எனல் வேண்டும். தமிழ்நாட்டின் வட எல்லையிலிருந்து தெற்குப் பக்கம் நோக்கி வந்தவர் தொண்டையர் என்னும் நமது கருத்துச் சரியாயின், தாயங்கண்ணனாரின் பாடலின்படி அவர்கள் வேங்கடமலையில் வாழ்ந்திருந்தது கல்லாடனாரின் காலத்திற்கு முற்பட்ட தலைமுறையில் எனல் வேண்டும்.‡ கல்லாடனார் காலத்தில் தொண்டையர் வேங்கடமலையிலிருந்து தெற்காக நகரலாயினர் எனல் வேண்டும்.

திரு. சிவராசப் பிள்ளையவர்கள் வேங்கடத்தின் தலைவனாகிய புல்லி என்பானின் புல்லிக்காடு என்ற வேங்கடக் காட்டுப் பகுதிக்குத் தெற்கே ஆர்க்காடு என்ற மற்றொரு காட்டுப் பகுதி இருந்தது என்றும், அதுவே தொண்டையரின் உறைவிடமென்றும் முடிவு செய்கிறார்.§ இந்தத் தொண்டையர் குடியினரை அவர்கட்குப் பின்னர் வந்த பல்லவர் துரத்திவிட்டு, ஆர்க்காட்டில் குடிபுகுந்தனர் என்பது அவர் கருத்து. பல்லவர் என்ற சொல் பல்லவம் (தளிர்) என்பதிலிருந்து பிறந்ததெனக் கொண்டால், அத் தளிர்க்கும் தொண்டையரின் பெயர்க் காரணமாகக் கூறப்படும் தொண்டைக் கொடியின் இளந்தளிர்க்கும் தொடர்பு இருத்தலைக் காணலாம். டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்

---

*அகம், 209 : 8-9. †அகம், 340 : 7.

‡அகம், 213 : 1-3.

§The Chronology of the Early Tamils, p. 62.

அவர்கள், பிராகிருத, வடமொழிப் பட்டயங்களில் கூறப்பட்டிருக்கும் பல்லவர்கள், ஆந்திரப் பேரரசின் தென்கிழக்கு எல்லைப் பகுதியில் அவர்களுடைய பிரதிநிதிகளாயும் ஆட்சித் தலைவர்களாயும் இருந்து ஆண்டு வந்தவர்கள் என்றும், படிப்படியாக அவர்கள் தெற்கே பரவித் தொண்டை மண்டலத்தில் குடிபுகுந்தனர் என்றும், அவ்வாறு அவர்கள் பரவியபோது தொண்டையர் என்ற தமிழ்ச் சொல்லின் வடமொழி வடிவமான பல்லவர் என்ற பட்டப் பெயரை வைத்துக்கொண்டனர் என்றும் கூறியுள்ளார்.*

பஹ்லவர் என்ற சிதியன் மொழிச் சொல்லுக்கும், பல்லவர் என்ற சொல்லுக்கும் தொடர்புண்டு என்னும் கொள்கை சில வரலாற்றுப் பேராசிரியர்களுக்கு உண்டு. 'சாகா' பரம்பரைக்கு ஆந்திரநாட்டில் செல்வாக்கு ஏற்பட்டது. சாகா சகாப்தமே சாதவாக அல்லது சாலிவாஹன சகாப்தம் ஆயிற்று. இக் கருத்துச் சரியாயின், பஹ்லவர் குழு ஒன்று வடமேற்கிலிருந்து இந்தியாவிற்கு வந்து ஆந்திரப் பிரதேசத்தில் தங்கி அங்கே இந்தியப் பண்பாட்டை முழுதும் ஏற்றுப் பின்பு தெற்கு நோக்கி வந்து, தன் பெயரைப் பல்லவர் எனத் தமிழில் மாற்றியமைத்துக் கொண்டது எனலாம். இஃது உண்மையில் தவிர்க்கமுடியாத ஒரு மாறுதல் என்றே கொள்ளவேண்டும். என்றாலும், தொண்டையர் இந் நாட்டுக் குடியினரே என்று முடிவு செய்வது தான் தக்கதெனத் தோன்றுகிறது. தொண்டையரின் நினைவுச் சின்னமாக இப்போது ஏதாவது எஞ்சியிருக்கிறதா என்று எண்ணிப் பார்க்க நம் மனம் அவாக் கொள்ளுவது இயற்கையாகும். அதற்கேற்பப் புதுக் கோட்டை மன்னர்கள், தங்களைத் தொண்டைமான்கள் எனக் கூறிக்கொள்வதை அறிந்து மகிழ்ச்சியுறுகிறோம்.

---

*Ancient India and South Indian History and Culture, pp. 522-563.

2. களவர் (களவர் பெருமகன் தென்னன், களவர் கோமான் புல்லி) :

'களவர் பெருமகன் தென்னன்' என்ற பெயரிலிருந்து களவர் என்பது ஒரு குடிப்பெயர் என அறியலாம். சங்க இலக்கியத்தில் 'கள்வர்' என்ற பாடமே யுள்ளது. ஆனால், டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் காட்டுவதுபோலக் களவர் என்பதே சரியான பாடம் எனத் தெரிகிறது. "இக் கள்வர், ஆக்களைக் கவர்தலையே தமது தொழிலாக உடைய ஒரு குடியினர். அவர்களுடைய நாட்டில் யாரேனும் அறியாமற் புகுந்துவிட்டால், எளிதில் அதிலிருந்து மீண்டு வரமுடியாது. எறும்புப் புற்றின் உட்புறத்தைப்போலப் பலவாகப் பின்னிக்கிடக்கும் கவர்த்த வழிகளையுடையது அவர்களது நாடு.* கள்வர் பெருமகன் தென்னன் எனப்படுவதால், பாண்டியருக்கும் கள்வர் குடியினருக்கும் ஏதேனும் தொடர்பு அல்லது உறவு முறை இருக்கலாமோ என்று ஐயுறவேண்டியிருக்கிறது. ஆனால், பின் வருவனவற்றிலிருந்து பாண்டியரது வீழ்ச்சிக்குக் கள்வரே காரணம் என்பது தெரிகின்றது. அவரது நகரம் 'மூதூர்' என அழைக்கப்படுதலால், அது மிகவும் பண்டையது எனலாம்.

"மண்கொள் புற்றத் தருப்புழை திறப்பின்
ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்
ஏவல் இளையர் தலைவன் மேவார்
அருங்குறும் பெறிந்த ஆற்றலொடு பருந்துபடப்
பல்செருக் கடந்த செல்லுறழ் தடக்கைக்
கெடாஅ நல்லிசைத் தென்னன்"†

என்பது காண்க.

தென்னன், புல்லி எனக் கள்வர் தலைவர்கள் இருவர்களுடைய பெயர்கள் சங்க இலக்கியத்திற் குறிப்பிடப்பட்

*அகம், 342 : 5-6, 10. †அகம், 342.

டிருக்கின்றன. கள்வர் கோமான் புல்லியின் தலைநகரம் வேங்கடமலையில் அமைந்திருந்தது.* யாராலும் வெல்ல முடியாத மழவரை இப் புல்லி வென்றான் எனத் தெரிகிறது.

> " கழல்புனை திருந்தடிக் கள்வர்கோமான்
> மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
> விழவுடை விழுச்சீர் வேங்கடம் "†

என்பது காண்க. கள்வர்கள் பிறநாடுகளிற் புகுந்து கொள்ளையடிக்குந் தொழிலுடையவரா யிருந்தாலும் அவர்கள் வண்மைப் பண்பிற் சிறந்தவர்களா யிருந்தார்கள் என்பதை 'மாவண் புல்லி'‡ என்னும் தொடரால் நாம் அறியலாம். இக் காலத்தில் திருடர்கள் எனப்படும் கள்வர் அல்லது கள்ளர் என்பார்க்கும் ஈண்டுக் குறிக்கப்பட்ட கள்வர் குடியினர்க்கும் ஒரு தொடர்பும் இல்லை.

திரு. சிவராசப் பிள்ளைவர்களின் கருத்துப்படி, ஆர்க்காட்டிற்கு அண்மையிலுள்ள புலிக்காடே புல்லியின் தலைநகரம் ஆகும்.

டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள், " சங்க இலக்கியத்தின் பல கையெழுத்துப் பிரதிகளில் களவர் என்ற பாடம் காணப்படுகிறதே யன்றி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பில் உள்ளதுபோல் கள்வர் என்ற பாடம் இல்லை; களப்பிரர்களின் தோற்றத்தைப் பற்றி ஆராய்வது சம்பந்தமாக நான் இந்தக் கருத்தை அவரிடம் கூறியபோது, அவர் பல கையெழுத்துப் பிரதிகளை ஆராய்ந்து என் கருத்தை ஒப்புக்கொண்டதோடு, கள்வர் என்ற சொல் சங்க இலக்கியத்தில் எங்கெங்கு வருகிறதோ அங்கங்கெல்லாம் களவர் என்ற பாடமும் பொருந்தும் என்றும், பெரும்பாலான கையெழுத்துப் பிரதிகளின்படி களவர் என்ற பாடமே மிகவும் பொருத்தமுடையது என்றும் உறுதியளித்தார்கள். ஆந்திரப் பேரா

---

*அகம், 61. †அகம், 61 : 13. ‡அகம், 61, வரி, 12.

சின் தெற்குப் பகுதியில் இருந்த சிற்றரசுகட்கும், காஞ்சியில் இருந்த சோழச் சிற்றரசுகட்கும் இடையில் அவர்களுக்குள் மோதல் ஏற்படாதபடி அடிதாங்கிகளாக இருந்து வாழ்ந்துவந்த களவர்கள், அங்கிருந்து எப்படியோ குடிபெயர்க்கப்பட்டனர். அதனால்தான் களவர் பெயர்ச்சி என்பது ஏற்பட்டது. அங்ஙனம் பெயர்ந்த அவர்கள் காஞ்சிக்கு வந்து சிறிது காலம் தங்கிப் பின் மலையமான் நாட்டிற்கும் அதை அடுத்துள்ள பகுதிகளுக்கும் வந்து, அதன் பின் சோழர் நாட்டில் புகுந்து தங்கி இறுதியாகப் பாண்டிய நாட்டிற் குடிபுகலாயினர். காஞ்சியின் வடபகுதியிலிருந்து தெற்கே திருநெல்வேலி மாவட்டம் வரையுள்ள நாட்டுப்பகுதியில் இன்று கள்ளர் குடியினர் வாழ்ந்து வருதலை நாம் காணலாம். தமிழகத்தின் தெற்கே சென்று பார்ப்போமானால், அவர்களது வாழ்க்கை முறையே, அவர்கள் அப் பகுதியிற் பிறந்தவர்க ளல்லர், அங்கு வந்து குடியேறியவர்கள் என்பதைக் காட்டும். அவ்வாறு அவர்கள் தெற்கே குடியேறினபோது ஆண்டிருந்த பழங்குடிகளாகிய உழுதுண்போரைத் தாங்கள் கொள்ளை யடிப்பதிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக அச்சுறுத்தி அவர்களிடமிருந்து பணம் பறித்தார்கள். இந்தக் களவர் தமிழ் நாட்டிற் குடிபுகுந்ததையே வடமொழி நூல்கள் 'களப்பிரர் இடையீட்டாட்சி' எனக் குறிக்கின்றன'' என்று கூறுகிறார்கள்.*

மேலும் ஐயங்கார் அவர்கள், "'களவர்' எனத் தமிழில் அழைக்கப்படும் அவர்களைக் கன்னட மொழியில், 'களபர்' என அழைத்தனர். இவ் விரு மொழிகளிலும் வழங்கும் இச் சொற்களின் அடிச்சொல் அல்லது பகுதியும் அதிலிருந்து பிறந்த இந்தச் சொற்களும் வேறுபட்டவை அல்ல

*Ancient India and South Indian History and Culture, pp. 480-482.

என்பதை மொழிநூல் ஆராய்ச்சியால் தெளியலாம். களபர் என்ற கன்னட மொழிச் சொல்தான் தமிழில் களவர் என வழங்கப்படுவதாயிற்று எனின், அதுவே வடமொழியில் உள்ள களப்பிரர் என வழங்கப்பட்டது என்று கூறலாம். எனவே, கள்வர், களவர் என வழங்கப்பட்ட அவர்கள் தமிழ்நாட்டில் குடிபுகுந்ததே சங்ககாலப் பண்பாட்டின் வீழ்ச்சிக்குக் காரணம் எனக் கூறுவது மிகையாகாது எனத் தோன்றுகிறது" என்று கூறுகிறார்கள்.*

கள்வர் அல்லது களவர் என்பார் 'களம்' எனப்படும் போர்க்களத்துக் குரியவர் எனலாம். 'களபர்' என்ற கன்னட மொழியே தமிழில் பின்பற்றப்பட்டது என்பதற் கும் காரணம் உண்டு. பாண்டிய நாட்டின்மீது படையெடுத் தவர் கன்னடரே என்பது பெரிய புராணத்தில் உள்ள மூர்த்தி நாயனார் புராணத்தால் தெளிவாகத் தெரிகிறது. பல நாடுகளைப் படையெடுத் தழித்த களவர்கள் தமிழ் நாட்டிற்குள் புகுந்தது கன்னட நாட்டிலிருந்தே யாகும். அவர்களுடைய பேராசனை 'அச்சுதன்' என்பான், தமிழ் இலக்கியத்தில் அச்சுதக் களப்பாளன் என்று கூறப்படு கிறான்.† களப்பாளர் குடியினரைப் பற்றிப் பிற்கால இலக் கியங்களிலும் கல்வெட்டுக்களிலும் சான்றுகள் மலிந்திருக் கின்றன. சைவசித்தாந்தப் பேராசிரியரான மெய்கண்டார் என்பவர் களப்பாளர் குடியைச் சேர்ந்தவரே ஆவர். எனவே, இக் களப்பாளர்தாம் களப்பிரர் என்றும், களவர் என்றும் வழங்கப்பெற்றவர் என்று நிலை நாட்டவேண்டிய சிக்கல் எழுகின்றது. களவர், களபர் என்பவையே இக் குடியினருக்கு முதலில் அமைந்த பெயர்கள் எனின், தெலுங்கு மொழியில் களம் என்ற சொல் களமு, களம்பு,

*Ancient India and South Indian History and Culture, pp. 483-484.

†யாப்பருங்கல விருத்தியுரையைக் காண்க.

களெபு என்று திரிந்து வழங்கும் வழக்குக்கொண்டு, நாட்டை ஆளுதல் என்ற பொருளுடைய 'ஆள்' என்ற உறுப்பை இடையில் சேர்த்து, இத் திரிசொற்களிலிருந்து களவாளர், களபாளர், களப்பாளர் என்ற சொல் வடிவங் களை நாம் பெறலாம்.

காலஞ் சென்ற தமிழ்ப் பெரும் புலவர் பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள், நாம் முடிவு செய்தது போலவே தமது 'கள்ளர் சரித்திரம்' என்னும் நூலில் பல்ல வரும் தொண்டையரும் ஒருவரேயெனக் காரணம் காட்டி முடிவு செய்து,* சங்க இலக்கியத்தில் தொண்டையரும் களவர் கோமான் புல்லியும் வேங்கடமலைக் குரியவராகக் கூறப்பட்டிருத்தலால், தொண்டையரே களவர் எனவும் காட்டப் புகுந்திருக்கிறார்.† தொண்டையரைப் பற்றிய நம் குறிப்பில், தொண்டையர் என்பார் வேங்கடமலையை விட்டுத் தெற்கு நோக்கிவந்து காஞ்சிபுரத்தை யடைந்த பிறகே, களவர் வேங்கடமலையிற் குடிபுகுந்தனர் என்று காட்டியுள் ளோம். கல்வெட்டுக்கள், பல்லவர்கள் வேறு களப்பிரர் கள் வேறு எனத் தெளிவாக உணர்த்துகின்றன. பல்லவர் கட்குக் களப்பிரர்கள் பகைவர்கள் ஆவார்கள் என்றும் அவை கூறுகின்றன. பிற்காலத்தில் சோழ, பாண்டிய, பல்லவ, களப்பிர அரச குடும்பங்கள் ஒன்றாய் இணைந்து விட்டிருக்கலாம். அதனால்தான் கள்ளரைச் சோழரென் றும், மறவரைப் பாண்டியரென்றும் கருதும் கருத்து ஏற் பட்டது.‡ புதுக்கோட்டைச் சமஸ்தானாதிபதிகள் கள்ள ரோடும் பல்லவரோடும் உறவுகொண்டாடித் தொண் டைமான் என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டதும் இதனால்தான் என்று தெரிகிறது.

---

* பக்கம், 39. † பக்கம், 23.

‡ செந்தமிழ், பகுதி, 2, பக்கம், 75.

**3. வடுகர் (வடுகர் பெருமகன் எருமை):**

வடுகர் என்பாரைப் பற்றிய குறிப்புக்கள் சங்க இலக்கியத்திற் பல இடங்களில் வருகின்றன. வடநாட்டு மக்களைக் குறிக்கும் வடவர் என்ற சொல் வேறு; வடுகர் என்ற சொல் வேறு. வடுகர் என்பது ஒரு குடியின் பெயராகும். இதில் உள்ள 'வட' என்னும் அடிச்சொல் வடதிசையைக் குறிப்பது. 'கு' என்பது பொருட் சிறப்புக் குறிக்கும் உறுப்பாகும். 'அர்' என்பது உயர்வுப் பன்மை குறிக்கும் விகுதியாகும். இது தமிழ்ச் சொல்லாயின், 'வடகர்' என்று தானே இருத்தல் வேண்டும் என்று கருதலாம். தெலுங்கு போன்ற வடதிசை மொழிகளின் சிறப்பியல்புகளுள் ஒன்று, மாற்றும் உயிராற்றல் (harmonic sequence of vowels) என்பது. அதன்படி 'வட' என்ற முதல் நிலையில் உள்ள அகர ஒலியைப் பின்வரும் கு என்பதில் உள்ள உகர ஒலி தன் ஒலியாக மாற்றியதனால் வடுகு என்ற வடிவம் அமைந்து, பின்னர் அர் விகுதி சேர்ந்தமையால் வடுகர் என ஆயிற்று. எனவே, வடுகர் என்ற சொல்லே தமிழக எல்லைக்கு அப்பாலிருந்து வந்ததெனல் வேண்டும். தமிழர்கள் அங்ஙனம் வந்த சொல்லைப் பயன்படுத்திக்கொண்டனர் எனல் வேண்டும். வடுகர் தமிழக வடவெல்லையில் மட்டும் வாழ்ந்திராமல் நாலாபக்கமும் பரவி வாழத் தொடங்கியபோது வடக்குத் திசையைக் குறிக்கும் கருத்தை இச்சொல் இழந்தொழிந்தது. வடுகர் மேற்குப் பகுதியிலும் பரவினர் எனத் தெரிகிறது. எனவே, வடக்கே வாழ்ந்த வடுகரைத் தமிழர் 'வடவடுகர்' என அழைத்தனர்.*

வடுகர்கள் சினம் மிக்க நாயை உடையவர்கள்; நாகரிகமாக மெத்தெனப் பேசாமல் உரத்து நீட்டிப் பேசுபவர்கள்; பம்பை என்ற வாத்தியக் கருவியை இசைப்பவர்

---

*புறம், 378 : 2.

கள். 'கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்'* எனவும், 'கல்லா நீள்மொழிக் கதநாய் வடுகர்'† எனவும் வருதல் காண்க. அகம், 381 : 7-ஆம் வரியிலும் 'கதநாய் வடுகர்' என வருதல் காண்க. 'வம்ப வடுகர்'‡ என்பதால், அவர்கள் புதியவர்கள், நிலையற்றவர்கள், அயலார்கள் எனலாம். அவர்கள் விரைவில் சினமூண்டு முரண்பாடு அடைவர். 'முரண் மிகு வடுகர்'§ என வருதல் காண்க. அவர்கள் வில்லும் அம்பும் தாங்கிப் பாசறைகளில் தங்கிப் போர் செய்யக் காத்திருப்பர்.$ அவர்கள் குல்லைக் கண்ணியை உடையவர்கள்.¶ அவர்கள் தேக்கின் அகன்ற இலைகளில் வெள்ளரிசிச் சோறும் வெண்மை நிறம் பொருந்திய நிணத்துடன் கூடிய இறைச்சியும் வைத்து உண்பார்.ꝑ

அவர்களின் தலைவனான எருமை யென்பான் கட்டி என்பவனோடும் பிறரோடும் சேர்ந்து படையெடுத்துச் சென்று பாண்டியனுடன் பொருது தோற்றான் :

" வடாஅது
ஆரிருள் நடுநாள் ஏரா உய்யப்
பகைமுனை யறுத்துப் பல்லினம் சாஅய்க்
கணஞ்சால் கோவலர் நெடுவிளிப் பயிரறிந்து
இனந்தலைத் தரூஉம் துளங்கிமில் நல்லேற்றுத்
தழூஉப்பிணர் எருத்தம் தாழப் பூட்டிய
அந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த
துறுகாழ் வல்சியர் தொழுவறை வௌவிக்
கன்றுடைப் பெருநிரை மன்றுநிறை தரூஉம்
நேரா வன்தோள் வடுகர் பெருமகன்

---

*நற், 212 : 5.  †அகம், 107 : 11.
‡அகம், 375 : 14.  §அகம், 281 : 8.
$அகம், 295 : 14-15.
¶குல்லை - புனத்துளசி, குறுந், 11 : 5.
ꝑஅகம், 107 : 9-11 ; 213 : 8.

பேரிசை எருமை நன்னாட் டுள்ளதை
அயிரியா றிந்தன ராயினும் மயரிறந்து
உள்ளுப தில்ல தாமே.........''*

இவ்வாறு நக்கீரர் தமது பாடலொன்றில் வடுகரைப் பற்றி விரித்துரைத்துள்ளார். அவர்கள் தங்கள் முழு வலிமையோடும் காத்துவந்த ஆடுமாடுகள் அவர்களுடைய பெருஞ் செல்வமாக விளங்கின.

வடுகரின் நாடு யாது? கட்டியின் நாடு இவ் வடுகர் நாட்டு எல்லையில்தான் இருந்தது. "குல்லைக் கண்ணியை அணிந்த வடுகருக் குரிய இடத்ததாகிய பல வேலை உடைய கட்டியின் நல்ல நாட்டிற்கும் அப்பால், வேறு மொழிகள் பேசப்படுகின்ற நாட்டிற்கு அவர் சென்றனராயினும், அவருடைய நாட்டிற்கு, நெஞ்சே, நான் செல்லுதலை எண்ணினேன் ''† என்பது காண்க.

எனவே, வடுகர் நாடும் கட்டியின் நாடும் அடுத்தடுத்த நாடுகள் எனக் கருதலாம். இந்தப் பகுதியை அடைவதற்கு வேங்கடமலையைக் கடக்கவேண்டும். "வினை நவில் யானை விறற்போர்த் தொண்டையர் இனமலை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு ஓங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்...... இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை, நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும், வால்நிணப் புகவின் வடுகர் தேஎம் ''‡ என்பது காண்க.

தொண்டையர் வேங்கடமலையிலிருந்து தெற்கே வருதற்கு முன்னரே, இப் பாடல் இயற்றப்பட்ட தென்பது தெளிவாம்.

குறுநிலத் தலைவனும் வள்ளலுமான ஆதனுங்கன் என்பான் வேங்கடமலைக்குத் தலைவனாயிருந்தான் எனத் தெரிகிறது. அவனைப் பற்றிப் புறம், 389-ஆம் பாடல் குறிக்

---

*அகம், 253 : 9-21. †குறுந், 11 : 4-8.
‡அகம், 213 : 1-3, 6-8.

கிறது. அப் பாடலில், ஆதன் உங்கன் என்பான் வேங்கட மலைத் தலைவனின் முதிய அமைச்சன் என்றும், அரசன் வரும்போதும் போகும்போதும் மற்றவர் எழுந்து வணக்கம் செலுத்துவதுபோலத் தானும் செய்யமுடியாத அத்துணை முதியவன் என்றும் அவன் கூறப்பட்டுள்ளான். ஆதனுங்கனைப் பற்றிக் கூறும் புறநானூற்றுப் பகுதிக்கு இருவகையாகப் பொருள் கூறலாம்: (1) "தன்முன் வரும் மக்கள் எத்துணைச் சிறப்பு வாய்ந்தவராயினும் தான் எழாத பெருமையும் முதுமையும் உடையவன்." (2) "மெல்லிய தலையையுடைய பெண்யானை வருந்த, அதன் கன்றைக் கொண்டுவந்து மலையகத்துள்ள நல்ல ஊர்களின் பொதுவிடத்தே கட்டும் அருவி பாயும் வேங்கடத்திற்குத் தலைவனாகிய ஆதன் உங்கன்."*

பிற்காலத்தில், கள்வர் தலைவனாகிய புல்லி, வேங்கட மலைக்குத் தலைவனாயினன். அப்பொழுதும் வடுகர் அவனது மலைநாட்டின் வடவெல்லைக்கு அப்பாலேயே இருந்தனர். புல்லியைப் பற்றிக் குறிக்கும் சங்கப் பாடற்பகுதிகள் கீழே தரப்பட்டுள்ளன :—

"கல்லா இளையர் பெருமகன் புல்லி
வியன்தலை நன்னாட்டு வேங்கடம் ;"†

"மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடம் ;"‡

"மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் ;"§

"நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி
தேன்தூங் குயர்வரை நன்னாட் டும்பர்
வேங்கடம் ;"$

---

*புறம், 389 : 9-13. †அகம், 83 : 9-10. ‡அகம், 209, 8-9. §அகம், 61 : 12-13. $அகம், 393 : 18-20.

" அகலிடம் குழித்த அகல்வாய்க் கூவல்
ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும்
புடையலங் கழற்கால் புல்லி குன்றத்து
நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்
பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கும்
மொழிபெயர் தேஎம் இறந்தனர் ஆயினும்."*

மேற்கண்ட அகநானூற்றுப் பாடற் பகுதிகள், புல்லி என்பவன் வேங்கடமலையையும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளையும் ஆண்டவன் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. வேறு மொழி பேசும் வடுகர் நாடு புல்லியின் நாட்டிற்கு அப்பால் இருந்தது என்பதையும் நாம் இவற்றிலிருந்து அறியலாம்.

தமிழ்நாட்டின் எல்லைபுறப் பகுதிகள் இவை என்பதைத் தெளிவாக நாம் அறிதல் வேண்டும். தமிழ் நாட்டிலிருந்து வேங்கடமலையைக் கடந்து அயல் நாடுகளுக்குச் செல்லலாம். நேர் வடக்காகவோ மேற்குப் பக்கமாகவோ அதைக் கடந்து செல்லமுடியும். தமிழ் நாட்டின் வடமேற்கெல்லைப் புறத்தில் மௌரியர் நாடு இருந்ததாக வேறோரிடத்தில் குறிக்கப்பட்டுள்ளது. அக் காலத்தில் தமிழ்நாடு மேற்கே கொண்கானம் முதல் கிழக்கே வங்காளக் குடாக் கடல் வரையில் பரவியிருந்த தென்றால், வட எல்லைப் புறத்தைப் பற்றி மட்டுமே நாம் கருதவேண்டும். அதனால்தான் தமிழ்நாட்டவர்களுக்கு அயலவர்கள், வடவர் என்றும் வடுகர் என்றும் அழைக்கப்பெற்றனர். இந்த வட எல்லைப்புறம் மிக நீளமான தானதால், வடக்கு நோக்கிச் சென்று கிழக்குப் பகுதியை யடையலாம் என்றும் மேற்கு நோக்கிச் சென்று மேற்குப் பகுதியை யடையலாம் என்றும் கூறியிருக்கிறார்கள். வடுகர்கள் வேங்கடமலைக்கு

*அகம், 295 : 11-17.

அண்மையில் வாழ்ந்திருந்தனர். ஆனால், அவர்கள் சாதாரணமாக வேங்கடமலையின் வடக்குப் பக்கத்தில் வாழ்ந்திருந்தனரா, அன்றி, மேற்குப் பக்கத்தில் வாழ்ந்திருந்தனரா என்பதை அறிதல் வேண்டும். வடக்குப் பக்கத்தில் வாழ்ந்திருந்தவர் வட வடுகர்* எனப் பெற்றனர். இதனால்தான், வடுகர் என்னும் சொல் இன்றும் வடக்கே வாழும் தெலுங்கர்களைக் குறிக்கின்றது. இவர்களைத் தவிரப் பிற வடுகரும் இருந்தனர். எருமையின் நாடு வடுகர் நாடேயாகும். அகம், 115-ஆம் பாடலில், “நுண்பூண் எருமை குடநாட் டன்ன” என்ற வரி வருகிறது. எனவே, எருமையின் நாடு குடநாடே என்பதில் ஐயமில்லை. நுண்ணிய கலைத்தொழில் வாய்ந்த அணிகளை யணிந்த எருமைக்குரிய குடநாட்டின் அழகை ஒரு தலைவியின் அழகுக்கு ஒப்பிடுகிறார் புலவர்.† அயிரியாறு இக் குடநாட்டின் எல்லையோரத்தில் ஓடுவதாகும்.

> “நேரா வன்தோள் வடுகர் பெருமகன்
> பேரிசை எருமை நன்னாட் டுள்ளதை
> அயிரியா றிறந்தன ராயினும் ”‡

என வருதல் காண்க.

இன்னும் பிற பாடல்களிலும் அயிரியாற்றைத் தாண்டுதல், தமிழ் நாட்டின் வடவெல்லையைக் கடந்து அயல்நாடுகளுக்குச் செல்வதாகக் கூறியிருத்தலை நாம் அறியலாம்.

> “கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை
> அயிரியாற் றடைகரை வயிரின் நரலும்
> காடிறந் தகன்றோர் நீடினர் ஆயினும் ”§

என்பதில் அயிரியாற்றங் கரையிலுள்ள காட்டைக் கடந்து

---

*புறம், 378 : 2. †அகம், 115 : 5-6.
‡அகம், 253 : 18-20. §அகம், 177 : 10-12.

அயல்நாட்டிற்குத் தலைவன் சென்றதாகக் கூறப்பட்டிருத்தலை நோக்குக.

இதுபோன்ற பாடற் பகுதிகளிலிருந்து, அயிரியாற்றைச் சுற்றியுள்ள பகுதி, மயில்கள் நிறைந்த காடாயிருந்தது என்று தெரிகிறது. இந்த அயிரியாறு இப்பொழுது 'படக' நாட்டின் தெற்கெல்லையாகக் கூறப்படும் அசிரியாறே ஆகும். மைசூரின் வட பகுதியும் பெல்லாரி, அனந்தப்பூர் மாவட்டங்களின் பகுதிகளும் சேர்ந்த பிரதேசமே படக நாடாகும். தொல்காப்பியப் பாயிர ஆசிரியரான பனம்பாரனர் தமிழ் நாட்டின் வடவெல்லை வேங்கட மலை எனக் கூறுகின்ருர். யாப்பிலக்கண நூல் ஆசிரியரான காக்கைபாடினியார், "வடதிசை மருங்கின் வடுகு வரம்பாக" எனத் தமிழ் நாட்டின் வடவெல்லை வடுகுநாடு எனக் கூறுகிருர்.*

கம்பராமாயணத்தின் பாயிரம்† சில மொழிகளின் பெயர்களை "வடகலை (வடமொழி), தென்கலை (தமிழ்), வடுகு, கன்னடம்" என வரிசைப்படுத்திக் கூறுகிறது. இங்கே வடுகு எனப்பட்டது தெலுங்கு எனலாம். தெலுங்கு என்பது தற்கால வழக்காகும். ஆனல், நன்னூல் தொல்காப்பியம் இவற்றின் உரைகளில்‡ மொழிகளின் பெயர் வரிசை "கன்னடம், வடுகு, கலிங்கம், தெலுங்கம்" எனக் காணப்படுகிறது. இவ் வரிசையால் வடுகுக்கு வேருனது தெலுங்கு என்பது தெளிவாகிறது. எனவே, வடுகு என்பது கன்னடத்தின் பேச்சு மொழிகளுள் ஒன்ருய், படகரால் பேசப்பட்ட தொரு மொழியாகும் எனலாம்.

---

*தொல், பொருள், 650: உரைகாண்க. †பயன், 4.

‡நன்னூல், சூத், 272, மயிலைநாதர் உரை; தொல், சொல், சூத், 400-உரை.

# 11. அயல் நாட்டுக் குடிகள்

**1. ஆரியர் (ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன்):**

ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன் என்பது ஒரு சங்கப் புலவனின் பெயர். இப் பெயர் மூன்று பகுதிகள் கொண்டது. முதற் பகுதியான ஆரிய அரசன் என்பது, இவன் ஆரியர்களுக்கு அரசன் என்பதையும், இரண்டாம் பகுதியான யாழ் என்பது, இவன் யாழ் இசையில் வல்லோன் என்பதையும், மூன்ரும் பகுதியான பிரமதத்தன் என்பது இவனது இயற்பெயர் பிரமதத்தன் என்பதையும் குறிப்பனவாகும்.

இவ் வாரியர் என்பார் யார்? 'சங்கப் பாடல்களில் நம்முடைய தற்காலக் கருத்துக்களைப் புகுத்துவது தவருகும் எனத் திரு. சிவராசப் பிள்ளையவர்கள் எச்சரிக்கை செய்திருக்கிருர்கள். தமிழகத்திற்கு வடக்கேயுள்ள நாடு 'ஆரியகா' எனக் கிரேக்க நூல்களிற் கூறப்பட்டுள்ளது. இது 'அருவரின்' நாடான அருவகம் அன்ருயின், ஆரியரின் நாடான 'ஆரியவகமாகும்' எனல் வேண்டும். எனவே, ஆரியர் என்பார், தமிழகத்திற்கு வடக்கேயுள்ள நாட்டில் வாழ்ந்த மக்கள் எனக் கொள்ளல்வேண்டும். 'அருவா' என்ற சொல் 'ஆரியர்' என்ற சொல்லாகக் கொள்ளப் பட்டது மயக்கத்தால் எனலாம்.

பேராசிரியர் மாக்ஸ் முல்லர் 'ஆரியர்' என்ற சொல் லிற்கு வலிந்து புகுத்திய வழக்கிற்கு மாருன பொருளைச் சங்க கால மக்கள் எதிர்பார்த்திருக்க முடியாது. திராவிட மொழிகளுக்கு வேருன இந்து ஆரிய மொழிகளைப் பேசிய மக்களை 'ஆரியர்' என்ற சொல் குறிப்பதாகும் என அவர் கூறுகிருர். ஒரே பொது மொழியைப் பேசுதல் என்ற அடிப்படையைக் கொண்டு, அப் பொதுமொழியைப் பேசு பவரை ஓர் இனத்தவராகக் கொள்வது தவறு என்பது இப் போது அனைவரும் உணர்ந்த உண்மையாகும். தற்கால

வழக்கைப் பற்றிய கருத்து யாதாயினும், பண்டைக் காலத்தில் ஆரியர் என்ற சொல் மாக்ஸ் முல்லர் கூறும் பொருளில் வழங்கியிரா தென்பது தேற்றம்.

ஆரியர் என்ற சொல் பல்வேறு பொருள்களில் ஆட்சி பெற்றுள்ளது. அவற்றுள் ஒன்று தமிழ் நாட்டிற்கு வடக்கே வாழ்ந்த மக்களும் மன்னரும் ஆரியர் ஆவர் என்பது. இது முன்னரே கூறப்பட்டது. 'வழிபடத் தக்கவர்' என்ற பொருளும் இச் சொல்லுக்கு உண்டு. புத்தரைப் போன்ற பெரியோர்கள் 'ஆரியர்' என்றும், 'ஆரியபுத்திரர்' என்றும் கூறப்பெற்றுள்ளார்கள். தமிழில் சான்றோரைக் குறிக்கும் 'ஐயர்' என்ற சொல், ஆரியர் என்ற சொல்லின் சிதைவேயாகும் எனச் சில அறிஞர்கள் கருதுகிறார்கள். சான்றோரைக் குறிப்பிடும்போது, ஆரியர் என்ற சொல் சிறப்பாக ரிஷிகள் அல்லது அறிவர் அல்லது சாதுக்களையே உணர்த்துவதாகும். மூன்றாவதாகத் 'தொம்பர்' என இக் காலத்தில் வழங்கும் கழைக் கூத்தாடிகளை ஆரியர் என்ற சொல் குறிப்பதாகும். பிற்காலத்தில் இவர்கள் மிலேச்சர்கள் என இழிவாகக் கருதப்பெற்றனர்.

தமிழ் மொழியில் பிற்காலத்தில் தோன்றிய நிகண்டுகள்* ஆரியர் என்ற சொல்லுக்கு மிலேச்சர்கள் என்றே பொருள் கூறுகின்றன. இவர்கள் தமிழகத்தின் வட வெல்லைப் புறங்களிலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்தனராதல் வேண்டும். யானையைப் பழக்குவோர் என்பது ஆரியர் என்ற சொல்லுக்கு நான்காவதாக வழங்கப்படும் பொருளாகும்.

(அ) ஆரியர் (ரிஷிகள் அல்லது முனிவர்கள்):

அகநானூறு 398-ஆம் பாடலில்† பூஞ்சோலை நிறைந்த தலைவியின் ஊருக்கே உவமையாக, மேகங்கள் தவறாது மழை பொழிதலால் வளம் மிக்க ஆரியரின் 'பொன்படு

---

*ஆரிய நிகண்டும், பிங்கலந்தை நிகண்டும். †வரி, 13-20.

நெடுவரை' கூறப்படுகின்றது. இவ் வாரியர் யார்? 'பொன் படு நெடுவரை'* என்பதற்கு 'இமயமலை' என்றே பொருள் செய்வது வழக்கம். ஆனால், இவ்வாறுதான் பொருள் செய்யவேண்டுமென்பது முடிந்த முடிபன்று; ஏனெனில், கொண்கானத்தையும் "பொன்படு கொண்கானம்"† எனச் சங்க இலக்கியம் குறிப்பதை அனைவரும் அறிவர். ஆனால், இமயமலையைப் பற்றிக் குறிக்கும் தெளிவான வேறு குறிப்புக்கள் சங்க இலக்கியத்தில் உள்ளன. இமயம் முதல் குமரி வரை விரிந்து பரந்திருக்கும் இந்திய நாட்டை ஒரு நாடாகவே, ஒரே பண்பாடு உள்ள நாடாகவே தமிழர் கருதிவந்துள்ளனர்.

> "ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
> தென்னங் குமரியோ டாயிடை"‡

என வருதல் காண்க.

இப் பதிற்றுப்பத்துப் பாடலில், தாம் மேய்ந்த நரந்தம் புல்லையும் பருகிய அருவி நீரையுமே கனவிலும் கண்டு கவரி மான்கள் அச்சமின்றி உறங்குதற்கு இடனாகிய ஆரியாது பேரிமயத்தின் அமைதித் தன்மையைப் புலவர் கூறுகிறார்.§

இந்த இமயமலை ஆரியர் யார்? இவர்கள் அங்கு நிலையாய்த் தங்கித் தவம் செய்துவந்த முனிவர்கள் ஆவர். பதிற்றுப்பத்து 43-ஆம் பாடல் இதைத் தெளிவாக்குகிறது. "கடவுள் நிலைஇய கல்ஓங்கு நெடுவரை வடதிசையெல்லை இமயமாகத் தென்னங் குமரியோடு ஆயிடை அரசர்"$ என வருதல் நோக்குக. ஈண்டுக் கடவுள் என்ற சொல்லால் குறிக்கப்பெற்றவர்கள் முனிவர்களே.

---

*அகம், 398 : 19.
†நற்றிணை, 391 : 6.
‡பதிற், 11 : 23-24.
§பதிற், 11 : 21-23.
$பதிற், 43 : 6-7.

இமயம் முதல் குமரிவரை எல்லையாக உடைய இந்தியா ஒன்றுபட்ட நாடாகவே மதிக்கப்பெற்றிருந்ததன் உண்மை இந்தப் பாடலிலும் கூறப்பட்டிருக்கிறது. இமயமலை என்று தெளிவாகக் குறிக்கப்படும் இந்த இடங்களிற்கூட, இமயமலை என்பதைத் தமிழகத்தின் வடவெல்லைக்கு அப்பால் உள்ள குன்றுகளே எனத் திரு. சிவராசப்பிள்ளையவர்கள் சாதிக்க முற்படுகிறார்.* இந்தியா முழுதும் ஒன்றுபட்ட ஒரு நாடே என்று தமிழர்கள் கருதியமையாற்றான் தமிழ் மன்னர்கள் மூவரும், தங்கள் ஒன்றுபட்ட இந்தியாவின் வடவெல்லையாக உள்ள இமயமலையில் தம் இலச்சினைகளைப் பொறிக்கும் மரபை மேற்கொண்டுவந்தனர். இந்த மேற்கோள்களிலிருந்து ஆரியர் என்பார் இமயமலையில் இருந்த ரிஷிகள் அல்லது முனிவர்கள் என்று கொள்ளலாம்.

(ஆ) ஆரியர் (வடநாட்டு அரசர்கள்):

அடுத்ததாக, **ஆரியர்** என்னும் சொல் வடநாட்டு அரசர்களையும் குறுநில மன்னர்களையும் குறிப்பதாக அறிகிறோம். பதிற்றுப் பத்து இரண்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவனை நெடுஞ்சேரலாதன், இமயவரம்பன் என்றே கூறப்பட்டுள்ளான். இமயத்தைத் தன்னாட்டுக்கு வட எல்லையாகக் கொண்டவன் என்பது இதன் பொருளாகும். இரண்டாம் பத்தின் பதிகம் நெடுஞ்சேரலாதன் தன் விற்பொறியை இமயமலையிற் பொறித்தான் என்றும், பெரும் புகழ்பெற்ற ஆரியரைத் தன்னடி பணியச் செய்தான் என்றும் கூறுகிறது. அவன் இமயத்தில் விற்பொறித்ததும் ஆரியரைத் தோற்கடித்ததும் ஆகிய செயல்கள் இருவேறு சமயங்களில் நிகழ்ந்தனவாகலாமோ என்ற ஐயம் நம் மனத்தில் எழுகின்றது. அகம், 396-ஆம் பாட்டைப் பாடிய புலவர் ஒரு தலைவியின் அழகுக்கு நெடுஞ்சேரலாதனின் தலைநகரான வஞ்சியின் அழகை ஒப்புமை கூறும்போது,

*The Chronology of the Early Tamils, p. 252.

அம் மன்னனை, "ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத் தொன்று முதிர் வடவரை வணங்குவிற் பொறித்து வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்"* என்று கூறியிருத்தலால் இரண்டு நிகழ்ச்சிகளும் ஒரே காலத்தில் நிகழ்ந்தனவே என்று அறியும்போது நம் ஐயம் மறைந்தொழிகின்றது.

ஆரிய அரசரான கனகனும் விசயனும் தமிழ்மன்னரை இழிவாகப் பேசினர் என்றும், சேரன் செங்குட்டுவன் பத்தினித் தெய்வமான கண்ணகியின் படிமத்திற்குக் கல் கொணர நினைத்து, இமயமலையிலிருந்து கல் கொணரச் சென்றால் தமிழ் மன்னரைப் பழித்த அந்த ஆரிய மன்னரைப் பழி வாங்குதற்கும் இடமுண்டாகும் என்று எண்ணி வட நாட்டிற்குப் படையொடு சென்றான் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் புகழும் பதிற்றுப்பத்து-ஐந்தாம் பத்தின் பதிகம், தெய்வப் பத்தினியின் படிமத்திற்குக் கல் கொணரவேண்டும் என்ற நோக்கத்தோடு, வில்லிலிருந்து விடுபட்ட அம்பு போல் அவன் நறுமணம் கமழும் காடுகளின் வழியாக வட நாடு நோக்கி, நேராக விரைந்துசென்று, ஆரிய மன்னனை வென்று வீழ்த்தி (ஆரிய அண்ணலை வீட்டி)ப் படிமத்திற்கென எடுத்த கல்லை உபநதிகள் பலவுடைய கங்கைப் பேராற்றில் நீராட்டினான்† என்று அவனைப்பற்றிப் புகழ்ந்து கூறுகிறது.

இத்தகைய வட நாட்டுப் படையெடுப்புக்களைக் கொண்டு அந் நாட்டில் வலிமை வாய்ந்த அரசர்கள் இல்லாதபோதுதான் அப் படையெடுப்புக்கள் நிகழ்ந்திருக்க வேண்டும் என்றும், அக் காலமே சங்ககாலமாக இருக்க வேண்டும் என்றும் வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர்.

---

*வரி, 16-19.

†பதிற், 5-ஆம் பத்து; பதிகம் : 4-7.

தமிழ் நாட்டின் வட எல்லைப்புறத்தில் வாழ்ந்த மக்களைச் சிறப்பாகக் குறித்த ஆரியர் என்னும் சொல் ஈண்டுக் குறித்த இரண்டு பொருள்களிலும் சென்று பொது வழக்குடையதாயிற்று எனலாம். தமிழ் மொழிக்கு வேறுபட்ட மொழி பேசிவந்த இம் மக்களிற் சிலர், தங்கள் வாழ்க்கையை நடத்துவதற்கு வழி தேடுவதற்காக அமைதியான முறையில் தமிழகத்திற்குள் புகுந்தனர்; வேறு சிலர், கொள்ளைக்காரர்களாக இங்குப் புகுந்தனர். இந்த ஆரியரை வென்றமையால்தான், கோவலனைக் கொலைசெய்ய ஆணையிட்டவனாகக் கருதப்படும் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனுக்கு அப் பெயர் வந்தது.

ஆரியர் குடியிற் பிறந்த வீரர்களுள் சிலர், பெரிய மல்லர்களாகவும் இருந்தனர். அவர்களுள் ஒருவனைப் பற்றி அகம்., 386-ஆம் பாடல் குறிப்பிடுகிறது. "ஆரியப் பொருநன் ஒருவன் பாணன் என்பானோடு மற்போர் நிகழ்த்துகையில் அப் பாணனுடைய மார்பின் வலிமையால் மிக வருந்தினன். அப்போது அவனுடைய முழவுபோன்ற தோள்கள் அப் பாணனுடைய கையில் அகப்பட்டு முறிந்து வேறாயின. அவ்வாறு ஆனதை நோக்கி நல்ல போரில் வல்ல கணையன் என்பான் வெட்கித் தலைகுனிந்தான்"* என்ற செய்தியைக் காண்க.

பாணன் என்பான் வடதிசைக்கண் ணுள்ள யானைகள் நிறைந்த காடுகளுக்குத் தலைவன் :

"வடா அது
நல்வேற் பாணன் நன்னாட் டுள்ளதை
வாட்கண் வானத் தென்றூழ் நீளிடை
ஆட்கொல் யானை அதர்பார்த் தல்கும்
சோலை யத்தம்..............."†

என வருதல் காண்க.

---

*அகம், 386 : 3-8. †அகம், 325 : 16-20.

கட்டி யென்பானும், தமிழ் நாட்டின் வடவெல்லைப் புறத்தில் இருந்து ஆண்டுவந்த ஒரு குறுநில மன்னனே ஆவான்.

" குல்லைக் கண்ணி வடுகர் முனையது
வல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும் "*

என வருதல் காண்க.

பாணன், கட்டி என்ற இவ் விரு குறுநில மன்னரும், தெற்கே, சோழன் திதியன் வெளியனின் தலை நகரான உறந்தை†யின் மீது படையெடுத்தனர். ஆனால், அவனது நகரில் ஒலித்த காலை முரசொலியைக் கேட்டதும் அவர்கள் அஞ்சிப் போர் தொடுக்காமல் ஓடி விட்டனர்.‡ கட்டி என்பான், நன்னன், எற்றை, அத்தி, கங்கன், புன்றுறை ஆகியோரோடு சேர்ந்து சோழனை எதிர்ப்பதற்காக வந்து பாசறையில் தங்கினான். சோழர் படைத்தலைவனாகிய பொறையன், அவர்களை எதிர்த்துப் பொருது, போர்க்களத்தில் மாண்டான். சோழன் இதைப் பொறுக்க முடியாமல் தானே போர்க்களத்திற் புகுந்து வீரத்தோடு போர்புரிந்து, பகைவர்களின் தலைவனாகிய கணையனைச் சிறைப்பிடித்து அவர்களுடைய தலை நகராகிய கழுமலத்தையும் கைப்பற்றினான்.§

அகநானூறு 44-ஆம் பாடலினின்று கட்டி, நன்னன், எற்றை முதலியோருக்குக் கணையன் என்பான் நண்பன் என்று தெரிகிறது. இந்த இறுதிப் போர் நடைபெறுவதற்கு முன்பு, அஃதாவது கட்டியும் பாணனும் உறந்தையைத் தாக்க வந்தபோது, ஆரியப் பெருநனோடு பாணன் மற்போர் செய்தானாதல் வேண்டும்.$ அந்த மற்போரைக் குறித்து முன்பே உரைத்தாம்.

*குறுந், 11 : 5-7. †அகம், 226. ‡அகம், 226 : 13-17.
§அகம், 44 : 7-14. $அகம், 386.

தமிழ் நாட்டின்மீது ஆரியர் படை யெடுத்தமையைப் பற்றிய செய்தி இரண்டு பாடல்களிற் கூறப்பட்டுள்ளது. பலமுறை அவர்கள் அவ்வாறு படையெடுத்திருக்கவேண்டும். அகம், 336-ஆம் பாடலில்,* நயப்புப் பரத்தை பொருத்தி சுடரொடு திரிதரு நெருஞ்சிபோலத் தலைவன் தன்னொடு திரியவில்லையானல், வல்லத்துப் போரில் ஆரியப் படைகள் சோழர் படைகளால் உடைந்தொழிந்தமை போலத் தன் கைவளைகள் உடைந்தொழிக என இற்பரத்தையிடம் சூளுரைத்தமையைப் பாவைக் கொட்டிலார் என்ற பெரும் புலவர் அழகாகப் பாடியுள்ளார்.

ஆசிரியர் பெயர் அறியப்படாத நற்றிணைப் பாடலொன்று† ஒரு தோழியின் மனவுணர்ச்சியைப் படம் பிடித்துக் காட்டுவதுபோல் காட்டுகின்றது. துணையில்லாதவளாய்த் தனியே விழவுக் களத்தில் ஓர் இளம் பரத்தை வந்து நின்ருள். அவளைக் கண்டால் அவளது அழகு வலையில் தலைவன் விழுந்துவிடுவானே என்று தோழி அஞ்சுகிருள். தலைவியும் தானும் மற்றும் பலரும் தலைவனைச் சூழ்ந்திருக்கவும் அதையும் மீறி அவளது அழகு தலைவனின் மனத்தைக் கவர்ந்துகொள்ளும் என்று அவள் நினைக்கிருள். முள்ளுரை முற்றுகையிட்டிருந்த ஆரியர் பலருடைய வாள்களும் மலையனது ஒப்பற்ற ஒரு வேலுக்கு முன் பயனற்றுப்போக, ஆரியர் புறமுதுகிட்டு ஓடியதுபோலப் பலராய்க் கூடிநின்ற தாங்கள் அவ் வொருத்தியின் 'வன்மை'க்கு ஓடி ஒழிய நேரும் ஆதலால், அவள் கண்ணில் தலைவன் படாதபடி காக்க முற்படவேண்டும் என்று தோழி மற்றவர்களுக்கு எச்சரிக்கை செய்கிருள். இவ்வாற்ருல் தமிழகத்தின் வடவெல்லையை யொட்டி வாழ்ந்த ஆரியக் குடியினர் சிலர் மலையனுடைய நாட்டின்மீது படை யெடுக்கும் அளவுக்கும், இன்னும் உள்ளே வந்து

---

*வரி, 19-23. †170.

சோழரின் வல்லத்தைத் தாக்கும் அளவுக்கும் ஆற்றல் சான்றவராய்த் திகழ்ந்தனர் என்று தெரிகிறது.

இவ்வாறு தமிழ் நாட்டின்மீது படை யெடுத்த ஆரிய அரசர்களுள் ஒருவனே 'ஆரிய அரசன் பிரகத்தன்' என்பவன். இவன் தமிழ் நாட்டிலோ அதற்கு அண்மையிலோ அரசிருந்தவன் ஆதல்வேண்டும். பிரகதத்தன் என்பதன் மரூஉவே பிரகத்தன் எனலாம். தமிழைப் பழித்து அதைப் புறக்கணித்த அவனுக்குத் தமிழ் மொழியின் உயர்வையும் சிறப்பையும் அறிவுறுத்துவதற்காகவே கபிலர் குறிஞ்சிப் பாட்டைப் பாடினர் என்று கூறுவர். குறுந் தொகை, 184-ஆம் பாடலைப் பாடியவன் ஓர் ஆரிய அரசன். அவன் 'ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தன்' என்ற பெயருடையவன். இவ் விருவர்களும் ஒருவரே எனலாமா? பிரகதத்தன், பிரமதத்தன் ஆகிய பெயர்களின் இடையில் உள்ள 'க', 'ம' என்ற எழுத்துக்களே அவற்றை வேறுபடுத்துகின்றன. ஆனல், இயற்பெயரின் இடையில் ஓர் அசை மாறினும் அவ் வியற் பெயரின் பொருள் மாறிவிடும் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். இவ் விருபெயர்களும் ஒருவரையே குறிப்பனவாயின் கபிலரால் தமிழ்க் கவிதையின் சிறப்பையும் பொருள் நயத்தையும் உணர்ந்த பிறகு, ஆரிய அரசன் பிரகத்தன் தமிழ் மொழியை நன்கு கற்றுணர்ந்து, கவிதையியற்றும் ஆற்றலும் பெற்றுக் கவிதை இயற்றிச் சங்கப் புலவர்களுள் ஒருவனுகத் திகழும் சிறப்பும் பெற்ற ஞதல்வேண்டும். மேலே காட்டிய சான்றுகளிலிருந்து ஆரியருள் சிலர் மன்னர்களாகவும், குறுநிலத் தலைவர்களாகவும் இருந்தனர் என்பது தெளிவாகும்.

(இ) ஆரியர்: வடமொழி பேசும் வடநாட்டு மக்கள்: (வடம வண்ணக்கன்):

வடவர்களின்வழி வந்தவன் என்னும் பொருளுடைய 'வடவர் மகன்' என்பதன் மரூஉவே 'வடமன்' என்பதாகும்.

இன்றும் பிராமணர்களில் ஒரு கிளைக்குடியினர் 'வடமர்' என வழங்கப்பெறுகின்றனர்.

'வடமொழியாட்டி'* என்றும், 'வடமொழியாளர்'† என்றும் வரும் மணிமேகலைத் தொடர்கள், பிராகிருதமும் சமஸ்கிருதமும் பேசும் ஆடவர்களும் மகளிரும், தமிழ்நாட்டில் குடியேறி வாழ்ந்திருந்தனர் என்பதை நன்கு மெய்ப்பிக்கின்றன. முதலில் தமிழைப் பழித்துப் புறக்கணித்துப் பின்பு அதைப் போற்றிய ஆரிய அரசன் பிரகத்தனுடைய வரலாறு முன்பே உணர்த்தப்பட்டது.

'கோடன்' என்னும் பெயருடைய குயவன் ஒருவன் நக்கீரரின் முன்னிலையில் தமிழ்மொழியைத் தீயதெனப் பழித்தும், ஆரிய மொழியை நல்லதெனப் புகழ்ந்தும் பேசினன் என்றும், அதனல் கோபங்கொண்ட நக்கீரர், அவனுடைய தகாத செயலுக்காக அவனை இறந்துபோகும்படி சபித்தார் என்றும், கோபம் ஆறி அமைதியடைந்த பிறகு அவனுக்கு அவர் மீண்டும் உயிர்ப்பிச்சை யளித்தார் என்றும், அதன் வாயிலாக வாழவும் சாகவும் செய்யும் தெய்வீக ஆற்றல் தமிழ்மொழிக்கு உண்டு என்பதை அவனுக்குக் காட்டித் தமிழ்மொழியைப் போற்றிப் பயிலுமாறு அவனை மாற்றினர் என்றும் மற்றொரு கதை வழங்குகிறது. தொல்காப்பியப் பொருளதிகாரம் 490-ஆம் சூத்திரவுரையில் பேராசிரியர் மந்திரம் என்பதை விளக்குதற்கு மேற்கோளாக இக் கதையை விளக்கும் பாடலை எடுத்தாண்டுள்ளார்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"‡

என்பது மந்திரம் என்பதன் இலக்கணத்தை உணர்த்தும் சூத்திரம் ஆகும்.

---

*மணி, 13 : 73. †மணி, 5 : 40.

‡தொல், பொருள் : 490.

பேராசிரியர் மேற்கோள் காட்டியுள்ள அடிகளின் கருத்துப் பின் வருமாறு :—“முரணில்லாத பொதியிலில் உள்ள முதற்புத்தேள் எனப்படும் அகத்தியர் வாழ்க! பரணரும் கபிலரும் வாழ்க! அரணியல் ஆநந்த வேட்கை யான் வேட்கோக் குயக்கோடன் ஆநந்தம் சேர்க, சுவா:” “ஆரியம் நன்றென்றும் தமிழ் தீதென்றும் உரைத்த காரி யத்தால் காலனால் கொள்ளப்பட்டவனைச் சீரிய அழகிய தண்மை வாய்ந்த பொதியமலையில் வாழும் அகத்தியனாரின் ஆணையால் செந்தமிழ் பிழைப்பிப்பதாக, சுவா :”* இவ் விரண்டும் சாகவும் வாழவும் பாடிய பாடல்களின் கருத் துக்களாகும்.

(ஈ) ஆரியர் : யானை பழக்குவோர் :

படையெடுப்பு மூலமாக அல்லாமல் அமைதியான முறையிலும் பல ஆரிய மக்கள் தமிழ்நாட்டிற் புகுந்தனர் என்பதற்குச் சங்க இலக்கியத்திற் பல சான்றுகள் உள் ளன. வடவெல்லைப்புறத்தி லுள்ள காடுகளிலிருந்து வந்த அத் தகையவர்கள் யானைகளைப் பழக்குவதில் கைதேர்ந்த வர்களா யிருந்தனர். தமிழ் மன்னர்களிடம் அவர்கள் யானை வீரர்களாகவும், யானை பழக்குபவர்களாகவும் வேலையில் அமர்ந்தனர் : அகநானூறு 276-ஆம் பாடல்† பரத்தை பொருத்தியின் சூளுரையாக உள்ளது :

“ தாரும் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயின்.”‡

இதுதான் அவளுடைய சூளுரை. இதிலிருந்து தமிழ் நாட்டில் ஆரியர் செய்துவந்த பெருவாரியான யானை பழக் குந் தொழிலைப் பற்றி நாம் அறிய முடிகிறது.

---

*தொல், பொருள் : 430, உரை. †வரி, 9-12. ‡அகம், 276 : 9-12.

தமிழ் மன்னர்கள் தங்கள் யானைகளைப் பழக்குவதற்கு ஆரியரை அமர்த்திக்கொண்டனர் என்பதற்கு முல்லைப் பாட்டில் சான்று உள்ளது.* ஒரு மன்னனின் படையெடுப்பைப் பற்றி முல்லைப்பாட்டு விரித்துரைக்கின்றது. "காட்டை வெட்டித் திருத்தியபின் பாசறைகள் அமைக்கப்பட்டன. ஆங்கு, யானைகள் பலவாகப் பிரிந்து செல்லும் பாதைகள் கூடுமிடத்தில் நின்று காவல் செய்தன. அவ் யானைகளின் மதநீர், கன்னப்புடைகளிலிருந்து வழிந்து சிறு கண்களின் இரண்டு பக்கங்களின் வழியாகவும் பெருக்கெடுத்தோடியது. யானை பழக்குவோர் தந்த கரும்பும், நெற்கதிரோடு சேர்த்துக் கட்டிய அதிமதுரத் தழையும் கொண்ட கவளத்தை அவை உண்ணுமல், அவற்றைக்கொண்டு தம் நெற்றியைத் துடைத்தன. தம் தொழிலைத் தவிர வேறு தொழில்கல்லாதவர்களாய் அரசனைப் பின்பற்றி வந்த இளைஞர் (வீரர்), தமது கவைமுட் கருவியை ஒச்சி, யானைகளை உண்ணச்செய்வதற்காக, எற்கெனவே பயிற்றப்பட்ட வடமொழியில், அன்புடன் அவற்றோடு பேசினர். அப்பொழுதும் அவ் யானைகள் உணவுண்ண மறுத்துவிட்டன."—இதுவே மேலே குறிப்பிட்ட முல்லைப்பாட்டு வரிகளின் பொருளாகும்.

யானைகளைப் பழக்குவதற்கு வடமொழிகளைப் பயன்படுத்துவது, தொன்றுதொட்டு, வழக்கமாக இருந்துவந்துள்ளது என்பதைக் கூறுவதான 'வடமொழி பயிற்றி' என்னும் தொடரே ஈண்டு முக்கியமானது. அப் பேச்சுக்கள் இத்தன்மையன என்பதை நச்சினர்க்கினியர் காட்டுகிருர். அவை, "அப்புது, அப்புது; ஆது, ஆது; ஐ, ஐ" என்பவை.† இவை எச் சமஸ்கிருதச் சொற்களின் திரிபுகள் என்பது தெளிவாகத் தெரியவில்லை. இங்குக் கூறியவாற்ருல், ஆரியர்

---

*வரிகள், 30-36. †சிந்தாமணி, 1834, உரை.

வடக்கேயிருந்து யானை பழக்குவோராக வந்தனர் என்பதை நாம் அறிகிறோம்.

(உ) ஆரியர்: (மிலேச்சர்):

மிலேச்சர் என்பதற்குப் பொருள் முன்னரே கூறப் பட்டது. இச் சொல் முல்லைப்பாட்டு 66-ஆம் வரியில் வரு கிறது. "உடம்பின் உரைக்கும் உரையா நாவின் படம்புகு மிலேச்சர் உழையராக"* "நாவினால் பேசாராய்த் தம் மெய்ச் சாடையாற் கருத்தை உணர்த்தும் அங்கி அணிந்த மிலேச்சர் பக்கத்தில் நிற்க" என்பது இதன் பொருள். அங்கி போன்று ஏதோ ஓர் ஆடையை யணிந்த தாழ்ந்த வகுப்பு ஆரியரின் மொழி, தமிழ் நாட்டு மக்களுக்கு நன்கு தெரிந் திருக்க முடியாது. இதனால்தான் போலும், அவ் வாரியர் தம்முடைய மெய்ச்சாடையால் தம் கருத்தை உணர்த்த வேண்டியவர்கள் ஆனார்கள். ஆனால், கீழ்நாடுகளில் அரசர்கள் தங்கள் இரகசியங்களைப் பிறர் அறியாமலிருப்ப தற்காக ஊமைகளையே தங்கள் ஏவலாளர்களாக அமர்த் திக்கொள்வது வழக்கம் என்பது யாவரும் நன்குணர்ந் ததே யாகும். அதன்படி இவ் வாரியர் ஊமைகளாகவும் இருந்திருக்கலாம். நச்சினார்க்கினியர் கருத்தும் இதுவே யாகும். "உரையா நாவென்றார், ஊமைகள் என்றற்கு" என்ற அவருடைய உரையால் இது தெளிவாகும்.

"ஆரியக் கூத்தாடினாலும் காரியத்திலே கண்ணாயிரு" என்ற பழமொழியை அறிந்தவர்களுக்கு, ஆரியர் என்னும் சொல் கூத்தாடிகளையும் குறிக்கும் என்பது நன்கு தெரியும் சங்க இலக்கியத்தில், கூத்தாடிகளின் குடி என்ற பொரு ளில் 'ஆரியர்' என்னும் சொல் வழங்கப்பட்டுள்ளது. குறுந் தொகை 7-ஆம் பாடலில்† இதைக் காணலாம்: "மூங்கில் நிறைந்த காட்டில் வாகை மரத்தின் வெண்மையான நெற் றுக்கள், காற்றில் விரைந்து அசைதலால், ஆரியர் கயிற்றுக்

*முல்லை: 65 - 66. †வரி, 4-6.

கூத்தாடும்போது முழங்கும் பறை யொலியைப்போல ஒலிக்கும்.'' பறையில் அடிக்கும் அடிகளின் ஒலி நேரத்திற்கு நேரம் மாறும். கூர்ந்து கேட்பாரின் காதில் பறையொலி, "ஒல்ல்" என்று தொடர்ந்து வெகுநேரம் கேட்பது போல் வாகை நெற்றுக்களின் ஒலியும் கேட்கும் என்ற கருத்து இப் பாடலில் வெளியிடப்படுகிறது.

வட இந்தியக் குடிகளைப் பற்றிய இந்தச் செய்திகள் எல்லாம் முதலில் நம்பமுடியாதவையாகத் தோன்றலாம். ஆனால், சங்ககாலத்தில் வாழ்ந்த தமிழர் வட இந்தியர்களை நன்கு அறிந்திருந்தார்கள். வட இந்தியாவோடு அவர்களுக்கு நெருங்கிய தொடர்பிருந்தது. கங்கையாற்றைப்பற்றிச் சங்கப் புலவர்கள் அடிக்கடி குறிப்பிடுவதோடு, அதை அழகாகவும் புனைந்துரைத்திருக்கிறார்கள். " கங்கை வாரியும் (வருவாய்) காவிரிப் பயனும் '' சோழர் தலைநகரில் நிறைந்திருந்தன எனக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் தமது பட்டினப்பாலையில்* கூறுகிறார். தமது மற்றொரு பாடலான பெரும்பாணாற்றுப்படையில் இப் பெரும் புலவர் கங்கையைப்பற்றி,

" இமையோர் உறையும் சிமையச் செவ்வரை
வெண்திரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்
பெருநீர் போகும் இரியல் மாக்கள்
ஒருமரப் பாணியில் தூங்கி யாங்கு ''†

எனப் புனைந்திருப்பதில், அஃது இமயமலையி லிருந்து வருதல், வரும் வழியில் பொன்கொழித்து வருதல், படகு முதலியவற்றால் அன்றிக் கடக்க முடியாத பெருவெள்ளம் உடையதாதல் முதலியவெல்லாம் அவர் கூறியுள்ளமை காண்க.

---

*வரி, 190. †பெரும்பாண், 429-433.

நற்றிணை 369-ஆம் பாடலின் ஆசிரியர் அதில் கங்கைப் பேரியாறு இமயமலையிலிருந்து ஓடி வருவதைப் புனைந்துரைப்பாராய்,

> " ஞெமையோங்கு உயர்வரை இமையத் துச்சி
> வாஅன் இழிதரும் வயங்குவெள் ளருவிக்
> கங்கையம் பேர்யாற்றுக் கரையிறந் திழிதரும்
> சிறையடு கடும்புனல் அன்னவென்
> நிறையடு காமம் "*

எனப் பாடுகிறார்.

வையை நதியில் மலர்மாலைகள் மிதந்தவருங் காட்சி வானத்திலிருந்து அகன்ற கங்கைநதி விண் மீன்களின் மாலையை யணிந்து வருவதுபோல் ஒரு புலவர்க்குத் தோன்றுகிறது.† பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தின் பதிகம்‡ செங்குட்டுவன் பத்தினிப் படிவத்திற்காக எடுத்த கல்லைக் கங்கையாற்றிற் கழுவினான் என்று கூறுகிறது.

மதுரைக் காஞ்சியின் ஆசிரியர், பல வகைப்பட்ட செல்வங்கள் பாண்டியர் தலைநகரான மதுரையில் வந்து குவிதல், கங்கையாறு கடலில் சென்று விழுதலை ஒத்துள்ளது என்று கூறுகிறார்.§ நற்றிணை 189-ஆம் பாடலில்§ தலைவனைப் பிரிந்து பிரிவாற்றாது வருந்தும் தலைவி: " நரம்பிசைத் தன்ன இன்குரற் குருகின் கங்கை வங்கம் போகுவர் கொல்லோ " என்று கூறுவதாகப் புலவர் பாடுகிறார். இவ்வாறு கங்கையைப் பற்றிப் பலவாறு குறிப்பிடும் சங்கப் புலவர்களுக்கு இமய மலையைப்பற்றித் தெரியாமலிருக்குமோ? இதுகாறும் குறிப்பிட்ட சான்றுகள் போக, இன்னும் பல சான்றுகளைச் சங்க இலக்கியத்திற் பரக்கக்

---

*நற், 369 : 7-11. †பரிபாடல், 16 : 35-38.
‡வரி, 4-7. §மதுரைக், வரி, 695-696.
§வரி, 4-5.

காணலாம். புறம், 34-ஆம் பாடலில்* ஆலத்தூர் கிழார் "இமயமலையின்கண்ணே திரண்டு இனிய ஓசையைப் பயிற்றிக் கீழ்க்காற்றால் வரும் பெரிய முகில் சொரிந்த நுண்ணிய பல துளியினும் வாழ்வாயாக" எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை வாழ்த்துங்கால் இமயமலையைக் குறிப்பிடுதல் காண்க.

புறம் 166-இல்† ஆவூர் மூலங்கிழார், "மூங்கில்கள் நிறைந்த, மேகங்களும் அண்ணாந்து பார்க்குமாறு மிக உயர்ந்திருக்கும் சிகரங்களையுடைய இமயமலைபோல உறுதியாகவும் கேடுறுமலும் நீண்டகாலம் வாழ்க" என விண்ணந்தாயன் என்னும் வள்ளலை வாழ்த்துகிறார். சேரன் இமயமலையில் விற் பொறித்தமையைப் பற்றிச் சிறுபாணாற்றுப்படை‡ கூறுகிறது. அகம், 127-ஆம் பாடலும் புறம், 39-ஆம் பாடலும் இச் செய்தியைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. "வானளாவும் இமயம் வடக்கில் உள்ளது; அதற்கேற்ப ஆய்குடி தெற்கே இல்லையானால் இந்தப் பரந்த இடத்தையுடைய உலகம் கீழ் மேலதாகிக் கெடும்" என்று புறநானூறு 132-ஆம் பாடல்§ கூறுகின்றது.

இமயமலையையும் நடுங்கச்செய்யும் புயற்காற்றோடு வரும் பெருமழையைப் பார்த்துத் தன்னைப்போன்ற துணையற்ற, இரங்கத்தக்க மகளிரை வருத்துவதற்கு வரும் அதனைப் பழித்துரைக்கும் தலைவி கூற்றாக ஔவையார், குறுந்தொகை 158-ஆம் பாடலில்$ உரைத்துள்ளார்.

இமயமலையைச் சிவபெருமான் வில்லாக வைத்திருப்பதைக் கலித்தொகை கூறுகின்றது.¶ இந்தியாவின் அடிப்படையான ஒற்றுமையை வெளிப்படுத்த நினைத்த பரணர், தலைவியை நினைத்து வருந்தும் தலைவனின் உள்ளத்திற்கு,

*வரி, 21-23. †வரி, 32-34.
‡வரி, 48-49. §வரி, 7-9.
$வரி, 1-6. ¶38-1.

நிலந் தாழ்ந்திருக்கின்ற தென் கடலில் மேய்ந்து மீன்களை எடுத்துக்கொண்டு சென்று பொன் விளைகின்ற இமயமலையில் வானர மகளிரும் விரும்புவதாய் வளர்கின்ற தனது வள்ராத இளங்குஞ்சிற்கு ஊட்டுகின்ற மெல்லிய தூவியும் சிவந்த காலும் உடைய அன்னத்தின் வருத்தம் மிக்க தளர்வில்லாத வலிய சிறகுகளை உவமையாகக் கூறுகிறார். "தாழ்ந்த நிலப்பரப்பில் உள்ள தென்கடலிலிருந்து இமயமலையில் வானரமகளிர் உலாவும் உயரத்திற்குப் பறந்து செல்லவேண்டுமானால் அன்னத்தின் சிறகுகளில் எவ்வளவு வலியுண்டாகும்? அவ்வளவு வருத்தம் தலைவனின் மனத்தில் நிறைந்திருந்தது."*

முரஞ்சியூர் முடிநாகராயர், சேரன் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனை, "அரைமலைக்கண் சிறிய தலையையுடைய மறிகளை உடையவாகிய மான்பிணைகள் அந்திக் காலத்தே அந்தணர்கள் செய்தற்கரிய கடனாகிய ஆவுதியைப் பண்ணும் முத்தீயாகிய விளக்கின்கண்ணே துயிலும் பொற் சிகரங்களையுடைய இமயமலையும் பொதியின்மலையும் போன்று நெடுங்காலம் விளங்கித் துளக்கமின்றி நிற்பாயாக" என வாழ்த்துகின்றார்.† பொன்னாலாகிய நெற்றிப் பட்டமுடைய யானைக்கு உவமையாகப் பொன்னுடை நெடுங்கோட்டு இமயத்தைப் பரணர் கூறுகின்றார்.‡

காசி நகரத்தைப் பற்றியும் தமிழர்கள் அறிந்திருந்தார்கள். கலித்தொகை 60-ஆம் பாடல், 'வாரணவாசிப் பதம்' பற்றிக் குறிப்பிடுகிறது. நச்சினார்க்கினியர் அதற்கு இரக்கம், அஃதாவது பிறரது துன்பத்தைத் தம் துன்பமாகக் கருதுவது வாரணவாசியில் (காசியில்) உள்ளாரது சிறப்பியல்பு என விளக்கம் தருகிறார்.§ 'வாரணா' என்னும் நதிக்கும் 'அசி' என்னும் நதிக்கும் இடையே அமைந்

*நற், 356 : 1-7. †புறம், 2 : 20-24.
‡புறம், 369 : 22-27. §கலி, 60 : 13.

திருப்பதால் காசிக்கு வாரணாசி என்னும் பெயர் உண்டா யிற்று. வாரணாசி என்பதன் மரூஉ வடிவமே இன்று ஆங்கிலத்தில் பெனாரஸ் என வழங்கும் பெயராகும். (வாரணாசி, வாணாரசி, பாணாரசி, பானரஸ், பெனாரஸ்).

வட நாட்டைப்பற்றி இன்னும் பல குறிப்புக்களை நமது இலக்கியத்தில் தேடிக் காண்போமானால், பதிற்றுப் பத்து உரையாசிரியர்,—"கடவுட் பெயரிய கானம்"* என் பதற்கு 'விந்தாடவி' என உரையெழுதுவதைக் காண் கிறோம். அந் நூலின் ஆறும்பத்தின் பதிகம், தண்டாரண் யத்திற்குப் படையெடுத்துச் சென்று ஆங்கிருந்து ஆடுகளை (வருடைகளை)ச் சேரநாட்டின் தலை நகராகிய தொண்டிக் குக் கொணர்ந்தமை குறித்து ஆடுகோட்பாட்டுச் சேரலா தனைப் புகழ்கிறது.† தண்டகாரண்யம் என்பதன் திரிபான இத் தண்டாரண்யம் இப்பொழுதுள்ள மகாராட்டிரம், தக்கணம் ஆகிய பகுதிகளில் உள்ள காடு எனக் கருதப் படுகிறது.

நமது சங்க இலக்கியத்தில் வட இந்தியாவைப் பற்றி யும் தக்கணத்தைப் பற்றியும் பல குறிப்புக்கள் இருக்கின் றன என்றால், அதில் ஒன்றும் புதுமை இல்லை. தமிழ் நாட் டிற்கும் வட இந்தியாவிற்கும் இடையே அக் காலத்தில் சமூக, சமய, அரசியல் வாணிகத் தொடர்புகள் இருந்தன. தமிழ் மன்னர்கள் வடநாட்டின்மீது படையெடுத்த செய்தி களைப் பற்றி முன்பே கூறினோம். சந்திரகுப்த மௌரியன் என்பான் உலகைத் துறந்து சைனத் துறவியாகி அக் காலத் தில் தமிழ் நாட்டின் ஒரு பகுதியான மைசூரில் இருந்த சரவண பெல்கோலாவிற்கு வந்து அங்கே தவம் செய்தான் என்று சொல்லுகிறார்கள். வட நாட்டிலிருந்துவந்த பௌத் தர்கள் தமிழ் நாட்டிலும் சிங்களத்திலும் குடியேறினர். அசோகனுடைய சமயம் பரப்பும் ஆர்வமுடைய அவனைத்

*88-2 †வரி, 3-4.

தமிழகம் உள்ளிட்ட பல நாடுகளோடு தொடர்புகொள்ளச் செய்தது. கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் மௌரிய நாட்டிற்கு விற்பனைக்காகக் கொண்டுவரப்பட்ட பாண்டிய நாட்டுப் பட்டும், முத்தும் பற்றிச் சிறப்பித்துக் கூறுகிறது.

## 2. மௌரியர்

வட நாட்டோடு தமிழ் நாட்டிற்கு இருந்த நெருங்கிய தொடர்பைப்பற்றி நிரம்பக் கூறினோம். கடலிற் சென்று முத்து முதலான விலை யுயர்ந்த வாணிகப் பொருள்களை ஈட்டிய தமிழ் மக்கள் பிற நாடுகளோடு தொடர்பின்றித் தனித்து வாழ்ந்திருக்க முடியாது. அசோகன் கல்வெட்டுக்களிலிருந்து, அவன் தமிழகத்தைப் பற்றி நன்கு அறிந்திருந்தான் என்பது ஐயமற விளங்குகிறது. மௌரியரைப் பற்றியும் அவர்கட்கு முன்பு பேரரசர்களாய் வடநாட்டை ஆண்டுவந்த நந்தர்களைப் பற்றியும் சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது. நந்தர்களின் பண்டாரம் (பொக்கிஷம்) வற்றாத செல்வம் உடையதெனக் கருதப்பட்டது. பொருளீட்டுவதற்காகத் தலைவன் அயல்நாடுகளுக்குச் செல்லும் வழக்கத்தைப் பற்றிச் சங்க இலக்கியம் நிரம்பக் கூறுகின்றது. அத்தகைய சமயங்களில் தலைவன் பொருளுக்கு அடிமைபூண்டு திரும்பிவாராமல் இருந்துவிடுவானோ என்று தலைவி ஐயுறுவது இயற்கை. அவளை வற்புறுத்தும் தோழி அந் நேரங்களில், “ தலைவன் வாராமல் இரான். நந்தன் வெறுக்கை (செல்வம்) எய்தினும் உன்னை மறந்து ஆண்டுத் தங்குவான் அல்லன் ” என்று கூறுவாள்.*

அகம், 265-ஆம் பாடல்† நந்தர்களின் வெற்றிப் புகழ் மிக்க போர்களைப்பற்றியும், அவர்கள் தங்கள் தலைநகராகிய பாடலிபுரத்தில் ஒன்று கூடிக் கங்கை நீருக் கடியில் தங்கள்

*அகம், 251 : 5-6. †வரி, 4-6.

நிதியத்தைக் கரந்துவைத்த செய்தியைப் பற்றியும் விரிவாக எடுத்துரைக்கின்றது.*

நந்தர்களுக்குப் பிறகு அரசுரிமை எய்திய மோரியர் அல்லது மௌரியரைப் பற்றிச் சங்க இலக்கியத்திற் காணும் செய்திகளை இனி நோக்குவோம் :

தமிழில் உள்ள அகப்பாட்டுக்களில் வரும் தலைவன் பொருளீட்டுவதற்காகத் தமிழகத்தின் வடவெல்லையைக் கடந்து வேற்றுமொழி வழங்கும் தொலை நாடுகளுக்குச் செல்வான் என்று கூறுவது வழக்கம். அவ்வாறு தலைவன் கடந்துசெல்லும் எல்லையைக் கூறும்போது பல இடங்களில், மோரியருடைய தேர்ச் சக்கரம் திரிதரக் குறைந்த பாறைகளைக் கடந்து அவன் செல்லுவதாகப் புலவர்கள் கூறியிருத்தலை நாம் காண்கிறோம். எனவே, தமிழக வடவெல்லை வரையில் மௌரிய நாடு பரவியிருந்தது எனப் புலவர்கள் கருதியிருந்தார்கள் எனலாம். அகம், 69-ஆம் பாடலில், "விண்பொரு நெடுங்குடை இயல்தேர் மோரியர் பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த அறையிறந்து அகன்றனராயினும்......தலைவர் நீடலர்" எனத் தோழி கூற்றாகப் புலவர் பாடியிருத்தலை நோக்குக.†

மௌரியர் தென்னாட்டின்மீது படையெடுத்துவந்த செய்தியைப் பற்றிச் சிறிது விளக்கமாகவே சங்க இலக்கியம் கூறுகிறது. அச் செய்தியைப்பற்றி மாமூலனார் அகம், 251; 281-என்னுள்ள பாடல்களில் விரித்துரைக்கிறார். "பெரிய படைகளையுடைய வம்ப மோரியர்" படையெடுத்து வருங்கால் நன்கு அலங்கரிக்கப்பெற்ற தேர்கள் இடைவிடாது ஓடியமையால் அவற்றின் சக்கரங்களால் தேய்ந்த பாறைகளையும் ("யாம்கொண்ட பாடம் திகிரி திரிதரக் குறைந்த" என்பது. திரிதரக் குறைத்த என்ற பாடம் கொண்டு தேர்கள் செல்லுவதற்காகப் பாறைகளை

---

*அகம், 265 - 4-6. †அகம், 69 : 10-12.

மோரியர்களே குறைத்தார்கள் எனக் கூறுவதும் உண்டு), ஒள்ளிய வெண்மை நிறம் வாய்ந்த அருவிகளையும் உடைய குன்றுகளைக் கடந்து தலைவன் சென்றான். மோரியர் படையெடுத்து வந்தமைக்குக் காரணம் பழைய முதிய ஆலமரம் தழைத்து வளர்ந்துள்ள பொதியிலிலிருந்து, வெல்கொடியையும் வேகமாக வீசும் காற்றையொத்த விரைவையுடைய புனைந்த தேரையும் உடைய கோசர் படையெடுத்துவந்து, தங்கள் இன்னிசை முரசத்தைக் கடிப்பென்னும் குறுந்தடியால் அடித்து முழக்கி அச்சுறுத்திப் பகைப்புலத்தைச் சிதைத்தபோதும் மோகூர் மன்னன் பணியாததால் ஆம்.* தென்னாட்டின்மீது மோரியர் படையெடுத்துவந்த செய்தியையே இப் பாடல் குறிக்கின்றது என்பது தெளிவு. கோசருக்குப் போரில் ஓரளவு வெற்றி கிடைத்தது. எனினும், மோகூர் மன்னன் பணியான் ஆயினான். எனவே, கோசருக்குத் துணையாய் வந்து மோரியர் தமது முழு வலிமையையும் கொண்டு மோகூர் மன்னனை எதிர்த்தனர். இப் போர் நிகழ்ந்த இடம், தலைவன் பொருளீட்டுதற்காகத் தாண்டிச் சென்ற தமிழகத்தின் வடவெல்லையெனக் கூறப் பட்டிருப்பதால், இங்குக் குறிப்பிட்ட மோகூர் என்பது, பழையன் மாறனின் புகழ்பெற்ற தமிழரது உள்நாட்டு (மதுரைக், 508-9) நகராக இருந்திருக்க முடியாது. அது போல் ஈண்டுப் பொதியில் என்பதும், தற்பொழுது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள பொதியமலை அன்று. அது கோசர்களால் தாக்கப்பட்ட அந்த எல்லைப்புறப் பகுதி ஊரின், பொதுமக்கள் கூடுவதற்காகப் பொதுவிடத்தில் அமைந்த மன்றம் ஆகும். கோசர் என்பார் பல நாடுகளிலிருந்தும் வந்து கூடிப் போர்ப் பயிற்சி பெற்றுப் பொருள் தரும் மன்னருக்காகப் போர்செய்யும் இளவீரர் படையினர் என்று நாம் முன்னர்க் கூறிய கருத்து, இவ் வகநா

---

*அகம், 251 : 6-14.

றூற்று வரிகளின் கருத்துக்கு முரணுகாது. எனவே, மௌரியர், தெற்கே படையெடுத்து வந்தபோது, அவர் களைப் பின்தொடர்ந்து தமிழ் நாட்டிற் புகுந்த ஒரு வட நாட்டுக் குடியினரே கோசர் என்று கருதத் தேவை இல்லை.

மாமூலனரின் மற்ருெரு பாடல் மௌரியரின் தமிழ் நாட்டுப் படையெடுப்பில் வடுகரின் படை, அவர் படைக்கு முன்னணியில் துணையாக அமைந்தது எனக் கூறுகிறது: "நுடங்கும் தன்மை வாய்ந்த மயில்கள் கழித்த தோகையை நீண்ட வாரினல் வலியவில்லில் வைத்துக்கட்டி, அந்த வலிய வில்லில் அழகிய நெடிய நாணின் விளிம்பிற்குப் பொருந்திய விரைவுத் தன்மையுடைய மிக்க ஒலி ஒலிக்கும் விரைந்த செலவு பொருந்திய கடிய அம்புகளையுடைய மாறுபாடு மிக்க வடுகர் படை தமக்கு முன்னே துணையாகிவர, மோரியர் என்பார் தென்திசை நாடுகளைப் பற்ற எண்ணிப் போந்த வருகைக்கு, வான் அளாவ உயர்ந்த பனியுடைய பெரிய மலையினைத் தமது ஒள்ளிய கதிர்களையுடைய ஆழி திரிந்ததால் போழப்பட்ட (தடையின்றிச் செல்லப் போழ்ந்து வழியாக்கிய) பாறைகளைக் கடந்து தலைவன் சென்றுவிட்டான்,"* என்ற பொருளுடைய பாட்டில் வடுகர் படை, மௌரியர் படைக்குத் துணையாக வந்த செய்தி கூறப்பட்டிருத்தலைக் காண்க.

வடுகரைப் பற்றித் தனியாக முன்பே ஆராய்ந்தோம். மேலே கூறியவாற்ருல், மௌரியருடைய தெற்கு நோக்கிய படையெடுப்புத் தமிழகத்தின் வடஎல்லையோடு நின்றுவிட் டது என்றும், அதுபோழ்து அவர்களுக்குத் தோற்று அடிமையான எல்லைப்புறக் குடிகள், பிறகு அவர்களுடன் ஒத்துழைத்தார்கள் என்றும் அறிகிறேம். இந்தப் படை யெடுப்பு நிகழ்ந்த காலம் இதுவென நமக்குத் தெரியவில்லை.

---

*அகம், 281 : 4-12.

இது நம்முடைய போதாக்காலம் என்றே கூறவேண்டும். இந் நிகழ்ச்சியைப் புலவர் இறந்த காலத்திற் குறித்துச் செல்கின்றார். மௌரியர் தங்கள் நாட்டைத் தமிழகத்தின் எல்லை வரையில் விரிவாக்கிக்கொண்டனர் என்பது மட்டும் சங்க இலக்கியத்தால் உறுதியாகிறது. இந் நிகழ்ச்சி அசோகர் காலத்திற்கு முன்னர் ஏற்பட்டிருக்கலாம்.

வள்ளலான ஆதன் உங்கனைக் குறித்துக் கள்ளில் ஆத்திரையனார் (நமது முடிவின்படி 'கள்ளில் ஆர்த்தியனார்) பாடிய புறம், 175-ஆம் பாடலிலும்* மௌரியரைப் பற்றிய செய்தி வருகிறது. கொடிகளாற் புனையப்பட்ட தேர்களை யுடையவர் மௌரியர் என அப் பாடலில் கூறப்பட்டுள்ளது. இச் செய்தி பலபல பாடல்களில் கூறப்படுவதை நோக்க அவர்களுடைய விரைந்து செல்லும் வலிய தேர்கள் போரில் அவர்களுக்கு வெற்றி கிடைப்பதற்கு அடிப்படையாக இருந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. இத் தேர்களின் காட்சி அவர்கள் மனக்கண்களை விட்டு என்றும் நீங்காதன ஆயின. அவர்களுடைய வெற்றி வேலோடு, வானளாவும் நெடிய குடையும் அடிக்கடி சங்கப்பாடல் களில் குறிக்கப்படுகிறது. புறநானூற்று உரையாசிரியர் இந்த 175-ஆம் பாடலின்கீழ் மோரியர்களைச் சக்கரவர்த்தி கள் என்றே கூறுகிறார்: "மோரியராவார் சக்கரவாளச் சக்கரவர்த்திகள்: விச்சாதரரும் நாகரும் என்ப'' என்று அவர் குறித்திருத்தல் காண்க. அவர்களைப்பற்றிச் சங்க இலக்கியத்தில் வரும் குறிப்புக்களைக்கொண்டு, அவர்களுடைய அரசு மிகப் பரந்திருந்தது என நாம் ஐயமின்றிக் கருதலாம். எனவே, அவர்களைச் சக்கரவர்த்திகள் என்று உரையாசிரியர் கூறுவது சாலப் பொருத்தமேயாகும். இந்தப் பாடலிலும், தேர்களின் ஆழிகள் இடைவிடாது உருண்டு சென்றமையால் பாறைகள் குறைந்தன என்ற

*வரி, 5-10.

செய்தி கூறப்படுகிறது. மௌரியர்கள் தங்கள் தேர்களில் இரும்பு அல்லது எஃகினால் ஆகிய ஆழிகளை இட்டிருந்தனர் போலும்! அவர்களுடைய நாட்டின் தென் எல்லைப்புறத்தில் அவர்களுடைய தேராழிகள் ஊடறுத்துச் செல்லுதலால் குறைந்து பிளவுபட்ட பாறை வழி 'உலக இடை கழி' என்று இப் பாடலில் கூறப்பட்டுள்ளது. அறம் நிலவிய மௌரியப் பேரரசினுள் புகுந்து பார்ப்பதற்கு யாதொரு தடையுமின்றி அதன் எல்லைவாயில் உலகத்தார்க்குத் திறந்து விடப்பட்டதென்றும், அதனால் அதனுள் சென்று பார்க்க வேண்டும் என்ற அவாவினால் அதன் எல்லைப்புறத்தில் பலரும் கூடினர் என்றும் கூறலாம். "உலக இடைகழி அறைவாய் நிலைஇய மலர்வாய் மண்டிலம்" என்று பாடுகிறார் புலவர். பலரையும் அறவழியில் புரக்கும் பண்பால் அவர் ஆதனுங்கனை மௌரிய அரசுக்கு உவமிக்கின்றார். இக் கருத்தை உரையாசிரியர் உணராமையால் அவருடைய குறிப்புக்கள் தெளிவாக இல்லை. அசோகனது முழு வரலாறும், அவனது அற ஆட்சியும், அண்டை நாட்டு மன்னர்களுக்கெல்லாம் ஆன்ம அமைதிபற்றிய நற்செய்தியைப் பரப்ப அவனுக்கிருந்த ஆர்வமும் அறிந்த நமக்கு, இப் புறநானூற்று வரிகள் அந்தச் சிறந்த இராஜரிஷியைப் பற்றி நினைப்பூட்டுவதில் வியப்பொன்றும் இல்லை.

கள்ளில் ஆத்திரையனர் (ஆர்த்தியனர்) பாடிய இப் புறநானூற்று வரிகள் நாம் எதிர்பாரா்த விதமாக இந்தியாவின் சிறந்த முடிமன்னனான அசோகனது தக்க நினைவுச் சின்னமாகத் திகழ்கின்றன. இந்தப் பாடலின் மூலம், அசோகன் என்பான் அறம், அன்பு - இவற்றின் வடிவமாகத் திகழ்ந்தான் என்பதும், மற்ற மக்களின் துன்பத்தைப் போக்குதலில் கண்ணுங் கருத்துமாக எப்போதும் இருந்தான் என்பதும், அதனால் உலகமக்கள் அனைவர் உள்ளத்தையும் கவர்ந்தான் என்பதும், மௌரிய அரசின் எல்லைப் புறத்தில் அவர்களுடைய தேர்கள் திரிதரக் குறைந்த பாறை

வழி, உலக இடைகழியாகத் திகழ்ந்தது என்பதும் பிறவும் நாம் உணரலாம்.

**3. யவனர் :**

இந்தியாவைப் பற்றிக் கிரேக்க ஆசிரியர்கள் எழுதி வைத்துச் சென்ற குறிப்புக்கள் ஆங்கிலம் அறிந்தவர்கள் அனைவர்க்கும் கிடைக்கும்படி செய்துள்ள *மாக்ரிண்டிலுக்கு நாம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். எகிப்திய நாட்டில் பிரமிட் கோபுரங்கள் தோன்றிய காலந்தொட்டே தமிழர்கள் மேலைநாட்டோடு வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதற்கு ஆண்டுக் காணப்படும் மலையாள நாட்டுத் தேக்கு மரங்களே சான்று பகரும். அலெக்சாண்டரின் படையெடுப்பால் கிரேக்கரின் சிறந்த நாகரிகம் இந்தியாவின் நாகரிக வளர்ச்சிக்கு அரண் செய்வதாயிற்று என்பர். யவனர் என்ற சொல் அயோனியர் என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். அச்சொல் ஆதியில் கிரேக்கரை மட்டுமே குறித்திருக்கவேண்டும். நாளாவட்டத்தில் அது மேலை நாட்டு மக்கள் அனைவரையும் உளப்படுத்துவதாயிற்று எனல் வேண்டும். கிரேக்கருக்குப் பின்னால் உரோமர்கள் இந்தியாவிற்கு வந்தனர். தமிழ் நாட்டின் முத்தும் மிளகும் பிற வாசனைத் திரவியங்களும், மேலைநாட்டில் பழங்காலந்தொட்டு நிலவிவந்த எளிமையான வாழ்க்கையை மாற்றிவிட்டன. உரோம நூலாசிரியர்கள் தங்கள் நாடு கிழக்கு நாடுகளின் ஆடம்பரப் பொருள்களுக்கு அடிமையாகித் தங்களுடைய பழைய எளிமை வாழ்க்கையை இழந்துவிட்டதாகக் கூறி வருந்தியிருக்கிறார்கள்.

உரோம மன்னர்களான சீசர்களின் தங்க நாணயங்கள் தென்னிந்தியாவின் கீழைக் கடற்கரையிலும் மேலைக் கடற்கரையிலும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.

---

*McCrindle.

1945-ஆம் ஆண்டில் டாக்டர் வீலர்* அவர்கள் புதுச்சேரிக் கருகில் உள்ள அரிக்கமேடு என்னுமிடத்தில் நிலத்தை அகழ்ந்து செய்த புதைபொருளாராய்ச்சியால், கிறிஸ்து விற்கு முன்னும் பின்னுமான முதல் நூற்றாண்டில் அங்கே உரோயர்கள் குடியேறி வாழ்ந்திருந்ததும், அவர்கள் கையாண்ட மட்பாண்டங்கள், ஆபரணங்கள், விளக்குக் கள் முதலியன இவை என்பதும் வெளிச்சமாயின.

ஓய்மானின் நாட்டில் இருந்த எயிற்பட்டினத்திற்கும் இந்த அரிக்கமேட்டிற்கும் ஏதேனும் தொடர்பு இருக்குமா என்ற ஐயம் நம் மனத்தே எழுகிறது. சங்க இலக்கியத்தி லுள்ள குறிப்புக்கள், உரோம கிரேக்கக் குடியிருப்புக்கள் பொதுவாகத் தமிழ்நாடு முழுதிலும், சிறப்பாகப் பழங் காலத்திற் சிறந்து விளங்கிய முசிறி, கரூர், தொண்டி, கொற்கை ஆகிய நகரங்களிலும் இருந்திருக்க வேண்டு மென்று உணர்த்தி, அவற்றைக் குறித்து ஆராயும்படி நம்மைத் தூண்டுகின்றன. பண்டைக் காலத்தில் வாணிகம் காரணமாக ஐரோப்பாவிற்கும் இந்த இடங்களுக்கும் தொடர்பு ஏற்பட்டிருந்தது. மேல்நாட்டு வியாபாரிகள் இந்த இடங்களில் குடியேறித் தமிழ்நாட்டு மக்களுள் ஒரு பகுதியினராகி யவனர் என்றழைக்கப்பெறுவாராயி னர்.

மேலைக் கடற்கரையில் இருந்த சேர நாட்டில் யவன ரின் குடியிருப்பு ஒன்று இருந்திருக்கவேண்டும். மேலை நாட்டிலிருந்து கடல்வழியாகக் கப்பலில் வரும் வணிகர் களுக்கு, மேற்குக் கடற்கரை, தமிழ் நாட்டிற்குள் நுழைய வாயிலாக இருந்தது எனலாம். அமைதியாகக் கப்பல் பயணம் செய்பவர்களுக்கு இடையூறு விளைவித்துவந்த கடற் கொள்ளைக்காரர்களையும் மற்றவர்களையும் அடக்க வேண்டிய பொறுப்புச் சேர மன்னர்களைச் சார்ந்திருந்தது.

*Wheeler.

இதுசம்பந்தமாக ஒருகால் யவனர்களுக்குச் சேரர்களோடு மோதல் உண்டாயிற்று. பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தின் பாட்டுடைத் தலைவனாகிய இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் என்பான், தன் ஆற்றலால் அவர்களை அடக்கி ஒடுக்கினான் என அறிகிறோம். அவனை எதிர்த்த இந்த யவனர், வன்சொல் உடையவர் என்றும், பண்பாடு அல்லது நயன் அற்றவரென்றும் கூறப்பட்டுள்ளனர். "நயனில் வன்சொல் யவனர்" என்பது பதிற்றுப்பத்து இரண்டாம் பத்தின் பதிகக் கூற்று. இவ்வாறு அவர்கள் கூறப்பெற்ற தற்கு அடிப்படை, பொதுவாக அயல்நாட்டவர்கள்மீது ஏற்பட்ட பகைமையா, அல்லது, இயல்பான தங்கள் நாக ரிகத்தையும் பண்பாட்டையும் அடியோடு இழந்துநின்ற குறிப்பிட்ட ஒரு யவனர் குழுவினரிடம் ஏற்பட்ட பகை மையா என்று உணர வேட்கை பிறக்கிறது. யவனருக்கு, 'நயனில் வன்சொல்' என்ற அடை பொது அடையா, சிறப்படையா என்பது கேள்வி. ஈண்டுக் குறிப்பிட்ட யவனர் கூட்டத்தாரைச் சேரன் வென்றதோடு நில்லாமல், அவர்களைச் சிறைப்படுத்தினான்; அவர்களுடைய கைகளைப் பின்கட்டாகக் கட்டினான்; அவர்கள் தலையில் நெய்யை ஊற்றினான் (நெய் தலைப்பெய்தான்) என்று கூறப்பட் டுள்ளான். (எண்ணெய் ஊற்றி அவர்கள் குடியிருந்த இடங்களையெல்லாம் தீக்கு இரையாக்கினான் என்றுகூடப் பொருள் கொள்ளலாம்.) இவ்வாறெல்லாம் அவர்களை ஒறுத்து வருத்தியதற்குக் காரணம், அவர்கள் இழைத்த குற்றம் எல்லையற்றதாக இருந்ததே ஆகும்; மேலும் அவர் கள் ஏற்கும் தண்டனையைப் பார்த்து, மறுபடியும் எவரும் மறந்தும் குற்றம் செய்யாதபடி தடுக்கவும் ஆம் என லாம். இவற்றோடு அமையாமல், விலையிடற்கரிய வயிரங் களையும் பெறற்கரிய நன்கலன்களையும் அவர்களிடமிருந்து கவர்ந்து, அவற்றைத் தன் நாட்டிற்குக் கொண்டுவந்து, தன் நாட்டு மக்களுக்கு அவன் வழங்கினான். தன் தளரா வன்

மையால் பகைவர்களை இவ்வாறு தேய்த்தொழித்தான் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன். இந்தச் செய்தியை,

> " நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
> நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
> அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
> பெருவிறல் மூதூர்த் தந்துபிறர்க் குதவி
> அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்தாள்
> இமைய வரம்பன் நெடுஞ்சேர லாதனை..."*

எனப் பதிற்றுப்பத்து எடுத்துரைத்திருப்பதைக் காண்க.

ஈண்டுக் குறிப்பிட்ட 'நன்கலம்' என்பதற்கு நாம் முன்பு கூறிய பெறற்கரிய நன்கலன்கள் என்ற பொருளை விட, யவனரின் கப்பல்கள் என்ற பொருளைக்கொள்வது சிறந்ததாகும் எனத் தோன்றுகிறது. அகம், 149-ஆம் பாடல் இக் கருத்துக்கு அரண் செய்கிறது. அப் பாடலில் சேரநாட்டின் துறைமுகப் பட்டினமான முசிறி புனைந் துரைக்கப் பட்டுள்ளது :

> " சேரலர்
> சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
> வளங்கெழு முசிறி........."†

எனவரும் அடிகளை நோக்குக. ஈண்டு நன்கலம் என்றது கப்பலையே குறிப்பதாகும். யவனர்களின் சிற்பவேலைப்பா டமைந்த கப்பல்கள் பொற்காசுகளோடு வந்து மிளகு பொதிகளோடு மீண்டு சென்றனவாம். கிறிஸ்து சகாப்தம் முற்கொண்டே தமிழ்நாடு மிளகு வாணிகத்திற்குப் பெயர் பெற்றிருந்த தென்பது இதனல் தெளிவாகிறது. பொது வாகத் தமிழ் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும், சிறப்பாக

*பதிற், 2-ஆம் பத்து, பதிகம் : 8 : 13.

†அகம், 149 : 7-11.

மேற்குக் கடற்கரையிலும் எண்ணற்ற உரோம நாணயங்கள் காணப்படுதற்குக் காரணம் இஃது என்பதைப் 'பொன்ெனாடு வந்து' என்ற இத் தொடர் காட்டுகிறது; விளக்குகிறது. சங்க காலத் தமிழ்நாட்டுச் சொந்த நாணயங்களாக எவையும் இல்லாமைக்குக் காரணம், எவையும் நமக்குக் கிடைக்காமைக்குக் காரணம், உரோமரின் நாணயங்களையே நம்மவர்கள் தங்கள் வாணிகத்தில் பயன்படுத்தி வந்தமையே எனலாம்.

பெரும்பாணாற்றுப்படையில், காஞ்சிபுரத்தைத் தலைநகராகக்கொண்டு ஆண்டுவந்த இளந்திரையனுக்கு உரிய 'நீர்ப்பெயற்று' என்னும் நகரைப் பற்றிக் கூறும்போது யவனரைப் பற்றிய செய்தி வருகிறது.* அந் நகரத்தின் அமைதி, மகிழ்ச்சி, பண்பாடு ஆகியவை நன்கு எழுந்து தோன்றுமாறு ஒரு காட்சியை ஆங்கே புலவர் நமக்குக் காட்டுகிறார்.

" விளையாட்டு (வண்டல்) மகளிர், தம்முள் ஒன்றாய்க் கூடிக்கொண்டு ஊருணியில் (குடிக்கும் தண்ணீருடைய குளத்தில்) உள்ள நீராடுதுறையில் இறங்கி நீந்தி விளையாடுகிறார்கள்; விளையாட்டு முடிவில், பொன்னாற்செய்த மகரக் குழையை நீரில் போட்டுவிட்டுப் போகிறார்கள். (செல்வக் களிப்பு மிக்கவர்கட்கு இஃது இயற்கை; அல்லது, குழை கழன்று நீரில் விழுந்து விடுகிறது எனலாம்.) நீலமணி போன்ற நிறத்தையுடைய ஒரு சிச்சிலிப்பறவை (மீன் கொத்திப் பறவை) தெளிவான நீரில் தோன்றும் அதைத் தனக்கு இரையான உண்மை மீனே என்று நினைத்துத் தன் அலகால் கொத்தி எடுத்துச் செல்கிறது; ஆனால், அது மீனன்று என்று உணர்ந்ததும் அதை வெறுப்போடு கீழே நழுவவிடுகிறது. அது, பறவைகள் நிறைந்திருக்கும் பனைமரத்தின் மடல்கள்மேல் விழுந்து, சரிந்து, அதனயலில்

*வரி, 311-319.

அந்தணர் தாங்கள் செய்தற்கரிய கடனைச் செய்துமுடித்த வேள்வித் தீக் குண்டத்தின் அருகில் உள்ள வேள்வித் தூணின்மேல் விழுந்து அப்படியே அதன்மேல் தங்கிவிடுகிறது. அவ்வாறு நிலைபெற்ற அந்த மகரக் குழை வேள்வித் தீயின் ஒளியால் ஒளிவிட்டு விளங்குகிறது. அது பார்ப்பசற்கு யவனரிட்ட அன்ன விளக்கின்மேல் பொருத்தப் பெற்ற மீன், சுடர்விட்டு ஒளிர்வதுபோல் காட்சியளிக்கிறது.* (இந்த வரிகளுக்கு நச்சினார்க்கினியர் வேறு வகையாகப் பொருள் கூறுவர்.)

பலவகை வடிவங்களில் அமைக்கப்பட்ட குண்டங்களில் வேள்வித்தீ வளர்க்கப்படும். ஓம குண்டங்கள் பெரும்பாலும் கருடனைப்போன்ற பறவைகளின் வடிவமாக அமைக்கப்படும். இங்குப் புனைந்துரைக்கப்பட்ட அன்ன வடிவக் குண்ட வேள்வித்தீ, அன்ன வடிவமான விளக்குப் போல் காட்சி யளித்திருக்கலாம். யவனருடைய அன்ன வடிவமான விளக்கு, மேலிருந்து சங்கிலியிற் கட்டப்பட்டுத் தொங்கும் விளக்காக இருந்திருக்கலாம். வேள்விக் குண்டத்திற்கு அருகே யிருந்த தூண் இச் சங்கிலியைப்போலக் காட்சியளித்தது எனலாம். இவ் வன்ன விளக்கு நீர் நிறைந்த கடலிற் செல்லும் கப்பல் ஒன்றில் தொங்கவிடப் பட்டிருக்க, ஒரு விண் மீனுக்கு நேரே கப்பல் செல்லும் காட்சியைத் தொலைவில் உள்ளோர் பார்க்கும்போது, இந்த மகரக்குழையின் ஒளிபோல் அவ் விண்மீன் கப்பலில் தொங்கும் அன்ன விளக்கின் உச்சியில் ஒளிவீசி விளங்குவதாகத் தோற்ற மளித்திருக்கலாம். அல்லது யவனராற் செய்யப்பட்டுச் செல்வர்களுடைய வீட்டில் தொங்கும் அன்ன வடிவமான விளக்குக்களையே இவ் வுவமை குறிக்கிறது எனவும் கொள்ளலாம். பின்னர்க் கூறிய பொருள் ஏற்றுக்கொள்ளப்படுவ தென்றால் யவனரால் செய்த

---

*பெரும்பாண், 311-319.

அன்ன விளக்கில் பொருத்தப்பெற்றிருந்த சங்கிலியின் உச்சியில் பொன்னாற் செய்த மீன் ஒன்று, கீழே உள்ள அன்னத்திற்கு இரை ஆசை யூட்டுவதுபோன்ற தோற்றத்தில் இணைக்கப்பட்டது எனக் கருதலாம். சங்க காலத்திற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு வாழும் நாம், அந்த அன்ன விளக்கின் சித்திர வேலைப்பாட்டை உள்ளவாறு அறிந் துணர்த்துவது மிகவும் அருமையான செயலாம். அடியில் உள்ள அன்னத்திற்கு ஆசையூட்டும் தோற்றத்தோடு, மேலே பொருத்தப்பட்ட மீன், விளக்கின் சுடரில் பொன்மீன் போலவே ஒளி வீசியிருக்கும். இப் பெரும்பாணாற்றுப்படை வரிகளிலிருந்து கிரேக்கக் கலையின் உயர்வும், உரோம அரசின் பெருமையும், மேலை நாட்டாரின் பரந்துபட்ட கடல் வாணிகமும் நமக்கு நன்கு புலனாகின்றன.

கிரேக்க நாகரிக முறைகள் சிலவற்றிற்குத் தமிழர்கள் அடிமையானார்கள். தமிழ் நாட்டு அரசர் அரசியர் மனங்களைக் கவரும் முறையில், மேலை நாட்டுக் கலைஞர்கள், விளக்குக்களைக் கலைத்திறம் மிகுந்து தோன்றும்படி செய்தார்கள். ஒளி வீசும் மீனோடு ஊசலாடும் அன்ன விளக்கைப் பற்றி முன்பு உரைத்தோம். தற்காலத்தில் தமிழ்நாடெங்கும் பாவை விளக்குக்கள் நிரம்பியுள்ளன. பெண்ணொருத்தி தன் கையில் விளக்கேந்திக்கொண்டு நிற்பது போல் பித்தளை அல்லது செம்பால் செய்து விளக்கேற்றி வைப்பதே பாவை விளக்காகும். தெய்வத்திடம் பக்தி கொண்ட ஒருத்தி தன் நினைவை என்றும் நிலைபெறச் செய்வதற்காகத் தன்னைப்போல் பாவை விளக்கொன்று செய்து கோயிலில் வைத்து விளக்கேற்றுவாள். அல்லது, தன் விளக்குத் தொண்டினைப் பிறர் கண்டு களிப்பதுபோலத் தானும் தன் கண்ணால் கண்டு களிப்புறுவதற்காகத் தன்னைப்போல் பாவை விளக்குச் செய்து ஒருத்தி கோயிலின் விளக்கேற்றலாம். பாவை விளக்கு வைப்பதாகிய வழக்

கத்தைப்பற்றி மணிமேகலை கூறுகிறது.* இப் பாவை விளக்குக் கிரேக்க நாகரிகம் தமிழகத்தில் புகுந்ததால் ஏற்பட்ட விளைவுகளுள் ஒன்று எனச் சங்க காலத்தில் தோன்றிய நெடுநல்வாடைப் பாட்டு ஐயமின்றித் தெளிவாக்குகிறது.

> "யவனர் இயற்றிய வினைமாண் பாவை
> கையேந்து ஐயகல் நிறைய நெய்சொரிந்து
> பருஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிர்எரி"†

என்பது காண்க.

பழங்காலத்தில் தமிழக அரசர்களின் படுக்கையறையைப் பொதுவாக மேலை நாட்டுக் கலைப்பொருள்களும், சிறப்பாகக் கிரேக்க நாட்டுக் கலைப்பொருள்களும் அணி செய்யும் அளவுக்கு, மேல்நாட்டு நாகரிகம் நம் தமிழ் நாட்டில் பரவியிருந்தது.

பல புலிகள் ஒன்றோடொன்று சண்டையிடுவது அல்லது ஒன்றன்மேலொன்று வளைந்திருப்பது போல அல்லது இரையின்மீது பாய்வதுபோலத் தோற்றம் அளிக்கும் கலைத்திறம் வாய்ந்த புலிச் சங்கிலிகளைக் கிரேக்கக் கலைத் தொழில் வல்லுநர்கள் செய்தனர். அந்தோ! தமிழ் மன்னர்களின் படுக்கையறையில் விளங்கிய கிரேக்கக் கலைத்திறத்தின் உயர்வை நமக்கு இன்று விளக்குவதற்குப் 'புலித்தொடர்' என்ற இரு சொற்களைத் தவிர வேறு ஒன்றும் கிடைக்கவில்லை.

> "வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்
> புலித்தொடர் விட்ட புனைமாண் நல்லில்
> திருமணி விளக்கங் காட்டித் திண்ஞாண்
> எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள்"‡

என்பது காண்க.

---

*1-45. †நெடுநல், வரி : 101-103. ‡முல்லைப், 61-64.

படுக்கை அறைக்கு முன் தொங்கும் திரையில், அழகிய ஓவியங்கள் தீட்டப்பெற்றிருக்கும். அதைப் பக்கங்களில் இழுத்துவிடவும், மேலே சுருட்டிவிடவும், வேண்டும்போது விரித்துவிடவும், கயிறுகள் பொருத்தப்பெற்றிருக்கும். இதுவும் யவனரின் கைத்திறத்தால் ஆனதேயாகும். வடமொழியில் இத் திரையை யவனரோடு தொடர்புபடுத்தி 'யவனிகா' என்றே அழைக்கிறார்கள். 'யவனிகா' என்ற வட மொழியின் மரூஉவே 'எழினி' என்னும் தமிழ்ச்சொல் என்று தமிழ்ப் பேரகராதி கூறுகிறது. ஆனால், எழினி யென்னும் தமிழ்ச்சொல் 'எழு' என்பதன் அடியாகவோ, எழில் என்பதன் அடியாகவோ பிறந்தது எனக்கொள்வதே பொருத்தமாகும். திரை, மேலும் கீழும் பக்கங்களிலும் எழுவதாலோ பெயர்வதாலோ, ஓவியங்கள் தீட்டப்பெற்று அழகாக விளங்குவதாலோ எழினி எனப் பெயர் பெற்றது எனலாம்.

முல்லைப்பாட்டு வரிகள் யவனரின் கட்டமைந்த உடல் தோற்றத்தைப் பற்றியும் கூறுகின்றன. "புரவியை அடிக்கின்ற சம்மட்டி (சவுக்கு) வளைந்துகிடக்க, அச் சம்மட்டி மறையும்படி வடிம்பு தாழ்ந்து பெருக்கும் செறிதலையுடைய உடையையும், சட்டையிட்ட அச்சம்வரும் தோற்றத்தையும் இயல்பான வலிகூடிய மெய்யையும் அஞ்சாமையையும் உடையவர் யவனர்" என்று யவனரைப்பற்றிக்கூறும் அடிகளுக்கு* உரை எழுதியிருக்கிறார் நச்சினார்க்கினியர்.

சங்க இலக்கியத்தில் வரும் மக்களின் உடல் அழகைப் பற்றிய செய்திக்கும், யவனரின் உடலழகைப் பற்றிய செய்திக்கும் வேறுபாடு உள்ளது. இங்கு யவனரின் உடல் வலிமையின்மீது புலவரின் கருத்துச் சென்றுள்ளது. யவனர், தம் உடல் வலிமையின்மீது நிரம்பக் கருத்துச் செலுத்தும் இயல்புடையவர். அவருடைய

---

*முல்லை, 59-61.

கருத்தை யறிந்து ஈண்டுப் புலவர், "வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்" என்று யவனரைப்பற்றிக் கூறுகிறார் எனலாம். கலைத்திறன் தோன்றக் கூறுவது தமிழ் மரபிற்கு முற்றிலும் புதியதன்று. என்றாலும், அது புதுமுறையில் ஈண்டு வெளியிடப்பெற்றுள்ளது. கலையுலகில் கலைத்திறன் விளக்குவதில் இயல்பு நவிற்சி வளரத்தொடங்கியது. தென் இந்தியாவிற் காணப்படும் புத்தர் உருவங்கள், கிரேக்கக் கலைக்குத் தென்னிந்தியா ஆளான தன்மைக்குச் சான்றாக விளங்குகின்றன வென்று துப்பரில்* முதலிய அறிஞர்கள் கருதுகின்றனர்.

யவனர்கள் தங்கள் கலைப் பொருள்களை இங்குக் கொண்டுவந்து பரப்பியதுபோலத் தங்கள் கலைத் தத்துவ வாழ்க்கைக்கு இன்றியமையாதன எனத் தாங்கள் கொண்ட மது வகைகளையும் இங்குக் கொண்டுவந்து பரப்பினார்கள். கிரேக்க தத்துவம் மதுவகைகளை அருந்தவே கூடாதெனப் போதிக்கவுமில்லை; மிதமிஞ்சிக் குடித்துக் கொட்டமடிக்கும்படியும் கூறவில்லை. மிதமாக மது வருந்தி மகிழும் வகையை அஃது உணர்த்துகிறது. மிதமாக மதுவருந்தி உணர்வு இழவாமல் இருத்தல்வேண்டும் என்பதை எப்பொழுதும் அவர்கள் நினைவில் வைத்துக் கொண்டிருப்பார்கள். இவ்வாறு எதிலும் மிதமாக இருக்கும் தத்துவத்தைக் கிரேக்கர்கள் வருவதற்கு முன்பே தமிழர்கள் தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடிக்கவில்லை யென்றால், அவர்களிடமிருந்து இந்தத் தத்துவத்தைப் பின்னர் அறிந்து அதைத் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்தனர் எனலாம். இவ் வுலகின் நிலையாமைப் பண்பையும், அதன் இன்பங்களின் நிலையாமையையும் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்னும் அரசனுக்கு வற்புறுத்தவந்த மாங்குடிமருதனார்

---

*Dubreuile.

என்ற மதுரைக்காஞ்சிப் புலவர் தமது பாடலை ஒருவகைப் புதுமுறையில் பாடி முடிக்கிறார். கல்வி, பண்பாடு, நீதி, வண்மை, அரசுரிமை, தோற்றக் கவர்ச்சி ஆகியவற்றிற் சிறந்து புகழ் பெறுமாறு அரசனுக்கு அறிவுறுத்திய பின்பு, விளங்கும் அணிகலன்களை அணிந்த மகளிர் பொற் கலத்தில் மதுவை (காமபானத்தை) ஊற்றித் தர அதைப் பருகி மகிழ்ந்து நீண்ட காலம் வாழுமாறு அவர் அவனை வாழ்த்துகிறார். வீடுமனைவிமக்களை விட்டுத் துறவு மேற் கொள்வதே வீடு பெறும் வழியாகும் என்ற துறவுச் சிறப் புரைக்கும் பாடல்களைப் பயின்றவர் வழிவந்த தற்காலத் தமிழர்களுக்கு, மனை மனைவி மக்கள் மதுவகை முதலியவற் றோடு கூடியிருந்து மித வாழ்க்கை நடத்துவது சீரியது என்றுணர்த்தும் மதுரைக் காஞ்சியின் தத்துவம் வியப்பான தத்துவமாகத் தோன்றலாம்.*

இம் மதுரைக் காஞ்சியைப் பாடிய புலவரே மற்றொரு பாடலில், "இந்த அகன்ற உலகில் தங்கள் புகழைப் பரப்பாது, தங்கள் பெயருடன் அழிந்து போனவர் பலர். அவர்கள் வாழ்ந்தோர் எனப்படார். இரக்கும் பரிசிலர் உன் வண் மையைப் புகழ, ஒளி பொருந்திய அணியணிந்த நின் மனைவி-மார் பொற்கலத்தில் ஏந்திய குளிர்ந்த மணமுள்ள மதுவை மடுப்ப, அதையுண்டு மகிழ்ச்சி மிக்கு இனிது நடப்பாயாக. பெரும! அவ் வொழுக்கம் வல்லவரை வாழ்ந்தோர் என்று சொல்லுவர் அறிவுடையார்!"† என்று கூறுகிறார்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன் மாறன் என்பானைப் புகழும்போது நக்கீரரும் இக் கருத் தையே வெளியிடுகின்றார்:

" இரவலர்க் கருங்கலம் அருகாது ஈயா
யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்
பொன்செய் புனைகலத்து ஏந்தி நாளும்

---

*மதுரைக், 778-783. †புறம், 24 : 30-33.

ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து
ஆங்கினிது ஒழுகுமதி ஓங்குவாள் மாற
அங்கண் விசும்பின் ஆரிருள் அகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவும் குடதிசைத்
தண்கதிர் மதியம் போலவும்
நின்று நிலையியர் உலகமோ டுடனே.*

மேலே சுட்டப்பட்ட மூன்று பாடல்களிலும் இந்தக் கருத்துக்களை விளக்கும் சொற்களும் தொடர்களும் ஏறத் தாழ ஒன்றுபோலவே இருத்தலை நாம் காணலாம். அவற் றுள் இறுதியில் தந்த பாடலில் மட்டும், யவனருடைய கப்ப லில் கொண்டுவந்த மதுவைப் பற்றிய குறிப்புக் காணப் படுகிறது. பண்டைத் தமிழர்கள் மதுவருந்தும் பழக்கம் உடையவர்களே ஆதலால், அவர்கள் வெளிநாட்டு மது வகைகளை அருந்தி இன்பம் கண்டதில் வியப்பொன்றும் இல்லை. ஆனால், தமிழ் நாட்டு மதுப்போதாதென்று யவனர் மதுவைப் பற்றிக் கூறும் இந்த இடம் நம்மைத் திடுக்கிடச் செய்கிறது. அயல் நாட்டவரோடு இம் மது வகைகளைப் பற்றித் தமிழ்ப்புலவர்கள், சொற்போர்கள் நிகழ்த்தியிருக்க லாம். கிரேக்க தத்துவ அறிஞர்கள், மிதமான குடியால் அறவாழ்க்கை பழுதுபடாது என்று உணர்த்தியிருக்கலாம். மேல் நாட்டாருள் 'ஸ்டாயிக்ஸ்' கொள்கையினரே அறங் களை உறுதியுடன் கையாளவேண்டும் என்று கூறுபவர்கள்; மதுவருந்துவதை எவ்வகையாலும் ஒப்புக்கொள்ள இசை யாதவர்கள். எனவே, இவ் வகையான ஒரு சொற்போர் நடந்திருக்கமுடியாதென யாரும் கூறவியலாது. ஆனால், அவ்வாறு நடந்ததற்கான திட்பமான சான்று ஒன்றும் நமக் குக் கிடைக்கவில்லை என்பதை மட்டும் நாம் ஒப்புக்கொள் ளத்தான் வேண்டும். யவனர், தமிழ் நாட்டிற்கு அடிக்கடி வந்துபோவதோடு நிற்கவில்லை; அரிக்கமேட்டில் நிலத்தை அகழ்ந்தெடுத்துச் செய்த புதை பொருள் ஆராய்ச்சியால்

*புறம், 56 : 17-25.

அவர்களிற் சிலர் தமிழ்நாட்டில் நிலையாகத் தங்கி வாழ்ந்து, தங்களுடைய பொன்னாலும் மதுவாலும் கலையாலும் தமிழரின் நாகரிகத்தை உருப்படுத்தி, மித வாழ்க்கை வாழும் தத்துவத்தை அவர்கள் உணர்ந்து கடைப்பிடிக்கத் துணை புரிந்தனர் என்பதை நாம் அறிகிறோம்.

கிரேக்கர்களால் தமிழ்நாட்டிற்கு மற்றொரு பெரும் பயனும் விளைந்தது. தமிழ்நாட்டின் அரண்கள் அதன் அரசியல் வாழ்க்கையில் மிகச் சிறப்பிடம் பெற்றிலங்கின. 'முழு முதல் அரணம்' என்பது தொல்காப்பியம்.* 'அரணுக்கு வேண்டப்படுவன அனைத்தும் குறைவிலாது நிரம்பப் பெற்றது' என்பது அதன் பொருள். சங்க இலக்கியத்தில் தகடூர் முற்றுகை, பாரியின் பறம்பு நாட்டு முற்றுகை; கரூர் முற்றுகை என எத்தனையோ முற்றுகைகள் பற்றிய செய்திகள் உள்ளன. இஃது உரோம நாட்டின் படைத்தலைவன் மார்செல்லஸ் என்பானது சிரகூஸ் முற்றுகையையும் அப்போது ஆர்க்கிமிடிஸ் என்பான் பொருத்திய பலபல போர்ப் பொறிகளையும் நமக்கு நினைப்பூட்டுகின்றன. மதுரை மாநகர மதிலில் இருந்த பொறி அமைப்புக்களைப் பற்றியும் பிறவற்றைப் பற்றியும் சிலப்பதிகாரம் நமக்கோர் ஓவியக் காட்சியை மாட்சியுடன் தருகிறது :

“மதுரையின் மதிலைச் சுற்றி ஓர் அகழ் உண்டு. அந்த அகழைச் சுற்றி ஒரு காவற்காடு உண்டு. அந்த மதிலில் வளைந்து தானே அம்பை எய்யும் எந்திர வில்லும், கரிய விரலினையுடைய கருங்குரங்குபோல் இருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும், கல்லை உமிழும் கவண்பொறியும், பக்கத்தில் வருபவர்மீது கொதிக்கும் எண்ணெயை இறைத்து வருத்தும் பொறியும், அதேபோல் உருகிய செம்புக் குழம்பைப் பகைவர்மீது இறைத்து வருத்தும் குழிசிப் பொறியும், இரும்பு காய்ந்து உருகும் உலைகளும், பகைவர்மீது

*தொல், பொருள் : 65.

கற்களை எறிதற்காக அமைந்த கூடைப் பொறியும், அகழி யில் இறங்கி மதிலை நெருங்கும் பகைவரின் உடலைக் கோத்து மதிலை நோக்கி இழுக்கும் தூண்டிற் பொறியும், கழுக்கோல் போலக் கழுத்திற் பூட்டி முறுக்கும் சங்கிலிப் பொறியும், ஆண்தலைப் பறவை வடிவாகச் செய்யப்பட்டுப் பறக்கவிடப் பகைவர்களின் உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் பொறியும், அகழியைத் தாண்டி மதில்மேல் பகைவர் ஏறி ஞல் அவரைப் பிடித்து அகழியினுள் தள்ளும் இரும்புக் கவைப் பொறியும், அம்புக்கட்டும், அம்பு எய்யும் புழை களும், மதில் வாயிற் கதவை அணுகாதபடி கற்கவியிலிருந்து தொங்கும் ஐயவித் துலாமும், மதிலின் தலையைப் பற்றுபவ ரின் கைகளைக் குத்தும் ஊசிப் பொறிகளும், பகைவர்கள் கதவொடு சேராதபடி வைத்த கிரைக் கழுப் பொறியும், பகைவர்கள்மேல் சென்று அவர்கள் கண்களைக் கொத்தும் சிச்சிலிப் பொறியும், மதிலின் மேல் ஏறினவர் உடலைக் கோட்டால் கிழிக்கும் பன்றிப் பொறியும், மூங்கில் வடிவ மாகப் பண்ணி அடித்தற்கமைந்த பொறியும், கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்திலே வீழவிடும் மரங் களும், கணைய மரமும், கோல் என்னும் விட்டேறும், குந்தம் என்னும் சிறு சவளமும், வேலும், குருவித் தலைகளும் பிறவும் பொருத்தப் பெற்றிருந்தன."*

சிலப்பதிகார உரையாசிரியரான அடியார்க்கு நல்லார் மேலும் உரையில் கூறுவாராய், "நூற்றுவரைக் கொல்லி, தள்ளி வெட்டி, களிற்றுப் பொறி, ஆள் விழுங்கும் பாம்புப் பொறி, கழுகு பொறி, புலிப்பொறி, புதைபானையிலிருந்து பாம்பு வெளிப்படும் குடப்பாம்புப் பொறி, சகடப் பொறி, தகர்ப்பொறி, அரிநூற் பொறி" ஆகியவை இருந்தன என்கிறார்.

---

*சிலப், அடைக், வரி : 207-218.

சீவகனின் மதிலைப்பற்றிக் கூறும் சீவகசிந்தாமணி—நாமகள் இலம்பகத்திலுள்ள நான்கு பாடல்களிலிருந்து* தாம் மேலும் உரைத்த இப் பொறிகளைப் பற்றிச் சிலப்பதிகார உரையாசிரியரான அடியார்க்கு நல்லார் அறிந்தார் எனலாம்.

இப் பொறிகள், ஆர்க்கிமிடிஸ், சிரகூஸில் நிறுவிய பொறிகளை ஒத்தே இருக்கின்றன. புளூட்டார்க் எழுதிய மார்செல்லஸின் வாழ்க்கை வரலாற்றிலிருந்து கீழ்வருவனவற்றை நாம் உணரலாம்:

**அதிகாரம் 14.**

"எவ் வகையான முற்றுகைப் போரிலும், தாக்கவும் தடுக்கவும் பயன்படும் பொறிகளை உண்டாக்கும்படி ஆர்க்கிமிடிஸை அரசன் (ஹைரோ) வேண்டிக்கொண்டான்."†

**அதிகாரம் 15.**

"சிரகூஸ் வீரர்கள், தங்களை உரோமர்கள் கடல் வழியாகவும் தரைவழியாகவும் வந்து தாக்கியபோது அச்சத்தால் நடுநடுங்கி வாயடங்கினர். உரோமரின் அந்தப் பயங்கரமான படையெடுப்புக்குமுன் எதுவும் நிற்கமுடியாது என்று அவர்கள் எண்ணினார்கள். ஆனால், ஆர்க்கிமிடிஸ் தன் பொறிகளை இயக்கி, எல்லாவிதமான எறிபடைகளையும், ஏராளமான கற்களையும் உரோமர்களின் தரைப்படைமீது வீசினான். அவைகள் அளந்தறிய முடியாத விரைவுடனும் பேரொலியுடனும் உரோமரைச் சென்று தாக்கின. அவற்றின் தாக்குதலை எதுவும் தடுக்கமுடியவில்லை. ஆனால், அவை, தம் வழியில் நின்ற வீரரைக் கூட்டங் கூட்டமாக வீழ்த்தி, அவர்களின் அணி வகுப்பைக் குழப்பத்திற்குள்ளாக்கின. அதே நேரத்தில், மதிற் சுவர்களிலிருந்து பெரிய

---

*72-75.

†புளூட்டார்க்கின் வாழ்க்கை வரலாறுகள் : வால், 5, பக்கம், 473.

தூலங்களைக் கப்பல்களின்மேல் வீச, அவை, சில கப்பல் களின்மேல் உயரத்திலிருந்து விழுந்த பளுவால் அக் கப்பல் கள் நீரில் மூழ்கடிக்கப்பட்டன. மற்றக் கப்பல்கள் இரும்பு வளை நகங்கள் அல்லது நாரைகளின் அலகுகள் போன்ற இடுக்கிகளால் முன் பக்கத்தில் பற்றி வானில் உயரத் தூக் கிப் பின்பக்கம் தலைகீழாய்த் தொங்க வீழ்த்தி ஆழத்தில் மூழ்கடிக்கப்பட்டன. அல்லது, நகருக்குள் பொறிச் சாத னங்களால் அவை சுழற்றப்பட்டு நகரத்தின் மதிற் சுவரி னடியிலிருந்து நீட்டிக்கொண்டிருந்த நெடும் பாறைகளின் மேல் மோதப்பட்டன. அதனால் கப்பலில் இருந்த வீரர்கள் எல்லோரும் மாண்டனர். அடிக்கடி கப்பல்கள் கடலி லிருந்து மேலே அந்தரத்தில் தூக்கப்பட்டு, அங்கே தொங் கியபடி முன்னும் பின்னும் மேலும் கீழுமாக விரைந்து சுழற்றப்படும். அதனால், கப்பலில் உள்ளவர்கள் அனைவரும் வெளியே நாலா மூலைகளிலும் வீசி எறியப்படுவார்கள். பிறகு, கப்பல்கள் மதில் சுவர்களின்மேல் காலியாய் விழும். அல்லது தம்மைப் பற்றியிருந்த இடுக்குக்களிலிருந்து கப்பல்கள் நழுவி விழும். கப்பல்களாலாகிய பாலத்தின்மீது மார்செல்லஸ் தள்ளிக்கொண்டுவந்த, 'சம்புகா' வென்னும் இசைக் கருவியின் தோற்றத்தை ஒருவாறு ஒத்திருந்த கார ணத்தால் 'சம்புகா' என்ற பெயர் பெற்ற பொறியானது மதிற்சுவரை நெருங்குவதற்குச் சற்றுத் தொலைவில் இருந்த போதே பத்து 'டேலன்ட்டுகள்' நிறையுள்ள ஒரு கல், கல்லுமிழ் கவண் பொறியால் அதன்மேல் வீசி எறியப் பட்டது. இதுபோலவே கற்கள் ஒன்றன்பின் ஒன்றாய் அடுத்தடுத்து எறியப்பட்டன. பெருமுழக்கத்தோடு, அலையலையாக அந்தப் பொறியின்மீது விழுந்த அக் கற்க ளுள் சில, அதன் அடித்தளத்தை நொறுக்கி அதன் கட்டுக் கோப்பைத் தகர்த்து, அஃதிருந்த மேடையிலிருந்து அதைக் கீழே தள்ளியது. இதைக் கண்ட மார்செல்லஸ் மனத்தடு மாற்றத்தால் தன் கப்பல்களை எவ்வளவு விரைவாகச்

செலுத்தமுடியுமோ அவ்வளவு விரைவாகத் திருப்பிச் செலுத்துமாறும், தரைப்படைகளைப் பாசறைக்குத் திரும்பு மாறும் கட்டளையிட்டான்.

"பிறகு அவனது பாசறையில் நிகழ்ந்த போர்க்குழுவின்கூட்டத்தில், முடியுமானால், இரவுநேரத்தில் வீரர்களுடன், மதிற்சுவருக்கு அண்மையில் நெருங்கிவிடவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. தாங்கள் மதிற்சுவரை நெருங்கிவிட்டால் ஆர்க்கிமிடிஸ் தன்னுடைய எறிபடைகளுக்குப் பயன்படுத்திய கயிறுகளால் தொலைவில் சென்று தங்கள் தலைகளைத் தாக்க அவை விசைபெற முடியுமேயொழிய, அண்மையில் இருந்தால் போதிய இடமில்லாத காரணத்தால் அவை விசைபெற மாட்டாமல் பயனற்றொழியும்; ஆகையால், தங்களுக்கு வெற்றி கிடைக்கும் என்று அவர்கள் எண்ணினார்கள். ஆனால், பகைவர்கள் அவ்வாறு நெருங்கி வந்துவிட்டால் பயன்படுவதற்காக, ஆர்க்கிமிடிஸ், எவ்வளவு குறுகிய தொலைவில் இருப்பவரையும் குறி வைத்துத் தாக்கக்கூடிய அமைப்புக்கள் உள்ள பொறிகளையும், குறைந்த தொலைவிலே வீசித் தாக்கக்கூடிய எறிபடைகளையும், பகைவர்க்குத் தோன்றாதவாறு மதிற்சுவரில் அடுத்தடுத்திருந்த புழைகளில் அண்மைத் தாக்குதலுக்குரிய 'தேள்கள்' என்னும் பொறிகளையும் முன்னெச்சரிக்கையாகவே அமைத்துவைத்திருந்தான்.*

அதிகாரம் 16.

"எனவே, தங்களைப் பகைவர்கள் பார்க்கவில்லை என்ற எண்ணத்தோடு இரவில் மதிலை உரோமர்கள் நெருங்கி வந்ததும் மீண்டும் அவர்கள் ஏராளமான எறிபடைகளால் தாக்கப்பட்டனர். பெரிய பெரிய கற்கள் ஏறத்தாழச் செங்குத்தாக அவர்கள்மீது உருண்டு விழுந்தன. மதிலின்

---

*புளூட்டார்க்கின் வாழ்க்கை வரலாறுகள்: வால், 5, பக்கம், 475-477.

எல்லா இடங்களிலிருந்தும் அம்புகள் அவர்களின்மீது பாய்ந் தன. எனவே, அவர்கள் பின்வாங்கினார்கள். அவர்கள் திரும்பி யோடும்போதும் பல எறிபடைகள் அவர்கள்மீது விழுந்து அவர்களுள் பலரைக் கொன்று குவித்தன ; அவர் களின் கப்பல்களிற் பல ஒன்றோடொன்று மோதும்படி செய்தன. அவர்களால் எந்த வகையிலும் பகைவரைத் திருப்பித் தாக்க முடியவில்லை. ஆர்க்கிமிடிஸ் தன்னுடைய பொறிகளில் பலவற்றை மதிற்சுவருக்கு உட்புறத்திலேயே அமைத்திருந்தான். தங்களுடைய கண்ணுக்குத் தெரியாத இடத்திலிருந்து அளவற்ற ஆயுதங்களும் கற்களும் வந்து தங்களை மோதுவதைக் கண்ட உரோமர்களுக்குக் கண் ணுக்குத் தெரியாத தேவர்களோடு தாங்கள் போர்செய்வது போல் தோன்றியது.''*

ஈண்டுக் கூறியவற்றை நினைவி லிருத்திக்கொண்டு நோக்கினால், சிலப்பதிகாரத்தில் சுருக்கமாகத் தரப்பட் டுள்ள செய்தி, அருமையும் பெருமையும் உடையதாகத் தோன்றும். கீழைநாடுகளும் மேலைநாடுகளும் வாணிகத் தொடர்பு உடையவை. எனவே, போர்ப் பொறிகள் மேலை நாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்தனவெனக் கருதுவது மிகையாகாது. ஆர்க்கிமிடிஸின் காலத்திற்கு முற்பட்ட தெனச் சொல்லப்படும் கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம், அரணின் மதிலுக்குள் 'சதக்கினி' என்னும், 'நூற்றுவ ரைக் கொல்லி' முதலிய பொறிகளும், பிற ஏற்பாடுகளும் இருந்தன என்று கூறுகிறது. பிற்காலக் கருத்துக்களின் இடைச் செருகல்களால் 'கீத்' முதலிய வரலாற்றறிஞர்கள் அர்த்த சாஸ்திரம் கி. பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற் றாண்டைச் சேர்ந்தது என்று கூறலானார்கள் என்கிறார்கள். ஆனால், சிந்தாமணியில் போற்றப்பட்டிருக்கும் தமிழ் நாட் டின் மாபு இவ் விஷயத்தில் தெளிவாக உள்ளது.

---

*புளூட்டார்க்கின் வாழ்க்கை வரலாறுகள் : வால், 5, பக்கம், 477-479.

சிந்தாமணி நாமகள் இலம்பகத்தின் 74-ஆம் பாடல், மேலே சிலப்பதிகார வரிகளின் விளக்கத்திற் குறிப்பிடப் பட்ட பலவகைப் பொறியமைப்புக்களைப் பற்றியும் விளக்கிக் கூறுகிறது. அப் பாடலில், "தம் புலங்களால் யவனர் தாட்படுத்த பொறியே"* என்ற வரி வருகிறது. "யவனர்கள் தங்கள் புத்தி நுட்பத்தால் ஆராய்ந்து முயன்று பொருத்திய பொறிகள்" என்பது இவ் வடியின் பொருளாகும். ("யவனர் இயந்திரித்த பொறியும்" என்பது நச்சினார்க்கினியர் உரை. தொல்காப்பியப் பொருளதிகாரம் 65-ஆம் சூத்திர உரையில் "யவனர் இயற்றிய பல பொறிகளும்" என அவர் குறித்துள்ளார்).

பண்டைய நாகரிகப் பண்பு வாய்ந்த மேலை நாட்டவரோடு தமிழ் நாட்டவர்க்கு மிக்க நெருங்கிய தொடர்பு இருந்தது என்ற நமது முடிவு பொருந்துவதெனின், வட நாட்டவர்க்கும் அந்த மேலை நாட்டவரோடு தொடர்பு இருந்தது என்று முடிவு செய்வது பொருந்துவதேயாகும். 'ஓரை' என்னும் சொல் தொல்காப்பியத்தில் வருகிறது. எனவே, இந் நூல் இந்திய வான சாஸ்திரத்தில் 'ஹோரா' அல்லது முகூர்த்தம் அல்லது 'ஹவர்' (மணி) என்பதை வழக்கிற்குக் கொண்டுவந்தவராகக் கருதப்படும், ஹோரா சாஸ்திரம் அல்லது பிருஹஜ்ஜாதகத்தின் ஆசிரியரான வராக மிசிரரின் காலத்திற்கு மிகமிகப் பிற்பட்டது என்று சில அறிஞர்கள் கருதுகிறார்கள். ஆனால், வடமொழி அறிஞர்களும் பிற வட இந்தியர்களும் இந்த மேலைநாட்டு வான சாஸ்திரக் கருத்துக்களை அறிவதற்கு முன்பே, அஃதாவது பிரமிட்கோபுர காலத்திலும் அதற்கு முற்பட்ட காலத்திலுமிருந்தே தமிழர்கள் மேலை நாட்டவரோடு வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்று நாம் அழுத்தந் திருத்தமாக நிலைநாட்ட முயன்றுவந்ததற் கேற்பத் தமிழர்கள்

*74 : 4, சிந்தாமணி, நாமகள்.

மேலைநாட்டு அறிஞர்களோடு நேர்முகமாகத் தொடர்பு கொண்டிருந்தார்கள் என்பது தெளிவாகிறது. எனவே, மேலைநாட்டவர்கள் தாங்களாகவே நம் கடற்கரை நகரங்களில் வந்து குடியேறியதால் அவர்களோடு இன்னும் மிகுதியாகத் தொடர்பு கொண்டிருந்த தமிழர்களுக்குக் கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்பே மேலைநாட்டவர் அறிந்திருந்த ஓரையை (ஹோராவை)ப் பற்றி நன்கு தெரிந்திருக்கலாம் என்று தெரிகிறது. மேலை நாட்டவரோடு தமிழரிடை ஏற்பட்ட தொடர்பு வெறும் வாணிகத் தொடர்பு மட்டுமன்று; ஆனால், ஆன்மீகத் தொடர்பு; இரண்டு நாகரிகங்களும் பண்பாடுகளும் ஒன்றுன உயர் தொடர்பு. ஆனால், அங்ஙனம் தொடர்பு கொண்டது, ஒருவர் பணியவும் ஒருவர் செருக்குற்று அடக்கியாளவும் ஏற்பட்டதன்று; ஒருவரை ஒருவர் வியந்து பாராட்டித் தமக்குள் அன்பு கொண்டாடியதனல் ஏற்பட்டதாகும் என்று கூறுவது மிகையாகாது. "வான் தோய் புரிசைப் பொறி"* என்று சில புதிய போர்ப்பொறிகளைக் குறிக்கின்றது, பெரும் பொருள் விளக்கம் என்னும் நூல்.

மணிமேகலையும்:

> "வந்தேறி பொறிகள் வகைமாண் புடைய
> கடிமதி லோங்கிய இடைநிலை வரைப்பு"†

எனப் பொறிகளைப் பற்றிய செய்தியைக் குறிக்கிறது.

புறப்பொருள் வெண்பாமாலையும்:

> "கற்பொறியும் பாம்பும் கனலும் குரங்கும்
> விற்பொறியும் வேலும் விளங்கவும்......
> சார்த்தினர் ஏணி பலவும் எயில்"‡

எனப் பொறிகளைப் பற்றிக் குறித்தல் காண்க.

---

*புறத்திரட்டு, 1329. †28 : 23-24

‡பு. வெ. மா., 112.

பெருங்கதை,

"பத்திரப் பாம்புரி........எயில்"*

என்று கூறுவதும் காண்க.

இந் நூல்கள் எல்லாம் சங்க நூல்களாகக் கொள்ளப் படுவன அல்ல. ஆனால், தகடூர் யாத்திரை என்னும் நூல் அரிசில்கிழார், பொன்முடியார் என்ற சங்கப் புலவர் இருவ ரால் இயற்றப்பட்ட நூலென்பர். அந் நூலிலிருந்து ஒரு பாடலைத் தொல்காப்பியப் பொருளதிகாரம் 67-ஆம் சூத்திர வுரையில் நச்சினார்க்கினியர் மேற்கோளாக எடுத்தாள்கிறார். அதன் கருத்து:

"பகைவர்கள் மதிலின்மீது ஏற வழியில்லை. ஏனென் றால் சுவர்களின்மீது யாண்டும் எண்ணெயும் ஐயவியும் (சிறுவெண்கடுகும்) அப்பப்பட்டிருக்கின்றன. மதிலின் மேல் பறவைபோன்ற பொறிகள் பொருத்தப்பட்டுள்ளன. அளவற்ற கவண்களும், கற்களும் விரைந்து செல்லும் பொறிகளும், விற்களும், அம்புகளும் யாண்டும் உள்ளன. பந்துகளையும், பொம்மைகளையும், பசுங் கூடைகளையும் எறி யும் மங்கையர் உருவமுடைய பொறிகள் பொருத்தப்பட் டுள்ளன. வாயிலுக்கு மேலே உயரத்தில் தானே அம் பெய்யும் பொறியொன்று வைக்கப்பட்டுள்ளது" என்ப தாகும்.

*3 : 3 : 17-38.

# 12. முடிவுரை

இதுகாறும் ஆராய்ந்து கூறிபவாற்றால், சங்க காலத் தமிழ் நாட்டில் பல்வேறு குடிகள் இருந்தன என்பது தெளிவாகிறது. இவ் வாராய்ச்சியால் 'குடி' என்னும் சொல் குறிப்பிட்ட ஒரு சிறப்புப் பொருளைக் குறிப்பதாக அன்றிப் பொதுவாகப் பல பொருள்களை விரிந்து பரந்து குறிப்பதாகவே கொள்ளப்பெற்றிருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கின்றது. ஒருவன் இருட்டில் தடவித் தேடிக்கொண்டிருக்கும்போது தான் காணும் ஒன்றன் உருவமைப்பைப் பற்றித் திட்டவட்டமாகக் கூறுவது அருமையேயாகும். சங்ககாலச் சமூகக் குழுக்களைக் குடிகள், கிளைக் குடிகள், சாதிகள், குடும்பங்கள் அல்லது இனங்கள் என்று வழங்கலாமா, கூடாதா, எவ்வாறு வழங்குவது என்பதை எதிர்கால வரலாற்றாசிரியர்களே ஆராய்ந்து முடிவு செய்தல் வேண்டும். இனங்கள் தோன்றிய அடிப்படைகளைக் குறித்து இன்னும் ஆராய்தல் வேண்டும். பல்வேறு இனங்கள் தமிழ் நாட்டில் குடியேறின வரலாற்றைக் குறித்து ஆராய்ந்து எழுதவேண்டும்.

சங்ககால மக்களிடம் பல்வேறு வகையான கூறுபாடுகள், தனித்தனியாக ஒன்றையடுத்து ஒன்று இருத்தல் போன்ற இயல்பான நிலையிலிருந்து, ஒன்றோடொன்று கலந்து ஒன்றிப்போதல் போன்ற நிலை யிறுதியாக, வெவ்வேறு படித்தரத்தில் இருந்தன என்பதை இந்த ஆராய்ச்சி காட்டுவதாகும். சங்ககாலச் சாதிகள் பற்றி, இடமில்லாத காரணத்தால் ஈண்டு ஆராயவில்லை. தென்னிந்தியாவில் இன்றுள்ள எண்ணிலடங்காத சாதிகள் அனைத்தும் பண்டைய இனங்களின் எச்சங்களே எனலாம். பல்வேறு குடிகளினுடைய கூட்டுறவே சமூகம் ஆகும் என்பது இனச் சிக்கல் முறைமையைத் தவிர்த்தது எனலாம். இனக் கூட்டுறவு, ஒற்றுமையை நாடுவதாகும். பல்வேறு அரச

குடும்பங்களும், பல்வேறு குடிகளையும் இனங்களையும் சார்ந்தன எனினும், முடிவில் அவையனைத்தும், 'யாவரும் கேளிர்' என்ற கொள்கையால் தாம் ஒரே இனம் என்னும் நோக்கம் கொண்டனவே யாகும். அயல்நாட்டு இனங்கள் பெரும்பான்மையாகப் படையெடுப்பு முறையால் தென்னிந்தியாவிற்கு வந்தன அல்ல. எனவே, பகைமை உணர்ச்சி அவற்றிடம் ஏற்படவில்லை எனலாம். பெரும் பான்மையாக வடநாட்டு மக்கள் தென்னாட்டில் இயற்கை முறையில் மெதுமெதுவாகப் பரவிக் குடியேறினர்கள் எனலாம். இதனல் மக்கட் பண்பாடுகளில் ஒருமையும், அவை உயர வேண்டும் என்ற அக்கறையில் ஒருமையும் ஏற்பட்டன. படையெடுப்புக்கள் அடியோடு இல்லவேயில்லை என்று கூறுதற்கில்லை. ஆனல், அவற்ருல் மக்கள் தம் இன வேற்றுமைகளை மறந்து ஒரு சமூகமாக வாழ்வது பாதிக்கப்படவில்லை உதாரணமாக, இந்தியாவிற்குக் கிரேக்கர்கள் வந்தது படையெடுப்பு முறையால் அன்றி வாணிக முறையாலேயே ஆகும். சில விரும்பத்தகாத நிகழ்ச்சிகள்கூட ஏற்பட்டன எனலாம். என்ருலும், மொத்தத்தில், தமிழர்களோடு யவனர் என்ற கிரேக்கர்களிடையே இருந்த உறவு மனங்கலந்த உறவுதான் எனலாம். தமிழர் வாழ்க்கை முறைக்கு யவனர்கள் எவ்வளவு பயன்பட்டார்கள் என்பது மேலே காட்டப்பட்டது. தமிழ் நாட்டின் மக்களினங்களைப் பற்றி இன்னும் ஆழ்ந்து ஆராய்வோமானல், இனம், பண்பாடு, சமயம் பற்றிய ஒருமைத் தன்மை நமக்குப் புலனுகும் எனலாம்.

# பிற்சேர்க்கை

## I

## மேற்கோள்களாக எடுத்தாண்ட நூல்களும் ஆண்ட முறையும்

**1.** தமிழ்

அ. இலக்கணம்

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் (தொல் : எழுத்து) இளம்பூரணர் உரை.

,, சொல்லதிகாரம் (தொல் : சொல்) ,,

,, ,, ,, சேனாவரையர் உரை.

,, ,, ,, நச்சினார்க்கினியர் உரை.

,, பொருளதிகாரம் (தொல் : பொருள் : உரை - S. கனகசபாபதி பிள்ளை பதிப்பு)

இறையனார் அகப்பொருள் உரை. (இறை. அகப்.)

புறப்பொருள் வெண்பாமாலை (பு. வெ. மா.)

யாப்பருங்கல விருத்தி.

யாப்பருங்கலக் காரிகை.

தண்டி அலங்காரம்.

முத்து வீரியம்.

நன்னூல் - மயிலை நாதர் உரை.

,, - சிவஞான சுவாமிகள் விருத்தி.

ஆ. இலக்கியம் - பாடல்

எட்டுத் தொகை

| | |
|---|---|
| அகநானூறு, பழைய உரை | (அகம்.) |
| புறநானூறு, பழைய உரை | (புறம்.) |
| நற்றிணை, நாராயணசாமி ஐயர் உரை | (நற்.) |
| குறுந்தொகை, டாக்டர் சாமிநாத ஐயர் உரை | (குறுந்.) |
| ஐங்குறு நூறு, பழைய உரை | (ஐங்.) |
| பதிற்றுப்பத்து, பழைய உரை | (பதிற்.) |
| பரிபாடல், பழைய உரை | (பரி.) |
| கலித்தொகை, பழைய உரை | (கலி.) |

## பத்துப் பாட்டு

திருமுருகாற்றுப்படை, நச்சினார்க்கினியர் உரை (முருகு.)
பொருநராற்றுப்படை, ,, (பொருந.)
பெரும்பாணாற்றுப்படை, ,, (பெரும்.)
சிறுபாணாற்றுப்படை, நச்சினார்க்கினியர் உரை (சிறுபா.)
முல்லைப்பாட்டு, ,, (முல்லை.)
மதுரைக் காஞ்சி, ,, (மதுரைக்.)
நெடுநல்வாடை, ,, (நெடு.)
குறிஞ்சிப்பாட்டு, ,, (குறிஞ்சி.)
பட்டினப்பாலை, ,, (பட்டின.)
மலைபடுகடாம், ,, (மலைபடு.)
சங்க இலக்கியம், சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பு.

## பதினெண் கீழ்க் கணக்கு

திருக்குறள், பரிமேலழகர் உரை (திருக்.)
நாலடியார், பழைய உரை.
மணிமேகலை, (மணி.)
சிலப்பதிகாரம் அரும்பத உரையாசிரியர் உரை.
சிலப்பதிகாரம், (சிலப்.)
சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லார் உரை.
தேவாரம்.
நாலாயிரப் பிரபந்தம்.
பெரியபுராணம்.
கம்பராமாயணம், (கம்பரா.)
சீவக சிந்தாமணி, (சீவக.)
கலிங்கத்துப் பரணி, (க. ப.)
பெருந்தொகை, (பெருந்.)
புறத்திரட்டு, (புறத்.)

இ. உரை நடை

செந்தமிழ்ப் பத்திரிகை, 1—41
ஆராய்ச்சித் தொகுதி, மு. இராகவ ஐயங்கார்.

வேளிர் வரலாறு, மு. இராகவ ஐயங்கார்
அருச்சுனனும் பாண்டிய மரபும், ,,
கள்ளர் சரித்திரம், ந. மு. வேங்கடசாமி நாட்டார்.
தமிழக ஊரும் பேரும், ரா. பி. சேதுப் பிள்ளை.
வஞ்சிமாநகர், திவான் பகதூர் S. கிருஷ்ணசாமி ஐயங்கார்.
மணிமேகலை—ஒரு கட்டுரை - தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை - தமிழ் முரசு.
கோபாலகிருஷ்ணமாச்சாரியர் நினைவு மலர்.

க. அகராதிகள்—நிகண்டுகள்

தமிழ் லெக்சிகன் - தமிழ்ப்பேரகராதி - ஆறு தொகுதிகள் - சென்னைப் பல்கலைக் கழகம்.
திவாகரம்.
பிங்கலந்தை.
சூடாமணி நிகண்டு.
ஆசிரிய நிகண்டு.

## 2. English

Romance of words–Earnest Weekley, M.A. (1st Edn.)
Romance of Names, ,, ,,
Adjectives and other Words, ,, (1930)
Something about Words, ,, (1935)
Surnames, ,, (1936)
Words, Ancient and Modern, ,, (1926)
Plutarch's Lives with an English Translation in 11 Volumes - Volume V.
Dr. Caldwell's Dravidian Comparative Grammar (D. C. G.) (1875)
Tamils, 1800 years ago, Kanakasabai Pillai.
Ancient India and South Indian History and Culture, Vol. I.—Dewan Bahadur S. K. Krishnaswamy Aiyangar, M.A., (A.S.H.C.)

The Pandiyan Kingdom, Prof. K. A. Nilakanta Sastriyar.
The Colas, Volume 1. ,,
The Cera Kings of the Sangam Period, K. G. Sesha Aiyar, B.A., B.L.
The Chronology of the Early Tamils, Prof. K. N. Sivaraja Pillai (C. E. T.)
Discovery of India, Pandit Jawharlal Nehru.
Shudras, Dr. B. R. Ambedkar.
Saivaism and Vaishnavaism by Dr. Bhandarkar.
Journals of the Royal Asiatic Society (J. R. A. S.)

### 3. Inscriptions

South Indian Inscriptions, (S. I. I.)
Epigraphia Indica.
Epigraphia Carnatica.
Travancore Archaeological Series (T. A. S.)

## II

## மேற்கோள்களை ஆண்ட முறை

இலக்கியங்களின் எண்கள் செய்யுட்களைக் குறிப்பன. இரண்டு எண்கள் தரப்பட்டால், முதல் எண், செய்யுளையோ காதையையோ குறிக்கும்; இரண்டாம் எண், அதில் வரும் வரி அல்லது வரிகளைக் குறிக்கும். (குறுந், 55 என்றால், குறுந்தொகை, 55-ஆம் பாடல் என்பதாகும். அகம், 1 : 5-8 என்றால், அகநானூறு பாடல் 1, வரிகள் 5 முதல் 8 வரையில் என்பதாகும். தொல், சொல், 46 என்றால், தொல்காப்பியம் சொல்லதிகாரம் சூத்திரம் 46 என்பதாகும். தொல், பொருள், பக், என்றால் தொல்காப்பியம் பொருள் அதிகாரம் கனக சபாபதிப் பிள்ளைப் பதிப்பு,பக்கம் என்பதாகும். பட்டின, 14 என்றால், பட்டினப்பாலை வரி 14 என்பதாகும். A. S. H. C., 434 என்றால் Ancient

India and South Indian History and Culture, பக்கம் 434 என்பதாகும். C. E. T. என்றால் The Chronology of the Early Tamils என்பதாகும்.

## III

## பிற குறிப்புக்களும் பிற மேற்கோள்களும்

### அ

1. சங்கப் புலவர்களுள் அரசர்களுடைய பெயர்கள் உயர்வுப் பன்மை குறிக்கும் ஆர் விகுதி இன்றி வருகின்றன. எடுத்துக்காட்டாகக் கிள்ளிவளவன் (புறம், 173), பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் (புறம், 183), பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் (புறம், 72), பாண்டியன் பன்னாடு தந்த மாறன் வழுதி (குறுந், 270, நற், 97, 301), பிரமதத்தன் (குறுந், 184), இளந்திரையன் (நற், 94, 99, 106; புறம், 185).

(பக்கம், 23 : பிற்சேர்க்கை 4 : 3 என்ற அடிக் குறிப்பு.)

2. குறுநில மன்னர்கள் அல்லது தலைவர்கள் பெயர்கள் உயர்வுப் பன்மை குறிக்கும் ஆர் விகுதியின்றி வருவன. இறங்குடிக் குன்றநாடன் (அகம், 215), இளம் புல்லூர்க் காவிதி (நற், 89), இருந்தையூர்க் கொற்றன் புலவன் (குறுந், 335), காசிபன் கீரன் (நற், 248), கொல்லன் அழிசி (குறுந், 27, 138, 145, 240), கொல்லிக் கண்ணன் (குறுந், 34), செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன் (குறுந், 228), நாகம் போத்தன் (குறுந், 282), மாதிர்த்தன் (குறுந், 113), நாமலார் மகன் இளங் கண்ணன் (குறுந், 250), பார் காப்பான் (குறுந், 254), பெரும் பாக்கன் (குறுந், 296), பொன்னாகன் (குறுந், 114), மதுரைப் பெருங்கொல்லன் (குறுந், 141), மதுரை மருதங்கிழார் மகன் இளம்போத்தன் (குறுந், 332), மீனைக் கந்தன் (குறுந், 196), மீனைப் பெருங்கந்தன் (குறுந், 136, 204, 234), மீனைவேள் தித்தன் (குறுந், 284), வாடாப் பிரமந்தன் (குறுந், 331), வெண் கொற்றன்

(குறுந், 88), வெண்பூதன் (குறுந், 83), வேட்ட கண்ணன் (குறுந், 389). இவைகளெல்லாம் குறுநில மன்னர்கள் அல்லது பெருந் தலைவர்கள் பெயர்கள் எனலாம்.

(பக்கம், 23 : பிற்சேர்க்கை 4 : 3 என்ற அடிக் குறிப்பு.)

3. நாகனார் என ஆண்பாற் பெயராகவும், நாகையார் எனப் பெண்பாற் பெயராகவும் பல பெயர்கள் வருகின்றன: அம்மெய்யன் நாகனார் (நற், 252), இள நாகனார் (நற், 151, 205, 231), இனிச்சந்த நாகனார் (நற், 66), எழூஉப்பன்றி நாகன்(குமரனார்) (அகம், 138, 240), தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் (அகம், 48, 108, 355; குறுந், 217; நற், 313 ; புறம், 326), தீன்மதி நாகனார் குறுந், 111), நன்னாகனார் (புறம், 176, 376, 379, 381, 384), பொன் நாகன் (குறுந், 114), மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் (அகம், 363 ; நற், 285), மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகனார் (குறுந், 223), மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் (அகம், 170; புறம், 316), மதுரைத் தமிழ்க்கூத்தன் நாகன் தேவனார் (அகம், 164), மதுரைப்பூதன் இளநாகனார் (புறம், 276), மதுரைப் பூவண்ட நாகன் (வேட்டனார்) (நற், 317), மதுரைப் பெருமருதிள நாகனார் (நற், 251), மருதன் இளநாகனார் (அகம், 34, 59 முதலியன), முப்பேர் நாகனார் (நற், 314), விரிச்சியூர் நன்னாகனார் (புறம், 292), வெள்ளைக்குடி நாகனார் (நற், 158, 196 ; புறம், 35).

அஞ்சியத்தை மகள் நாகையார்(அகம், 352), நன்னாகையார் (குறுந், 30, 118, 172, 180, 192, 197, 287, 325).

(பக்கம், 83 : பிற்சேர்க்கை 4 : 6 என்ற அடிக் குறிப்பு.)

## ஆ

1. " குரவமும் மரவமும் குருந்தும் கொன்றையும்
திலகமும் வகுளமும் செங்கால் வெட்சியும்
நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்
பிடவமும் தளவமும் முடமுட் டாழையும்

குடசமும் வெதிரமும் கொழுங்கால் அசோகமும்
செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமும்
எரிமலர் இலவமும் விரிமலர் பரப்பி
வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே
ஒப்பத் தோன்றிய உவவனம்"*
(பக்கம், 15, பின் இணைப்பு 4 : 2 என்ற அடிக் குறிப்பு.)

2. "மண்திணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்
முரசு முழங்கு தானை மூவர்"†
(பக்கம், 203, பிற்சேர்க்கை 4 : 8 என்ற அடிக் குறிப்பு.)

3. "தமிழ் கெழு மூவர்"‡
(பக்கம், 203, பிற்சேர்க்கை 4 : 9 என்ற அடிக் குறிப்பு.)

4. "மலர்தலை உலகத்து மன்னுயிர் காக்கும்
முரசு முழங்கு தானை மூவர்"§
(பக்கம், 203, பிற்சேர்க்கை 4 : 10 என்ற அடிக் குறிப்பு.)

---

## திருத்திப் படிக்க

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 35 | 2 | பிரியது விடாது | பிரிய விடாது |
| 73 | 16 | கிறது | படுகிறது |
| 102 | 14 | தாழில் | தொழில் |
| 120 | 7 | குறுக்தொகையில் | குறுந்தொகையில் |
| 137 | 31 | அந்த நோய் | அந்த நோயால் |
| 161 | 11 | எறறி | எற்றி |
| 182 | 13 | பொறைபினிடம் | பொறையனிடம் |
| 228 | 7 | பொருள்கள் | பொருள் |
| 305 | 7 | திதியனுக்குப் பின் | தித்தனுக்குப் பின் |
| 321 | 10 | இளங்கோவேளை | இருங்கோவேளை |
| 323 | 10 | இளங்கோ | இருங்கோ |
| 369 | 26 | பெருநஞ்ஞொடு | பொருநஞொடு |
| 386 | 5 | பிணைவப்பட்ட | பிணைவுபட்ட |

*மணிமேகலை, 3 : 160-169.

†புறம், 35 : 3-4. ‡அகம், 31 : 14. §பெரும், 32-33.

# சிறப்புச் சொற்களின் அகராதி


அ

அகத்தியர், 323, 329, 373
அகுதை, 278, 286 304
அச்சுதக் களப்பாளன், 354
அசோகன், 381, 386
அஞ்சி, 125, 126 241, 242, 243, 245, 264
அஞ்சில் அஞ்சியார், 125, 126, 127, 129
அஞ்சில் ஆந்தையார், 126
அடவிக சாமந்தகன், 297
அடைநெடுங்கல்லியார், 97
அடைநெடுங் கல்வியார், 93, 94, 95, 97
அண்டர், 285, 337, 339, 340
அண்டர் மகன் குறுவழுதி, 337, 340
அண்டர் மகன் குறுவழுதியார், 152
அண்டார், 285
அண்டிரன், 285
அண்டிலன், 285
அணிலாடு முன்றிலார், 11
அத்தி, 244, 245, 303, 369
அதங்கோடு, 245
அதங்கோடேர், 245
அதரிமாகொரியூர், 246
அதவம், 245
அதி, 244
அதிசமான், 240, 246
அதிகன், 242, 247, 264, 265
அதியமான், 240, 241, 250, 251, 252, 317, 344
அதியமான் கோளியூர், 246
அதியமான் நெடுமானஞ்சி, 251
அதியர், 240, 241, 244
அதியர் கோமான் அஞ்சி, 240, 241
அதியர்மகன், 240, 246
அதியன், 217, 235, 240, 241, 242, 246, 255, 261, 262
அதியன் விண்ணத்தனார், 240, 242
அந்தி இளங்கீரனார், 105, 107, 109, 110, 120
அபயன், 226
அம்பலவன், 140
அம்பலவனார், 139
அம்மூ, 130
அம்மூலனார், 131, 134
அம்மூவன், 130
அம்மூவனார், 129, 133, 172, 173, 238
அம்மெய்யன், 175
,, ,, நாகனார், 136
அயோனியர், 387
அர்வர்னாய், 330
அரிசில் கிழார், 261, 310, 338
அருச்சுனன், 85, 213, 214
அருமன், 326
அருமை நாட்டார், 87
அருவந்தை, 327
அருவர், 86, 289, 326, 329, 330
அருவர்கள், 329
அருவாட்டலையர், 87

அருவாநாட்டார், 87
அருவாநாடு. 334
அருவாவடதலைநாடு, 334
அருவான் நாடு, 334
அருவான் வடதலைநாடு, 334
அருவாளர், 86, 87, 323, 329, 330
அருவாளர்கள், 328
அரையர், 330
அல்லங்கீரனார், 110
அலெக்சாண்டர், 387
அள்ளூர் நன்முல்லையார், 96
அறிவர், 69
அறிவியல் நூல், 142
அன்னி மிஞிலி, 275, 276
அனுமான், 85
அஜாத சத்துரு, 85

ஆ

ஆஅய் எயினன், 247
ஆசிரியன் பெருங்கண்ணன், 24
ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், 380
ஆத்திரேயன், 74
ஆத்திரையனார், 74
ஆதன், 292, 293, 294
ஆதன் உங்கன், 385
ஆதன் ஓரி, 292
ஆதனுங்கன், 358, 359
ஆதி அருமன், 326, 327
ஆதியருமன், 76
ஆய், 83, 263, 284, 288, 289, 299
ஆய் அண்டிரன் 284, 308
ஆய் எயினன், 278, 286, 287, 307, 309, 310
ஆர்க்கிமிடிஸ், 401
ஆர்த்தியனார், 75
ஆரிய அரசன் பிரகத்தன், 371
ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தன், 363
ஆரியப்பொருநன், 369
ஆரியபுத்திரர், 364
ஆரியர், 363, 366, 368, 371, 373, 374, 375
ஆரின் மாலையன், 226, 227
ஆலத்தூர் கிழார், 310
ஆவி, 281, 284, 289, 290
ஆவியர், 281, 309
ஆவியர்கோ, 281
ஆவியர் பெருமகன், 281
ஆவூர் கிழார், 310
ஆவூர் மூலங்கிழார், 132, 378

இ

இடைக்காடனார், 340, 341
இடைக்குன்றூர் கிழார், 310
இடையர், 336, 340, 341
இடையன் சேந்தன் கொற்றனார், 340, 341
இடையன் நெடுங்கீரனார், 340, 341
இந்துமதி, 3
இம்என்கீரனார், 107
இம்மென் கீரனார், 110, 111
இமயவரம்பன், 366
இயற்சொல், 51
இராமன், 220
இராவணன், 290
இருங்கோ, 115
இருங்கோவேண்மான், 303, 308

இருங்கோவேள், 321, 323, 328, 329
இரும்பிடர்த் தலையார், 52, 55, 91
இரும்பொறை, 236
இளங்கடுங்கோ, 169
இளங்கண்ணனார், 159
இளங்கீரன், 106
இளங்கோவடிகள், 116, 239
இளஞ்சேட்சென்னி, 231, 269, 270, 272, 300
இளஞ்சேரல்இரும்பொறை, 258, 262, 305, 339
இளந்திரையன், 344, 391
இளநாகனார், 84
இளையர், 251, 254
இளையன் நெடுங்கீரனார், 110
இறைச்சி, 51

ஈ

ஈழத்தரையர், 87

உ

உக்கிரப் பெருவழுதி, 6
உகாய்க்குடிகிழார், 310
உதி, 244
உதியர், 240, 244
உதியவேந்து, 240, 243, 244
உதியன், 217, 234, 235, 243, 244
உப்பூரிகுடிகிழார், 6
உமட்டூர்கிழார், 310
உருத்திரசன்மர், 6
உரோமர், 391, 401
உலூபி, 85

ஊ

ஊட்டியார், 13, 14, 68, 75
ஊன்பொதி பசுங்குடையார், 97, 231, 269, 272

எ

எயிற்றி, 62
எயிற்றியனார், 61
எயிற்றியார், 63, 104
எயிற்றினார், 62, 63, 64, 67, 68
எயினர், 86
எருமை, 358
எருமையூரன், 303
எவ்வி, 306, 308
எழினி, 260, 261, 262, 271, 303

ஏ

ஏற்றை, 303, 369
ஏறை, 267, 268
ஏறைக்கோன், 267, 268

ஐ

ஐயூர்மூலங்கிழார், 132

ஒ

ஒருசிறைப்பெரியனார், 96
ஒரூஉத்தனார், 98
ஒளிநாடு, 331, 335
ஒளியர், 86, 314, 328, 330, 331, 335, 337
ஒன்றுமொழிக்கோசர், 274

ஓ

ஓதலாந்தையார், 172, 173
ஓய், 289

ஓய்மகன், 289
ஓய்மான், 289, 290, 388
ஓர் ஏர் உழவர், 46, 47
ஓர் ஏர் உழவனார், 46, 47
ஓரம் போகியார், 98, 172, 173, 270
ஓரி, 247, 250, 255
ஓரிற்பிச்சையார், 69
ஓவி, 289
ஓவியர், 86, 289
ஓவியர் பெருமகன், 289, 290

ஔ

ஔவை, 241, 245
ஔவையார், 378

க

கங்கன், 303
கச்குல் வெள்ளத்தார், 7, 8
கட்டி, 303, 369
கடம்பர், 232, 272, 339
கடியலூர்உருத்திரங்கண்ணனார், 376
கடுங்கோ, 115
கடுந்தொடைக் காவினார், 98, 99
கடுந்தோட் கரவீரன், 99
கடுந்தோட் காவீரன், 99
கண்டா மாகர், 2
கண்டீரக்கோ, 115
கண்ணத்தனார், 88
கண்ணன், 158, 159, 324
கணக்காயன் தத்தனார், 171
கணையன், 303
கதப்பிள்ளை, 88
கந்தத்தனார், 88
கந்தப்பிள்ளை, 88
கந்தர், 88
கந்தரத்தனார், 88
கந்தன், 88
கபிலநெடுநகர், 73
கபிலர், 69, 71, 72, 95, 126, 147, 172, 173, 249, 250, 321, 323, 371
கயத்தார், 20
கயத்தூர் கிழார், 310
கயமகவார், 23
கயமகனார், 15, 20, 21
கயமகளிரார், 20
கயமனார், 20
கயமனார், 15, 19, 20, 21
கயமூழ்குமகளிரார், 15, 20
கயிறுகுறுமுகவை, 193
கரிகால் வளவன், 231
கரிகாலன், 303, 304
கரிகாற்பெருவளத்தான், 328
கருவூர், 236, 237
கருவூர்க்கதப்பிள்ளை, 259
கருவூர்க்கதப்பிள்ளை சாத்தனார், 259
கருவூர்க்கோசனார், 273, 280
கருவூர் கிழார், 310
கரையர், 233
கல்பொரு சிறுநுரையார், 21, 23
கல்லாடனார், 348, 349
கவிதை, 142, 143
கவுரியர், 52, 53, 213, 217, 219, 220, 221
கவுரியன், 222, 223
கவைமகவார், 23
கவைமகன், 23
கழாத்தலையார், 90, 94, 95
கழார்க்கீரன், 110

கழார்க்கீரன் எயிற்றியார், 62, 63, 68, 106
கழார்க்கீரன் எயிற்றினர், 63
கழுவுள், 304, 337, 338, 339, 340
கழைதின் யானையார், 48, 49, 50
கள்வர், 351, 355
கள்ளில் ஆத்திரையனர், 74
கள்ளில் ஆர்த்தியர், 75
கள்ளில் ஆர்த்தியனர், 327, 385, 386
கள்ளில் ஆர்த்திரையார், 75
களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், 257
களப்பாளர், 355
களப்பிரர், 354
களபர், 354
களவர், 351, 353, 354
களவர் கோமான் புல்லி, 349, 351, 352, 359, 360
களவர் பெருமகன் தென்னன், 351
களவாளர், 355
களிற்றியானை நிரை, 194, 195
கற்காநாடு, 333
கனகன், 367

கா

காக்கைபாடினியார், 184, 185
காக்கைபாடினியார் நச்செள்ளையார், 183
காசிபன் கீரன், 110
காசியபர், 71
காட்டூர் கிழார், 310
காடன், 342
காமக்கண்ணி, 177
காமஞ்சேர் குளத்தார், 99
காமாட்சி, 177
கார்க்கியர், 71
காராளர், 313
காரி, 250, 251
காரி கிழார், 310
காவெறி கடிகையார், 26, 27
காவன் முல்லைப் பூதனர், 126, 185, 187, 189
காவினர், 98
காளிதாசர், 2, 105, 118

கி

கிருஷ்ணன், 320
கிரேக்கர்கள், 396, 399, 409
கிள்ளி, 226, 230
கிள்ளிமங்கலங்கிழார், 310
கிள்ளிவளவன், 49, 231

கீ

கீரங்கீரனர், 110
கீரந்தை, 88
கீரன், 105, 107
கீரனர், 106, 107

கு

குட்டநாடு, 332
குட்டுவர், 238, 239, 332
குட்டுவர் கோமான் நெடுஞ்சேரலாதன், 238
குட்டுவன், 234
குட்டுவன் இரும்பொறை, 238, 239
குட்டுவன் கண்ணனர், 238, 239
குட்டுவன் கீரனர், 106, 110, 238, 239

குடக்கோ, 115, 234
குடகன், 234
குடநாடு, 332
குடவர், 238, 239, 240, 328, 332
குடவாயிற்கீரனார், 110
குப்பைக்கோழியார், 28
குமரிச்சேர்ப்பன், 221
குழல் தத்தனார், 171
குறவர், 267
குறவர் பெருமகன் ஏறை, 267
குறிஇறையார், 31, 32
குறுங்கீரனார், 110
குறுங்கோழியூர் கிழார், 6
குறுஞ்சாத்தன், 111
குறுவழுதி, 111
குறுவழுதியார், 152

கூ

கூகைக் கோழியார், 9, 10
கூடலூர் கிழார், 6, 311
கூடற்கோமான், 221, 222
கூவல்மைந்தன், 136

கே

கேரளர், 210

கை

கைதபன், 222, 223
கைதவன், 222

கொ

கொங்கர், 262, 263, 264, 265, 266
கொங்கர்கோ, 262, 265
கொங்கர்கோ இளஞ்சேரல், 203
கொங்கன், 262
கொங்கிளங்கோசர், 266
கொட்டம்பலவனார், 139, 141
கொண்கானங்கிழான் நன்னன், 243
கொல்லிவெற்பன், 234
கொலேரியர், 86
கொற்றன் 261

கோ

கோக்குளமுற்றனார், 115, 116
கோக்கோதைமார்பன், 115
கோசர், 266, 273, 275, 276, 277, 279, 383
கோடன், 372
கோடைபாடியபெரும்பூதனார், 189, 190
கோதை, 234, 235
கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, 100
கோப்பெருஞ்சோழன்,115, 116
கோயன், 280
கோவூர்கிழார், 49, 132, 251
கோவேங்கைப் பெருங்கதவனார், 141, 142
கோழியர், 225
கோழியூர்கிழார்மகனார் செழியனார், 152
கோழிவேந்தன், 226, 227

கௌ

கௌசிகர், 71
கௌடில்யர், 218
கௌதமர், 71
கௌரவர், 213, 220

ச

சங்க வருணர், 83
சடையன், 223
சத்தியபுத்திரர், 274
சந்திரகுப்த மௌரியன், 380
சளன், 322

சா

சாகலேயன், 71
சாண்டில்லியர், 71
சாத்தனர், 15
சாமொரின், 271

சி

சித்திராங்கதை, 85
சித்திரைத்திருநாள், 132
சிவபிரான், 322
சிவபெருமான், 378

சீ

சீத்தலேச்சாத்தனர், 91, 92
சீதநாடு, 335
சீரன், 106
சீனத்தரையர், 87

சு

சுக்கிரீவன், 85
சுந்தரன், 175
சுவாதித்திருநாள், 132

சூ

சூரியன், 226, 228

செ

செங்கணன், 158, 159
செங்குட்டுவன், 238, 239
செம்பியன், 226,227
செம்பியனர், 152
செம்புலப்பெயல் நீரார், 34
செய்தி வள்ளுவன் பெருஞ் சாத்தன், 24
செல்வக்கடுங்கோ வாழியாதன், 258
செழியர், 217, 219
செழியன், 221, 222, 223
சென்னி, 226, 228, 229

சே

சேட்சென்னி நலங்கிள்ளி, 230
சேந்தன் கீரனர், 110
சேரமான் இரும்பொறை, 245
சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரலிரும் பொறை, 100
சேரமான் பெருஞ்சேரலிரும் பொறை, 250
சேரர், 209, 210, 211, 232, 234
சேரல், 232
சேரல்கள், 235
சேரலன், 211, 232, 234
சேரன், 210, 211, 232, 235
சேரன்செங்குட்டுவன், 218

சொ

சொக்கர், 175

சோ

சோகுத்தனர், 115
சோகோவனர், 115
சோழர், 209, 210, 211, 225
சோழன் கிள்ளிவளவன், 251
சோழன் நலங்கிள்ளி, 48, 49, 50

சோழன் பெருநற்கிள்ளி, 223
சோறன், 235

த

த்வனி, 52
தகடூர், 245, 246, 261, 264
தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணன், 74
தமரிகா, 205
தமிழ்கூறு நல்லுலகம், 204
தமிழ்கெழுகூடல், 206
தமிழ்ப்பெருங்கூத்தன் நாகன், 83
தமிழகம், 204, 205
தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன், 269, 270, 272, 303, 305, 348
தனிமகனார், 37
தக்ஷன், 85

தா

தாயங்கண்ணனார், 343

தி

தித்தன், 272, 304 305
தித்தன் வெளியன், 309
திதியன், 275, 303
திதியன் வெளியன், 369
தியாகராசர், 72
திராவிடர், 210
திரிசங்கு, 85
திரிசொல், 51
திருக்கண்ணன் மலையன், 248
திருமாவளவன், 231
திரையர், 342, 343, 345, 346
திரையல், 345, 346
திரையன், 328, 342, 343, 345, 347, 348

தீ

தீபசிகா, 2, 3, 105

து

தும்பி கோக்கிரனார், 117, 118, 120
தும்பிசேர்கீரனார், 111, 114, 115, 116
தும்பிசோகீரனார், 115

தெ

தென் பாண்டி நாடு, 331
தென்னவன், 221, 222, 240, 329

தே

தேய்புரிப் பழங்கயிற்றினார், 39, 40
தோதரன், 100

தொ

தொடித்தலை விழுத்தண்டினார், 77
தொண்டியோர், 344, 345
தொண்டைமான் இளந்திரையன், 342, 343, 344
தொண்டையர், 86, 342, 343, 344, 345, 346, 349, 355, 358
தொண்டையன், 347
தொம்பர், 364
தொல் கபிலர், 69, 72, 147, 151

ந

நக்கீரர், 47, 71, 127, 238, 264, 327, 372

நக்கீரனார், 105
நந்தர், 382
நந்தன், 381
நப்பசலையார், 251
நரயதி, 85
நரிவெரூஉத்தலையார், 99, 236
நரைமுடிநெட்டையார், 101
நல்லடிவல்லங்கிழான், 301
நல்லந்துவனார், 5, 168, 172,173
நல்லியக்கோடன், 289, 290, 291, 295
நல்லியாதன், 291, 293
நல்லுருத்திரனார், 171, 173
நல்வழுதியார், 152
நலங்கிள்ளி சேட்சென்னி, 230
நன்மாறன், 397
நன்னன், 257, 258, 278, 286, 287, 299, 301, 303
நன்னன் ஆய், 287, 308
நன்னன் உதியன், 240, 243, 288, 301
நன்னாகனார், 291

நா

நாகர், 84, 85, 86, 87
நாகரியார், 83
நாகன், 84
நாகனார், 83
நாகையார், 83
நாஞ்சில்நாடு, 332

நி

நித்திலக்கோவை, 194

நூ

நூற்றுவர் கன்னர், 219



நெ

நெட்டிமையார், 101
நெடுஞ்சேரலாதன், 366
நெடுந்தத்தனார், 171
நெடும்பல்லியத்தனார், 101
நெடும்பல்லியத்தை, 101
நெடுமான், 241
நெடுமிடல், 241
நெடுமுடிக்கிள்ளி, 347
நெடுவெண்ணிலவினார், 79
நெய்தல் கார்க்கியார், 170
நெய்தல் தத்தனார், 170, 171

நே

நேரியன், 226
நேரி வெற்பன், 226

நோ

நோக்கு, 51, 52, 199
நோய்பாடியார், 180

ப

பசும்பூண் பாண்டியன், 246, 264, 265
பஞ்சவர், 213, 215, 217, 218, 221
பஞ்சவன், 216, 217, 222, 223
பண்ணன், 49
பதடிவைகலார், 8, 9
பந்தார்க்கர், 214
பப்புருவாகனன், 214
பாணர், 69, 157, 238, 270
பரதவர், 86, 268, 269, 270, 271, 272
பரதவர் கோமான், 268
பரீக்ஷித்து, 85

பல்யானைச்செல்கெழுகுட்டுவன், 251, 257, 262
பல்லவர், 349, 350, 355
பல்வேல் திரையன், 343
பழையன், 274, 275
பழையன் மாறன், 383
பன்றி நாடு, 334
பன்னாடு தந்த பாண்டின் மாறன் வழுதி, 5
பனம்பாரனார், 362
பஹ்லவர், 350

பா

பாண்டவர், 213, 214, 215, 217, 220, 221
பாண்டியர், 207, 209, 212, 214, 215, 217 , 219, 220, 221, 355
பாண்டியன், 214
பாண்டு, 212
பாணன், 368, 369
பாணினி, 212
பாயிரம் பாடியபெருந்தேவனார், 192
பார்காப்பான், 101
பார்வதி, 322
பாரகாபரன், 102
பாரசாபரன் 102
பாரதம் பாடிய பெருந்தேவனார், 190, 192
பாரி, 306
பாலைக் கௌதமனார், 171
பாலை பாடிய கௌதமனார், 193
பாலைபாடிய பெருங்கடுங்கோ, 168, 169
பாவைக் கொட்டிலார், 192

பி

பிட்டங்கொற்றன், 258, 259, 260, 261
பிட்டன், 258, 259, 260, 261
பிரகதத்தன், 371
பிரமதத்தன், 371

பீ

பீலிவளை, 347, 348

பு

புத்தர், 186
புருகுச்சன், 85
புல்லங்கீரனார், 110
புல்லாற்றூர் எயிற்றினார், 63, 67, 68
புல்வி. 255, 349
புலிகடிமால், 321, 322
புலியூர்த்தோன், 226, 227
புளூட்டார்க், 401
புன்றுறை, 303, 369
புனல் நாடன், 226, 228
புனல் நாடு, 335

பூ

பூங்கண் உத்திரையார், 102
பூங்கணுத்தரையார், 102
பூரிக்கோ, 6
பூழிநாடு 256, 257, 334
பூழியர், 256, 257, 258
பூழியர்கோ, 258
பூழியர்கோ இருஞ்சேரல் இரும்பொறை, 256
பூழியர் மெய்ம்மறை, 256, 258

பெ

பெரியனார், 96

பெருங்கண்ணனார், 159
பெருங்குன்றூர்கிழார், 71
பெருஞ்சேரலிரும்பொறை, 235 236, 237, 258, 260, 296
பெருஞ்சோற்று உதியன் சேரலாதன், 213 218, 243
பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதன், 379
பெருந்தலைச் சாத்தனார், 91, 130
பெருமான், 241

பே

பேகன், 281, 282, 284, 306, 308
பேயனார், 172, 173

பொ

பொங்கர் நாடு, 335
பொத்தி, 103
பொத்தியார், 103
பொதிய வெற்பன், 222
பொதுவர், 328, 335, 336
பொய்கையார், 129
பொய்சளன், 322
பொருந்தில் இளங்கீரனார், 71, 109, 120, 125
பொருந்தழி இளங்கீரனார், 120
பொருநன், 303
பொருநையாற்றோன், 234, 235
பொலம்பூட்கிள்ளி, 276
பொலம்பூண் திரையன், 344
பொறை, 235
பொறையர், 235, 236, 237, 244
பொறையன், 369
பொன்மணியார், 96
பொன்னித் துறைவன், 226, 227

போ

போந்தின் தாரோன், 234
போர்ச்சுகீசியர், 271
போர்வைக்கோ, 115
போர்வைக்கோப்பெருநற்கிள்ளி, 116, 304, 305

ம

மடல்பாடிய மாதங்கீரனார், 174, 175, 177
மணிமிடைபவளம், 194, 195
மத்தி, 268, 270, 271, 272
மதுகா விருத்தி, 69
மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகனார், 83
மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார், 159
மதுரைவேளாசான், 24
மரந்தை, 237
மருதம்பாடிய இளங்கடுங்கோ, 169
மருதன் இளநாகனார், 169, 338
மருதனிளநாகனார், 5
மலாடர், 249
மலைநாடு, 335
மலைபடுகடாம், 196
மலையமான், 234, 235
மலையமான் காரி, 49
மலையமான் சோழிய ஏனாதி, 248
மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன், 251

மலையமான் திருமுடிக்காரி, 248, 249
மலையர், 248
மலையனார், 81, 83
மழவர், 247, 251, 252, 253, 254, 255, 257
மழவர் பெருமகன், 251, 252, 255
மழவர் மெய்ம்மறை, 247, 251
மறவர், 86, 87, 251, 252, 253, 255, 355

மா

மாக்கிண்டில், 387
மாககவி, 2
மாகியரும் மவுரியரும், 84
மாங்குடிகிழார், 84
மாங்குடிமருதனார், 84, 269
மாதங்கீரனார், 110, 175
மாதன் கீரனார், 175, 176
மாதீர்த்தன், 131
மாதுராம், 218
மாந்தரர், 244
மாந்தரன், 237, 238
மாந்தாதா, 85
மாந்தை, 236, 237
மாந்தையர், 237
மாந்தையன், 238
மாமிலாடன், 131
மாமூலனார், 130, 131,238, 384
மாயெண்டன், 131
மார்க்கண்டேயர், 71
மால், 226, 228
மாலைமாறன், 151
மாவண்பல்லி, 131
மாவளத்தான், 231
மாற்பித்தியார், 103
மாறர், 217, 219
மாறன், 151, 222, 223, 274, 275
மாறோக்கத்து நப்பசலையார், 71, 249

மி

மிஞிலி, 246, 247, 278, 286
மிலேச்சர், 319, 364, 375

மீ

மீன் எறி தூண்டிலார், 40, 42
மீனவன், 222

மு

முடத்தாமக் கண்ணியார், 103
முடித்தலைக்கோ, 115
முடிநாகர் அரையர், 83
முடிநாகர் ஆயர் 83, 330
முத்துத்தாண்டவர், 72
முரஞ்சியூர் முடிநாகர் அரையர், 330
முரஞ்சியூர் முடிநாகர் ஆயர், 288
முரஞ்சியூர் முடிநாகராயர், 83, 87, 288, 379

மூ

மூத்ததிரையன், 343
மூதில் மகளிர், 252
மூப்பன், 130
மூலங்கீரனார், 110
மூலன், 133
மூவன், 129

மெ

மெய்கண்டான், 354
மெய்ப்பொருள் நாயனர், 249

மை

மையூர் கிழான் வேள், 308

மோ

மோசி, 93
மோசி கீரனர், 110
மோரியர், 278, 382, 383, 384, 385

மௌ

மௌரியர், 381, 384 385

ய

யவனர், 387-390, 395, 396, 405

யா

யாதன், 294
யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை, 6

யு

யுதிஷ்டிரர், 214

வ

வக்ரோக்தி, 51
வஞ்சிவேந்தன், 234
வடமவண்ணக்கன், 371
வடவர், 240, 328, 329, 330, 372
வடவர் மகன், 371
வடுகர், 269, 272, 278, 349, 356, 357, 358
வண்ணக்கன் தத்தனர், 171
வண்ணப்புறக் கந்தரத்தனர், 88
வாருசி, 212
வல்வில் ஓரி, 49, 50
வழுதி, 221, 222, 223
வழுதியார், 217, 219
வளவன், 226, 231
வளைவணன், 347
வன்பாணர், 69, 157

வா

வாசமயிலை, 347
வால்மீகி, 71
வானவரம்பன், 234, 235
வாஸ்துபுருஷன், 141

வி

விச்சிக்கோ, 115,
விசயன், 367,
விட்டகுதிரையார், 42
விடுகாதழகிய பெருமாள், 245
விண்ணன், 242
வில்வகவிரலினர், 45, 46
வில்லவன், 234
வில்லியாதன், 291, 292, 293
வில்லோர், 258
வில்லோர்பெருமகன் கொற்றன், 258
விழிக்கட்பேதைப் பெருங் கண்ணனர், 158, 159, 161
வினைத்தொழிற்கோக்கீரனர், 117
வினைத்தொழில்சோகீரனர், 115

வெ

வெள்ளாட்டி, 314
வெள்ளாளர், 312, 345
வெள்ளெருக்கிலையார், 104
வெளிமான், 309
வெளியன், 305
வெளியன் தித்தன், 309
வெளியன் வேண்மான், 307, 309
வெறிபாடிய காமக் கண்ணியார், 174, 177, 180
வென்வேல் திரையன், 343

வே

வேண்மான் பிடவூர்கிழான் பெருஞ்சாத்தன், 308
வேணாடு, 333
வேம்பின் தாரோன், 221, 222
வேள் ஆய், 203, 295
வேள் ஆவிக்கோமான்பதுமன், 308
வேள் எவ்வி, 295, 305
வேள் பாரி, 295
வேள்புலம், 333
வேளாளர், 330
வேளிர், 208, 295, 309

வை

வைகையந்துறைவன், 221, 222
வையாவிக்கோ, 282
வொர்ட்ஸ் வொர்த், 19

ஜ

ஜனமேஜயன், 85

ஷ

ஷெல்லி, 2
ஷேக்ஸ்பியர், 2, 60

ஸ

ஸ்டாயிக்ஸ், 398

ஹ

ஹரிச்சந்திரன், 85
ஹிடாராஜா, 341
ஹிடாராஜாக்கள், 299, 336
ஹொய்சளர், 321, 322, 324
ஹொய்சளன், 322
ஹோரா, 405,